ACC.NO. 12591. 4-2

# வாழ்வில் வைணவம்

(தொகுதி ஒன்று)

KOVILOOR VEDANTA MUTT

ஆசிரியர் ;

அமரர். திரு. நா. வேணு கோபால் நாயகர்,

பி.ஏ.. பி.எல்.,

பதிப்பாசிரியர் ;

திருமதி பு. ஆ. கௌசல்யாதேவி,

பி.எஸ்ஸி., பி,டி.,

''நாராயண தனம்'' நலக்கட்டளை வெளியீடு

பதிப்பாசிரியர் குழு :

திருமதி பு. ஆ. கௌசல்யா தேவி., பி.எஸ்ஸி., பி.டி.,
'ப்ரபன்ன வித்வான்' ஸ்ரீ. எதிராஜ ராமாநுஜ தாஸர்,
திரு. வேணு. ராச நாராயணன்., பி.எஸ்ஸி., பி.எல்.,
டாக்டர். திருமதி. சுதா சேஷய்யன்,, எம்.எஸ்.,

KOVILOOR ANDAVAR
A. No. 12591
LIBRARY, KOVILOOR

விற்பனை உரிமை :

பாரி நிலையம்
184. பிராட்வே · சென்னை · 600108

போன் : 515561

4-2

# நா. வேணுகோபால் நாயகரின்

# "வாழ்வில் வைணவம்"

(தொகுதி—1)



# என் உரை

என் துணைவர் ஸ்ரீமான் நா. வேணுகோபால் நாயகரின் ஸ்ரீ வைணவச்சொற்பொழிவுகளின் வரி வடிவம் இந்த நூல். மிகச் சிறந்த ஸ்ரீ வைணவத் தொண்டராக விளங்கிய திரு. நா. வே நா. அவர்களைப் பற்றித் தமிழ் கூறும் நல்லுலகு தெற்றென அறியும். ஆழ்ந்த தெய்வ பக்தியும், அஞ்சா நெஞ்சமும், தொண்டுள்ளமும் கொண்டு விளங்கிய அவரின் சொற்பொழிவுகளையெல்லாம், நேரில் கேட்டு, கண்டு ரசித்த பெருமை அடியேனுக்கு உண்டு.

அவரின் உரைகளில் தமக்கே உரித்தான பாவமும், தனித்தன்மையும் நிரம்ப இருக்கும். மிக முக்கியம், பேச்சு வழக்கும், எளிய நடையும் அவற்றில் கொஞ்சி விளையாடும். படிப்பறிவில்லாத பாமர மக்களுக்கும் தன் உரையை விளங்க வைக்கும் ஆர்வம் அவருக்கு மிகுதியும் உண்டு. அந்த உரைகளும் கூட, பல நேரங்களில் வாதப் பிரதிவாதங் களோடு வெகு சுவாரஸ்யமாக இருக்கும். தானே இரு பக்கமும் நின்று வாதாடி, நாணயத்தின் இரு பக்கங் களையும் அலசி ஆராய்வதில் நா. வே. நாவுக்கு நிகர் நா. வே. நா தான்.

வைணவப் பிரசாரத்தில் மிகுதியும் ஆர்வம் கொண் டவர். ஒரு வேலையை மேற்கொண்டால், 'கண் துஞ்சார், பசி நோக்கார்' என்னும் கூற்று அவருக்குச் சாலப் பொருந்தும்.

ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக ஸ்ரீ வைணவ மகா சங்கத்தோடு, அதன் செயலாளராகத் தொடர்பு கொண்டி ருந்தவர். பல பெரியவர்களின் உரைகளையும், சொற் பொழிவுகளையும் கேட்டு மகிழ்ந்தவர். அதிலும், "பிரதி

வாதி பயங்கரம்'' காஞ்சி உ. வே. ஸ்ரீ அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் மீது திரு. நா. வே. நா அவர்களுக்கு மிகுந்த மதிப்பும், ப்ரீதியும் உண்டு. ஸ்வாமிகளுக்கும் நா. வே. நா விடத்து மிக்க அன்புண்டு.

செவிக்கினிய உரைகள் வழங்கும் வித்தகராக மட்டுமின்றி, தன் எண்ணங்களைச் செவ்வனே வெளிப்படுத்தும் எழுத்தாற்றல் மிக்க விற்பன்னராகவும் விளங்கியவர் திரு. நா. வே. நா அவர்கள். இவரின் கட்டுரைகள் பல, ''ஸ்ரீ ராமாநுசன்''' 'பக்தன்'' ''திருக்கோயில்'' ,'கீதா சார்யன்'' போன்ற ஸ்ரீ வைணவ இதழ்களில் வெளி வந்துள்ளன.

பிரசாரத்திற்காக மட்டுமின்றி, நடைமுறை வாழ்க்கையிலும் வைணவத்தைக் கடைப்பிடிப்பதில் அவருக்கு நம்பிக்கை அதிகம். வீட்டில், தன் குமாரத்திகள் திருமதி. செண்பகதனம், மற்றும் திருமதி. அமுதலட்சுமி ஆகியோருடன் வாராந்திர வழிபாடுகள் நிகழ்த்தி வைணவ சம்பிரதாயம் தழைத்தோங்கச் செய்வதில் ஆர்வம் காட்டினார். பிறருக்கு உபதேசிப்பதன் முன், அதனைத் தன் நடைமுறையில் நடத்தும் அவரின் பண்பை இது காட்டும்.

பலகால உழைப்பு, பணி, திறமை ஆகியவற்றின் வெளிப்பாடாக அமைந்திருக்கும் அவரின் உரைகளையும், கட்டுரைகளையும் தொகுத்து—வெளியிட வேண்டுமென்பது என் குடும்பத்தாரின் நெடுநாளைய ஆவல். அந்த அவாவின் செயல்வடிவமாகத்தான் இந்நூல் வெளி வருகின்றது. அமரர் நா. வே நா. வின் திறன் மிக்க கருத்துக்கள், பலருக்கும் நலனும் வளனும் சேர்க்க வேண்டும், பல்லோருக்கும் பயன்பட வேண்டும் என்பதின் பிரதிபலிப்பே இது.

திரு நா. வே. நாவின் வாழ்க்கை முன்னேற்றத்திற்குப் பலர் உதவியிருந்தாலும், அதில் மறக்க முடியாதவர்கள், மறக்கக் கூடாதவர்கள் சிலருண்டு. இவர்களுள், என் தந்தையார் திரு சர்தார் P. M. ஆதிகேசவலு நாயகர்,

முன்னாள் அமைச்சர்கள் திரு K. வெங்கடசாமி நாயுடு, திரு M. A. மாணிக்கவேலு நாயக்கர், முன்னாள் மேயர் திரு M. ராதாகிருஷ்ணன் பிள்ளை, திரு A.V. கன்னைய நாயுடு ஆகியோர் முக்கியமானவர்கள்.

இந்நூல் வெளிவரப் பல்லாற்றானும் உதவிய பலருக்கும் என் நன்றிகளையும், கைம்மாறையும் காணிக்கையாக்கக் கடமைப்பட்டுள்ளேன். பதிப்பில் பிழைத்திருத்தம் செய்து சொல்லும் பொருளும் ஆசறத் தொகுத்துக் கொடுத்த பிரபன்ன வித்வான் ஸ்ரீமான் R எதிராஜ ராமானுஜதாஸர் அவர்கள் என் நன்றிகளுக்கு என்றென்றும் உரித்தானவர்.

இந்நூலை வடிவமைத்து, தன் உள்ளக்கிடக்கையில் புடம் போட்டுப் புடம் போட்டு அதைப்பல்லோர் கையிலும் நடமிடச் செய்ய, முழு முயற்சியாக மேற்கொண்டு உழைத்த பெருமை என் மகன் திரு. வேணு ராசநாராயண னையும், அவர்தம் மனைவி திருமதி. டாக்டர். சுதாவையும் சாரும்.

நூலை அச்சிட நிதியுதவி வழங்கிய திருமலை—திருப்பதி தேவஸ்தானத்தாருக்கும், நூலை சிறப்பாக அச்சிட்டுள்ள ஸ்ரீ கோமதி அச்சகத்தாருக்கும் என் நன்றிகள் உரித்தாகும். மேலும் முகப்போவியம் வரைவதில் உதவிய திரு. சுமன், பல அறிவுரைகள் அளித்து நூற்போக்கில் நம்பிக்கை அளித்த டாக்டர். ந. சுப்பு ரெட்டியார் ஆகியோருக்கும் என் நன்றி.

நற்கருத்துக்கள் நிறைந்த இந்நூலை உங்கள் யாவரின் முன்னிலையிலும் சமர்ப்பிப்பதில் பெருமிதமும், மகிழ்ச்சியும் கொள்கிறேன்.

''நாராயண தனம்''
ஏ. ஜி 43, சென்னை-40.
14-4-93
தொலைபேசி : 6211768

அன்புடன்,
**பு. ஆ. கௌசல்யா தேவி**

S. RATNAVEL PANDIAN *JUDGE, SUPREME COURT OF INDIA*
*New Delhi the 9-5-1993*

# அணிந்துரை

வரலாற்றுக் காலத்தையும் மீறி, இதிகாச, புராண காலங்கள் தொட்டே வாழ்க்கையை வளப்படுத்தும் வைணவம், சங்ககாலம் தொடங்கி ஆழ்வார் காலத்தில் வேரூன்றி, ஆன்ம பலத்தை மேம்படுத்துவதையும், வாழ் நிலையை உயர்த்துவதையும் தலையாய எண்ணமாகக் கொண்டது.

''மின்னுருவாய், முன்னுருவாய், பின்னுருவாய், முன்னுருவின் பொன்னுருவாய், பற்பலவின் தன்னுருவாய்'' நிற்கும் எந்தைபிரான் தளிர்புரையும் திருவடிகளின் திருவருள் பெருமையை முற்ற முழுதும் தெற்றெனத் தருபவை ஆழ்வார்களின் பாசுரங்களும், ஆசார்யர்களின் அருளிச் செயல்களும். ஆழ்வாராதிகள் தொடர்ந்து ஆசார்ய பரம்பரையின் அருமை பெருமைகள் ஸ்ரீ வைணவ தரிசனத்தின் விளக்கங்களாகும்.

''ஆணொப்பார் இவன் நேரில்லை காண் திரு
ஓணத்தான் உலகாளும் என்பார்களே!''

எனக்கண்ணனை, மணிவண்ணனை, கோவிந்தனை, கோபாலனைத் தன் செல்வக் குழந்தையாய்ச் சீராட்டிப் பாராட்டி ஆணிப்பொன் தொட்டிலில் மாணிக்கமும் வைரமும் கட்டி, ''தேவகிச் சிங்கமே தாலேலோ!'' வையம் அளந்தானே தாலேலோ!'' எனவும் தாலாட்டித் தளரா அன்பால் தாயின் நல்லவரானவர் பெரியாழ்வார்.

KOVILOOR VEDANTA MUTT



மங்கையர்கோன் பரகாலனோ, பலகாலும் அலைந்தும் திரிந்தும், பற்பல திவ்ய தேசங்களுக்குச் சென்று சேவித்தும், பாடியும், ஓடியும். ஓடி உணர்வெனும் பெரும்பதம் புரிந்தும், நாடியும் "நாராயணா" என்னும் நாமம் தன்னைக் கண்டு கொண்டவர்.

"போகின்ற காலங்கள் போய காலங்கள்
போகு காலங்கள் தாய் தந்தையுயிர் ஆகின்றாய்!"

எனத் தாமரைக் கண்ணனைத் தன் கவியால் சிக்கெனப் பிடித்து, ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை புரிய திருமனம் பற்றினார் நம்மாழ்வார்.

இவ்வாறாய். ரங்கமன்னாரின் கைத்தலம் பற்றக் கனாக் கண்ட ஆண்டாள் நாச்சியார் தொடங்கி, அமலனாதி பிரானை பத்தே பாடல்களில் ஆராதித்த திருப்பாணர் வரை வளர்த்த ஸ்ரீ வைணவம், ஆசார்யர்களின் கரங்களில் மேலும் தழைத்தது.

செய்ய திருவாதிரையில், சித்திரையில், ஏழ்பாரும் உய்ய உதித்தருளிய எதிராசர் எம்பெருமானாராம் ஸ்ரீ இராமாநுஜர் தொட்டு ஸ்ரீ வைணவமும், விசிஷ்டாத் வைதமும் விவரமான விளக்கங்களைப் பெற்றன.

இப்படிப்பட்ட வைணவ விளக்கங்களையும் வியாக்கி யானங்களையும், பாமரனும் பற்றும் வகையில் தன் சொல் திறத்தால் சொல்லிப் போந்தவர் மறைந்த வழக்கறிஞர் திரு நா. வேணுகோபால நாயகர் அவர்கள். அவர்தம் வைணவ உரைகளைத் தொகுத்து இந்நூல் வெளியிடப் படுகிறது.

இந்நூலின் முதல் கட்டுரையே புதுமையையும் பழமை யையும் திரு நா. வே. நா. அவர்கள் எவ்வாறு இழைத்து இணைத்தார் என்பதற்கோர் எடுத்துக்காட்டு— "பாம்பின் கால் பாம்பறியும்" என்னும் பழக்கமான பழமொழியை, இராமாநுஜரும் மணவாள மாமுனிகளும் அருளிய கடாட்சத்தின் அடையாளமாகக் காட்டித்தருகிறார்.

திருவல்லிக்கேணி திவ்யதேசத்தின் பார்த்தசாரதிப் பெருமானைப் பார்த்துத் திருமங்கை மன்னன் இசைக்கும் பத்துப் பாசுரங்களில், 'தசாவதார நோக்கம்'. வேதசாரம், ஆதிமூலமாம் அந்த நாராயணன் அண்டசராசரம் எங்கும் வியாபித்துத் தன் அருள் பொழிவது எனப் பல கோணங் களில் பொருள் விளக்கித் தருகிறார். திருக்கோவலூர் இடை கழியில் முதலாழ்வார்கள் மூவரும் அன்பாலும், சொல் மாலையாலும் விளக்கேற்றித் திருக்கண்டதையும், பொன் மேனி கண்டதையும் முதல் வைணவ மாநாடாக உவமித்துச் சொல்வது திரு. நா. வே. நா அவர்களின் கற்பனைத் திறத் துக்கும், கருத்து வளமைக்கும் ஒரு சான்று. நாச்சியார் திருமொழியின் நாமசங்கீர்த்தனம், ஊழி முதல்வனின் உகப்புத் திருக்கோலம், இலட்சுமணமுனியின் லட்சிய வேகம், ஆசார்யத் திருவம்சத்தின் அகலா பக்தி என வைணவத் திருவிளக்கின் பற்பலச் சுடர்களும் இந்நூலில், நா. வே. நாவின் நயத்தில் ஒளிவிட்டுப் பிரகாசிக்கின்றன.

ஸ்ரீ வைணவ நூல்களைப் பற்றிப் பன்னெடுங்கால மாகவே ஒரு வருத்தம் பலருக்கும் உண்டு; மணிப்பிரவாள நடையில், சிறப்புப் பதங்களோடும், யாவரும் புரிந்து கொள்ள முடியாத நிலையில் பல வைணவ நூல்கள் இருந்து விடுவதுண்டு. அவ்வாறின்றி, சாதாரணமாகத் தமிழ் மொழியைப் படிக்கத் தெரிந்தோரும் புரிந்து கொள்ளும் வகையில், எளிய இனிய நடையில் இந்நூலின் கட்டுரைகள் அமைந்திருப்பது நூலாசிரியரின் நற்றமிழ்ப் புலமைக்கும், வைணவ வளமைக்கும் சான்று.

ஸ்ரீ வைணவத்தை முன்னே பின்னே அறியாதவர்களும் படித்துப் புரிந்து கொள்ளும் வகையில் இது அமைந்திருப்பது பாராட்டிற்குரியது.

திரு. நா. வே. நா வழக்கறிஞராகப் பணியாற்றிய காலம் தொட்டே எனக்கும் அவருக்கும் நெருங்கிய தொடர் புண்டு. அவரை நெருங்கியும் விலகியும் நின்று, நன்கு அறிந்து கொள்ள பல சந்தர்ப்பங்கள் எனக்குக் கிடைத்தன.

அவருக்குச் சமுதாயத்தின் மீதும் பொது வாழ்க்கையின் மீதும் இருந்த நல்லெண்ணங்களை நான் நன்கறிவேன். பல நாட்கள் சமயம், இலக்கியம், பாரத சுதந்திரப் போராட்டம் பற்றிய எண்ணங்கள் ஆகியவற்றை நானும் நாயகரும் பகிர்ந்து கொண்டதுண்டு. சிறந்த பண்புள்ள வழக்கறிஞராகப் பணியாற்றிய அவரிடமிருந்து இப்படி யொரு சிறப்பான நூல் எழுந்திருப்பது வியப்பில்லை.

ஆன்மீகக் கருத்துக்கள் என்றாலே அவை கடின மானவை, அதிக புலமை உள்ளாருக்கு மட்டுமே என்னும் எண்ணத்தை இந்நூல் மூலமாக நா. வே. நா தகர்த்தெறி கிறார். ஆன்மீகத்தையும், ஹாஸ்யத்தையும் இணைக்க முடியும் என்பதை இந்நூலில் வெளிப்படுத்தியிருக்கிறார். தன் வாழ்க்கையில் நல்ல நகைச்சுவையாளராக விளங்கிய அவர், இந்நூலிலும், கட்டுரைகளிலும், தன் நகைச்சுவை உணர்வுகளை நயம்படத் தெளித்திருப்பது நம் பாராட்டிற் குரியது. அந்த நகைச்சுவை உணர்வின் வெளிப்பாடு நாடகப் பாணியாகி, ''மடல் ஊர்தல்'' என்னும் கட்டுரையில் ஒரு திரைப்பட உள்ளமைப்பைத் தந்திருப்பதையும் காணலாம், காட்சி அமைப்பு, கதாபாத்திரங்களின் வருகை, அரங்க நிர்வாகம் எனப் பல நவீன நாடக உத்திகளை இதில் எழிலுடன் கையாள்கிறார் திரு நா. வே. நா. அவர்கள்.

வைணவ விற்பன்னர்களுக்குத் தங்கள் திறமைக்கு அரண் சேர்க்கும் கைவிளக்காகவும், வைணவ மாணவர்களுக்கு நயந்துரை வழங்கும் நல்லாசிரியனாகவும், ஏனையோருக்கு ஆண்டவன் அருள் கடாட்சிக்கும் ஆலயப் பொருளாகவும் இந்நூல் விளங்கும் என்பதில் ஐயமில்லை.

இந்நூலைப் படிப்போரும், பயில்வோரும் பற்பல நலமும் வளமும் பெற எல்லாம் வல்ல திருவருளை இயம்பி இறைஞ்சுகிறேன்.

அன்புடன்,

சி. இரத்தினவேல் பாண்டியன்

9-5-93

# பொருளடக்கம்

# பாம்பின் கால்

# பாம்பு அறியும்!

''கோலார்ந்த நெடும் சார்ங்கம், கூனல் சங்கம் கொலை ஆழி, கொடும் தண்டு, கொற்ற ஒள் வாள், கால் ஆர்ந்த கதிக் கருடன் என்னும் வென்றிக் கடும் பறவை இவை அனைத்தும் புறம் சூழ் காப்ப, சேல் ஆர்த்த நெடுங் கழனிச் சோலை சூழ்ந்த; திருவரங்கத்து அரவணையில்,'' மாலோன் பள்ளிகொள்ளும் ஓங்காரப் பிரணவ விமானத்தின் உச்சியில், நான்கு வேதங்களும், நான்கு சிகரங்களாக அமைந்துள்ளன என்பது பெரியோர் திருவுள்ளம்.

அவ்விதமாகவே, அடியேனுடைய இக்கட்டுரையிலும் (1) பாம்பின், (2) கால், (3) பாம்பு, (4) அறியும். என்ற நான்கு வார்த்தைகள் மகுடங்களாக அமைந்துள்ளன.

பாம்பின் கால் பாம்பு அறியும் என்ற நான்கு வார்த்தை களைக் கொண்ட இந்த மகுடத்தில் எத்தனை பாம்புகள் பின்னிக் கிடக்கின்றன என்று பார்க்கலாம் !

பாம்பின் கால்-ஒரு பாம்பின் காலை, பாம்பு அறியும்:— அதாவது,

இன்னொரு பாம்பு அறியும் ! ஆக, இதில் இரண்டு பாம்புகள் ! !

**ஸ்ரீ வைணவ சம்பிரதாயப்படி,**

இருள் இரியச் சுடர் மணிகள் இமைக்கும் நெற்றி, இனத் துத்தி அணி பணம் ஆயிரங்கள் ஆர்ந்த அரவு அரசப் பெருஞ்சோதி அனந்தன் என்னும் அணிவிளங்கும் ஒரு பாம்பே சிரேட்டமானது.

ஆனால் இந்தக் கட்டுரையை முடித்துத் தலைக் கட்டு வதற்கு இரண்டு பாம்புகளைப் பிடித்தாக வேண்டி யிருக்கிறது ! பார்க்கலாம் முயற்சி செய்து !

(i) திருவனந்தாழ்வான், பலராமராக அவதரித்தார் என்று ஒரு கொள்கை ! அப்படியானால், திருமால் பத்து அவதாரங்கள் எடுத்தார் என்று சொல்வதற்கில்லை !

> 'தேவுடை மீனமாய், ஆமையாய் ஏனமாய், அரியாய்,
> குறளாய் மூ உருவில் இராமனாய்க் கண்ணனாய்க்
> கற்கியாய் முடிப்பான் கோயில்'

என்பது அல்லவா, மெய் நாவன், மெய் அடியான், விட்டுச்சித்தன் விரித்த தமிழ் ! ஆகவே, இது பாம்போ, மகவானோ எனத் தெளிவுற அறிய முடியவில்லை.

(ii) மறுபடியும் பார்க்கலாம் ! திருவனந்தாழ்வான் இலட்சுமணனாக அவதரித்தார் என்பர் பெரியோர்

மோட்சம் அளிப்பது ஸ்ரீமந் நாராயணனால் தான் முடியும். பிராட்டி புருஷகாரம் செய்வதோடு சரி.

"மோட்சம் அளிக்கக் கூடியவன் ஸ்ரீமந் நாராயணனே தான்!'' என்று ஸ்ரீராமர் சபரிக்கு மோட்சம் அளித்த போதும், பெரிய உடையாரான ஜடாயுவுக்கு மோட்சம் அளித்தபோதும் காண்பித்து விட்டார் !

இது சௌலப்யத்தில் காட்டிக்கொண்ட பரத்துவம்

சமுத்திர ராசன் தன் மீது அணைகட்ட இணங்காது காலந்தாழ்த்தியபோது ஏழு சமுத்திரங்களையும் 'ஒரே பாணத்தால் வற்ற அடிப்பேன்' எனத் தன் நாராயணப் பரத்துவத்தை வெளியிட்டுவிட்டார்.

இது கோபத்தில் காட்டிய பரத்துவம்!

இவ்விதமாக இலட்சுமணன் எங்கேயும் தன்னைத் திருவனந்தாழ்வான் என்று காட்டிக் கொண்டதில்லை!

கைகேயி, இராமபிரானுச்குத் தீங்கு இழைத்தபோதும் மகாராஜரான சுக்ரீவர் உதவக் காலந் தாழ்த்தியபோதும் இலட்சுமணன் பாம்பெனச் சீறியிருக்கலாம். ஆனால், அவர் செய்தது என்ன? பெரிய பெருமாள் பதினான்கு வருடம் காட்டிற்கு எழுந்தருளிய சமயம் பாம்புக் கண் கொண்டு பாதுகாத்துக் ' கைங்கரிய ஸ்ரீ மானாக''த் திகழ்ந்தார்.

அவ்வளவுதான்! வெளிக்காட்டிக் கொள்ளவில்லை. இந்தப் பாம்பு இராமனாகிய பெட்டியில் அடங்கியபெட்டிப் பாம்புதான்!

இன்னொன்றும் உண்டு.

(iii) திருக்குருகூரிலே நம்மாழ்வார் அவதரிக்கும் முன்பாகவே திருவனந்தாழ்வான், திருப்புளியாழ்வாராக அவதரித்தார் எனக் குருபரம்பரைக் கதைகள் கூறுகின்றன

பாம்புக் கண்ணுடன் இந்தப் புளியும் உறங்காப் புளி யாகவே திகழ்ந்து வருகிறது! ஆனால் இந்த மரத்திலும் பச்சையாகப் பாம்பைப் பார்க்க முடியவில்லை.

(iv) அடுத்தபடியாக திருவனந்தாழ்வான் சான்றோ ருடை தொண்டை நாட்டிலே, ஸ்ரீ பெரும்பூதூரிலே இலட்சுமண முனி என்னும் - இளையாழ்வார் என்னும் உடையவராக அவதரித்தார் என அறிகிறோம்!

இந்த அவதாரத்திலே—நல்ல - பாம்பு படம் எடுக்கிற தைப் பார்க்கின்றோம்!

மைசூர் ராச்சியத்திலுள்ள தொண்டனூரிலே, ஆயிரம் ஜைனர்கள் ஒரே காலத்தில் வாதுக்கு வரவும், உடையவர் தவக்கும் அவர்களுக்கும் நடுவிலே திரையிட்டு, ஆயிரம் தலையையுடைய ஆதிசேடனாகி, ஆயிரம் ஜைனர்களுக்கும் ஒரே சமயத்தில் பதில் சொல்லி அவர்களை வாயடக்கி வைணவர் ஆக்கினார் !

இன்றும் தொண்டனூர் சென்று சேவித்தால் இந்த சம்பவத்தை நினைவூட்டும்படி உடையவருடைய சிரசிற்கு மேலே திருவனந்தாழ்வானும் படம் விரித்து எழுந்தருளி யிருப்பது அறியலாம். உடையவருடைய தமர் உகந்த திருமேனியை ஸ்ரீபெரும்பூதூரில் சேவிக்கும்போதும் பின் இருந்து—திருமஞ்சனக் காலத்தில் சேவிக்கும்போதும்—இதை அறியலாம். திருவனந்தாழ்வானுடைய படம் போன்று விரிந்த திருமுதுகு சேவிக்க உணர்ச்சி மிகும்!

திருமஞ்சனக் கட்டியத்திலும், இந்த விசேடம் வெளி யிடப்பட்டுள்ளது.

அப்பாடி! ஒரு பாம்பைப் பிடித்து விட்டோம்! இன்னொரு பாம்பைப் பிடிக்க வேணுமே!

உடையவர், அதாவது திருவனந்தாழ்வான் அடுத்த படியாக, திருக்குருகூரிலே மணவாள மாமுனிகளாக அவ தரித்தார் என்பது உலகம் அறிந்த உண்மை! அவதாரத்தி னுடைய அவதாரிகையைச் சேவித்தாலே போதும்!

எடுத்த எடுப்பிலேயே மணவாளமாமுனிகள் திருவனந் தாழ்வான்தான் என்று படம் எடுத்து அடித்துக் காட்டுகிறது அப்பிள்ளாருடைய "சம்பிரதாயச் சந்திரிகைப் பாட்டு,"

இதோ! அந்தப் பாடல்!

ஆதியிலே அரவு அரசை அழைத்து அரங்கர்,
அவனியிலே இரு நூற்றாண்டு இரும்நீர்என்னப்
பாதியிலே உடையவராய் வந்து தோன்றிப்
பரம பதம் நாடி அவர் போவேன் என்ன,

நீதியாய் முன்போல நிற்க. நாடி
நிலுவை தனை நிறை வேற்றி வாரும் என்னச்
சாதாரண மெனும் மா வருடம் தன்னில்
தனித்துலா மூல நாள் தான் வந்தாரே!

இதைவிட அத்தாட்சிகளையும் காண்போம்.

ஸ்ரீ மணவாளமாமுனிகள் திருக்குருகூரிலே திருவாய் மொழிப்பிள்ளையின் சீடராக ஸ்ரீவைணவ நூல்களைக் கற்றார்.

சீடருடைய புத்தி மேன்மையைத் திருவாய் மொழிப் பிள்ளை உணர்ந்தார்; ''அறிவில் ஆதிசேஷன் தான் இந்த சீடன்'' என உணர்ந்து, சீடரைத் தன் உண்மை அவதார ரகசியத்தை வெளிப்படுத்தவேண்டினார்.

குருவின் ஆணையை நிராகரிக்க முடியாமல் மணவாள மாமுனிகள், திருவாய்மொழிப் பிள்ளைக்கு ஆதிசேடனாகக் காட்சி அளித்தார்.

திருவாய்மொழிப் பிள்ளையும், ஸ்ரீமணவாள மாமுனி களை 'நீர் ஆதிசேட அவதாரமாகையால், உடையவர் திருவடிகளையே தஞ்சமெனப் பற்ற வேண்டியது', என நியமித்தருளினார்! இவரும் யதீந்திரப் பிரவணர் ஆனார்

ஸ்ரீ பெரும்பூதூர் வந்து ஸ்ரீ உடையவரைச் சேவித்தார் ஸ்ரீமணவாளமாமுனிகள். பெருமாள் கோயிலாம் காஞ்சி புரத்தில் கிடாம்பித் திருமலை நாயனாரிடம் ஸ்ரீபாஷ்யம் சேவிக்கும்படி நியமனமாயிற்று

அவ்விதமே சேவிக்கையில் கிடாம்பித் திருமலை நாயனாருக்கும் சந்தேகம் உதித்து மணவாள மாமுனிகளைத் தம் நிஜ அவதாரத்தை வெளிப்படுத்த வேண்டினார். ஆசார்யரிடம் ஒன்றையும் ஒளிக்கக் கூடாதாகையாலே,

அந்தக் கிடாம்பித் திருமலை நாயனாருக்கும் தாம் ஆதிசேஷனே என்பதைக் காட்டியருளினார்

மணவாள மாமுனிகள் மடத்திலே தொண்டு செய்து கொண்டிருந்த ஒரு அந்தரங்க பக்தை கொற்றி அம்மை.

கோழி கூவுகிற அதிகாலை ஜாமத்திலே எழுந்து கொற்றியம்மை திருவலகுத் தொண்டு செய்வது வழக்கம். மணவாள மாமுனிகள் எழுந்தருளியிருந்த அறையில் ஒரு சன்னல் உண்டு. ஒருநாள் சன்னல் வழியாக எட்டிப் பார்த்தாள். மணவாள மாமுனிகளைக் காணவில்லை; திருவனந்தாழ்வானைப் பணா முடிகளுடன் சேவிக்கக் கொடுத்து வைத்தாள்.

சோழசிம்மபுரமான திருக்கடிகைக்கு அருகில் எறும்பி என்ற ஊர். அந்த ஊரிலே ஒரு ஸ்ரீ வைணவர்; அவருக்கு 'எறும்பியப்பா' என்ற திருநாமம்.

ஒரு சமயம் அவர் திருவரங்கம் வந்தார். ஸ்ரீமணவாள மாமுனிகள் காலட்சேபத்திற்கும் எழுந்தருளினார் ஆனால் காலட்சேபம் சாதிக்கும் ஸ்ரீமணவாள மாமுனிகளைப்பணிய வில்லை. ஊர் திரும்பினார். பூசைப் பெட்டியான தன் திருக்கோயிலாழ்வானைத் திறக்க முயன்றார்,முடியவில்லை. அவருடைய திருவாராதனப் பெருமாள் சக்ரவர்த்தித் திருமகனான ஸ்ரீராமர்; ஸ்ரீராமர் எறும்பியப்பாவின் கனவிலே எழுந்தருளினார்

''மணவாள மாமுனிகள், திருவனந்தாழ்வான் அவதாரம்! உடனே போய் அவர் திருவடிகளிலே பணி வீராக!'' என்று சாதித்தார்; எறும்பியப்பா அவ்விதமே பணிந்து உய்ந்தார்!

ஏக பாணம், ஏக பத்னி, ஏக வசன—விரதரான—
ஸ்ரீராமர் சொல்லுக்கு எதிர் சொல்லா?

திருவரங்கத்திலே சிங்கரையர் என்ற பக்தர் ஸ்ரீவைணவர் கட்குக் கறியமுதுகள் கொடுத்து வந்தார்.இக்கைங்கரியத்தை

உகந்த திருவரங்கன், சிங்கரையர் கனவிலே தோன்றி திருவனந்தாழ்வானுடைய அவதாரமான மணவாள மாமுனிகளின் திருவடிகளில் சம்பந்தம் உண்டாக்கிக் கொள்ளப் பணித்தார். அவ்விதமே பணிந்து உய்ந்தார் சிங்கரையரும்.

திருவரங்கம் பெரிய கோயிலிலே ஒரு அர்ச்சகர் உத்தமநம்பி என்பவர். தினமும் ஸ்ரீ மணவாள மாமுனிகள் அந்த சந்நிதிக்கு எழுந்தருளி வெகுநேரம் மாயோனை மனத்தாலே பற்றி நின்று துதிப்பார்.

மணவாள மாமுனிகளின் திருமேனி பால்வண்ணம். இதனால் உத்தம நம்பிக்கு ஸ்ரீ மணவாள மாமுனிகள் ஏதோ பெரிய வியாதியை உடையவரோ என ஐயம். அதனால் அருவருப்புக் கொண்டு ஒரு நாள் சந்நிதியை விட்டு விலகச் சொன்னார். சாத்விகரான மணவாள மாமுனிகள் சென்ற பிறகு, பெரிய பெருமாள் தம் தலைப்பக்கமாக சயனத் திருக்கோலத்தில் வைத்திருக்கும் திருக்கையால் மேலே சுட்டிக்காட்டி

"வாய் ஓர் ஈர் ஐஞ்ஞூறு, துதங்கள் ஆர்ந்த
வளையுடம்பில் அழல் நாகம் உமிழ்ந்த செந்தீ
வீயாத மலர்ச் சென்னி விதானமே போல்
மேன்மேலும் மிக எங்கும் பரந்து அதன் கீழ்"

நான் பள்ளி கொள்கின்றேனே அந்தத் திருவனந்தாழ்வான் தான் நம் மணவாள மாமுனிகள்" என்று வெளி யிட்டாராம்.

உத்தம நம்பியும் ஓடோடி வந்து, ஸ்ரீ மணவாள மாமுனிகள் திருவடிகளில் பணிந்து அவரை திருவனந் தாழ்வானாகவே சேவித்து உத்தம நம்பியானார்

தெய்வமே காட்டித் தந்த பிறகு வேறு அத்தாட்சி தேவையில்லை.

ஆரம்பப் பாடசாலையிலே ஆரம்ப வகுப்பு; ஆசிரியரும், ஆறு வயதுக்கு இப்படியும் அப்படியுமான மாணவர்களும். தணிக்கை அதிகாரியும் எழுந்தருளியிருக்கிறார்! ஆசிரியர்

தன்னுடைய மிக புத்திசாலியான மாணவனைக் கூப்பிட்டுக் கரும்பலகையில் "பாம்பு" என்று எழுதச் சொன்னார்.

பையன் சடக்கென்று 'பம்பு' என்று எழுதிவிட்டுப் புன்னகை புரிந்தான். ஆசிரியர் சாதுர்யமாகப் பையனைத் திருத்த முயற்சித்து வாயை முழுதும் திறந்து 'பாம்பு' என்று குறிப்புக் காட்டி மறுபடியும் எழுதச் சொன்னார்.

மறுபடியும் பையன் 'பம்பு' என்று எழுதிவிட்டு இன்னும் அதிகமாகப் புன்னகை புரிந்தான்.!

ஆசிரியருக்குக் கோபம் !

கையில் பிரம்பை எடுத்துக் கொண்டார். இரண்டு கையையும் இரு பக்கமும் நீளமாக விரித்து, வாயையும் திறந்து 'பாம்பு' என்று நீட்டினார்.

மறுபடியும் பையன் 'பம்பு' என்று தைரியமாகத் திட்டிப் பல்லையும் காட்டினான். ஆசிரியருக்குக் கோபம் அளவு மீறிவிட்டது. பிரம்பால் பையனைப் புடைத்து இப்படி மூன்றாவது முறையும் தப்பாக எழுதலாமா என்று கர்ஜித்தார்

பையன் அடிக்குப் பணிந்து விண்ணப்பித்தான்.

"நேற்றுதானே ஐயா! பாம்பிற்குக் கால் இல்லை என்று பணித்தீர்கள். அதனால் தான் 'பாம்பு' என்று பகரத்திற்குக் கால் போட்டு எழுதாமல் காலை நீக்கிவிட்டு 'பம்பு' என்று எழுதினேன்! இதற்கு அடிக்கிறீர்களே!" என்று பிரலாபித்தான்.

எனவே, பாம்பின் கால் பாம்பறியும் என்னும் மகுடத்தில் அறியப்படும் பொருள் ;

பாம்பின் கால் — உடையவராகிய பாம்பின் காலை
பாம்பு அறியும் — மணவாளமாமுனிகளாகிய பாம்பு அறியும் !

பாம்பின் கால் என்றால் என்ன?

ஸ்ரீ வைணவ மரபுப்படி பாம்பு என்பதற்கு உடையவர் என்றும் மணவாளமாமுனிகள் என்றும் பொருள்கொண்டது போல "பாம்பின் கால்" என்பதற்கும் ஸ்ரீ வைணவ மரபுப்படியே சரியாகப் பொருள் கொள்ளவேணும்!

ஸ்ரீ வைணவ ஞானத்துடன் பாம்பு என்னும் வார்த்தைக்கு ஸ்ரீ உடையவர் என்று பொருள் கொண்டால் பாம்பின் கால் என்பதற்கு உடையவரின் கால்கள் என்ற பொருளாகாது. கால் என்பதற்கும் சரியாகப் பொருள் கொள்ளவேணும். எனவே, பாம்பின் கால் என்றால் "உடையவர் கடைப்பிடித்த மார்க்கம்' என்றுதான் பொருள் கொள்ளவேணும்.

அதாவது ஸ்ரீ உடையவர் திருவடிகளைப் பற்றி அவர் காட்டி அருளிய மார்க்கம் என்று கொள்ளவேணும்.

உடையவர் கடைப்பிடித்த மார்க்கம் என்றவுடன் உடையவர் திரு நாமத்தாலே ஒரு மார்க்கம் உண்டா என்று கேள்வி பிறந்தால் "உண்டு" என்றே விடை சொல்லலாம். ஸ்ரீ வைணவத்திற்கே இப்பெருமை உண்டு. வேறு எந்த ஆழ்வாருக்காவது, ஆசார்யருக்காவது இந்தப் பெருமை கிடையாது.

**பாம்பின் கால்**

இதோ ஒரு பாம்பிற்குக் கால் உண்டென்று இன்னொரு பாம்பின் சாட்சியத்தைக் கேளுங்கள்.

முதல்! பாம்புக்குக் கால் உண்டென்று இரண்டாவது பாம்பு தான் பலரும் அறிய உபதேசமாக அருளியுள்ளது,

> "எம்பெருமானார் தரிசனம் என்றே இதற்கு
> நம்பெருமாள் பேரிட்டு நாட்டி வைத்தார்-அம்புவியோர்
> இந்தத் தரிசனத்தை எம்பெருமானார் வளர்த்த
> அந்தச் செயல் அறிகைக்காக!"

அப்படியானால்,

எம்பெருமான் தரிசவம் வேறு—
எம்பெருமானார் தரிசனம் வேறா?

இல்லை! இல்லை!

எம்பெருமான் தரிசனம் புதரில் மறைந்திருந்த செடி. எம்பெருமானார் தரிசவம், அந்தச் செடியே, புதர் வெட்டி வேலிகட்டி, தழைத்துப் பூத்துக் காய்த்துப் பழுத்துக் குலுங்குகிற பெரிய மரம்!

ஓரிடத்தில் சிவன் கடவுள் என்றும்,
ஓரிடத்தில் இந்திரன் கடவுள் என்றும்,
ஓரிடத்தில் பிரம்மா கடவுள் என்றும்,
ஓரிடத்தில் நாராயணன் கடவுள் என்றும்,

இப்படி வேறு வேறு தேவர்களையும் கடவுள் என்று கூறிக்கொண்டு இருக்கிற வேதப் புதரிலே, ஸ்ரீமந் நாராயணன் என்ற செடியும் காணப்பட்டது.

வேதத்தை விளக்க பிரம்ம சூத்திரம் எழுந்தது. ஆனால் வியாசரின் பிரம்ம சூத்திரமும் இரும்பு வேலியாகவே இருந்தது. எம்பெருமான் தரிசனம், வேதத்தையும் பிரம்ம சூத்திரத்தையும் துணையாகக் கொண்டிருந்த போது செடியளவாகவே இருந்தது.

ஸ்ரீ ஆளவந்தார் திருவுள்ளப்படி எம்பெருமானார் வியாச முனிவரின் பிரம்ம சூத்திரத்திற்கு பாஷ்யம் என்ற விளக்க வுரையை அருளிச் செய்து, விசிஷ்டாத்வைத மதத்தை நிலை நாட்டியதால், எம்பெருமான் தரிசனம் என்கிற செடி, எம்பெருமானார் தரிசனம் என்ற கற்பக விருட்சமாகி உதவுகிறது.

உடையவர் அருளிய பாஷ்யத்தை உகந்தே, கல்விக்கு அரசியான சரஸ்வதியும் 'ஸ்ரீ பாஷ்யம்' எனத் திருப்பெயர் சூட்டினாள்.

இந்த ஸ்ரீ பாஷ்யத்தின் சிறப்பென்ன?

வேதத்தின் உட்பொருளை, விசிஷ்டாத்வைத மதத்தை, வியாசர் அருளிய பிரம்ம சூத்திரத்திற்கு போதாயனர் முதலிய பூர்வ ஆசார்யர்கள் வியாக்கியானப்படி

''தூராத மனக்காதல் தொண்டர் தங்கள்
குழாம் குழுமித் திருப்புகழ்கள் பலவும் பாடி,
ஆராத மனக்களிப்போடு அழுத கண்ணீர்
மழைசோர நினைந்து உருகி ஏத்தி, நாளும்''
திருவரங்கத்தில் தான்,
''வன் பெரு வானகம் உய்ய ! அமரர் உய்ய !
மண் உலகில் மனிசர் உய்ய ! மண் உய்ய !
துன்பமிகு துயர் அகல !
அயர்வு ஒன்றில்லாச் சுகம் வளர !

அகம் மகிழும் தொண்டர் வாழ அன்போடு தென் திசை
நோக்கி அரங்கன் பள்ளி கொள்வது எதனால் ?
அந்த அணி அரங்கன் தன் திருமுற்றத்தில் ஆழ்வார்
தங்கள் இன்பமிகு பெருங்குழவு கண்டு கொண்டே
இசைந்துடனே இன்றும் தமிழிலே, இருப்பதால்தான்''

**ஆழ்வார்களும்—உடையவரும்**

ஆழ்வார்களை இராமாநுசர் அநுபவித்த விதம் உண்டு,

ஒவ்வொரு ஆழ்வாரையும் இராமாநுசர் உச்சிமேல் கொண்டு போற்றி அவர்களுடைய பிரபந்தங்களை நன்கு பேணியும் பரப்பியுள்ளார். இதனைத் திருவரங்கத்து அமுதனார் விவரமாக அருளுகிறார்:

''வருத்தும் புற இருள்மாற்ற எம் பொய்கைப் பிரான்
மறையின் குருத்தின் பொருளையும்
செந்தமிழ் தன்னையும் கூட்டி, ஒன்றத்திரித்து அன்று
எரித்த திருவிளக்கைத் தன் திருவுள்ளத்தே

இருத்தும் பரமன், இராமாநுசன்......
இறைவனைக் காணும் இதயத்து இருள் கெட
ஞானம் என்னும்
நிறைவிளக்கு ஏற்றிய பூதத் திருவடித் தாள்கள், நெஞ்சத்து
உறைய வைத்து ஆளும் இராமாநுசன்......
மன்னிய பேர் இருள் மாண்டபின் கோவலுள் மாமலராள்
தன்னொடு மாயனைக் கண்டமை காட்டும்
தமிழ்த் தலைவன் பொன்னடி போற்றும் இராமாநுசன்......
சீரிய நான் மறைச் செம்பொருள் செந்தமிழால் அளித்த
பார் இயலும் புகழ்ப் பாண்பெருமாள்
சரணாம் பதுமத் தார் இயல் சென்னி இராமாநுசன்...
இடம் கொண்ட கீர்த்தி மழிசைக்கு இறைவன் இணை
அடிப்போது அடங்கும் இதயத்து இராமாநுசன்......
செய்யும் பசுந் துளவத் தொழில் மாலையும் செந்தமிழில்
பெய்யும் மறைத் தமிழ் மாலையும் பேராத சீர்
அரங்கத்து
ஐயன் கழற்கு அணியும் பரன்தாள் அன்றி
ஆதரியா மெய்யன் இராமாநுசன்...
கொல்லி காவலன் சொல் பதிக்கும் கலைக் கவிபாடும்
பெரியவர் பாதங்களே துதிக்கும்பரமன் இராமாநுசன்..
சோராத காதல் பெரும் சுழிப்பால் தொல்லை மாலை
ஒன்றும்
பாராதவனைப் பல்லாண்டு என்று காப்பிடும் பான்மையன்
தாள்
பேராத உள்ளத்து இராமாநுசன்......
அரங்கர் மௌலி சூழ்கின்ற மாலையைச்
சூடிக் கொடுத்தவள் தொல் அருளால்
வாழ்கின்ற வள்ளல் இராமாநுசன்......
கண்ணமங்கை நின்றானைக் கலைபரவும்
தனியானையைத் தண் தமிழ் செய்த
நீலன் தனக்கு உலகில்
இனியான் எங்கள் இராமாநுசன்......
எய்தற்கு அரிய மறைகளை ஆயிரம் இன் தமிழால்

செய்தற்கு உலகில் வரும் சடகோபனைச் சிந்தையுள்ளே பெய்தற்கிசையும் பெரியவர் சீரை உயிர்கள் எல்லாம் உய்தற்கு உதவும் இராமாநுசன்......

மாறன் விளங்கிய சீர், உறு பெரும் செல்வமும்

தந்தையும் தாயும் உயர் குருவும் வெறிதரு பூ மகள்நாதனும் நெறிதரும் செந்தமிழ் ஆரணமே என்று இந் நீள்,'' நிலத்தோர் அறிதர நின்ற இராமாநுசன்...... என்று

வேதம், மற்றும் பிரம்ம சூத்திரங்களில் பொதிந்து கிடக்கும் திருமால் திருநெறியை ஆழ்வார்கள் தங்கள் திவ்யப்பிரபந்தங்களில் பரக்க வெளியிட்டுள்ளதை உடையவர் விளக்கினார்.

ஆசார்யர்களுடைய வியாக்கியானங்களையும் போற்றினார். இந்த எம்பெருமானார் தரிசனத்தை ஆதரித்து ஸ்ரீ மணவாள மாமுனிகள் தம் உபதேசரத்தின மாலையில் ''வடமொழி வேதமும், ஆழ்வார்களுடைய தென் மொழி வேதமும் ஆசார்யர்களுடைய வியாக்கியானங்களை யும் ஒன்றாக இணைத்து வாழ்க!'' என அருளினார்.

ஆழ்வார்கள் வாழி! அருளிச் செயல் வாழி!
தாழ்வாதும் இல்குரவர் தாம் வாழி—ஏழ்பாரும்
உய்ய அவர்கள் உரைத்தவைகள் தாம் வாழி!
செய்ய மறை தன்னுடனே சேர்ந்து!

இந்த ஆழ்வார்கள் விவரத்தையும் அவதரித்த வரிசையையும் சொல்கிறார்.

பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ் மழிசை
அய்யன் அருள் மாறன் சேரலர்கோன்—துய்யபட்ட
நாதன் அன்பர் தாள் தூளி நற்பாணன் நன் கலியன்
ஈதிவர் தோற்றத்து அடைவாம் இங்கு!

உலகோர் அறியும்படி. ஆழ்வார்களுடைய அவதார தினங்கள்,ஊர்களைப் பட்டோலை செய்தருளுகிறார் மேலே முப்பது பாடல்களில். ஆழ்வார்களையும், அருளிச் செயல் களையும் ஆசார்யர்களுடைய வியாக்கியானங்களையும் காத்து மதிக்க வேண்டுமென அருளுகிறார்.

"ஆழ்வார்கள் ஏற்றம்! அருளிச் செயல் ஏற்றம்!
தாழ்வுஆதும் இன்றி அவை தாம் வளர்த்தோர்—
ஏழ்பாரும்

உய்ய அவர் செய்த வியாக்கியைகள் உள்ளதெல்லாம்
வையம் அறியப் பகர்வோம் வாய்ந்து!

ஆழ்வார்களையும் அருளிச் செயல்களையும்,
தாழ்வா நினைப்பவர்கள் தாம் நரகில்—வீழ்வார்கள்!

என்று நினைத்து நெஞ்சே எப்பொழுதும் நீயவர்பால்
சென்றணுகக் கூசித்திரி!"

பாம்பின் கால் பாம்பு அறிந்தபடி இது!

ஆழ்வார்களுடைய திவ்யப்பிரபந்தங்களை நன்கு அநுபவித்துப் பரக்க விளக்கியவர்கள் நாதமுனிகள் தொடக்கமான நம் ஆசார்யர்கள் தானாம்!

தெருள் உற்றஆழ்வார்கள் சீர்மை அறிவார்ஆர்?
அருளிச்செயலை அறிவார் ஆர்? - அருள் பெற்ற
நாதமுனி முதலாம் நம் தேசிகரை அல்லால்
பேதை மனமே உண்டோ பேசு!

ஆழ்வார்கள் அருளிச் செய்த பிரபந்தங்களுக்கு ஆசார்யர் ஏற்படுத்திய வியாக்கியானங்களைப் பரக்கப் பேசி, மேலும், பிள்ளைலோகாசார்யர் அருளிய ஸ்ரீவசன பூஷணத்தைப் போற்றி உபதேசரத்தினமாலையை முடித்தருளுகிறார்.

பாம்பின் காலை பாம்பறிந்தபடி இது!

**குருகூர்க் குடையின் கீழ் உடையவர்:**

நமது பத்து விரல்களைப்போல் பத்து ஆழ்வார்கள் அரங்கனைப் பாடினர். பத்து விரல்களிலும், இரண்டு கட்டை விரல்கள் மிக முக்கியம் அல்லவா? அதே போன்று பத்து ஆழ்வார்களிலும் இரண்டு ஆழ்வார்களுக்கு அதிக விசேஷம் உண்டு. ஆழ்வார்களிலே குருகூர்ச் சடகோபரையே நம்பெருமாளான அரங்கநாதன் 'நம் ஆழ்வார்' என்று கொண்டாடினார்.

பெருமாளான ஸ்ரீராமருடைய சரித்திரத்தைப் பாடிய கம்ப நாட்டாழ்வார், பெரிய பெருமாளான அரங்கன் திரு முன்பு அரங்கேற்ற விரும்பியபோது, முதலிலே "நம் சடகோபனைப் பாடினையோ?" என்று பணிக்க, கவியரசரும் சடகோபரந்தாதி பாடியருளினார். அதாவது பெருமாளுடைய திருவடிகளை அடைய விரும்பினால் அவனது திருவடிகளாக உள்ள நம்மாழ்வாரை முதலில் அடையவேணும்.

நம்மாழ்வார் சரீரம் ஏனைய ஆழ்வார்கள் அவரது அங்கங்களாகி அமைந்துள்ளனர். இதே முறையில் உடையவரும் நம்மாழ்வாரின் அடிபணிந்து அவருடைய திருவடியாகவே உள்ளார். முதல் எடுப்பிலேயே திருவரங்கத்து அமுதனார் இதை வெளியிடுகிறார்!

"பூ மன்னு மாது பொருந்திய மார்பன் புகழ் மலிந்த
பாமன்னு மாறன் அடிபணிந்து உய்ந்தவன்
பல்கலையோர் தாம் மன்ன வந்த இராமாநுசன்!"

நம்மாழ்வார் அருளிச் செய்த தமிழ் வேதம் என்ன துணை செய்தது உடையவருக்கு? மனம்போல சொல்லிக் கொண்டிருந்த ஆறு மதங்களும் குலைந்து போயின!

கூறும் சமயங்கள் ஆறும் குலையக் குவலயத்தே
மாறன் பணித்த மறை உணர்ந்தோன்—ராமாநுசன்.

**உடையவரால் உண்டான நன்மைகள் :**

மண் உலகில் ஈட்டிய சிலத்து இராமாநுசன்.
தன் இயல்பு கண்டே தென் குருகை வள்ளல்
வாட்டம் இலா வண் தமிழ் மறை வாழ்ந்தது; அதனால்
நாராயணனைக் காட்டிய வேதம் களிப்புற்றது
அதனால், பிறர் நாட்டிய நீசச் சமயங்கள் மாண்டன.

ராமாயணக் காலட்சேபம், பாராயணம் செய்தால் ஒரு ஆசனம் இட்டுத் தனியாக வைப்பார்கள். அநுமார் உடன் எழுந்தருளி ராமநாமத்தை, ராமகீர்த்தியை அநுபவிப் பாராம்; அதுபோலவே,

குணந்திகழ் கொண்டல் இராமாநுசன் எம் குலக் கொழுந்து எங்கே எழுந்தருளியிருப்பார் என வினவினால், அமுதனார் அளிக்கும் விடை ;

'திருவாய்மொழியின் மணந்தரும்
இன்னிசை மன்னும் இடந்தொறும்,''

எழுந்தருளியிருப்பாராம் இராமாநுசர்!

கரும்பு ஒருவருக்குப் பிடிக்கும். அந்தக் கரும்பைச் சாறாக்கி அதையும் கட்டியாக்கிக் கல்கண்டாக அளித்தால் எப்படி இருக்கும்!

பால் என்றால் ஒருவருக்கு உயிர்! அந்தப் பாலைக் காய்ச்சிக் காய்ச்சிப் பால்கோவாவாக்கி ஊட்டினால் எப்படி?

திருவாய்மொழியைச் சேவிக்கிறார்கள் என்றால் உடையவர் எழுந்தருளிவிடுவார்!

அந்தத் திருவாய்மொழி ஆயிரம் பாசுரங்கள்; அந்த ஆயிரம் பாசுரங்களையும் காய்ச்சி வடித்து நூறு பாசுரங்க ளாக்கி அதையும் சுலபமாக மனப்பாடம் செய்ய அந்தாதி யாகவே ஆக்கி ஸ்ரீ மணவாள முனிகள் அளித்தார்!

தம் ஆசார்யரான உடையவருக்கு இந்தக் கைங்கரியத் தைப் புரிந்து உகந்தார் ஸ்ரீ மணவாள மாமுனிகள்.

இதுவே திருவாய்மொழி நூற்றந்தாதி யாகும். இந்தக் குட்டி வேதத்தை அருளியதன் காரணம் :

"பாம்பின் கால் பாம்பறியும்!" என்பதால்தான்.

நம்மாழ்வாருக்கு அடுத்தபடி, திருவரங்கனுக்கு ஆழ்வார் களில் திருமங்கை மன்னன் மீது உகப்பு அதிகம். நம்மாழ் வார் அருளிய நான்கு தமிழ் வேதப் பிரபந்தங்களுக்கு ஆறு அங்கங்கள் அருளினார் மங்கை மன்னர்.

திருக்கண்ணபுரம் கோயிலை இடிக்க ஆரம்பித்தான் சோழன், வைணவத்தின் மீது துவேஷம் கொண்டு! அவன் மகன் சொன்னானாம் :—"ஸ்ரீ ராமாயணமும், திருவாய் மொழியும் உள்ளவரை வைணவத்தைத் தூளாக்குகிற காரியமா?". எனவே ஸ்ரீ வைணவ சமயத்திற்குத் திருவாய் மொழி ஒரு மதில்.

திருவரங்கன் தரிசனத்துக்கு ஒரு மதிலைக் கட்டினார் நம்மாழ்வார். திருவரங்கன் கோயிலுக்கு ஏழு பிரகாரங் களையும் மதில்களையும் கட்டினார் திருமங்கை மன்னன்.

நம்மாழ்வாருடைய திருவடியை ஆழ்வார் திருநகரியி லிருந்து திருவரங்கம் எழுந்தருள்வித்து ஒவ்வொரு ஆண்டும் வைகுண்ட ஏகாதசி சமயம் திருவாய்மொழித் திருநாளை நடப்பித்து வைத்தார்.

நம்மாழ்வாருக்கு அடுத்தபடி திருமங்கை மன்னனிடம் உடையவர் கொண்டு இருந்த ஈடுபாட்டைஇரண்டாவதான கவியிலேயே அருளுகிறார் திருவரங்கத்து அமுதனார்.

கள்ளார் பொழில் தென் அரங்கன் கமலப் பதங்கள் நெஞ்சில்
கொள்ளா மனிசரை நீங்கிக் குறையல் பிரான் அடிக்கீழ்
விள்ளாத அன்பன் இராமாநுசன்!

குறையல் பிரான் திருமங்கை மன்னன்!

ஓங்காரப் பிரணவமான ஸ்ரீ ரங்க விமானத்திற்குக் காப்பாக, கவசமாக, ஏழு திருமதில்களை எழுப்பின மங்கை மன்னரை உடையவர் போற்றினார்! தம் ஆசாரியன் பணிந்த மங்கை மன்னரின் திருமேனிக்கு மணவாள மாமுனிகள் காப்பும், கவசமும் கவியிலே சமர்ப்பித்தார்! காரணம் :

பாம்பின் கால் பாம்பறியும்!

திருமங்கையாழ்வார் தவிர வேறு எவருக்கும் இவ்விதமான முடி தொடங்கி அடிவரை கவிக்காப்பும், கவசமும் கிடையாது! இதை "வடிவ அழகு சூர்ணிகை" என ஸ்ரீ வைணவ உலகம் போற்றுகிறது!

இதோ! திருமங்கை மன்னனது, அதாவது,

கொங்குமலி குழலியர் வேள் மங்கை மன்னனுடைய திருமேனியை அழகுசெய்யும் இக்கவி அணியைச்சேவியுங்கள்:

அணைத்த வேலும், தொழுத கையும்,
அழுந்திய திருநாமமும்,
ஓம் என்ற வாயும், உயர்ந்த மூக்கும்,
குளிர்ந்த முகமும், பரந்த விழியும்,
பதிந்த நெற்றியும், நெறித்த புருவமும்,
சுருண்ட குழலும், வடிந்த காதும்,
அசைந்த காது காப்பும், தாழ்ந்த செவியும்,
சரிந்த கழுத்தும், அகன்ற மார்பும்,
திரண்ட தோளும், நெளிந்த முதுகும்,
குவிந்த இடையும், அல்லிக் கயிறும்,
அழுந்திய சீராவும், தூக்கிய கருங்கோவையும்,

தொங்கலும் மாலையும், தளிரு மிளிருமாய்,
நிற்கின்ற நிலையும், சாற்றிய திருத்தண்டையும்,
சதிரான வீரக் கழலும், தஞ்சமான தாளிணையும்,
குந்தியிட்ட கணைக்காலும், குளிர வைத்த திருவடி
மலரும்,
வாய்த்த மணங்கொல்லையும்,வயலாலிமணவாளனும்
வாடினேன் வாடி வாழ்வித்தருளிய
நீலக்கலிகன்றி மருவலர் தம் உடல் துணிய
வாள் வீசும் பரகாலன் மங்கை மன்னனான வடிவே!

அற்புதமாக வடிவழகை வடித்துத் தரும் பாடல் இதுதான்!

உடையவர் திருவரங்கத்தில் எழுந்தருளியிருந்த காலத்தில் எழுந்தருளியிருக்கும் பாக்கியம் பெற்றவர் திருவரங்கத்து அமுதனார்.

நம்மாழ்வாருடைய திருவாய்மொழி முதலான பிரபந்தங்களையும் திருமங்கை மன்னனது பெரிய திருமொழி முதலான பிரபந்தங்களையும் சேவித்துக் கொண்டு உடையவர் திருவீதிகளில் எழுந்தருளுகையில் திருவரங்கத்து அமுதனார் சேவித்துள்ளார்.

நம்மாழ்வாருடைய தமிழ் மறையை ஓதிக்கொண்டு செல்லுங்கால், அந்தப் பாக்களால் ஏற்படுகிற பெருங்களிப்பினாலே யானையைப்போல் நடைபோட்டுக் கொண்டு செல்வாராம்.

இதோ, அந்த இராமாநுச வேழத்தைச் சேவியுங்கள்:—

"பண்தரு மாறன் பசுந்தமிழ் ஆனந்தம் பாய் மதமாய்
விண்டிட எங்கள் இராமாநுச முனிவேழம் மெய்ம்மை
கொண்ட நல்வேதக் கொழுந்தண்டம் ஏந்திக்
குவலயத்தே
மண்டிவந்து ஏன்றது வாதியர்காள் உங்கள்
வாழ்வற்றதே!"

அதே போல்,

நெஞ்சுக்கு இருள்கடி தீபம் அடங்கா நெடும் பிறவி
நஞ்சுக்கு நல்ல அமுதம் தமிழ் நன்னூல் துறைகள்
அஞ்சுக்கு இலக்கியம் ஆரண சாரம், பரசமயப்
பஞ்சுக் கனலின் பொறி பரகாலன் பனுவல்களை

எம்பெருமானார் ஓதிக்கொண்டு சென்றால், கம்பீர சிங்க நடையிலே செல்வாராம்!

இதோ அந்த சிம்மக் கவியையும் சேவியுங்கள்:—

''கலிமிக்க செந்நெல் கழனிக் குறையல்
கலைப் பெருமான்,
ஒலிமிக்க பாடலை உண்டு, தன்னுள்ளம்
தடித்து, அதனால்,
வலிமிக்க சீயம் இராமாநுசன் மறைவாதியராம்
புலிமிக்க தென்று இப்புவனத்தில் வந்தமை
போற்றுவனே!''
பொன்னரங்க மென்னில் மயலே
பெருகுமவர் இராமாநுசர்—
''தென்னரங்கன் செல்வமுற்றும்
திருத்தி வைத்தான் வாழியே''

என்று போற்றுகிறது ஸ்ரீ வைணவ உலகம், எம்பெருமானார் திருவரங்கம் பெரிய கோயிலில் எழுந்தருளியிருந்து புரிந்த அரிய தொண்டுகளுக்காக. அதோடு, எம்பெருமானார், தம்முடைய காலத்திலேயே ஸ்ரீபெரும்பூதூரில் தன் அவதாரத் தலத்தில்

''தாமுகந்த திருமேனியான''—திருவடிவை ஏற்படுத்தினார்.

நம்மாழ்வார் செய்தருளிய உபகாரத்திற்காக எம்பெருமான் அவரைத் தம் திருவடி நிலைகளாக்கிக் கொண்டான்! திருமங்கை மன்னன் புரிந்த கைங்கரியத்தை உகந்து,

திருவரங்கன் தான் கண்டு அருளிய மஞ்சக்குளி திருமஞ்சனத்தை ஈந்தருளினான். தை அமாவாசைக்கு முன்தினம் ஒவ்வொரு வருஷமும் திருமங்கை மன்னன் இதைக் கண்டருளிய பிறகு திருநாங்கூர் எழுந்தருளுகிறார்.

திருமலையிலே வடை அழகு, பெருமாள் கோயிலாகிற காஞ்சியிலே குடை அழகு, திருவரங்கத்திலே நடை அழகு. இந்த நடை அழகைத் திருவரங்கன் உடையவருக்குப் பிரசாதித்தான்!

அழகிய மணவாளன் திருவரங்கத்தில் ஒய்யார நடை அல்லது வையாளியில் செல்கையில் மூன்று விதமாகச் செல்வான் :—

ஒன்று சிம்ம கதி — சிம்ம நடை
இரண்டு கஜகதி — யானை நடை
மூன்று சர்ப்பகதி — பாம்பு ஊர்தல்

உடையவர் ஆதிசேஷனாகிய பாம்பின் அவதாரமாகையால் அவரது நடையாகிற சர்ப்பகதியைப் பிரசாதிக்கத் தேவை யில்லை.

மற்ற கஜகதி, சிம்ம கதிகளை ஸ்ரீபெரும்பூதூரில் வையாளி வைபவத்தில் சேவிக்கலாம், இன்றும்!

இதை மணவாள மாமுனிகளும் சேவித்துக் களித்துக் கவியாக்கியுள்ளார், விபவத்தில் சேவித்த அமுதனாரைப் போல! இதோ! எம்பெருமானாருடைய கஜகதியைச் சேவியுங்கள் :— யானை இப்படியும் அப்படியும் இரு பக்கத் திலும் அசைந்து செல்லும்! அசைந்து அசைந்து எம்பெரு மானார் கண்டருளும் யானை நடையை ஸ்ரீ மணவாள மாமுனிகளும்அசைந்து அசைந்து சேவிக்கிறார்.

சீராரும் எதிராசர் திருவடிகள் வாழி ! !
திருவரையில் சாத்திய செந்துவராடை வாழி ! !
ஏராரும் செய்ய வடிவு எப்பொழுதும் வாழி ! !
இலங்கிய முன் நூல் வாழிஇணைத்தோள்கள் வாழி!!
சோராத துய்ய செய்ய முகச் சோதிவாழி ! !
தூ முறுவல் வாழி துணைமலர்க் கண்கள் வாழி ! !
ஈராறு திருநாமம் அணிந்த எழில் வாழி ! !
இனிதிருப்போடு எழில் ஞான முத்திரை வாழியவே! !

இதோ, சிம்ம கதியையும் சேவியுங்கள்.
சிம்மம் சீறிப் பாய்கிறது; எத்தனை புலிகள்
மாய்கிறதைப் பாருங்கள் !
சங்கர பாஸ்கர யாதவ பாட்ட பிரபாகரர் தங்கள் மதம்
சாய்வுற வாதியர் மாய்குவர் என்று சது மறை [வாழ்ந்திடுநாள்
மேதினி நம் சுமை ஆறும் எனத் துயர் விட்டு [விளங்கிய நாள்
மங்கையர் ஆளி பராங்குச முன்னவர் வாழ்வு [முளைத்திடுநாள்
மன்னிய தென்னரங்காபுரி மாமலை மற்றும் [உவந்திடுநாள்
செங்கயல் வாவிகள் சூழ்வயல் நாளும் சிறந்த [பெரும்பூதூர்ச்
சீமான் இளையாழ்வார் வந்தருளிய நாள் [திருவாதிரை நாளே
எச்சரிக்கை ! சுவாமி எச்சரிக்கை ! !
பாம்பின் கால் அறிந்து பாம்பு பாடிய கவிகள் இவை.

எம்பெருமானாருடைய மகத்தான ஞான பக்தி வைராக்ய கைங்கரியங்களைக் கண்டு உகந்த திருவரங்கம் பெரிய பெருமாள் அவரிடம், லீலா விபூதி எனப்படும் இவ்வுலகில் சகல நன்மைகளையும், நித்ய விபூதியான பரமபதத்தையும் ஒப்படைத்தார்.

இது உடையவருக்கே ஏற்பட்ட பெரிய புகழ்.

லீலா விபூதியான இவ்வுலகையும் நித்திய விபூதியான வைகுண்டத்தையும் உடையவர். ஆகையாலே ''உடையவர்'' எனப் பெயர் பெற்றார்.

ஸ்ரீ மணவாள மாமுனிகள் இந்நிலவுலகில் அடைய வேண்டிய சகல பேறுகளையும் பெற்றுப் பரிபூர்ணரானார். இதோ அவருடைய வாக்குமூலத்தையே கேளுங்கள்:

'தென் அரங்கன் சீர் அருளுக்கு இலக்காகப்
[பெற்றோம்,
திருவரங்கம் திருப்பதியே, இருப்பாகப் பெற்றோம்,
மன்னிய சீர் மாறன் கலை உணவாகப் பெற்றோம்,
மதுரகவி சொற்படியே நிலையாகப் பெற்றோம்,
முன்னவராம் நம் குரவர் மொழிகள் உள்ளம்
[பெற்றோம்,
முழுதும் நமக்கவை பொழுது போக்காகப்
[பெற்றோம்,
பின்னையொன்று தனில் நெஞ்சு பேராமற்
[பெற்றோம்,
பிறர் மினுக்கும் பொறாமையில்லாப் பெருமையும்
[பெற்றோமே!

இந்தப் பரிபூரண திவ்ய வாழ்விற்குப் பிறகு; அவர் ஆசைப்படவேண்டியது நித்ய விபூதியாகிற கலங்காப்பெரு நகரம் தான்.

அதை யாரிடம் கேட்டுப் பெறலாம்! திருவரங்கத்தைக் கேட்கலாமா? ஜீவாத்மாவின் அபசாரங்களை எல்லாம் (தாழ்ச்சி மனப்பான்மையுடன்) தன்மீது வருவித்துக்கொண்டு ஐயப்படுகிறார் ஸ்ரீ மணவாள மாமுனிகள் ஆர்த்திப் பிரபந்தத்திலே!

தென்னரங்கர் தமக்காமோ, (அவன்) தேவியர்
[கட்காமோ?
சேனையர்கோன் முதலான சூரியர்கட்காமோ(இன்னும்)
மன்னிய சீர் மாறன், அருள்மாரி தமக்காமோ (மேலும்)
மற்றுமுள்ள தேசிகர்கள் தங்களுக்குமாமோ?
என்னுடைய பிழை பொறுக்க யாவருக்கு முடியும்?
(அதனால்) எதிராசா! உனக்கன்றி யானொருவர்க்
[காகேன்

உன் அருளால் எனக்குருசி தன்னையும் உண்டாக்கி
ஒளி விசும்பில் அடியேனை, ஒருப்படுத்து விரைந்தே!

நம்முடைய பிழைகளைப் பொறுப்பது காரேய் கருணை இராமாநுசரால்தான் முடியும்.

அது மாத்திரமா? நித்ய விபூதியாகிய பரமபதத்தைத் திருவரங்கன், உடையவர் கையில்தான் ஒப்படைத்து, "உடையவர்" என்ற திருநாமத்தையும் சூட்டி விட்டாரே!

எனவே, சாவி இருக்கிறவர்களை அல்லவா மாளிகையைத் திறக்க வேண்டவேணும்.

எனவே, வேண்டுகிறார், மணவாள மாமுனிகள். யாரை? யதிராசரை.

அடியார்கள் குழாங்கள் அழகோலக்கம் இருக்க
ஆனந்த மயமான மாமணி மண்டபத்துப்
படியாதும் இல்படுக்கையாய் இருக்கும் அனந்தன்
பணாமணிகள் தம்மில் ஒளிமண்டபத்தின் இடையில்!
வடிவாரும் மாமலராள் வலஅருகும், மற்றை
மண்மகளும்; ஆய்மகளும் இடவருகும் இருக்க
நடுவாக வீற்றிருக்கும் நாரணனைக் கடுக
நான் அனுபவிக்கும் வகைநல்கு எனக்கென்
எதிராசா!

பாம்பின் கால் பாம்பறிந்தது, முதல் பாம்பு எழுந்தருளி யுள்ள இடத்துக்கு இரண்டாவது பாம்பு போக விரும்பு கிறது! இல்லை பாம்பினிடமே போக விரும்புகிறது பாம்பு!

அதாவது, தன் வளையான பெருவாழ்விற்குப் போக விரும்புகின்றது. இதுதான் பாம்பின் கால் பாம்பறிவது— இதைப் புரிந்து கொள்ளவில்லையானால் பாம்பின் கால் நாம் அறிந்தவர்கள் ஆகமாட்டோம்.

திருவரங்கம் திருப்பதியில் ஓங்காரப் பிரணவ மயமான விமானத்தின் உச்சியில் உள்ள நான்கு கலசங்களும் நான்கு வேதங்களைக் குறிக்கின்றன என்ற கொள்கையை இக்கட் டுரையின் ஆரம்பத்தில் விண்ணப்பித்தேன்.

இப்போது இந்த கட்டுரையின் முடிவில் இன்னொரு விண்ணப்பத்தைச் சமர்ப்பிக்க விரும்புகிறேன்.

நமது ஆழ்வார் ஆசாரியர்களில் நால்வரைத் திருவரங் கன் உகந்தருளியுள்ளான். நான்கு மறைகளையும் தமிழில் பாடிய குருகூர்ச் சடகோபரை 'நம்மாழ்வார்' எனவிசேஷித்து உகந்தான். நம்மாழ்வாரின் நான்கு மறைகளைப் பிரகாசிப் பிக்க ஆறு அங்கங்களாக அமைக்க ஆறு பிரபந்தங்களை வெளியிட்டும், திருவரங்கத் திருப்பதிக்கு ஏழு மதில்களும், பிராகாரங்களும் ஏற்படுத்திய திருமங்கை மன்னனுக்கு மஞ்சக்குளித் திருமஞ்சனத்தைத் தந்தருளினான்.

செடியாகவும், காட்டாறாகவும் இருந்த எம்பெருமான் தரிசனத்தை, கற்பகத்தருவாகவும் அகண்ட காவேரியாகவும் வளப்படுத்திய எம்பெருமானாருக்கு நித்ய விபூதியையும், லீலாவிபூதியையும் தந்தருளி உடையவராக்கினான்.

திருவாய்மொழிக்கு ஏற்பட்ட ஈடுகளைச் சேவித்து "ஈட்டுப் பெருக்கர்" என்னும் சிறப்புடன் காலட்சேபம்

சாதித்தருளிய ஸ்ரீ மணவாள மாமுனிகள் திருவாக்காலே திருவாய்மொழியை ஈடுமுப்பத்தாறாயிரப்படியுடன்சேவிக்க விரும்பி விண்ணப்பித்தான்.

மணவாள மாமுனிகளும் இதைக் கவி நயத்துடன்,

"நாமார்! பெரிய திருமண்டபமார்! நம்பெருமாள்
தாமாக நம்மைத் தனித்தழைத்து – நீ மாறன்
செந்தமிழ் வேதத்தின் செழும் பொருளைநாளும்இங்கு
வந்துஉரை என்று ஏவுவதே வாய்ந்து!

என்று வியந்து திருமாமணி மண்டபத்தில் ஓராண்டுக் காலம் திருவாய்மொழிவியாக்கியானத்தைக் கங்கைப்பிரவாகமோ? அல்லது கங்கையிற் புனிதமான காவிரிப் பிரவாகமோ? என்னெலாம்படி சாதித்தருள, அழகிய மணவாளனும்,நாச்சியார்களுடன் எல்லா திருவிழாக்களையும் நிறுத்தி விட்டுச் சேவித்து, காலட்சேப முடிவில் ஒரு சிறுவனாக எழுந்தருளி ஆசார்ய சம்பாவனையாக "ஸ்ரீ சைலேச தயாபாத்ரம், தீபக்த்யாதிகுணார்ணவம், யதீந்திர ப்ரவணம், வந்தே ரம்ய ஜாமாதரம்முநிம்," என்ற தனியனையும் அருளிச் செய்து மறைந்தான். இதனை,

ஆனந்த வருடத்திற் கீழ்மை ஆண்டில்,
அழகான ஆனிதனில் மூல நாளில்,
பானுவாரம் கொண்ட பகலில் செய்ய
பௌரணையின் நாளிட்டுப் பொருந்தி வைத்தே
ஆனந்த மயமான மண்டபத்தில்
அழகாக மணவாளர் ஈடுசாற்ற
வானவரும் நீரிட்ட வழக்கே என்று
மணவாள மாமுனிகட்கு அளித்திட்டாரே!

என்ற பாடல் தெரிவிக்கின்றது. எனவே,

திருவரங்க ஓங்காரப் பிரணவத்தின் நான்கு கலசங்களும் நம்மாழ்வாரை—பராங்குசனை, திருமங்கை மன்னனை—பரகாலரை, ஸ்ரீ உடையவரை—யதிராசரை, ஸ்ரீமணவாள முனிகளை—யதீந்திரப் பிரவணரையும் குறிக்கின்றன என்றும் இந்நால்வரது சூழ்ச்சிகளான அருளிச் செயல்களின் மேன்மையைக் காட்டுவதற்காக இவைகளை உச்சிமேற் கொண்டு போற்றுகிறான் என்றும் இதற்காகவே, அவை நான்கு கலசங்களாக்கி எழுந்தருளச் செய்திருக்கிறார்கள் என்றும் அடியேன் மிகப் பணிவுடன் விண்ணப்பிக்கின்றேன்.

— □ —

# பதின்மர் நாடும் பெருமாள்

''பயித்தியத்தின் பின்னாலே பத்துப் பேர்!'' இது ஒரு பழமொழி.

அதாவது,

ஒரு பயித்தியத்தைப் பின் பற்றிப் பத்துப் பேர் செல்வார்களானால் இந்த இரு தரப்பார்களையும் பார்த்து மூன்றாவது தரப்பார் பரிதாபப் பட்டும், அல்லது பழிப்பாக வும், அல்லது பரிகாசமாகவும், தாங்கள் அறிவாளிகள் என்ற நம்பிக்கையில் சொல்லுவது!

ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்தால்:—

> இது ஒரு அரிய உயரிய ஸ்ரீவைணவ பழமொழி
> என்று தெரியும்!

ஸ்ரீ வைணவ மதத்தின் தலைவனாக விளங்குபவனே ஒரு பயித்தியம் தான்! இது அடியேன் வார்த்தையல்ல; துளவத் தொண்டாய தொல்சீர்த் தொண்டர் அடிப்பொடி சொல்!

''இத்தனை அடியர் ஆனார்க்கு இரங்கும் நம் அரங்கன் ஆய பித்தனைப் பெற்றும் அந்தோ பிறவியுள் பிணங்குமாறே!''

இந்தப் பயித்தியத்தைப் பின்பற்றிச் செல்லும் பத்துப் பேர் யார்?

மயர்வற மதிநலம் அருளப்பெற்ற சாட்சாத் ஆழ்வார்கள் தாம்!

இந்தப் பித்தனைப் பின் பற்றும் ஆழ்வார்கள் தங்களை எப்படி அறிவித்துக் கொள்கிறார்கள்!

பானை சோற்றுக்கு ஒரு பருக்கை போதும்!

ஆழ்வார்களிலே கடைக் குட்டியான "கலிப் பெருமாள்!" என்று விருது பெற்ற கலியன் சொல்!

"அத்தா! அரியே! என்று உன்னை அழைக்க
பித்தா ! என்று பேசுகின்றார் பிறர் என்னை
முத்தே ! மணி மாணிக்கமே! முளைக்கின்ற
வித்தே ! உன்னை எங்ஙனம் நான் விடுகேனே?"

அந்தத் தலைவன் பயித்தியத்தை இந்தத் தொண்டர் பயித்தியங்கள் விட முடியாதாம்!

ஆழ்வார்களின் தலைவரான நம்மாழ்வாரின் அழைப்பு- எங்களோடு நீங்களும் பித்தர்களாகுங்கள்!

"வார்புனல் அம் தண்ணருவி வடதிருவேங் கடத்து எந்தை
பேர்பல சொல்லிப் பிதற்றிப் பித்தர் என்றே பிறர் கூற
ஊர்பலபுக்கும் புகாதும் உலோகர் சிரிக்க நின்று ஆடி
ஆர்வம் பெருகிக்குனிப்பார், அமரர் தொழப்படுவாரே !"

இப்படி நாமும் பித்தர்களானால் தேவர்களும் நம்மைத் தொழுவார்களாம்!

ஆழ்வார்கள் பதின்மரும் மாலிடம் மாலாகிக்
"காலாழும் ! நெஞ்சழியும் ! கண்சுழலும்"!
என்றபடியேயும், "அழுவன்! தொழுவன்!
ஆடிக் காண்பன்! பாடி அலற்றுவன்"
என்றபடியும் மங்களாசாசனம் செய்தருளியதால்

“பதின்மர் பாடும் பெருமாள்!” என்ற விருதும் ஏற்பட்டது.

திருவரங்கத்திலிருந்து அரையர்கள் திருமலைக்கு எழுந்தருளி வந்தார்கள்!

திருவேங்கடமுடையான் திருமுன்பே அவர்களைக் கட்டியம் சேவிக்கக் கேட்டார்கள்.

அரையர்கள் தாளங்களைக் கையில் ஏந்திப் பரம கம்பீர மாகப் ‘பதின்மர் பாடும் பெருமாள்!’ எனவும்,

திருமலை ஜீயர், உடனே ‘ஐயோ’ கெடுத்தானே !’

என்று தலையில் அடித்துக் கொண்டாராம் ! அதாவது :

‘பதின்மர் பாடும் பெருமாள்!’ என்ற விருது திருவரங்கனுக்கே உரியது. பதின்மரில் ஒருவரான தொண்டர் அடிப் பொடிகள் மங்களாசாசனம் செய்தருளாதபடியால், திருவேங் கடமுடை திருவேங்கடமுடையானுக்கு இந்தக் கட்டியம் பொருந்தாது என்பது கருத்து

ஆகையினால் இந்த, அதாவது, கௌரவக் குறைவுப் பிரச்சினையில் அடியேன் ஆஜராகி என் கட்சிக்காரர்சார்பில் வாதாட-விண்ணப்பிக்க அநுமதி வேண்டுகிறேன்!

பல கோடீசுவரர்கள் தன் திருவருளாலே உண்டாகக் கூடிய ஒரு மகா கோடீசுவரரைக் கட்சிக்காரராகக் கொண்டு பையை நிறைத்துக் கொண்டு பேசவந்துள்ளதாக யாரும் திருவுள்ளப்பட வேண்டாம்!

சென்ற மாதம் தான் அடியேன் பையிலிருந்து நூறு ரூபாய்க்கு அவர் பையில் சேர்த்து வந்தேன். திருமொட்டை யும் ஏறியருளப்பண்ணியதால் அடியேன் திருத்தலையும் ஏறக்குறைய அவ்விதமே சேவை சாதிக்கின்றது!

ஆழ்வார்கள் பதின்மருக்கும் திருவேங்கடத்து அப்பனுக் கும் முடிச்சுப்போட வந்து ஒற்றைக் காலில் நிற்கிறார்கள்! முதலில் தொண்டர் அடிபொடியை எடுத்துக் கொள்க! என அடியேன் மீது பரம அன்பும், அனுதாபமும் கொண்ட பெரியோர்கள் திருவுள்ளப் படுவதை உணர்கிறேன்!

தொண்டர் அடிப்பொடி ஆழ்வார் பத்தினி ஆழ்வார்: அதாவது 108 திவ்ய தேச எம்பெருமான்களில் திருவரங் கனைத் தவிர மற்ற திவ்ய தேச எம்பெருமான்களைப்பாடா தவர் என்பது கொள்கை. கொஞ்சம் உரைகல்லிலே உரசிப் பார்க்கலாமே!

கலகம் நடந்தது:

18 நல்ல எண்:

குருக்ஷேத்திரத்திலே சண்டை நடந்த நாட்களையும் குறிக்கும்.

கலக்கம் தீர்க்கும்:

கலக்கம் அடைந்த அர்ஜுனனுக்கு அமைதி தந்த கீதை யின் அத்யாயங்களையும் குறிக்கும்!

திருமாலையிலே 18வது பாசுரம்! இது எந்த திவ்ய தேசத்து எம்பெருமானைக் குறிக்கிறது? அல்லது திருவரங் கனைத் தெளிவாகக் குறிக்கிறதா என்று நேரிடையாக பதில் கூற வேணும்!

"இனி திரைத் திவலை மோத, எறியும் தண் பரவை மீதே,
தனி கிடந்து அரசு செய்யும், தாமரைக் கண்ணன், எம்மான்!
கனியிருந்தனைய செவ்வாய்க் கண்ணனைக், கண்டகண்கள்
பனியரும்பு உதிருமாலோ என் செய்கேன் பாவியேனே!"

இதற்கு நேரடியான நேர்மையான பொருள் என்ன?

அலைகள் மோதும் திருப்பாற்கடலில், கிடந்த திருக்கோலத்தில் சேவை சாதிக்கும் கடாட்சன்!

அதாவது 108 திவ்ய தேசங்களில் ஒன்றான திருப்பாற் கடலின் மங்களாசாசனம் செய்தருள்கிறார் பத்தினி ஆழ்வார். திருவரங்கம் குறிப்பிடப்படுகிறதா?

பத்தினி ஆழ்வார் என்று சிண்டு முடித்து விட்டபடியால் இந்த சோழியரின் முன் குடுமியை ஒரு விதமாகச் சீவித் திருத்துகிறார்கள்.

பரவை என்றால் கடல் போன்ற காவேரி. திரை என்றால் காவேரியின் அலைகள் என்று சுலபமாகத் திரித்து விடலாம்!

காவிரி மத்தியிலே கண் வளரும் கண்ணனின் தலையைச் சுற்றி மூக்கைத் தொட்டு விட்டார்கள்!

அடியேனும், நியாயமான சந்தேகத்தைக் கிளப்பிவிட்டேன்! அதனால் தராசு எனக்கு, என் கட்சிக்காரருக்கு எதிராகவாவது சாயக் கூடாது:

மேற் கூறியது—பாதக மில்லாத வாதம்,
இனி சாதகமான விண்ணப்பம்!

தொண்டர் அடிப்பொடிகள் சாதித்தருளியது இரண்டே பிரபந்தங்கள் தாம்!

ஒன்று, திருப்பள்ளி எழுச்சி:

இதில் தூங்குகிற பெருமாளைத் துயில் உணர்த்துகிறார் அடியேனது கட்சிக்காரர். சென்னி ஓங்கு தண் திருவேங்கடத்திலே உலகு தன்னை வாழ நின்ற நம்பி—அவரைக் கட்டிப் படுக்க வைக்க முடியாது. எனவே இந்தத் திருப்பள்ளியெழுச்சிப் பிரபந்தத்தை விட்டு விடுகிறேன் என் கட்சிக்காரர் சார்பில்! அடியேனுடைய கட்சியை எப்படி சாதிப்பது?

இன்னொரு பிரபந்தமாகிற திருமாலையை வைத்துக் கொண்டுதான் சாதித்தாக வேண்டும்.

''பத்தினி'' என்றால் யார்? அதுவொரு லட்சணம். அதாவது அந்தக் காலத்து லட்சணம். அந்தக் காலத்தில் ஒரு தாயாரைப் பார்த்து அவர் கணவர் பெயரைக் கேட்டு விட்டால், அரசினர் பொது மருத்துவமனையில், அவசர சிகிச்சைப் பகுதிக்குச் செல்ல நேரும்; குறைந்தபட்சம் பல் வைத்தியரையாவது நாடவேணும்.

அப்படியும் தெரிந்து கொள்ளவேணும் என்றால் பக்குவமாகக் குறிப்புக்காட்டினால் அந்த அம்மாள்கையாளுகிற யுத்தி இப்படித்தான் ''நவரத்தினத்திலே வெள்ளையாக மூன்று எழுத்திலே வருகிறதே''—

''நவரத்தினத்திலே!மூன்று எழுத்திலே-வெள்ளையாக-அப்படியானால் ''முத்து.'' ''ஆமா ஆமாங்க! அப்புறம் கும்பிடறமுங்கள கோயில்லே!''-''சாமி'''' அதேதானுங்க'' இரண்டையும் சேருங்க!''

''முத்து சாமி''

''அதேதானுங்க!''

''தொண்டர் அடிப் பொடிகள் 108 திவ்யதேசப் பெருமாள்களுள் எந்தப் பெருமாளைக் கணவராக வரித்திருக்கிறார் என்று பார்க்கலாம்.

திருப்பள்ளி எழுச்சியில் "அரங்கத்தம்மா" என்றும்

திருமாலையில் "அரங்கமா நகர் உளானே!" என்றும் ஒரு முறையல்ல பலமுறை வாய்விட்டுச் சொல்லியிருக்கிறார்!

தொண்டர் அடிப்பொடிகள் பத்தினி ஆழ்வாராக இருப்பதால் அவருடைய கணவர் திருநாமத்தை வெளிப்படையாகச் சொல்லாமல் குறிப்பாகவே காட்டியிருப்பார்!

தொண்டர் அடிப்பொடிகள் தெரிவிப்பது என்ன? அவருடைய கணவர் பெயரை உச்சரித்தால் சகல பாவங்களும் போய்விடுமாம்! கத்திரபந்து போன்ற மகா பாவிகளே பரகதி அடைவார்கள் என்றால் வேறு என்ன சொல்ல! சரி அந்த பெயர் என்னவோ?

பத்தினி ஆழ்வார், வாயால் சொல்லுவதற்கு வெட்கப் படுகிறார். குறிப்பாகக் காட்டுகிறார்! தன் கணவர் திரு நாமம் மூன்று எழுத்துக்களைக் கொண்டதாம். இதோ! இதோ! அந்தப்பாடல்!

"மொய்த்த வில்வினையுள் நின்று மூன்று எழுத்து உடைய பேரால்
கத்திர பந்தும் அன்றே பராங்கதி கண்டு கொண்டான்!"

"திவத்திலும் பசு நிறைமேய்ப்பு உவத்தி" என்றபடி வந்து (பரமபதத்தில் இருந்து வந்து) திருமலைமேல் நின்ற கோவிந்தன் சோழவள நாட்டில், காவேரி சூழ்ந்த தீவைக் கண்டான். அங்கே போய் படுத்துக் கொண்டு ஆண்டாள் என்று ஒரு பெண்ணையும் திருமணம் செய்து கொண்டு தங்கி விட்டான். அவனும் தனக்கு ஒரு புதுப் பெயர் வைத்துக் கொள்ள வில்லை. நாங்களும் அவனை அந்த ஊர்க்காரன் என்றே அழைக்கின்றோம்!

"இத்தனை அடியார் ஆனார்க்கும்
இரங்கும் நம் அரங்கன் ஆய
பித்தனைப் பெற்றும் அந்தோ
பிறவியுள் பிணங்குமாறே!"

அந்த மூன்று எழுத்துடைய பெயர் என்ன? அது 'கோவிந்த' நாமம் தான் என்பதில் சந்தேகமில்லை. கோவிந்தா என்று தானே விளக்கம் கொள்ள முடியும்! அது எப்படித் திருவேங்கட மலைமீது எழுந்தருளியிருக்கும் எம்பெருமானைக் குறிக்கும் என்பது கேள்வி?

இறைவனது பன்னிரு திரு நாமங்களில் "கோவிந்த" என்பது ஒன்றானாலும், கண்ணனாக அவதரித்து பிருந்தாவனத்தில் பசுக்களை மேய்த்துக்'கோவிந்தன்' என்ற திருநாமத்தைஅடைந்தாலும்,உலக வழக்கிலே'கோவிந்தன்!' என்றால் திருவேங்கட முடையானையே குறிக்கும்.

பரவை என்பது கடல் அல்ல; காவேரி தான்! என்று எதிர்க் கட்சிக்காரர்கள் வியாக்கியானம் செய்ய உரிமை இருப்பின்,விபவ கோவிந்தன் திருமலையில் உள்ள அர்ச்சா கோவிந்தனே என்றுவாதமிட எங்களுக்கு உரிமையில்லையா? ஏன்! இன்னொரு பத்தினியின் சாட்சியம் போதுமே!

"குளிர் அருவி வேங்கடத்து என்
கோவிந்தன் குணம்பாடி அளியத்தே மேகங்காள்
ஆவிகாத்திருப்பேனே!"—(ஆண்டாள்)

ஆழ்வார்களுடைய சிறப்புகளில் ஒன்று அவர்கள் பரத்வ நிர்ணயம் செய்தார்கள் என்பது! அதாவது திருமாலே முழு முதற்கடவுள் என்பதை நிலை நாட்டினார்கள்.

மறந்தும் புறம் தொழாமாந்தர்களாக விளங்கினார்கள். தொண்டர் அடிப்பொடிகள் பத்தினி ஆழ்வாராகையாலே 108 திவ்ய தேசத்து எம்பெருமான்களைக் காட்டிலும் தன் கணவராகிய கோவிந்தனுக்கே பரத்துவத்திலும் பரத்துவம் தந்து வாழ்ந்தார் என்பதையும் காணலாமே

தொண்டர் அடிப்பொடிகள் சாதிப்பது: 'என் கணவர் தான் முழு முதற் கடவுள்! அவனைத் தவிர வேறு ஒரு தெய்வம் இல்லை.' அவன் அல்லால் தெய்வமில்லை; 'அவன்' என்கிறீர்களே அந்த அவன் எவன்?

பத்தினி ஆழ்வார் ஆகையால், பெயரை நேரடியாகச் சொல்வதற்கில்லை.

அவன் ஒரு காரியம் செய்தானாம், அதனால் அவனுக்கு அந்தப் பெயர் வந்ததாம்.

அவன் செய்த அந்தக் காரியத்தைச் சொல்லி அவன் திருநாமத்தைப் புரிந்து கொள்ளச் செய்கிறார்.

கற்றினம் மேய்த்தவன் தான்! (கோவிந்தன்)

'அவனே என் நாயகன்; எந்தை.'

'கற்றினம் மேய்த்த எந்தை'-கற்றினம் மேய்தவன்; அதாவது'

'கோவிந்தன்!' சரி? இவனிடம் என்ன செய்ய வேணும்,

'கழலிணை பணிமின் நீரே'

இப்படித் தன் கணவனை வணங்கத் தயங்குகிறவர்கள் மீது கோபம் வருகிறது. வசை மொழி பொழிகிறார்! மதி இலா மானிடங்காள்! அறிவு கெட்டவர்களே! உங்களுக்குப் பட்டால்தான் புத்தி வரும். உங்களுக்கோ அல்லது நீங்கள் பிறபிற தெய்வங்களை வணங்கினால் அந்த தெய்வங்களுக்கோ ஆபத்து வரும்போதுதான், கோவிந்தன் தான் காப்பாற்றுவான் என்ற புத்தி வரும்! உற்றபோது அன்றி நீங்கள் ஒருவன் என்று உணர! மாட்டீர்கள் !

இன்றைக்கும் காணும் உண்மை. எல்லோரும் கைவிட்ட பிறகு எல்லாத்தெய்வங்களும் கைவிட்ட பிறகு,எல்லாதிவ்ய

தேசத்தின் எம்பெருமான்களையும் விட "கோவிந்தனே கதி!" என்று திருவேங்கட முடையானிடம் சரணம் புகுகின்றோம்! முழுப் பாட்டும் இதோ!

"மற்றும் ஓர் தெய்வம் உண்டே!
மதியிலா மானிடங்காள்!
உற்ற போதன்றி நீங்கள்
ஒருவன் என்று உணரமாட்டீர்!
அற்றமேல் ஒன்று என்று அறியீர்!
அவன் அல்லால் தெய்வமில்லை!
கற்றினம் மேய்ந்த எந்தைக்
கழலிணை பணிமின்நீரே!"

தொண்டர் அடிப்பொடிகள் நாடிச் செய்த சேவை என்ன? அது யாரைச் சாரும்?

திருவரங்கத்தில் வீணையும் கையுமாக, பெருமாள் கோயிலில் ஆலவட்டமும் கையுமாக, திருமலையிலே பணிப் பூவும் கையுமாக மூன்று சேவைகள் சிறப்படைந்துள்ளன! போக மண்டபம், யாக மண்டபம், ஆனால் திருமலை புட்ப மண்டபமே!

தூரத்தில் இருந்தே குறும்பறுத்த நம்பி மண்மலர் சமர்ப்பித்தார்! மற்ற சேவைகள் அருகிருந்து செய்யப் பட்டவையே! துளவத் தொண்டு—திருவேங்கட முடையானுக்கே.

இவ்வளவு வாதங்களையும் கேட்டபிறகு திருவேங்கட முடையான் என்ற திருநாமத்தை தொண்டர் அடிப்பொடி யார் தம்பாடலில் அமைக்காததால், அவனைப் 'பதின்மர் பாடும் பெருமாள்!' என்று கொண்டாட முடியாது எனலாம்.

திருவேங்கட முடையான் பெயரைக் கூறாத காரணம் கூறப்பட்டது மேலே!

அவனைப் பாடாமற் போனாலும் தொண்டர் அடிப் பொடிகள் அவன் பெயரை நாடாமற் போகவில்லை என்று ஒப்புக்கொள்ளத்தானே வேணும்.

அப்படியானால் திருவேங்கட முடையானைப் 'பதின்மர் நாடும் பெருமாள்!' என்று போற்றத்தடை என்ன?

தொண்டர் அடிப்பொடியாழ்வார் நாடியதிருவேங்கடத் தானை மற்றைய ஆழ்வார்களும் நாடிய விதத்தைக் காணலாம்!

ஆண்டாள்:

திருவேங்கடமுடையானை நாடுவதற்குக் காமன் துணையையும் நாடுகிறார்!

"அனங்கதேவா! உய்யவுமாங்கொலோ!"

என்று சொல்லி

"உன்னையும் உம்பியையும் தொழுதேன்"
"வெய்யது ஓர் தழல் உமிழ் சக்கரக்கை
வேங்கடவற்கு என்னை விதிக்கிற்றியே"

சொல் நவிலும் கூர் வேல் கோவேசரன் நாடுகிற விதம்:

"வேங்கடத்துக் கோனேரி வாழும் குருகாய்ப்பிறப்பேனே!
திருவேங்கடச்சுனையில்

மீனாய் பிறக்கும் விதியுடையேன் ஆவேனே!

வேங்கடக்கோன்தானுமிழும் பொன்வட்டில் பிடித்து உடனே புகப் பெறுவேன் ஆவனே.

பண்பாடும் வேங்கடத்துச் செண்பகமாய் நிற்கும்
திருவுடையேன்

ஆவேனே!''

எழில் வேங்கட மலையில் தம்பகமாய் நிற்கும்
தவமுடையேன் ஆவேனே!
பண்பாடும் வேங்கடத்துள் அன்னைய பொற்றுவடாம்
அருத்தவந்தேன் ஆவேனே;
திருவேங்கட மலைமேல் நெறியாய்க் கிடக்கும்
நிலையுடையேன் ஆவேனே!
அடியாரும் வானவரும்
அரம்பையரும் கிடந்து இயங்கும்
படியாய்க் கிடந்து உன்
பவளவாய்க் காண்பேனே!''

"திருவேங்கடமென்னும், எம்பெருமான் பொன்மலை மேல்
ஏதேனும் ஆவேனே!''

திருமழிசைப்பிரான் நாடுவது:

''கடைந்த பாற்கடல் கிடந்து
காலநேமியைக் கடந்து,
உடைந்த வாலிதம் பினுக்கு
உதவ வந்து இராமனாய்
மிடைந்த வேழ் மரங்களும்
அடங்க எய்து வேங்கடம்
அடைந்த மாலபாதமே
அடைந்து நாளும் உய்ம்மினே!''

மங்கை மன்னன் நாடுகிற விதம்:

செங்கயல் திளைக்கும் சுனைத் திருவேங்கடம் அடை
நெஞ்சமே!

"தெள்ளியார் வணங்கும் மலைத் திரு
வேங்கடம் அடை நெஞ்சமே!
சென்று குன்றம் எடுத்தவன் திரு
வேங்கடம் அடை நெஞ்சமே
தீர்த்த நீர்த்தடம் சோலை சூழ்த்
திருவேங்கடம் அடை நெஞ்சமே!
திண்கைம்மா துயர் தீர்த்தவன் திரு
வேங்கடம் அடை நெஞ்சமே.
திண்திறல் அரியாயவன் திரு
வேங்கடம் அடை நெஞ்சமே
சேரும் வார் பொழில் சூழ் எழில்
திருவேங்கடம் அடை நெஞ்சமே.
செம்புனம் அசை, காவல் கொள் திரு
வேங்கடம் அடை நெஞ்சமே!
தேசமாய்த் திகழும் மலைத் திரு
வேங்கடம் அடை நெஞ்சமே!"

இரு தரப்பு வாதங்களையும் திருச்செவியேற்றருளினார் நம்பிரபன்ன ஜனகூடஸ்தரான நம்குல நாதன் நம்மாழ்வார்!

திருவேங்கடமுடையானின் விஷயமாகவா பிரச்சினை? அவன் கீர்த்திக்கு ஒரு சொட்டு உண்டா?

திருவேங்கட முடையான்—திலதம் உலகுக்காய் நின்ற திருவேங்கடத்து எம்பெருமான்—உலகம் உண்ட
பெருவாயன்

உலப்பில் கீர்த்தி அம்மான்—
அவன் புகழ் பற்றியா சர்ச்சை!
அகலகில்லேன் இறையும்! என்று
அலர்மேல் மங்கை உறைமார்பன்

நிகரில் புகழான்!

எல்லா திவ்ய தேசத்து எம்பெருமான்களையும் சேர்த்துத் தான் எடை போட்டு மங்களாசாசனம் புரிந்துள்ளார்.

எனவே, திருவேங்கடமுடையானுக்குப்
"பதின்மர் நாடும் பெருமாள்!"

என்னும் கட்டியத்தை—விருதை அடியேன் பிரேரேபிக்கின்றேன். இந்தப் பட்டமளிப்புப் பட்டாபிஷேக விழாவிலே உங்களுடைய ஒப்புதலைத் தெரிவிக்கும் முறையிலே பலத்த கர ஒலி எழுப்பிச் சிறப்பிக்க வேண்டுமாய்ப் பிரார்த்திக்கின்றேன்!

# ஸ்ரீ ஆண்டாளும் கோவிந்தனும்

ஒரு மதம் அல்லது சமயம், வழிபாட்டு வாழ்க்கை அமைப்பிற்கு மூன்று அம்சங்கள், பிரிவுகள் அன்றியும் பகுதிகள் கொண்டதாக இருக்க வேண்டும்: இவை மூன்றும் இல்லையானால் அது. நிறைந்த பூர்ணமான செம்மையான மதம் இல்லை. அவ்வளவு தான்! வெற்றிலை, பாக்கு சுண்ணாம்பு முக்கோணம் இவற்றில் ஒன்றும் குறையலாகாத மாதிரி!

இம் மூன்றும் எவை என்பதே ஆராய்வோம்: மூன்றில், முதலாக இருக்க வேண்டியது,—அதாவது முதன்மையாகவும் இருக்க வேண்டியது என்ன?— அது, ''தத்துவம்''

'தத்துவம்' என்பது ஆதாரம்; எது எல்லாவற்றையும் ஆள்கிறதோ, அது இல்லாமல் எதுவும் தனித்து இயங்க முடியாதோ, அதுவே தத்துவம்! அதுவே பரம்பொருள்!! அதுவே கடவுளுமாம்!!!

பரதத்துவம் என்றும் கூறப்படும். தத்துவம் அனைத்தையும் ஆளும் தெய்வம். ''தத்துவமிலி என்று நெஞ்செறிந்து வாசகத்து அழித்து உன்னை வைதிடாமே'' தத்துவமிலி : தெய்வமில்லை.

தத்துவத்தை ஒப்புக் கொண்ட பிறகு :—பிறகென்ன? ஒரு மதம் என்றால் அந்த தத்துவத்தை அடையும் வழியை அம்மதம் காண்பிக்க வேண்டும்.

அப்படி அடையும் வழிதான் இதம். இந்த இதத்தை ஒரு மதம், சமயம், வழிபாட்டு வாழ்க்கை அமைப்பு காட்டவில்லையானால் அது மதம் இல்லை! அடையும் வழி இல்லையானால், அந்த தத்துவத்தைப் பற்றி நாம் கவலை கொள்ள வேண்டியதில்லை. அதற்கும் நமக்கும் தொடர்பு இராது

சரி, தத்துவம்—இதம்—இதற்கும் பின்னர்?

நாம் அடைய வேண்டிய தத்துவம், அன்றியும் தொடர்பு கொள்ள வேண்டிய தத்துவம் உள்ளதாகில், அந்த தத்துவத்தை அடைந்தால் அல்லது தத்துவத்திடம் தொடர்பு கொண்டால் ஏற்படும், பலன், நன்மை அல்லது பேறுதான், புருஷார்த்தம்!

எனவே, தத்துவம் என்னும் கடவுள், இதம் என்னும் அடையும் வழி, புருஷார்த்தம் என்னும் பேறு ஆகிய இவை மூன்றும் ஒழுங்காய், வரிசையாய், படிப்படியாய் அமைத்து அளிப்பதே சமயம்.

'வைணவம்' என்னும் திருமால் சமயத்தில் இம்மூன்று அம்சங்களும், பிரிவுகளும், பகுதிகளும் அமைந்துள்ளன என்பதன்று; அழகாய்ப் பொலிந்து அருளைப் பொழிகின்றன என்பதே சரி.

இம்மூன்றனுக்கும் வைணவம் வழங்கும் விடைகள் யாவை?

தத்துவம் : நாராயணனே! தத்துவம் அல்லது பரம்பொருள் அல்லது கடவுளின் குணங்களை நாராயண பதம் விவரிக்கின்றது.

நாரம் அயனம் : நாராயணம்

நாரம் : உலகில் உள்ள அனைத்துப்பொருள்கள்,
உயிரினங்களின் கூட்டம்;

அயனம்: இவைகளுக்கு ஆதாரமாக இருப்பவன்;

அப்படியாகின், உலகப் பொருள்கள், உயிர்க் கூட்டங்களில் அமைந்தவனும் அமைந்து அவற்றை இயக்குபவனும் ஆம் இறைவன்.

இதம் : நாராயணனாகிற தத்துவத்தை அடைவதற்கு உண்டான வழி என்ன?

நாராயணனை அடைவதற்கு அவன் திருவடிகளே இதம் என்பதே வைணவத்தின் தெளிந்த துணிவு.

தத்துவமான நாராயணனை அடைவதற்கு ஞான மார்க்கம், கர்ம மார்க்கம், பக்தி மார்க்கம் உண்டு எனினும் இவற்றைவிட உயர்ந்த, சிறந்த, எளிய இதம் அல்லது வழி 'பிரபத்தி மார்க்கமே' அதாவது 'சரணாகதி' மார்க்கமே!

நாராயணனுடைய திருவடிகளையே தஞ்சமாகக் கொண்டு, நம்முடைய ஞானம், கர்மம், பக்திகளையே நம்பாமல் அவனை அடைவதே எளிய உயர்ந்த இதம்.

நாராயணனாகிற தத்துவத்தை அறிந்து, அவன் திருவடிகளைப் பற்றும் சரணாகதியாகிற இதத்தைக் கைக் கொண்டால், நாம் அடையும் சிறந்த பலன், நன்மை, பேறு, புருஷார்த்தம் என்ன? அதுவே அவன் திருவடிகளில் புரியும் கைங்கரியம், குற்றவேல், தொண்டு!

எனவே, தத்துவம், இதம், புருஷார்த்தம் எனும் இம்மூன்றனுக்குமான வைணவ விளக்கம் இவை! இதன் அழகு தான் என்ன? ஸ்ரீ வைணவ குலத்தின் சமுதாயத்தின் நாதனாக விளங்குபவர் நம்மாழ்வார்.

நம்மாழ்வார் அருளிய ஆயிரம் பாடல்கள் கொண்ட திருவாய் மொழியில், முதல் பாசுரத்திலேயே 'நாராயணனே தத்துவம்' என்றும் அவன் 'திருவடிகளை அடைவதே இதம்' என்றும் அவனுக்குக் 'கையங்கரியம் புரிதலே புருஷார்த்தம்' என்பதையும் பரம கருணையுடன் உபதேசிக்கின்றார்.

உயர்வுஅற உயர்நலம்
உடையவன் எவன், அவன்
மயர்வு அற மதி நலம்
அருளினன் எவன், அவன்?
அயர்வு அறும் அமரர்கள்
அதிபதி எவன் அவன்
துயர் அறு சுடர்—அடி
தொழுது எழு, என் மனனே!

தத்துவமான நாராயணன் தன்மை என்ன? உயர்வு அற உயர் நலம் உடையவன். அந்த நாராயணனை அடையும் வழி இதம் என்ன? அவன் துயர் அறு சுடர் அடி தொழுது எழு என் மனனே!

நாராயணனின் திருவடியைத்தொழுதால் நாம் பெறு கிற பேறு—புருஷார்த்தம் என்ன? நாராயணனுக்குக் கைங் கரியம் செய்வதே சிறந்த புருஷார்த்தம் என்பதே;

"மயர்வற மதி நலம் அருளினன்!" என்ற சொற் றொடரால் குறிப்பாகச் சுட்டி காட்டப்படுகிறது. வைகுந்தப் பெரு நாட்டில் விளங்குபவர்கள் 'நித்திய சூரிகள்' அல்லது அமரர்கள்— அமரர்கள் அதிபதி நாராயணனே!

அமரர்கள் பெறும் புருஷார்த்தம் அமரர்கள்அதிபதிக்குப் பல்லாண்டு பாடுவதே; பாடும் கைங்கரியமே!

எனவே உடலுடன் கூடி உலகில் உயிர் வாழும் பக்தன், உடலை உலகில் விட்டு வைகுந்தம் புகுவது மண்ணவர் விதியே என்ற கோட்பாட்டின்படி பரம பதம் சென்றால் அங்கே அவனுக்குக் கிடைக்கும் புருஷார்த்தம்; பேறு மறதி இல்லாமல் இடையறாது அமரர்கள் அதிபதியான நாராயணனுக்குப் பல்லாண்டு பாடுதலே?

இதைச் சுட்டிக் காட்டுவதாக அயர்வு அறும் அமரர்கள் அதிபதி என்று அருளுகிறார் நம்மாழ்வார்! மறுபடியும் பாசுரத்தைச் சேவிப்போம்;

'உயர்வற உயர் நலம்' (முழுப்பாசுரம்)

வல்லவ தேவன் என்னப்பட்ட பாண்டியன் சபையிலே? பரத்துவத்தை நிலை நாட்டிப் பொற்கிழி பெற்றவர் மின்னார் தடமதிள் சூழ் ஸ்ரீவில்லிப்புத்தூரிலே அவதரித் தருளிய பெரியாழ்வார்; தத்துவமாகிய நாராயணன்! அவன் திருவடிகளைப் பற்று கையாகிற இதத்தைக் கைப்பிடித்து உய்ந்த பக்தர்கள் மண் உலகிலும், விண் உலகிலும் பரமேட்டிக்கு — பரமபத நிலையனுக்குப் பல்லாண்டு பாடு வதைக் காட்டி அருளுகிறார்!

''பல்லாண்டு என்று பவித்திரனைப் பர
மேட்டியை, சார்ங்கம் என்னும்
வில்லாண்டான் தன்னை வில்லிப்புத்தூர் விட்டு
சித்தன் விரும்பிய சொல்
நல்லாண் டென்று நவின்று உரைப்பார்
நமோ நாராயணாயவென்று
பல்லாண்டும் பரமாத்மனைச் சூழ்ந்திருந்து
ஏத்துவர் பல்லாண்டே!''

பவித்திரன் :

இந்த இருள் தரும் மாஞாலத்திலே பிறந்துள்ள நம்மைக் கடைதேற்ற அவனும் அவதரித்து நம்மைப் பரிசுத்தமாக்கி யருளுபவன்.

அன்ன வயல் புதுவையிலே அவதரித்தருளிய ஸ்ரீ ஆண்டாள் தன் வேயர் குடித் தலைவரான தன் திருத் தகப்பனாராகிய பெரியாழ்வார் அருளியதையும் ஸ்ரீ வைணவக் குலநாதராகிய நம்மாழ்வார் அருளியதையும் தன்

திருவுள்ளத்தில் கொண்டு ஓரிரு அடிகளிலே அமைத்து அருளு கிறாள்.

ஸ்ரீஆண்டாள் அருளிய பிரபந்தங்கள் இரண்டு.

30 பாடல்கள் கொண்ட திருப்பாவையும் 143 பாடல் களைக் கொண்ட (பாதகங்கள் தீர்க்கும், பரமன் அடி காட்டும் வேதம் அனைத்துக்கும் வித்தாகும்— கோதை தமிழான நாச்சியார் திருமொழியும்.) 30 பாடல்கள் கொண்ட திருப்பாவையிலே மூன்று பாசுரங்களில் நாராயண பதத்தை அருளிச் செய்கிறாள்.

முதல் பாசுரம் :

''மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளால்
நீராடப் போதுவீர்? போதுமினோ! நேரிழையீர்
சீர்மல்கு மாய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்
கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன் குமரன்
ஏராந்த கண்ணி யசோதை இளஞ்சிங்கம்,
கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல் முகத்தான்
நாராயணனே நமக்கே பறைதருவான்
பாரோர் புகழப் படிந்தேலோ ரெம்பாவாய்!''

இங்கே 'நாராயணனே நமக்கே பறை தருவான் பாரோர் புகழப் படிந்து' என்று இரண்டு அடிகள் உள்ளன.

ஸ்ரீ ஆண்டாள் :

'நாராயணனே!' என்பதால் தத்துவத்தை அருளிச் செய்கிறாள்; 'பாரோர் புகழப் படிந்து!' என்பதனாலே பரத்துவமான நாராயணனை அடையும் இதம் அல்லது வழியை அருளிச் செய்கிறார்; 'நமக்கே பறை தருவான்' என்பதால், நாராயணனுடைய திருவடிகளை அடைந்து பெறும் புருஷார்த்தம் அதாவது பறை அல்லது கைங்கரிய மாகிற பலனை அருளுகிறாள்.

அடுத்தபடியாக, ஏழாம் பாசுரத்தைச் சேவிப்போம்!

''கீசு கீசு என்று எங்கும் ஆனைச் சாத்தன் கலந்து
பேசின பேச்சரவம் கேட்டிலையோ பேய்ப்
பெண்ணே

''காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து
வாச நறுங்குழ லாய்ச்சியர் மத்தினால்
ஓசைப் படுத்த தயிரரவம் கேட்டிலையோ!
நாயகப் பெண்பிள்ளாய்; நாராயணன் மூர்த்தி
கேசவனைப் பாடவும் நீ கேட்டே கிடத்தியோ
தேசமுடையாய்திறவேலோ ரெம்பாவாய்!''

இப்பாசுரத்தில் கவனிக்க வேண்டிய பகுதிகள்

'நாராயணன் மூர்த்தி'
'கேசவனைப் பாடவும்'
'தேசமுடையாய்!'

நாராயணன் மூர்த்தி என்பதனால் தத்துவத்தைக் குறித்தாள். 'கேசவனைப் பாடவும் நீ' என்பதினாலே அவனை அடைகிற இதம் அல்லது வழியைக் குறித்தாள். பாடுவது அவன் திருவடிகளைப் பணிவதின் அடியாக ஏற்படுவதே. தேஜஸ் என்பது வடமொழிச் சொல். அதாவது முகப்பிரகாசம் என்று பொருள். தேஜஸ் என்னும் திசைச் சொல் தேசம் எனத் திரிந்தது.

தேசமுடையார் என்றால், மகிழ்ச்சியின் பெருக்காலே உண்டான ஒளி நிறைந்த முகத்தவளே என்று பொருள். அதாவது கைவரியமாகிற புருஷார்த்தத்தை பேற்றை அடைந்திருந்தால் ஏற்பட்ட முகஒளி! எனவே தேசம் உடையாய் என்பதாலே புருஷார்த்தத்தைக் குறிக்கிறாள் என்று கொள்ளலாம்.

மூன்றாம் முறையாக, நாராயண பதம் பொதிந்துள்ள பாசுரம் :

நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய்!
மாற்றமும் தாராரோ! வாசல்திறவாதார்!
நாற்றத் துழாய் முடி நாராயணன் நம்மால்
போற்றப் பறைதரும் புண்ணியனால்,பண்டுஒருநாள்
கூற்றத்தின் வாய் வீழ்ந்த கும்பகரணனும்
தோற்றும் உனக்கே பெரும் துயில்தான் தந்தானோ?
ஆற்றவனந்த லுடையாய் அருங்கலமே,
தேற்றமாய்வந்து திறவேலோ ரெம்பாவாய்!''

இங்கே நாம் சேவிக்க வேண்டிய பாகம் :

'நாற்றத் துழாய் முடி நாராயணன்!
நம்மால் போற்றப் பறை தரும்'

ஸ்ரீ ஆண்டாள் இப்பாசுரத்திலே நாற்றத் துழாய் முடி நாராயணன் என்பதாலே தத்துவத்தை அருளிச் செய்கிறாள் நம்மால் போற்ற என்பதாலே நாம் நாராயணனை அடையும் இதம்அல்லது வழியைக் குறிப்பிட்டருளுகிறாள். போற்றுவது திருவடிகளைப் பணிவதால் ஏற்படுவது

பறை தரும் என்பதாலே நாராயணனே தத்துவம் என அறிந்து, அவனையடையும் வழி அல்லது இதமாகிற திருவடிகளை அடைந்து போற்றினால் நாம் பெறுவது புருஷார்த்தம் கைங்கரியம். அல்லது பறை குற்றேவல் அல்லது தொண்டு. எனவே பறை என்பதால் புருஷார்த்தத்தை- பலனைப் பெறுகிறோம் என்பதைத் தெரிவித்து அருளினார்.

1. தத்துவம் என்றும் பரதத்துவம் என்றும், போற்றப் படும் நாராயணன் பரம பதத்தில் எழுந்தருளியுள்ளதால், இது முதல் நிலை; பரத்துவநிலை.

2. இரண்டாவது நிலை திருப்பாற்கடலிலே திருவனந் தாழ்வான், அல்லது ஆதிசேடன் மீது திருப்பள்ளி கொண்டுள்ள நிலை.

இதுவியூக நிலை.

3. பக்தர்களுடைய வேண்டுகோளுக்காக இந்த உலகிலே அவதரித்தருளும் நிலை விபவ நிலை: இது மூன்றாவது நிலை.

4. எங்கும், எக்காலத்திலும், நம் ஊனக் கண்ணில் புலப்படாமல் பரவி எழுந்தருளியுள்ள நிலை அந்தர்யா மித்வம்—நான்காவது நிலை.

5. எங்குமுள்ள மக்கள் வந்து எக்காலத்திற்கும் சேவிப் பதற்காக திருக்கோயில் கொண்டு எழுந்தருளியுள்ளது திருக்கோலம்.

அர்ச்சை நிலை இது ஐந்தாவது நிலை:

| | |
|---|---|
| பரத்துவம் | : மேக மண்டல நீர் போல கைக்கு எட்டாதது. |
| விபூகம் | : கடல் நீரைப் போல நமக்கு உபயோகமானது. |
| விபவம் | : பெருக்கெடுத்து ஓடி அடங்கிய ஆறுகளைப்போல்தற்காலத்தவர்கட்குக் கிட்டாதது. |
| அந்தர்யாமித்வம் | : மழை பெய்து பூமிக்கடியில் அடங்கி விட்ட நீர்போல |
| அர்ச்சை | : தேங்கின மடுக்கள் போல. எனவே, அர்ச்சை நிலை எளிமை நிலை. |

மிக்க சுலபமாக நாம் இறைவனை அடைய உதவும் படியாக உள்ள திருக்கோயில் நிலையான அர்ச்சை நிலையை ஆழ்வார்கள் மிகவும் போற்றுகின்றனர். இவ்விதமாக நாம் வழி பட வசதியாக திருக்கோவில்கொண்டு எழுந்தருளி யுள்ள 108 திருத்தலங்களை ஆழ்வார்கள் மங்கள சாசனம் செய்தருளியுள்ளார்கள்.

இவைகளை108 திவ்ய தேசங்கள்எனப்போற்றுகிறோம். ஸ்ரீ ஆண்டாள் திருப்பாவையில் இறைவனது இந்த ஐந்து நிலைகளையும் மங்களாசாசனம் செய்தருளுகிறாள்.

பரமபதத்தில் எழுந்தருளியுள்ள நாராயணனை, முதல் பாசுரத்திலே 'நாராயணனே நமக்கே பறை தருவான்' எனப் போற்றுகின்றாள் சூடிக்கொடுத்த சுடர்க்கொடி.

திருப்பாற் கடலில் அனந்த சயனனாகக் காட்சி அளிக்கும்வியூகநிலையைஇரண்டாவதுபாசுரமான'வையத்து வாழ்வீர்காள்' பாசுரத்தில் பையத்துயின்ற பரமன் அடிபாடி என்று போற்றுகிறாள் பொருப்பன்ன மாடம் பொலிந்து தோன்றும் புதுவையர்கோன் விட்டு சித்தன் கோதை.

சாதுக்களை ரட்சிக்கவும், கொடியவர்களைத் தண்டிக்கவும் உலகில் இறைவன் எழுந்தருளிய பத்து அவதாரங்களில் நடுநாயகமானது திரிவிக்கிரம அவதாரம்.

திருப்பாவையின் மூன்றாவதுபாடலிலே ஓங்கிஉலகளந்த உத்தமன் எனப் போற்றித் திரிவிக்கிரம அவதாரத்தின் மூலம் ஏனைய எல்லா அவதாரங்களையும் போற்று கிறாள், பொன்னியல் மாடங்கள் சூழ்ந்த புதுவையர் கோன் பட்டர் கோதை.

கரந்து எங்கும் பரந்துள்ள அந்தர்யாமித்வம் கண்ணுக்கு எளிதில் புலனாகாதது. மழை பெய்து பூமியில் மறைந்த நீர்போல. இந்த அந்தர்யாமித்வ நிலையை நான்காவதான ஆழிமழைக் கண்ணா பாசுரத்திலே அமைத்துள்ளாள். பண்ணுறு நான் மறையோர் புதுவை மன்னன் பட்டர்பிரான் கோதை!

108 திவ்ய தேசங்களில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள வணங்கும் நிலையான அர்ச்சை நிலையை ஐந்தாவது பாசுரமான மாயனை மன்னு வடமதுரை மைந்தனை பாசுரத்தில் போற்றியருளுகிறாள், பண்ணுறு நான் மறையோர் புதுவை மன்னன் பட்டர்பிரான் கோதை!

ஸ்ரீவைணவ மதத்தின் சிறப்புப் பிரிவுகளான, தத்துவம், இதம், புருஷார்த்தம் என்ற மூன்றும் திருவேங்கட மாமலையில் எழுந்தருளியுள்ள கோவிந்தனிடம் நிறைந்துள்ளதாக நம்மாழ்வார் திருவுள்ளம் பற்றுகின்றார்.

இம்மூன்றும் திருவேங்கட முடையான்தான் என்று தீர்மானிக்கின்றார் திருவேங்கடமுடையானாகிய கோவிந்தனே கோவர்தன மலையைக் குடையாக எடுத்தருளிய கோவிந்தனே பரத்துவம் என்பதை வெளியிடுகிறார் நம்மாழ்வார். "குன்றம்ஏந்திக் குளிர்மழை காத்தவன் அன்று ஞாலம் அளந்த பிரான், பரன் சென்று சேர் திருவேங்கடமாமலை ஒன்றுமே தொழ நம்வினை ஓயுமே!"

வேறு இடம்போய்த் தொழவேண்டியதில்லை என அருளுகிறார். பரத்துவம் நிரம்பியுள்ளதாம், திருவேங்கடவனே தத்துவம். அவனை அடைய அவன் திருவடிகளே இதம் என்கிறார் நம்மாழ்வார்.

> 'அகல கில்லேன் இறையும்' என்று
> அலர் மேல் மங்கை உறை மார்பா!
> நிகரில் புகழாய்! உலகம் மூன்று
> உடையாய்! என்னை ஆள்வானே!
> நிகரில் அமரர் முனிக் கணங்கள்
> விரும்பும் திருவேங் கடத்தானே!
> புகல் ஒன்று இல்லா அடியேன் உன்
> அடிக் கீழ் அமர்ந்து புகுந்தேனே!

திருவேங்கடவனைப் பரத்துவமாகப் போற்றி அவன் திருவடிகளை இதமாக அடைந்தால் ஏற்படும் புருஷார்த்தம்

அல்லது பேறு கைங்கரியம் தான்—அடிமைத் தொண்டு தான் என்று திருஉள்ளம் பற்றுகின்றார் நம்மாழ்வார்:

ஒழிவில் காலம் எல்லாம் உடனாய் மன்னி,
வழுவிலா அடிமை செய்யவேண்டும் நாம்
தெழி குரல் அருவித் திருவேங்கடத்து,
எழில் கொள்சோதி எந்தை தந்தை தந்தைக்கே!

திருவேங்கடக் கோவிந்தனே தத்துவமும், இதமும், புருஷார்த்தமும் எனத் திருவுள்ளம் பற்றுகின்றார் பெரியாழ்வாரும்:

சென்னி ஓங்கு தன் திருவேங்
கடம் உடையாய்! உலகு
தன்னை வாழ நின்ற நம்பீ
தாமோதரா சதிரா?—(தத்துவம்)
என்னையும் என் உடைமையையும்
சக்கரப் பொறி ஒற்றிக் கொண்டு
நின் அருளே புரிந்திருந்தேன்—(இதம்)
இனி என் திருக்குறிப்பே!—

புருஷார்த்தம், உன் ஏவலை, உனக்கு கைங்கரியம் புரியும் வாய்ப்பை எதிர் பார்க்கின்றேன்.

ஸ்ரீ ஆண்டாள் அருளியவேதம் அனைத்துக்கும் வித்தான திருப்பாவையிலே திருவேங்கடவனான கோவிந்தனே தத்துவம், இதம், புருஷார்த்தம் என அருளியிருக்கிறாள். நாராயணன் என்னும் திரு நாமத்தை திருப்பாவையில் மூன்று பாசுரங்களில் பொறித்தது போலவே, கோவிந்த திரு நாமத்தையும் திருப்பாவையில் மூன்று பாசுரங்களில் பொறித்துள்ளாள்

நாராயணாய நாமத்தை, விட்டு விட்டு 1,7,10 பாசுரங்களில் பொறித்தது போலல்லாமல் கோவிந்த நாமத்தைத் தொடர்ச்சியாக மூன்று பாசுரங்களில் பொறித்துள்ளாள்!

"கூடாரை வெல்லும்சீர் கோவிந்தா! உன்றன்னைப்
பாடிப் பறை கொண்டு யாம் பெறும் சம்மானம்
நாடு புகழும் பரிசினால் நன்றாகச்
சூடகமே தோள் வளையே தோடே செவிப்பூவே!
பாடகமே என்று அனைய பல்கலனும் யாமணிவோம்
ஆடை உடுப்போம் அதன் பின்னே பாற்சோறு
மூடநெய் பெய்து முழங்கை வழிவாரக்
கூடியிருந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்"

பட்டாபிஷேகப் பாசுரம் இது :

கூடாரை வெல்லும் சீர் கோவிந்தா :— தத்துவம்.
உன் தன்னைப்பாடி — இதம்

பாடலில் உள்ள ஏனைய அடிகள் கூடியிருந்து குளிர்வது — புருஷார்த்தம்.

"கறவைகள் பின் சென்று கானஞ் சேர்ந்துண்போம்!
அறிவொன்று மில்லாத ஆய்க்குலத்து உன்றன்னைப்
பிறவி பெறுந்தனைப் புண்ணிம்யாம் உடையோம்
குறைவு ஒன்றும் இல்லாத கோவிந்தா! உன்றன்னோடு,
உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது
அறியாத பிள்ளைகளோம் அன்பினால் உன்றன்னைச்
சிறுபேர் அழைத்தனவும் சீறி அருளாதே
இறைவா நீ தாராய் பறையேலோ ரெம்பாவாய்!"

அபசாரம் பொறுத்தருள வேண்டும் பாசுரம்.

பரத்துவம்—தத்துவம்: குறைவொன்றும் இல்லாத கோவிந்தன்.

இதம்: அறியாத பிள்ளைகளோடும் அன்பினால் உன்தன்னைச் சிறு பேர் அழைத்தனம்.

புருஷார்த்தம்: இறைவா! நீ தாராய் பறை!

"சிற்றஞ் சிறுகாலே வந்துன்னைச் சேவித்துஉன்
பொற்றா மரையடியே போற்றும் பொருள் கேளாய்!
பெற்றம் மேய்த்துண்ணும் குலத்திற் பிறந்துநீ
குற்றேவல் எங்களைக் கொள்ளாமற் போகாது
இற்றைப் பறைகொள்வான் அன்றுகாண் கோவிந்தா
எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு
உற்றோமே யாவோம் உனக்கே நாமாட் செய்வோம்
மற்றைநம் காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய்."

திருப்பாவையிலே (சிகரமான) பாசுரம், சரணாகதிப் பாசுரம்: கோவிந்தா! — தத்துவம்

உன்னைச் சேவித்து உன் பொற்றாமரை அடியே போற்றும் பொருள் கேளாய்—இதம்.

குற்றேவல் எங்களைக் கொள்ளாமல் போகாது எற்றைக்கும் ஏழ் ஏழ் பிறவிக்கும், உன்தன்னோடு உற்றோமேயாவோம்; உனக்கே நாம் ஆட் செய்வோம்—புருஷார்த்தம்.

பன்னிரு ஆழ்வார்கள் அருளிய திவ்ய பிரபந்தம் நாலாயிரம் பாசுரங்களைக் கொண்டது.

இதில் படித்தவர் முதல் பாமரர் வரை பிரபலமாகப் பரவியுள்ளது 30 பாசுரங்களைக் கொண்ட திருப்பாவையே!

திருப்பாவையைப் பற்றிய தீர்ப்பு!:

பாதகங்கள் தீர்க்கும் பரமன் அடிகாட்டும்

வேதம் அனைத்துக்கும் வித்தாகும்-கோதை தமிழ்
ஐயைந்தும் ஐந்தும்
அறியாத மானிடரை
வையம் சுமப்பதும் வம்பு.

இந்தத் திருப்பாவை என்னும் உயரிய அருளிச் செயலை, ஸ்ரீ ஆண்டாள், எந்த (திவ்ய தேசத்து) எம் பெருமானுக்குச் சமர்ப்பித்துள்ளாள்? என்பதை ஆராயலாம் :

# திருப்பாவைக் கோவிந்தன்

''அன்ன வயல் புதுவை ஆண்டாள். அரங்கற்குப் பன்னு திருப்பாவை பல்பதியம் இன்னிசையால் பாடிக் கொடுத் தாள்'' என்று அருளிச் செய்கிறார் உய்யக் கொண்டார். ஆனால், அணி புதுவைப் பைங்கமலத் தண் தெரியல் பட்டர் பிரான் கோதை சொன்ன, சங்கத் தமிழ் மாலை முப்பதும் தப்பாமே உரைத்துப் பார்க்கினும், அரங்கநாதனைப் பற்றி ஒரு பிரஸ்தாபமும் இல்லை!

பதினான்காவது, ''உங்கள் புழக்கடைப் பாசுரத்தில்'' ''தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போதந்தார்'' என வருவதால், ஸ்ரீவைஷ்ணவ பரிபாஷையில் 'திருக்கோயில்' என்றால் திருவரங்கத்தைத்தான் குறிக்கும் என்ற கணக்கில் அரங்கத்தைப் பற்றிப் பேசப்பட்டுள்ளதாகக் கூறப்படு கிறது! இது தலையைச் சுற்றி மூக்கைத் தொட்டுக் காட்டு வது தான்!

ஸ்ரீவில்லிபுத்தூரையே திருவாய்ப்பாடியாகவும், ஆங்குத் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள வடபத்ர சயன ரையே கண்ணனாகவும், அவர் திருக்கோயிலையே நந்த கோபர் திருமாளிகையாகவும், உடனிருந்த பெண்களையும் தன்னையும், ஆயர் மங்கையராகவும் பாவித்துக் கொண்டு, ஆண்டாள் இடை முடியும், இடை நடையும், முடை நாற்றமும் வீசும்படிப் பாடியது திருப்பாவை என்பது பரவிய கொள்கை. மென்னடை அன்னம் பரந்து விளையாடும் வில்லிபுத்தூர் உறைவான் தன் பொன்னடி காண்பது ஓர்

ஆசையினால் பொரு கண் இணை துயிலாத ஆண்டாள், திருப்பாவையில் ஒரு பாட்டிலாவது இப்பெருமாளைக் குறிக்கவில்லை!

தன் தோழியரைச் "சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்?" என விளித்து, "கதிர் மதியம் போல் முகத் தான் நாராயணனே நமக்கே பறை தருவான்; நீராடப் போதுமினோ! நேரிழையீர்!" என அழைக்கின்றாள் முதற் பாசுரத்திலே! வங்கக்கடல் கடைந்த மாதவனைக் கேசவனைத் திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றி றைஞ்சி அங்கப்பறை கொண்டவாற்றைப் பாடி, செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால் எங்கும் திருவருள் பெற்று இன்புறுக! என்று பலன் சொல்லித் தலைக்கட்டு கிறாள் முப்பதாவது பாசுரத்திலே!

'இப்படிப் பறை தரும், நாராயணன் மூர்த்தி (யான) கேசவனைப்பாடவும் நீ கேட்டே கிடத்தியோ' என்று தன் தோழி ஒருத்தியை ஏழாவது பாசுரத்தில் எழுப்புகிறாள் ஆண்டாள். மேலும் பத்தாவது பாசுரத்தில், "நாற்றத் துழாய் முடி நாராயணன் நம்மால் போற்றப் பறை தரும் புண்ணியன்!" என்றும் சுட்டிக் காட்டுகிறாள்!

இப்படியாகப் பாவை நோன்பு நோற்பதற்குத் தேவை யான பறை என்னும் வாத்யத்தை, நாராயணனிடமும், கேசவனிடமும், மாதவனிடமும் சென்றபொது கேட்டாள்; அடைந்ததாகவும் கூறினாள் ஆண்டாள். ஆனால், கண்ணன் பறையைத் தந்தபோது, "இற்றைப்பறை கொள்வான் அன்று காண்! நாங்கள் உன்னிடம் வந்தது!" என்று முன்பு பேசியதெல்லாம் உண்மை இல்லை என்று மறுத்துரைக் கின்றாள்!

ஏன் இந்த மாற்றம்! நாரயணனிடமும், கேசவனிடமும் மாதவனிடமும் தன் உண்மையான உள்ளத்தை வெளியிட

வில்லை ஆண்டாள்! தன் எந்த எண்ணத்தையும் வெளியிட விரும்பித் திண்ணார் மதிள் சூழ் திருவரங்கச் செல்வனாரையோ, வடபத்ர சயனரையோ நினைக்கவில்லை இத்திருப் பாவையிலே!

''கொம்மை முலைகள் இடர் தீரக் கோவிந்தற்கோர் குற்றேவல், இம்மைப் பிறவி செய்யாதே இனிப் போய்ச் செய்யும் தவந்தான் என்?'' என்ற திருவுள்ள முடையவள் ஆண்டாள்! எனவே, கோவிந்தனிடம் சென்றபோதுதான், தன் அந்தரங்கத்தை எல்லாம் அள்ளிக் கொட்டுகிறாள் திருப்பாவையிலே ஆண்டாள்!

பாற்கடலுள் பையததுயின்ற பரமனிடம் சென்ற போது, 'உறக்கத்தில் இருக்கிறவருக்குக் காது கேட்கவா போகிறது?' என்று எண்ணிப்போலும், ''நெய்யுண்ணோம்! பாலுண்ணோம்! நாட்காலே நீராடி மையிட்டு எழுதோம்! மலர் இட்டு நாம் முடியோம்!'' என்றெல்லாம் வைராக்யங் களை அடுக்கினாள்! ஆனால், கூடாரை வெல்லும் சீர்க் கோவிந்தனிடம் வந்ததுதான் தாமதம்! அவனைப்பாடி வேண்டுகிற சன்மானங்களின் வரிசைகளைக் கேளுங்கள் அவள் வார்த்தையிலேயே! ''நாடு புகழும் பரிசினால் நன்றாக, சூடகமே! தோள் வளையே! தோடே! செவிப் பூவே! பாடகமே என்றனைய பல்கலனும் யாம் அணிவோம், ஆடை உடுப்போம்! அதன் பின்னே பாற்சோறு மூடநெய் பெய்து முழங்கை வழிவாரக் கூடி இருந்து'' குளிர்வாளாம்! அந்தரங்கத்தில் வரித்துள்ள நாயகனிடம் தானேதான் அடக்கி வைத்துள்ள அந்தரங்க ஆசைகளைக் கூறுவாள் நாயகி!

குறைவு ஒன்றும் இல்லாத கோவிந்தனிடம் வந்த போது ஆண்டாள் தவடையில் அறைந்து கொள்வதையும் பாருங்கள்! முன்பெல்லாம் அவனுடைய என்னென்னவோ பெயரை, 'பெரிய பெயர்' என்று தவறாக நினைத்துக் கொண்டு சொல்லிப் பிதற்றி விட்டாளாம்! 'நாராயணன்

என்னும் அந்த நலந் தரும் சொல்லும் குறைவுடையது என்றே மதிப்பிடுகிறாள்! பரத்துவ மேன்மை இருப்பினும், சௌலப்யக் (எளிமைக்) குறைவுஇருக்கத்தானே செய்கிறது! அப்படிக் குறைவு ஒன்று இருக்கின்ற நாராயண நாமத்தை, ஒரு முறைக்கு மூன்று முறை திருப்பாவையிலே 7, 10 பாசுரங்களிலே கூறி அபசாரப்பட்டதற்கு, மூன்று வாக்கியங்களில் மன்னிப்பு வேண்டுகிறாள், "அறியாத பிள்ளைகளோம்! அன்பினால் உன் தன்னைச் சிறுபேர் அழைத்தனவும்! சீறி அருளாதே!" என்று.

'திவத்திலும் பசுநிரை மேய்ப்பு உவத்தி!' என்னும் புகழுடையவன் பரமன். அதாவது, பரமபதத்தில் இருந்து பெறும் இன்பத்தை விட, பசுக் கூட்டங்களை மேய்த்து மகிழ்தலையே மேன்மையாகக் கொள்வானாம்! இவனை நாராயணன் என்று கூப்பிட்டது தவறுதானே! நலம் அந்தம் இல்லதோர் நாடான பரபமதத்திலும் குறை கண்டல்லவா இறங்கி விட்டான் கண்ணனாக கோவர்த்தனமலைச் சாரலிலே கன்று மேய்த்து இனிதிருக்க!

நாராயணனாக சேவைசாதிக்கும் பரமபதத்தில் உள்ள நித்ய சூரிகளைப் காட்டிலும், அவன் தன்னை (உடன்) பிறவி (யாகப்) பெறும் புண்ணியம் உடையவர்கள் அல்லவா கறவைகள் பின் சென்று கானஞ் சேர்ந்து உண்ணும், அறிவொன்றுமில்லாத ஆய்க்குலத்தவர்கள்! அதனால்தான் கோவிந்தன் தன்னோடு உற(வேல்)வு நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது!" என்று அறுதியிடுகிறாள் ஆண்டாள்!

"சிற்றஞ் சிறுகாலே" பாசுரமே சிகரமான பாசுரம் திருப்பாவையிலே! கோவிந்தனான, வேங்கடத்துச் செங் கண்மால் சேவடிக் கீழ் அடி வீழ்ச்சி விண்ணப்பம் செய் கிறாள் ஆண்டாள் இப்பாசுரத்திலே; "உன் பொற்றாமரை யடியே போற்றும் பொருள் கேளாய்!" என்று காலில் விழுந்து கதறும் போது கருத்தின் ஆழம்தானே வரும் வார்த்தையிலே! ஒப்புக்கும், உபசாரத்திற்குமாக வார்த்தை

யாடுகிற சமயம் அதுவல்லவே! உள்ளே உருகிநைபவளான ஆண்டாள், கோவிந்தனாகிய கோவர்த்தனனைக் கண்டக் கால், 'ஒழிவில் காலமெல்லாம்உடனாய் மன்னி வழுவுஇலா அடிமை செய்ய வேண்டும். நாம்! என்னும் தன் மனதில் ஊறிய தாபத்தை அள்ளிப் பறித்து அவன் கழலில் அணிவிக்கும் பாசுரம் இதுவே!

அதனால்தான், தன் ஆழமான அந்தரங்கக் கருத்தை வெளியிடுகிறாள் ஆண்டாள் இப்பாசுரத்தில். 'கோவிந்தா! இற்றைப் பறை கொள்வான் அன்றுகாண்! (வாத்யமல்ல வேண்டுவது எமக்கு! வழுவிலா அடிமையே ஒழிவில் காலமெல்லாம் வேண்டும்!) எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும், உன் தன்னோடு உற்றோமே யாவோம்! உனக்கே நாம் ஆட்செய்வோம்'' என்று, கோவிந்த நம்பியைக் கால் பிடித்துக் கேட்கிறாள்! பெற்றம் (பசுக் களை) மேய்த்துஉண்ணும் குலத்தில் பிறந்தும் நீ குற்றேவல் எங்களைக் கொள்ளாமல் போகாது! என்று மடக்குகிறாள் கோவிந்தனை! இவ்வார்த்தைகளை 'நாற்றத்துழாய் முடி நாராயணன் மூர்த்தியிடம்' கூற முடியுமா? திருப்பாவை யிலே இப்பாசுரத்தைச் சரணாகதிப் பாசுரம் என்றும், சரம சுலோகப் பாசுரம் என்றும் கூறிப் போற்றலாம்! 'கற்றினம் மேய்த்த எந்தைக் கழலிணை பணிமின் நீரே' என்ற உபதேசத்தைக் கூறி நிற்கின்றாள் கோதை!

இருபத்து நான்காவது ''அன்று இவ்வுலக''ப் பாசுரம் போற்றிப் பாசுரம். காலும், (கையில் பிடித்த) வேலும் தன்னிச்சையால் இயங்காதவை! அவற்றைப் புகழ்வது பொருந்தாது! அவற்றிற்கு மூலகாரணமான மனதையே புகழ வேண்டும்! அடி போற்றி! கழல் போற்றி! வேல் போற்றி! என்பதெல்லாம் இவைகளைச் சேரா, 'திறல் போற்றி!' என்றால், உடல் பலத்தைப் போற்றியதாகவே முடியும்! 'புகழ் போற்றி!' என்றால், நன்மை பெற்ற,

அல்லது வியப்பில் மூழ்கிய ஒரு சாரார் சொன்ன வார்த்தை தான்! தனியாகக் 'குணம்' என்றால், நற்குணம் ஒன்றையே குறிக்கும்! நாயகனது குணங்களிலே எது தலையாயது என்று ஆராய்கிறாள் நாயகியான ஆண்டாள்! கோவிந்தனாகவும், கோவர்த்தனனாகவும் எழுந்தருளித்திக்கற்றஆயர்களுக்கும், ஆநிரைகளுக்கும் காக்கும் தெய்வமாக விளங்கிய அவன் எளிமைக் குணமே அவளை வசீகரிக்கின்றது எனவே பாடுகிறாள்; "குன்று குடையாய் எடுத்தாய் குணம் போற்றி!" என்று குளிரருவி வேங்கடத்துக் கோவின் குணம் தான் குணம் என்று பாடுகிறாள்! உயர்வற உயர்நலம் உடையவனுடைய குணங்களிலே உயர்ந்த குணமாம் இது!

திருப்பாவையான (புனிதத் தன்மை பொருந்திய மங்கையான) ஆண்டாள், தனது மற்றப் பிரபந்தமான நாச்சியார் திருமொழியிலும், கோவிந்தன் மீதே தன் காதலைப் பள்ள மடையாகத் திருப்பியிருக்கின்றாள். காதல் தெய்வமான காமன், தான் பொய்யான தெய்வம் என்று பெயர் எடுக்காமல், தன் மகிமையைக் காப்பாற்றிக் கொள்ளவேணுமானால். "கொத்தலர் பூங்கணை தொடுத்துக் கொண்டு கோவிந்தன் என்பதோர் பெயர் எழுதி, வித்தகன் வேங்கடவாணன் என்னும் விளக்கினில் புக என்னை விதிக்கிற்றியே!" என அவனைச் சமத்காரமாக வேண்டுகிறாள் ஆண்டாள்! மன்மதன் மலர் வேலுக்கும் எதிர் வேல் விடுகிறாள் அவன் கீர்த்தியை அழிப்பதாக தத்துவமிலி என்று நெஞ்செரிந்து வாசகத் தவனை வைதிடாமே, அவன் தப்பித்துக் கொள்ள வேணுமாம்!

ரதி-மன்மத வாகனமான கிளியை வளர்த்தாலும், அதன் குரலும் கோவிந்த கோஷமாகவே அமைகிறதாம்! 'கூட்டிலிருந்து கிளி, "கோவிந்தா! கோவிந்தா!!" என்றழைக்கும்!" ஆண்டாள் வளர்க்கும் பாக்யம்

பெற்றதால்! ஆனால் இது பிரிவுத்துயரைப் பெரிதாக்கத் தானே செய்கிறது!

ஆடும் மயிலும்,பாடும் கிளியோடு சேர்ந்து ஆண்டாளின் காதல் தீயைக் காட்டுத் தீயென மூட்டுகின்றதாம்! கண் முதலிய ஐந்து புலன்களையும் அவன் திறத்தே இழந்துள்ளதால், மயில் ஆட்டத்திலா அவள் கண் ஈடுபடும்! எனவே, மயில் தன் ஆட்டத்தை நிறுத்தினால் தேவலை என்று படுகிறது! அதனால் ஆண்டாள் கூறுகிறாள்: ''நட மாடித் தோகை விரிக்கின்ற மாமயில் காள்! உம்மை நடமாட்டம் காணப் பாவியேன் நான் ஓர் முதல் (கண்) இலேன்! அதையும் கோவிந்தனவல்லா பறித்துக் கொண்டான்! அவன் கூத்துக்காரனாயிற்றே! கேட்பாரற்றுக் கொடுமைகள் செய்பவனாயிற்றே! குடமாடு கூத்தன், கோவிந்தன் கோமிறை செய்து எம்மை! உடைமாடும் கொண்டான்?'' என்று, மேலும் ஆடி என்னை நீங்கள் வருத்தலாமா? இது தகுமா? உங்களுக்கு இனி ஒன்று போதுமே! உயர்ந்த பாவனையோடு கூடிய கவி!

கண் விழித்திருக்கும்போது காதலாகப் பெருகும் உணர்ச்சியே, கண் உறங்கும்போதும் கனவாகப் பரவு கிறது! கஞ்சை (கம்சனை)க் காய்ந்த (வதைத்த) கருவில்லி (கண்ணன்) கடைக்கண் என்னும் சிறைக் கோலால், நெஞ்சு ஊடு உருவ வேவுண்டு நிலையும் தளர்ந்து நைபவளான ஆண்டாள், கனவு காண்கிறாள்! ஆமாம்! நாளைக்கே திருமணம் என்று நிச்சயமாகிவிட்டது இதோ! என்ன பரபரப்பு பாருங்கள்! பாளைகளோடு கூடின பாக்கு மரங் களைப் பந்தல் கால்களாக நாட்டி, அவற்றின் விரிந்த ஓலைகளையே பந்தலாக்கிவிட்டார்கள்! மணமேடையும் தயார்! மணமகன் எங்கே? ''இதோ அவன் வருகிறான். அவன் பெயர் நரசிம்மன்!'' என்கிறார்கள் சிலர்! மணப் பந்தலில் உற்சாகமில்லை! சப்புத்தட்டிற்று! ''ஏதோ மிருக

சுபாவம் படைத்தவனாம், கோபக்காரனாம்' என்றும் எண்ணினார்கள்! "இல்லை, அந்த மணமகன் பெயர் மாதவன்" என்றார்கள்; பிறகு அப்படியா? ஏற்கனவே கடலைத் கடைந்து திருமகளைத் திருமார்பில் சேர்த்துக் கொண்டவனாயிற்றே!" என்றும் அசடு தட்டியதாம். உடனே விஷயம் தெரிந்தவர்கள் சொன்னார்கள்; "இவன் பழைய நரசிம்மன் இல்லை! மாதவன் இல்லை! கட்டழகு வாய்ந்த இளங்காளை! கன்று மேய்த்து இனிது உகக்கும் காளை தான்! இவன் பெயர் கோவிந்தன்! கோவிந்தன்!" உடனே உற்சாகம் உச்சத்துக்குப் போய்விட்டது. கலியாணப் பெண்ணான ஆண்டாளின் காதில் 'கோவிந்தன்' என்ற பெயரும் கடைசியாக விழுந்தது! நாணத்தையும் விட்டு நிமிர்ந்து பார்த்தாள்! ஆம்! என்ன பாக்யம்! அந்தக் கோவிந்தன் என்னும் காளையேதான், மணமகன் கோலம் பூண்டுக் கலியாணப் பந்தலில் நடைபோடுகிறான்!

கனவை விவரிக்கும் பாட்டைக் கேளுங்கள்!

"நாளை வதுவை மணம் என்று நாளிட்டுப்
பாளை கமுகு பரிசுடைப் பந்தற் கீழ்,
'கோளரி, மாதவன் கோவிந்தன் என்பான், ஓர்
காளைபுகுதக் கனாக்கண்டேன்! தோழி! நான்!"

கலியாணப் பந்தல் தானே! மாப்பிள்ளை திருமணப் பந்தலில் கால்வைத்ததும் கேலியும் ஆரம்பித்து விட்டது! "ஓகோ! இவர் கலியாண மாப்பிள்ளையோ! மாடுகளை மேய்த்துக் கொண்டிருந்ததைப் பார்த்திருக்கிறோமே!" என்றார்கள் சிலர்! "அதுமாத்திரம் அல்ல! மாடுகளுடன் காடுதான் இருப்பிடமும்! காட்டுச் சாதிதான் சேர்க்கையும்!" என்றார்கள் மற்றும் சிலர்! மூன்றாவது வகுப்பு அலசஆரம்பித்தது! 'திருமணத்திற்கு வந்துள்ளவர்களுடைய ஆடை ஆபரணங்கள் ஜாக்ரதை! வந்திருக்கிறவன் தவழும் போதே திருடியவன். வெண்ணை திருடியதால் உரலிலேயே

அவன் தாயாராலேயே கயிற்றால் கட்டிப்போடப் பட்டான்!' என்றார்கள் அந்த மூன்றாவது வகுப்பினர்.

கலியாணப் பெண்ணான ஆண்டாளுடைய காதுகளில் இவைகள் விழுந்தன. கோபமும் ரோஷமும் பொத்துக் கொண்டு வந்துவிட்டன. மாப்பிள்ளையின் நல்ல குணங் களை இப்படி நிந்தனையாகச் சொல்லலாமா என்றாள். 'பரம எளிமையான கோவிந்த குணங்களில் ஈடுபட்டல்லவா ரசிக்கவேணும்!' என்பதும் அவள் திரு உள்ளம்.

கற்றினம் மேய்க்கவும் மேய்க்கப் பெற்றான்!
காடு வாழ் சாதியும் ஆகப் பெற்றான்!
பற்றி உரலிடை ஆப்பும் உண்டான்!
பாவிகாள்! உங்களுக்கு ஏச்சுக் கொலோ!

"என் ஆத்திரத்தைக் கிளப்பாதீர்கள்! என்னிடம் அவதூறான வார்த்தைகளை வாங்கிக் கொள்ளாதீர்கள்! உங்களோடு இங்கு இருப்பதற்குக்கூட எனக்குப் பிடிக்கவே இல்லை! அந்த மாடு மேய்த்தும், மலை எடுத்தும் மக்களைக் காத்து, அதாவது அஃறிணை உயர்திணை உயிர்கள் யாவற்றையும் காத்தருளும் பெருமான் எழுந்தருளியுள்ள கோவர்தன மலைச் சாரலுக்கே என்னை அழைத்துப் போய்ச் சேர்த்துவிடுங்கள்!" என்று அடம் பிடித்தாள் ஆண்டாள்!

"கற்றன பேசி வசையுணாதே,
காலிகள் உய்ய மழை தடுத்து'
கொற்றக் குடையாக ஏந்தி நின்ற
கோவர்தனத்தே
என்னை உய்த்திடுமின்!"

திருமணச் சமயத்தில், திருமணப் பெண் அடம் பிடித்தால் பிடித்ததுதான். எதிர்த்து நிற்க முடியுமா?

கோவிந்தனிடம் கோதை கொண்ட அந்தரங்கக் காதலைக் கண்டோம். கோவிந்தன் கோதையிடம் எப்படி ஈடுபட்டான் என்பதையும் அறிய வேணுமல்லவா? கோதை ஸ்ரீ வில்லிபுத்தூரில் பிறந்ததைத் தெரிந்துகொண்டான் கோவிந்தன்! உடனே அந்த ஊருக்கே வந்துவிட்டான் வாழ்வதற்கு! கோதை பிறந்த ஊர், கோவிந்தன் வாழும் ஊராகவும் ஆகிவிட்டது!

கோவிந்தனாகத் தனது எளிமையையும், காக்கும் குணத்தினையும் காட்டும் இறைவனது குணவழகிலே சொக்கிச் சொக்கி ஈடுபட்ட பக்த உள்ளத்தின் சிகரமாக எழுந்த உணர்ச்சிச் சித்திரங்கள் இவை.

எல்லாக் காலத்திலும் எல்லா இடங்களிலும் எளியோரைத் தன் எளிமைக் குணத்தாலே காத்து, உலகு தன்னை வாழநின்ற நம்பியாக எழுந்தருளியிருக்கும் கோவிந்தன் குணம் பாடத் திருப்பாவையின் திருப்பாடல் கள் துணை நிற்குமாக!

"வேங்கடவற்கு எம்மை விதி!" என்ற இம்மாற்றம் நாமும் கடவாவண்ணம் நல்க, சூடிக்கொடுத்த சுடர்க் கொடியும் தொல்பாவை பாடியருளவல்ல பல்வளையாளு மான ஸ்ரீ ஆண்டாள் அருள வேண்டுவோமாக!

# வையத்துள் வாழ்வீர்காள்!
# வணக்கம்! வணக்கம்!

அருளப்படும் அலக்கண் எய்தி அருச்சுனன் பணிந்த காலை களத்தினில் கீதை சொன்ன கண்ணன் எம் செங்கண் மாலை உளத்தின் கொண்டு யானும் உரைக்கும் இப் புன் சொல்மாலையைக் களங்கள் நீக்கிச் சற்றே கடாட்சிப்பது உங்கள் வேலை.

உங்கள் மதம் என்ன?

எங்கள் மதத்தின் உயர்வு என்ன என்றால் நாம் கோயில்களைக் கட்டினால் போதாது, கடவுள் திருமேனி களைக் காட்டினால் போதாது, விழாக்களின் காட்சியைக் காட்டினால் போதாது, மதத்தின் உயிரான கொள்கையைச் சொல்ல வேண்டும். அதன் உயர்வைச் சொல்ல வேணும். அதன் ஒப்புயர்வற்ற தன்மையை நிரூபிக்க வேண்டும். வயதானவர் கூட்டமா வைணவ மாநாடு?

பகுத்தறிவு, மனசாட்சி, தர்க்கம், மேதாவிலாசம் பக்திப் பயிர் செழிக்கும் பாரத கண்டத்தவர்கள், கை கூப்புகிறோம்!

இஸ்லாமிய வழக்கம் வேறு, கிறித்துவ வழக்கம் வேறு! இதற்குப் பொருள் உண்டா? வேறு முறைகளில் செய்யலாமே!

கரங்கள், அழைக்கும், போகச் சொல்லும், இல்லை என்னும், கொடுக்கும். இதெல்லாம் அதிகாரத்தைக் காட்டும்.

கை கூப்பல்—செயலற்ற தன்மை. வைணவர்கள் வணக்கத்தில் ஒரு சிறப்பு—இரண்டு கைகள் இணைதல்; இரு வாக்கியங்கள் இணைதல்; ஒரு கையில் 5 விரல்கள்; ஒரு வாக்கியத்தில் 5 விரல்கள்; இரு வாக்கியத்தில் 10 விரல்கள். இந்தப் பத்துக் கருத்துக்களால் ஆன இரு வாக்கியங்களே துவயம். இதுதான் நமது மதத்தின் சிறப்பு என்பதை உணர்கிறோம். உணர்ந்திருக்கிறோம்.

இதுதான் துவயம்;

1. ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் பிரபத்யே!
2. ஸ்ரீமதே நாராயண ஆய நம :

முமுட்சு அறிய வேண்டியது,

1. பெரிய திருமந்திரம். இது நர நாராயணனாக உபதேசிக்கப்பட்டுக் கேட்பாரற்றது
2. சரம சுலோகம்; சண்டைச் சந்தடியிலே சொல்லப் பட்டுக் கேட்டவனும் புத்ர சோகனானான்.
3. இது—துவயம் பரம பதத்திலே கணவன் மனைவி வார்த்தையாக சந்ததியாக வந்த பிதிரார்ஜிதம்.

ஏனைய ஞான நூல்கள் தேகத்தாலேயே பேறு என்கிறது. பெரிய திருமந்திரம் ஆத்மாவாலே பேறு என்கிறது. சரம சுலோகம் ஈஸ்வரனாலே பேறு என்கிறது; சர்வ சுதந்திரன். துவயம் பெரிய பிராட்டியாலே பேறு என்கிறது. திருவுள்ளத்திலே குளிர்ந்த நீரிலே நெருப்புக் கிளறுமாப் போலே சீற்றம் பிறந்தால் பொறுப்பது இவனுக்காக இருவரையும் திருத்துவதும் உபதேசத்தாலே அவனை அழகாலே திருத்தும், செதனனை அருளாலே திருத்தும். இவள் சந்நிதியாலே காகம் தலைபெற்றது, அது

இல்லாமையினாலே இராவணன் முடிந்தான். இது திருமந்திரத்திலே வெளிப்படையாக இல்லை. சரம சுலோகத்தில் துளிக் கூட இல்லை; துவயத்தில்தான் பிராட்டியைப் பற்றியே பேறு தெரிகிறது.

ஒரு பத்து 100 பாசுரம், 10 பத்து 1, 000 பாசுரம் பாடிய பிறகு வியாக்கியானமா? பாடுவதற்கு முன் திட்டமிட்டுப் பாடுவதா! ஆயிரத்துள் இப்பத்தும் என்று தொடக்கத்தில் பாடப்பட்டது; எனவே, திட்டமிட்டு அஸ்திவாரம் போட்டு, அருளப்பட்டது.

இது சொற்றொடர் அந்தாதி மட்டுமல்ல பொருள் தொடை அந்தாதியும் கூட.

எனவே, துவயம் தித்திக்கப் பாடியதே திருவாய்மொழி. "அகல கில்லேன்." "ஒழிவில் காலமெல்லாம்"

## துவயம் தித்திக்கும் திருவாய்மொழி

**திருவாய் மொழியின் உயர்வு:-**

சடகோபரின் சரமப் பிரபந்தமான திருவாய் மொழி சாம்வேதத்தின் சாகைகள் போன்று ஆயிரம் பாசுரங் களாகப் பரிணமித்தது! ஆயிரத்துக்குக் குறைய முடியாது! ஏன்?

"நாராயணனின் நாமங்கள் ஆயிரம்!

தோள்கள் ஆயிரம்!

திருக்கண்கள் ஆயிரம்!

அவயவங்கள் ஆயிரம்!

பள்ளியான அனந்தாழ்வானின் பணாமுடிகள் ஆயிரம்!"

அவன் உறுப்புகளுக்கு உவமையாகக் கூறும் புண்டரீகத்தின் (தாமரையின், அல்லியின்) இதழ்கள் ஆயிரம்.

திருவாய்மொழி ஆயிரம் பாசுரங்கள் கொண்டது எனத் திகைக்க வேண்டாம். திருவாய்மொழி சொல் தொடர் அந்தாதி. அதாவது ஒரு பாசுரத்தின் கடைசிச்சொல்அடுத்த பாசுரத்தின் முதல் சொல்லாக அமைவது. இது மட்டுமல்ல.

திருவாய்மொழி பொருள் தொடர் அந்தாதியும் கூட. ஒரு பத்தில் (நூறு பாசுரங்கள் கொண்டது) தெரிவிக்கும் விஷயத்தைத் அடுத்த பத்தின் பாசுரங்களில் உள்ள விஷயம் தொடர்ந்து வரும்.

இப்படிச் சொல் தொடர்பும், பொருள் தொடர்பும் கொண்டு அருளப்பட்ட திருவாய்மொழி உலகிற்கு ஒரு புதுமை! ஆம்! உலகிற்கு ஒரு புதுமை! 'ஆன்ற தமிழ் மறைகள் ஆயிரமுமான திருவாய்மொழியின் சொல் பெற்று உயர்ந்தன'வாம் அரங்கனின் கொற்றப் புயங்களும்! இது திவ்விய கவி பிள்ளைப்பெருமாள் அய்யங்காரின் திரு உள்ளம்.

## ஸ்ரீ வைணவத்தின் ஆதாரவிழுது துவயம்!

ஸ்ரீ வைணவ ஞானமாகிய ஆலமரம் பல வேத சாஸ்திரங்களையும் அடிப்படையாகக் கொண்டு ஓங்கி சிரஞ்ஜீவியாகப் பரவி எழுந்துள்ளதே; பல ஸ்ரீவைணவஞான நூல்களே இதன் விழுதுகள். ஒவ்வொரு நூலும், ஸ்ரீ வைணவ சமயமாகிற ஆலமரத்தைத் தாங்கும் விழுது. அர்த்த பஞ்சகமே இந்த ஸ்ரீவைணவ ஞானமாகிற ஆல மரத்தின் தாய் அடி விழுது. இந்த அர்த்த பஞ்சக அடி விழுதின் அந்தரங்க உள் உயிர் நாடிவிழுதே ''துவயம்'' என்னும் மந்திரரத்தினம். இந்த மந்திரரத்தினமான துவய ஞானத்தையே பொருள் தொடை அந்தாதியுமான கருத்துக் களாகப் பத்துப் பத்துகளிலும் பராங்குசர் அருளியுள்ளார்!

எந்த சமயக் கருத்தையும் பயின்றால் அதைப் பகுத்தறிவு பாராட்ட வேண்டும்; மனச்சாட்சியும் போற்றி

மகிழ வேண்டும்; அதை எடுத்துரைத்தால் தர்க்கம் தலை வணங்க வேண்டும்; மேதா விலாசமும் மெச்ச வேண்டும். இவ்விதமாயின் அந்த ஞானத்தால் பக்திப் பயிர் செழித்து முக்திக் கனி பெருகும்.

இந்த அடிப்படையில் திருவாய் மொழியில் அருளப் பட்டுள்ள துவய ஞானத்தை ஆராய்வது ஸ்ரீ வைணவர் களுடைய கடமை. ஏதோ நமக்குள்ளே மறைவாகப் பழங் கதைகள் பேசுவதில் ஒரு பயனுமில்லை

திருக்குருகூர் திவ்யதேசத் திருப்புளியாழ்வாரின் திருநிழலிலிருந்து ஸ்ரீ நம்மாழ்வார்,

'அத்தைத் தின்று அங்கே கிடக்கும்;

என முழங்கியதே 'முதல் முழக்கம்.'

திருவாய் மொழியில் பத்துப் பத்துக்களால் ஆன ஞானச் சுவை கொண்ட ஆயிரம் பாடல்களிலும் அருளிய துவய ஞானமே ''முழு முழக்கம்''

துவய மந்திரத்தின் முழுவடிவமாவது :

(1) ஸ்ரீமந் (2) நாராயண (3) சரணௌ (4) சரணம் (5) பிரபத்யே (6) ஸ்ரீ (7) மதே (8) நாராயண (9) ஆய (10) நம:

இனி இம் முழு முழக்கம் முழுவதும் திருவாய் மொழி யில் ஸ்ரீ நம்மாழ்வாரின் முதிர்ந்த முழக்கமாகவே அமைந் துள்ளதைச் செவி ஏற்கலாம்.

அர்த்த பஞ்சக ஞானம் திருவாய் மொழியில் ஒரு பத்திலிருந்து வேறு எங்கோ ஒரு பத்துக்குத் தாவும். மறு படியும் திருப்பித் தாவும்! அப்படியன்று துவயம்! ஒரு பத்தில் ஒரு கருத்தை வெளியிட்டு, அடுத்த பத்தும் அடுத்த கருத் தையே ஆற்றொழுக்காக அருளும்.

**கருத்து—1 :** ''ஸ்ரீமந்'' மலர்மகள் துணையே மாதவன் அருள் தரும், துவயத்தின் பத்துக் கருத்துக்களே திருவாய் மொழியில் பத்துப் பத்துக்களாக அமைந்துள்ளன. உலகில் பிறவி எடுத்துள்ள நாம் யாரைப் பற்றினால் உய்வு உண்டு? திருமகளோடு இணைந்து திருமாலாகச் சேவை சாதிக்கும் இறைவனையே பற்ற வேண்டும். பாப சொரூபிகளான நம்மை இறைவன் வெறுத்தாலும், உடனிருந்து புருஷ காரம்—பரிந்துரை புரிந்து காப்பாற்றுகின்றவள் திருமகளே! அவதார காலங்களிலே காகத்தையும் இரட்சித்தாளே! எனவே இலட்சுமிப் பிராட்டியார் இறைவனுடன் எப்போதும் கூடியிருத்தலையே கூறுகின்ற ''ஸ்ரீமந்'' என்பதையே முதற் பத்தால் துவயம் தெரிவிக்கப்படுகிறது.

கருணை வடிவமான திருமகளுக்கு நாயகனாக இருக்கும் தன்மையை திருவாய்மொழியின் முதற் பத்திலே ஸ்ரீ நம்மாழ்வார் ஆறு பாடல்களிலே அருளுகிறார். அவற்றுள் ஒரு பாசுரம்.

> ''பத்துடை அடியவர்க்கு எளியவன்! (எவன்?)
> பிறர்களுக்கு அரிய
> வித்தகன்!'' (எவன்?) அவன் மலர்மகள் விரும்பும்
> நம் அரும் பெறல் அடிகள்!''
> மத்துறு கடைவெண்ணெய் களவினில் உரைவிடை
> யாப்புண்டு,
> எத்திறம் உரலினோடு, இணைந்து இருந்து ஏங்கிய
> எளிவே!'' (1—3-1)

திருமகள் கேள்வனாக இருக்கும் தன்மையை திருவாய் மொழியில் ஐந்து ஏனைய இடங்களில் 'ஸ்ரீமந்' ஸ்ரீ நம்மாழ்வார் அருள்வது:

1. ''மாமலராள் மைந்தன்'' (1—5—9)
2. ''திருமகளார் தனிக் கேள்வன்'' (1—6—9)
3. ''திருவின் மணாளன்'' (1—9—1)
4. ''பூமகளார் தனிக் கேள்வன்'' (1—9—3)
5. ''மைந்தனை மலராள் மணவாளனை'' (1—10—4)

**கருத்து—2 ''நாராயண''**

''உலகளந்த உத்தமனே உயிர்களைக் காப்பவன்''

இவ்விதமாகத் திருமகளோடு இனிதமர்ந்த செல்வனான ஸ்ரீமந் நாராயணன் சகல உயிரற்றவைகளான அசித், உயிரினமான சித்துக்களை உடலாகக் கொண்டுதிகழ்கிறான். எனவே, அவைகளைக் காப்பாற்ற வல்லவன் அவனே; தன் உடலை அவனே தான் அல்லவா காப்பாற்ற வேண்டும்?

இதனையே துவயமும் நாராயண எனக் குறிக்கும். சகல அசித், சித்துக்களையும் உடலாகக் கொண்டு அவற்றை இயக்கும் நாராயண தத்துவத்தை ஸ்ரீ நம்மாழ்வார் திருவாய்மொழி இரண்டாம் பத்தில் மூன்று பாடல்களிலே அருளிச் செய்கின்றார். அவற்றுள் ஒரு பாசுரம் :

''நாரயணன் முழு ஏழ் உலகுக்கும் நாதன்! வேத மயன்,
காரணம், கிரிசை, கருமமிவை முதல்வன் எந்தை!
சீரணங் கமரர் பிறர்பலரும் தொழு தேத்த நின்று,
வாரணத்தை மருப் பொசித்த பிரான் என் மாதவனே.''

ஏனைய இரண்டு அருளிச் செயல்களாவன :

1. ''எம்மான் நாரணற்கு'' (2—1—7)
2. ''எம்பிரான் எம்மான்நாராயணனாவே''(2—7—1)

**கருத்து—3 ''சரணௌ''**

''வண்புகழ் நாரணன் திண் கழல் சேரே''

திருமகளோடு அவள் புருஷகாரத்தாலே (பரிந்துரை) உலகை ரட்சித்துக் கொண்டு உலகுக்கு நாதனாக விளங்கும் நாராயணனுடைய திருவடித் தாமரைகள் இரண்டும் எல்லா உலகங்கட்கும் புகலிடமானவை! நாராயணனுடைய சர்வ லோக சரண்யமான சரணாரவிந்த யுகளத்தை திருவாய்

மொழி மூன்றாம் பத்தில் ஐந்து பாசுரங்களில் மங்களா சாசனம் செய்தருள்கிறார் மகிழ்மாறன்!

''ஓயும் மூப்பு, பிறப்பு, இறப்புப் பிணி
வீயுமாறு செய்வான் திருவேங்கடத்து
ஆயன்! நாண் மலராம் அடித்தாமரை
வாயுள்ளும் மனத்துள்ளும் வைப்பார் கட்கே!''

இத்திருவடிகளையே திருவாய்மொழியில் மேலும் மங்களாசாசனம் செய்தருள்கின்றார் நான்கு பாசுரங்களில்

1. அங்கதிர் அடியன் (3—4—3)
2. அவன் பாத பங்கயம் (3—6—4)
3. அன்று தேர்கடாவிய பெருமான் கணைகழல் (3—6—10)
4. அன்று மூவுலகும் தொழுது ஏத்தும் சீர் அடியான் (3—8—1)

**கருத்து—4 ''சரணம்''**

''வல்வினை கெடுப்பதூம், அவ்வினை
கெட்டார்க்குச் சார்வாய் மற்றாங்கே
எடுப்பதூம் எல்லாம் எம் அடிகளே!''

மந்திர சிரேஷ்டமான துவயம்— ''1. ஸ்ரீமந், 2 நாராயண, 3. சரணௌ'' எனத் தொடங்கி மறுபடியும் 4. சரணம் என்கிறது.

இதனால் ஸ்ரீமந் நாராயணனுடைய திருவடித் தாமரைகள், நமக்குத் தஞ்சமாக (பிராபகமாய்) இருக்கும் தன்மையைக் குறிப்பிடுகின்றது. அதாவது இரண்டாவதாக கூறப்படும் சரணம் என்பதால் இறைவனுடைய இணையடிகள் நமக்கு விருப்பு இல்லாதனவற்றை நீக்கி (பற்று ஏற்பட வேண்டியவைகளில் விருப்பை உண்டாக்கி) விருப்பு உள்ளனவற்றைப் பெறுதல் செய்தலாகிற தன்மையை

KOVILOOR VEDANTA MUTT



உடைய உபாயத் தன்மை சொல்லப்பட்டது. முதலில் வரும் 'சரணௗ' என்பது இணையடிகளையும், அடுத்து வரும் 'சரணம்' என்பது அல்லனவற்றை நீக்கியும் நல்லனவற்றைத் தந்தும் அருளும் உபாயமாக உள்ளதைக் காட்டுகிறது.

இதையே ஸ்ரீ நம்மாழ்வார் நான்காம் பத்திலே பத்துப் பாசுரங்களால் வெளியிடுகிறார். இறைவனது திருவடிகள் உபாயமாக அமைந்து, வல்வினை தீர்க்கும் கண்ணன்! என்ப தால் அல்லனவற்றைப் போக்கலையும், தொழுதெழ வீற்றி ருப்பாரே! என்பதால் நல்லவற்றைத் தந்து அருளுவதை கீழ் வரும் பாசுரத்திலே சாதிக்கின்றார் சடகோபர்!

''வல்வினை தீர்க்கும் கண்ணனை
வண் குருகூர்ச் சடகோபன்,
சொல் வினையால் சொன்ன பாடல்
ஆயிரத்துள் இவைபத்தும்,
நல்வினை என்று கற்பார்கள்
நலனிடை வைகுந்தம் நண்ணித்
தொல்வினை தீர எல்லாரும்
தொழுது எழ வீற்றிருப்பாரே!'' (4-4-11)

இக் கருத்தையே மற்றும் ஒன்பது பாசுரங்களில் சுட்டிக் காட்டுதல் :-

1. ''இலங்கை நகர் அம்பு எரி உயிர்த்தவர்'' (4. 2, 8)
2. ''தொல் வினை தீர'' (4. 4. 11)
3. ''வெய்ய நோய்கள் முழுதும் வியன் ஞாலத்து வீயவே'' (4. 5, 2)
4. ''மேவி நின்று தொழுவார் வினை போக'' (4. 5. 4)
5. ''பிறந்தும், செத்தும், நின்று இடறும் பேதமை தீர்ந்து ஒழிந்தேன்'' (4. 7. 7)
6. ''நோயே! மூப்பு! இறப்பு! பிறப்புப் பிணியே! என்று இவை ஒழிய'' (4· 9. 7)

7. "வேட்கை எல்லாம் விடுத்து கூட்டரிய
   திருவடிக்கண் கூட்டினை" (4. 9. 9)
8. "அஃதெ உய்யப் புகுமாறு" (4. 7. 11)
9 "உய்வு உபாயம் மற்று இன்மை தேறி" (4. 3. 11)

**கருத்து- 5 'பிரபத்யே"**

"வீடுடையானிடை வீடு செய்ம்மினே"

ஸ்ரீமந் நாராயண சரணெள சரணம் எனத் தொடங்கும் துவய மந்திரத்தின் முதல் வாக்கியம்—அதாவது பூர்வ வாக்கியம் "பிரபத்யே" என முடிகிறது.

"பிரபத்யே!" என்கிற பதம் பக்தன் இறைவனிடம் மிக்க நம்பிக்கை கொண்டுள்ள துணிவைச் சொல்லுகிறது. இதனை மகாவிசுவாசம் என்பதுண்டு. பேறு தப்பாது என்று துணிந்திருக்கையுமாம். நம்பிக்கையும், பக்தியும், துணிவும், விசுவாசமும் இல்லாமல் எப்படி ஒருவன் இறைவனை அடைய முடியும்? அவன் அருளுக்கும் அவன் திருவடிகளே நமக்கு உபாயம் என்பதை ஐந்தாம் பத்தில் ஆறு பாசுரங் களால் அருளுகின்றார் ஆழ்வார். இப் "பிரபத்யே!" என்பதை விளக்கும் ஒரு பாடல்!

"ஆறு எனக்கு நின் பாதமே சரணாகத் தந்து
ஒழிந்தாய் உனக்கு ஓர் கைம்
மாறுநான் ஒன்றிலேன்! எனது ஆவியும் உனதே!
சேறுகொள் கரும்பும் பெருஞ் செந்நெலும் மலிதண்
சிரீவர மங்கை
நாறு பூந்தண் துழாய்முடியாய்! தெய்வ நாயகனே!

இத்துணிவையே அதாவது விசுவாசத்தையே—

1. "தமியேனுக்கு அருளாய்" (5. 7. 2) என்றும்,
2. "உன்னால் அல்லால்" (5. 8. 3) என்றும்,
   "கழல்கள் அவையே சரணாகக்
   கொண்ட" (5. 6. 3) என்றும்,

3. ''நம்பெருமான் அடிமேல் சேமங்கொள்
தென் குருகூர்ச் சடகோபன்'' (5. 9. 11) என்றும்

4. ''நாகணைமிசை நம்பிரான் சரணே, சரண்
நமக்கு (5. 10. 11) என்றும்

5. ''நாடொறும் ஏக சிந்தையனாய்'' என்றும் குறிப்பிடுகின்றார் குருகூர்ச் சடகோபர். இந்த ஐந்து பாசுரங்களிலே—மாறனைப் போல் சிந்தை, சொல் செயலால் துதிக்க வேண்டாம், சிந்தையே போதும் நமக்கு திருமகளோடு கூடிய திருமாலின் அகில லோகத்தையும் காக்கும் சக்தியை அறிந்து அவனுடைய திருவடிகளையே உபாயமாகப் பற்றிச் சரணம் அடைய வேண்டும் என்பதையே இந்த துவயத்தின் முதல் வாக்கியம் வெளியிட்டருள்கிறது.

ஆக இதுவரை விண்ணப்பித்த துவய மந்திரத்தின் முதல் அல்லது பூர்வ வாக்கியத்தைச் சேவித்தோம்.

1. ஸ்ரீமந், 2. நாராயண, 3. சரணௌ, 4. சரணம் 5. பிரபத்யே,

என்னும் முதல் வாக்கியமானது ஐந்து சொற்களை யுடையது போலவே இதன் உத்தர வாக்கியம் அல்லது இரண்டாம் வாக்கியமும் ஐந்து சொற்களால் ஆகியுள்ளது, அதாவது—

1. ஸ்ரீ, 2 மதே, 3. நாராயண, 4. ஆய, 5. நம: என்பதாம்.

இவ்விதம் இரண்டு வாக்கியங்களால் அமைந்துள்ளது பற்றியே இம்மந்திரம் துவயம் எனப்படுகின்றது. வடமொழியில் துவயம் என்றால் இரண்டு எனப் பொருள். இந்த இரண்டாவதான உத்தர வாக்கியத்தின் திரண்ட பொருளாவது: சர்வ சுவாமியாக இருக்கின்ற சர்வேச்வரனது திருவடிகளில் இயற்றும் கைங்கர்யத்தைப் பிரார்த்திப்பதே போதும். நாம் இறைவனிடம் அவனுக்குச் செய்யும் கைங்கரியம் புரிய வேணுமென்று பிரார்த்திக்கவும் வேண்டுமா? 'உள்ளுவார் உள்ளிற்றெல்லாம் உடன்

இருந்து அறிகின்றவனாயிற்றே இறைவன்: எனினும் ஒரு குழந்தை தன்னுடைய நோய் தீரப்பெற்று ''அன்னம்'' ''தண்ணீர்!'' என்று அவாவினால் தாயின் உள்ளம் உகப்பது போன்றே இறைவனுடைய திருவுள்ளமும் உவக்குமே!

**கருத்து-6:- ''ஶ்ரீ''**

இது இரண்டாம் வாக்கியத்தில் முதல்பதமாக உள்ளது. நீயும் திருமகளும் நின்றாயால் ஶ்ரீ இது திருமகள், அத் திருமகளின் நாயகன் இவர்களுடைய நித்திய சம்பந்தத்தை வெளியிடுகிறது. கைங்கரியத்தைத் தந்தருளுவதற்கு உறுப்பான, திருமகள் அவளுடைய நாயகன், இவர்களுடைய அகல இல்லாத (பிரிவற்ற) உறவைக் காட்டுகிறது.

இவ்வுறவை அகலாது இருக்கும் திருமால், பிராட்டியின் அகலாது இருக்கும் இந்த உறவை ஆறாம் பத்தில் நான்கு பாசுரங்களால் ஶ்ரீ நம்மாழ்வார் வெளியிட்டிருக்கிறார்.

''திருந்து வேதமும் வேள்வியும் திருமாம களிரும்தாம்
மலிந் திருந்து வாழ்பொருநல்வடகரைவண்தொ
லைவில்லி மங்கலம்,
கருந்த டங்கண்ணி கைதொழுதஅந்நாள்தொ
டங்கி யிந் நாடொறும்,
இருந்தி ருந்தர விந்த லோசன! என்றென்றே
நைந்திரங்குமே.'' (6- -8)

இதையே,

1. ''அடிமை செய்வார் திருமாலுக்கே'' (6 5-11) என்றும்
2. ''ஒசிந்த வொண் மலராள் கொழுநன்'' (6-7-8) என்றும்
3. ''என் திருமார்வற்கு'' (6-8-10) என்றும்
4 ''கோலத் திருமா மகளோடு உன்னை'' (6-9-3) என்றும் சாதித்தருள்கிறார் சடகோபர்.

நம்பிள்ளையின் கடாட்சத்தினால் வடக்குத் திருவீதிப் பிள்ளைக்குத் திருக் குமாரராய் அவதரித்த பிள்ளை-

லோகாச்சாரியரும் தாம் அருளிய முமுட்சுப்படியிலே இந்தச் சேர்த்தியின் பெருமையை வலியுறுத்துகின்ற விதம் ''இளைய பெருமாளைப் போல இருவருமான சேர்த்தியிலே அடிமை செய்கை முறை—''

''அடிமை தான் சிந்திப்பதும், ரசிப்பதும் அச்சேர்த்தியிலே!''

கருத்து—7 ''மதே''

''இணைப்பில் இயற்றும் கைங்கரியமே இனிக்கும்''

''ஸ்ரீ யை அடுத்துள்ளது 'மதே' என்னும் பதம்.''

இருவருமான சேர்த்தியிலே நாம் புரியும் கைங்கரியம் இறைவனுக்குப் பரம மகிழ்ச்சியை உண்டாக்கும். அப்போது இறைவன் எல்லை இல்லாத இனிமையை அடைகின்றானாம். பிராட்டியும் கூடத் தவறாக எதிர்த்துச் சொன்னால் மாயவன் மதிக்க மாட்டானாம்.

''தன்னடியார் திறத்தகத்துத் தாமரையா
ளாகிலும் சிதகுரைக்குமேல்,
என்னடியா ரதுசெய்யார் செய்தாரேல்
நன்றுசெய்தா ரென்பர்போலும்!''

(பெரியாழ்வார் திருமொழி. 4—9—1)

விபீடணனைப் பற்றி இராமபிரானிடம் எத்தனை கோள்களை மூட்டினார்கள் கடற்கரையிலே. அவைகளுக்கு இசைந்தாரா? எனவே அந்த உதாரணத்தையே மறைமுகமாகக் காட்டுகிறார் மெய்ந் நாவர், மெய்யடியாளர் விட்டுசித்தர்.

இனி, இந்த அருளிச் செயலின் ஏனைய அடிகளையும் சேவிப்போம்.

''மன்னுடைய வீடணற்காய் மதிலிலங்கைத் திசை
நோக்கி மலர்க்கண் வைத்த
என்னுடைய திருவரங்கற்கு அன்றியும்
மற்றொருவர்க்கு ஆள் ஆவரோ!''

இறைவன் நம் கைங்கரியத்தை ஏற்று ஆராத அமுதாகச் சேவை சாதித்தல்:

''சிந்திக்கும்! திசைக்கும்! தேறும்! கை கூப்பும்!
திருவரங்கத்துள்ளாய், என்னும்!
வந்திக்கும், ஆங்கே! மழைக் கண்ணீர் மல்க வந்திடாய்!
என்று என்றே மயங்கும்
அந்திப்போ தவுணன்உடலிடந் தானே! அலைகடல்
கடைந்தஆரமுதே!
சந்தித்துன் சரணம் சார்வதே வலித்த தையலை
மையல் செய்தானே!''
—திருவாய்மொழி (7-2-5)

இறைவன் எய்தும்இன்பத்தையும் அவனது இனிமையையும் மேலும் திருவாய்மொழியில் அருள்வது:

1. ''கன்னலே! அமுதே!'' (7-1-2)
2. ''கொடியேன் பருகு இன்னமுதே'' (7-1-7)
3. ''அலைகடல் கடைந்த ஆரமுதே'' (7-2-5)
4. ''திருமாலின் சீர் இறப்பு எதிர்காலம் பருகிலும் ஆர்வனோ'' (7-9-9)
5 ''இவ்வேழுலகை இன்பம் பயக்க'' (7-10-1)

கருத்து—8 - ''நாராயண''

''நாராயணனே மூர்த்தி!''

சேர்த்தியிலே நாம் புரியும் கைங்கரியத்தை ஏற்று மகிழும் இறைவனை எல்லாப் பொருள்கட்கும் தலைவனாக விவரிக்கின்றது. அடுத்த பதமான ''நாராயண'' என்னும் பதம். எல்லோருக்கும் சுவாமியாக இருப்பவன் தானே

கைங்கரியத்தை ஏற்று மகிழ முடியும்.'' நாராயணன் உபய விபூதிநாதன் என்பதை நம்மாழ்வார் எட்டாம் பத்தில் ஐந்து பாசுரங்களால் அருள்கின்றார்,

1. ''அடியேன் பெரிய அம்மானே!'' (8. 1. 3.)
2 ''விண்ணவர் கோன் நங்கள் கோனை'' (8.2 2)
3. ''அமர்ந்த நாதனை'' (8. 4. 10)
4. ''மூவுல காளி'' (8. 9. 5)

ஒன்பதாம் திருமொழி 11வது **பலச்சுருதி** பாசுரத்தில் அருள்வது:

''நேர்பட்ட நிறைமூ வுலகுக்கும் நாயகன் றன்னடிமை,
நேர்பட்ட தொண்டர் தொண்டர் தொண்டர்
தொண்டன் சடகோபன்
சொல்நேர்பட்ட தமிழ்மாலை யாயிரத்துள்
இவையு மோர்பத்தும் நேர்பட் டாரவர், நேர்பட்டார்
நெடுமாற்கடி மைசெய்யவே'' (8-9-11)

**கருத்து—9; ''ஆய''**

''தொண்டுக்கே கோலம் பூண்டு''

இவ்விதமாக எல்லாப் பொருட்கும் நாதனான இறைவனுக்கு நாம் நித்திய கைங்கரியம் புரியவேண்டு மென்று அடுத்துள்ள ''ஆய'' என்னும் பதம் வெளியிடுகிறது. இறைவன் நித்தியம், திருமகள் நித்தியம், நமது ஆத்மா நித்தியம். எனவே, இறைவன்பால் செய்யும் கைங்கரியமும் நித்தியமாக இருத்தல் வேண்டும்.

இதனை அருள்கிறார் ஸ்ரீ நம்மாழ்வார்:

''பண்டை நாளாலே நின்திரு வருளும் பங்கயத்
தாள்திரு வருளும்
கொண்டு, நின் கோயில் சீய்த்துப்பல் படிகால்
குடிகுடிவழிவந்தாட் செய்யும்

தொண்ட ரோர்க் கருளிச் சோதிவாய் திறந்துன்
தாமரைக் கண்களால் நோக்காய்
தெண்திரைப் பொருநல் தண்பனை சூழ்ந்த திருப்புளிங்
குடிக்கிடந் தானே!
(9.2.1)

மற்றும் இதனைத் திருவாய்மொழியில் மேலும் ஆறு பாசுரங்களால் அருள்வது:

1. '' நின் தீர்த்த அடிமைக் குற்றேவல்'' (9. 2. 2)
2. ''தொடர்ந்து குற்றேவல் செய்து'' (9-2-3)
3. ''கொடுவினையேனும் பிடிக்க'' (9-2-10)
4. ''உறுவது இது என்று உனக்கு ஆட்பட்டு'' (9-4-4)
5. ''ஆட்கொள்வான் ஒத்து'' (9-6-7)
6. ''நானும் மீளா அடிமைப்பணி செய்யப் புகுந்தேன்'' (9-8-4)

கருத்து—10:-'' நம: ''

''அற்றது பற்று எனில்; உற்றதே வீடு''

இரண்டாவதான கடைசியான வாக்கியத்திலே கடைசியாக உள்ளது.

'நம:' என்னும் மிக மிக முக்கியமான பதம். இதனையே பதினைந்து பாசுரங்கள் கொண்டு விவரிக்கின்றார் ஸ்ரீ நம்மாழ்வார்.

'நம:' என்றால் கைங்கரியத்துக்குத் தடையாக இருப்பதைப் போக்குதலாம். கைங்கரியத்துக்கு விரோதமாக உள்ள அகங்கார மமகாரங்கள் அடியோடு ஒழிய வேண்டுமென்பதை 'நம:' என்னும் பதம் குறிப்பிடுகிறது. 'நம:' பதம்,

1. ''சொரூப விரோதி'' 2. ''உபாய விரோதி'' 3. ''புருஷார்த்த விரோதி'' என்னும் மூன்றையும் கழிக்க வேண்டுமென்பதுடன்,இறைவனுக்குச் செய்யும் கைங்கரியத்

தால் நாம் மகிழ்வதும் நம் உயர்வை வெளிப்படுத்தாலும் அல்லாமல், அவன் உகப்பிற்காகவும், அவன் முக உல்லா சத்துக்காகவுமே கைங்கரியம் செய்யவேணும் என்பதை 'நம:' பதம் முக்கியமாக வலியுறுத்துகின்றன.

"படியாய்க் கிடந்து உன் பவளவாய் காண்பேனே"

இடர் கெடுவதாவது : கைங்கரியத்திற்கு இடர் கெடுவதும் நம் மனதின் உகப்பிற்காகக் கைங்கரியம் புரிதலை எண்ணி வியப்பதும் ஆகும். இலட்சுமணனான இளைய பெருமாளைப் போல் இராமபிரான் திரு உள்ளம் உகப்ப தற்காகவே கைங்கரியம் புரியவேண்டும். அவன் நம்மை அனுபவிக்கின்றான் என்றும், நாம் அனுபவிக்கப்படுகிறோம் என்றும் வேற்றுமை கூடாது.

நம: மந்திரத்தை வெளியிடும் திருவாய்மொழிப் பாசுரங்களைச் சேவிப்போம்!

"கெடும் இடராய எல்லாம் கேசவா வென்ன
நாளும் கொடுவினை செய்யும் கூற்றின் தமர்களும்
குறுககில்லார்,
விடமுடை அரவில்பள்ளி விரும்பினான்
சுரும்பலற்றும், தடமுடை வயல் அனந்தபுர நகர்
புகுதுமின்றே!" (10.2.1)

"புண்ணியம் செய்துநல்ல புனலொடு மலர்கள் தூவி,
எண்ணுமி னெந்தை நாமம், இப்பிறப் பறுக்குமப்பால்
திண்ணம்நாம் அறியச் சொன்னோம் செறிபொழில்
அனந்தபுரத்து
அண்ணலார் கமலபாதம் அணுகுவார் அமரராவார்"
(10.2.5)

"அவாவறச் சூழ்அரியை அயனை அரனை அலற்றி,
அவாவற்று வீடுபெற்ற குருகூர்ச் சடகோபன் சொன்ன,
அவாவி லந்தாதிகளால் இவையா யிரமும், முடிந்த
அவாவி லந்தாதியிப் பத்தறிந் தார்பிறந் தார்
உயர்ந்தே"
(10.10.11)

திருவாய்மொழியில் 'நம:' பதத்தை வெளியிடும் ஏனை பன்னிரண்டு குறிப்புகளாவன :

1. ''துயர் கெடும் கடிது'' (10.1.8)
2. ''கெடும் இடராய'' (10.2.1.)
3. ''எழுமையும் ஏதம் சாரா'' (10.2.2)
4. ''தீரும் நோய் வினைகள் எல்லாம்'' (10.2.3)
5. ''இப்பிறப்பு அறுக்கும்'' (10.2.5)
6. உன்தன் திருஉள்ளம் இடர்கெடும் தோறும் நாங்கள் வியக்க இன்புறிதும் எம் பெண்மை ஆற்றோம்''(10.3.9)
7. ''பிணி ஒன்றும் சாரா பிறவி கொடுத்து ஆளும்'' (10.4.7)
8. ''பிறவித் துயர் கடிந்தோம்'' (10.4.3)
9. ''விண்டே ஒழிந்த வினையாயின எல்லாம்'' (10.4.9)
10. ''அமரா வினைகளே'' (10.5 9)
11. ''கடு நரகம் புகல் ஒழித்த'' (10.4.9)
12. ''பிறவி கெடுத்தேன்'' (10.8.3)
13. ''தடுமாற்ற வினைகள் தவிர்த்தான்'' (10.8.5)
14. ''அந்தி தொழும் சொல்லு'' (10.8.7)
13. ''அவாவற்று வீடு பெற்ற'' (10.10.11)

இவ்விதமாக ''ஸ்ரீமதே நாராயணய நம:'' என்னும் களைசி வாக்கியம் முடிவு பெறுகிறது.

'' 1. ஸ்ரீமந், 2. நாராயண, 3 சரணௌ, 4. சரணம் 5. பிரபத்யே, 6. ஸ்ரீ, 7. மதே, 8. நாராயண 9. ஆய, 10. நம:''

என்னும் இருவாக்கியங்களில் உள்ள ஞான அமுதைத்திரட்டி அருளுகின்றார் ஸ்ரீநம்மாழ்வார் இரு பாசுரத்திலே. அருள்வது:

"அகல கில்லேன் இறையும் என்று அலர்மேல்மங்கை
யுறைமார்பா
நிகரில் புகழாய்! உலக மூன்றுடையாய், என்னை ஆள்வானே
நிகரில் அமரர் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங்
கடத்தானே
புகலொன் றில்லா அடியேன் உன் அடிக்கீழமர்ந்து
புகுந்தேனே" (6-10-11)

"ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி,
வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்
தெழிகுரல் அருவித் திருவேங் கடத்து
எழில் கொள் சோதி எந்தைதந்தை தந்தைக்கே! (3-3-1)

பகுத்தறியும், மனச்சாட்சியும்சாட்சி சொல்ல, தர்க்கமும் மேதாவிலாசமும் மெச்சும்படியாக அமைந்துள்ள இந்த துவய மந்திரமே சிறந்ததாகும்.

1. ஏனைய ஞான நூல்களில் "தேகத்தாலே பேறு" என்றும்
2. திருமந்திரத்தால் "ஆத்மாவாலே" பேறு என்றும்
3. சரம சுலோகத்தால் "அவரால் பேறு" என்றும்

அடைய முடியாத இந்த வழிகளைக் காட்டி நம்மை பயப்படுத்தாமல் சுலபமாக வழியைக் காட்டும் "பிராட்டியாலே பேறு என்று நம்மை மகிழ்விப்பது துவயமேயாகும்.

திரு மந்திரத்தில் பிராட்டியைப் பற்றிய பேச்சு வெளிப் படையாக இல்லை. சரம சுலோகத்திலோ பிராட்டியைப் பற்றிய பேச்சு அணுவளவும் இல்லை. எனவே, பிராட்டியைப் பற்றியே கூறும் இரண்டு வாக்கியங்களால் ஆன துவய மந்திரமே வழி காட்டும் இரு விழிகள்.

ஸ்ரீவைணவத்தின் துவயம் வாழ்க! வெல்க!!

# அண்ணல் அமுதம்!

**இராமாநுச நூற்றந்தாதியின் ஏற்றம்!**

திருவரங்கத்து அமுதனார் அருளிய இராமாநுச நூற்றந்தாதிக்கு, இராமாயணத்திற்கு நிகரான ஒரு பெருமை உண்டு!

நாரணன் விளையாட்டு எல்லாம் நாரத முனிவன் கூற
ஆரணக் கவிதை செய்தார் அறிந்தவான்மீகி! வான்மீகி பகவான் அருளிய ஸ்ரீ ராமாயணத்தை;

"அண்டர்கள் துயரம் தீர அயோத்திமா நகரம் வந்து
தண்ட காரண்யம் சேர்ந்து சமுத்திரம் அணையாகக் கட்டிக்
கொண்டல் ராவணனைமீட்டிக் கோதண்டம் கையில் ஏந்திய பிறகு,
சக்கரவர்த்தித் திருமகனே திருச்செவிசாத்தியருளினார்.

அதாவது, சக்கரவர்த்தித் திருமகனான ஸ்ரீ இராமபிரான், சக்கரவர்த்தியாகப் பட்டாபிஷேகம் கொண்டருளிய பிறகு, தமது திருக்குமாரர்களான லவ-குசர்களின் அமுத கீதத்துடன் திருச்செவி சாற்றியருளினார்!

பெருமாளைப் பற்றியகுலசேகரப் பெருமாளின்பெருமாள் திருமொழியாவது:

"அம்பொன் நெடுமணிமாட அயோத்தி எய்தி, அரசு எய்தி
அகத்தியன்வாய்த் தான் முன் கொன்றான்
தன் பெருந் தொல் கதை கேட்டு மிதிலைச் செல்வி,
உலகு உய்யத் திரு வயிறு வாய்த்த மக்கள்

செம்பவளத்திரள் வாய்த் தன் சரிதை கேட்டான்,
தில்லை நகர் திருச் சித்ர கூடந்தன்னுள்,

எம்பெருமான் தன் சரிதை செவியால், கண்ணால்!
பருகுவோம்! இன் அமுதம் மதியோம்! அன்றே!"

எனவே, ஸ்ரீ ராமாயணம் பாடலுக்குப் பாடல்உண்மை! வரிக்கு வரி உண்மை! சொல்லுக்குச் சொல் உண்மை! எழுத்திற்கு எழுத்தும் உண்மை!

"இருள் இரியச் சுடர் மணிகள் இமைக்கும் நெற்றி
இனத்துத்தி அணிபணம் ஆயிரங்கள் ஆர்ந்த அரவு
அரசப் பெருஞ்சோதி அனந்தனான!

அறிவிற் சிறந்த ஆதி சேடனின் திரு அவதாரமான இராமாநுச முனியே, தமது திரு ஓலக்கத்தில், திரு அரங்கத்து அமுதனாரால் அரங்கேற்றப் பட்டு; எம்பெருமானாரால் ஏற்றுக் கொள்ளப்பட்ட பெருமை உடையது.

எனவே, இராமாநுச நூற்றந்தாதியும்,

| | |
|---|---|
| பாசுரத்திற்குப் பாசுரம் | உண்மை! |
| வரிக்கு வரி | உண்மை! |
| சொல்லுக்குச் சொல் | உண்மை! |
| எழுத்திற்கு எழுத்தும் | உண்மை! |

மேலும் ஆழ்வார்கள் அருளிய நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்துடன் இராமாநுச நூற்றந்தாதியும் சேர்க்கப்

பட்டு தமிழ் மறையாகவே ஏற்றுக் கொள்ளப்பட்டு ஓதப்பட்டு வரும் பெருமையும் உடையது! நாம் வாழ நலிவோம்! ராமாநுச நாமங்களே!

அமுதனாரின் அருள் வாக்கு!

"உலகம் நிறைந்த புகழாளரான உடையவரின் பெருங் கீர்த்தியைப் பாடித்தான் தீரவேண்டுமென்று துடிக்கும் என் பேதை நெஞ்சே! அவரது திருநாமங்களை மட்டிலுமாவது ஒரு நூற்றெட்டு முறை பாசுரங்களில் விடாது சொல்லிப் பரப்பு வாயாக!

பற்பல புலமை உடையவர்களும், அவற்றை வெறுத்துத் தள்ளி இராமாநுசனையல்லவா பற்றுகின்றனர்!

இராமாநுசரும் பலவற்றையும் தள்ளி நம்மாழ்வாரின் திருவடிகளை யல்லவா பற்றுகின்றார்!

நம்மாழ்வாரும், திருவாய்மொழி முதலான தமது அருளிச் செயல்களில் பூமன்னு மாது பொருந்திய மார்பனின் புகழையல்லவா பரவுகின்றார்!

இராமாநுசரின் அடிப்பூச் சூட, பங்கய மாமலர்ப் பாவையைப் போற்றுவோம்!

இராமாநுசரது திருவடித் தாமரைகள் நமது தலைமிசையே எப்போதும் கலந்து பரிமளிக்கும்படிஇருப்பது ஒரு பெரிய பாக்கியமாகும்.

இப்பெரிய பாக்கியம் கிடைப்பதற்காகப் பெரிய சிபாரிசும் பிடிக்க வேணுமே!

இத்தகைய பெரிய சிபாரிசைப் பெரிய பிராட்டியார் தான் புரிந்தருள முடியும்!

பெரிய பிராட்டியார் இத்தகைய பெரிய சிபாரிசை (பரிந்துரையை—புருஷகாரத்தைப்) புரிந்தருள்வாரா?

அதற்காகத்தானே பெரிய பிராட்டியார் பெரிய பெருமாளுடைய பெரிய திருமார்பிலே நித்திய வாசம் புரிந்து கொண்டிருக்கின்றார்.

உடையவரின் உயர்ந்த உபதேசம் யாது?

''நமக்குக் கை, கால்கள், ஏனைய உடல் உறுப்புகள் ஏற்பட்டது எதற்காக?''

ஐம்புலன்கள் வழிக் கரணங்களைச் செலுத்தியதால். மண்ணாசை முதலிய மாயைகளில் சிக்கவைத்து, கௌரவர் களான நூற்றுவரை மாய்வித்தான் மாயவன்!

உண்மையிலேயே, இந்த உறுப்புகளும், உடலும், ஆச்சரியமான குணங்களை உடையவனான கண்ணனாம் மாயனை வணங்குவதற்காகவே அளிக்கப்பட்டுள்ளன.

இதற்கு விளக்கமும் வேண்டுமா?

தமக்கு ஏற்பட்ட உடல் உறுப்புகளைக் கொண்டு, தர்ம புத்திரர் தொடக்கமான பாண்டவர்களும், திரௌபதி யும் என்ன செய்து நமக்கு வழி காட்டினார்கள்!

சரணாகதி செய்து காட்டினார்கள்! எனவே, நாமும் நமது உடல் உறுப்புகளால் மாதவனிடம் சரணாகதியே செய்ய வேண்டுமென்று, நமது மற்ற விபரீத எண்ணங் களுக்கு வரம்பு கட்டியவர் எம்பெருமானார் தான்!

எம்பெருமானின் நிலைகள் ஐந்து!

உடல் மிசை உயிர் எனக் கரந்துள்ள அந்தர்யா மித்துவம்.

நாம் சரணாகதி புரிவதற்கு இயலும்படி இறைவன் எங்குள்ளான்? எவ்விதம் எழுந்தருளியுள்ளான்? அவன் ஐந்து நிலைகளில் எழுந்தருளியுள்ளான்.

அவையே:-

1. அந்தர்யாமித்துவம் 2. பரம் 3. வியூகம் 4. விபவம் 5 அர்ச்சை எனப்படுவனவாகும்.

கண்ணுக்கும், கருத்திற்கும் எட்டாதது காலம்.

காலத்தின் அளவுகளான, நிமிடம் மணியிலும், மணி-நாளிலும், நாள் - மாதத்திலும், மாதம் - ஆண்டிலும், ஆண்டுகள் 60 ஆண்டுகள் கணக்கிலும், இக்கணக்கு யுகம் மற்றும் யுகம் ஊழியிலும் அடங்கியவை. இவை நமது ஊனக் கண்களுக்கு அப்பாற்பட்டவை.

ஊழி முதல்வன் திருமால்.

பிரளய காலத்தில் முழு முதற் கடவுளாக அழியாமல் எழுந்தருளியிருப்பவன். எனவே, எக்காலத்திலும் எழுந்தருளி இருப்பவன்.

ஆண்டுகள் நாள் திங்களாய் நிகழ் காலம் எல்லாம் ஈண்டு பல் யோனிகள் தோறும் பிறந்து உழல்கின்றோம் நாம். எனவே, நாம் இந்த ஊழியிலே மாறி மாறிப் பல பிறப்பும் பிறந்து வினைச் சுழலில் சிக்கிக் கொள்கிறோம்! இந்த வினைச் சுழலினின்றும் நம்மை இராமாநுசர் காப்பாற்றி, ஊழியையும் அடக்கிஆளும் ஊழி முதல்வனையே வணங்க வைத்தார். அந்தர்யாமியாக, புலன்களுக்கு எட்டாமல், ஊழிக் காலமெல்லாம் நீக்கமற நிறைந்தவன் நெடுமால்!

இரண்டாவது பரம் :

பரமபதம் எம்பெருமானுக்குப் பரம போக்கியமானது!

பரமபதத்திற்கு - வைகுண்டத்திற்கு - திரு நாட்டிற்கு-கலங்காப் பெரு நகரத்திற்கு - நலம் அந்தமில்லதோர் நாட்டிற்கு நித்ய விபூதி என்று பெயர் எம்பெருமான் பரமபதத்தில் நித்தியமாக எழுந்தருளியுள்ளான்.

அந்த நித்திய விபூதியாம் பரமபதத்திற்கும் லீலா விபூதியான இப்பூ மண்டலத்திற்கும் இராமாநுசர் அதிகாரியாகையாலே இவ்விரு விபூதிகளுக்கும் உடையவர் என்ற விருது பெற்றார்! எல்லாவற்றைக் காட்டிலும் சிறந்த இருப்பு பரமபத இருப்பு. அப்பரம பதத்தைக் காட்டிலும், உடையவருடைய பாதார விந்தத் திருவடிவாரம் அமுதனாருக்கு அதிக உகப்பைத் தருகிற தாம்

மூன்றாவது வியூகம் - திருப்பாற்கடல்.

இராமாநுச நூற்றந்தாதி- பிரபன்ன காயத்திரி பக்தர்கட்குக் காயத்திரி மந்திரம் போன்று சிறந்தது!

அமுதனார், இராமாநுசரைத் துதிக்கும் முகாந்திரத்தி னாலே, திருமால் எழுந்தருளியுள்ள ஐந்து நிலைகளையும் மங்களாசாசனம் புரிந்தருளுகின்றார்!

மூன்றாவதான வியூக நிலை எனப்படுவது பாற்கடலுள் பையத்துயிலும் நிலை. வியூக நிலையில் உள்ள விஷ்ணுவை வணங்கும் பெரியோர்களுடைய திரு உள்ளத்தில், குடி கொண்டுள்ளார் எம்பெருமானார். இத்தகைய பெரியோர் கள் கூடிக்குலவுகிற இடமே, அமுதனாரும் உகந்து வசிக்கும் இடமாம். இருப்பிடமாம்!

நான்காவதான விபவம் அல்லது அவதாரம்!

(அ) நரசிம்மன்.

தாயின் கருவில் அடங்காமல்,¿தம் கருப்பையில், கை கால் வளராமல், பிறந்து வளர்ந்து, முகம் காட்டாமலும், இரணியன் நினைத்த மாத்திரத்தில் நினைத்த இடத்தில் அவன் நினைத்து, நினைத்துக் கேட்டுப் பெற்ற வரங்களை எல்லாம் தகர்த்து இரணியனும் நினையாத உருவிலே சேவை சாதித்தது நரசிங்க அவதாரமே!

நாராயணனைக் கண்டதும், கண்ட துண்டமாக வெட்டுவதற்காக இடுப்பிலே வாளைத் தொங்கவிட்டிருந்தானாம் இரணியன்.

பாகவதனான பிரகலாதன் பக்கல் இரணியனால் ஏற்பட்ட அபசாரத்தைப் பொறாமல், சிறிய, சிறிய சிங்கத்தின் புகழில் மண்டிக் கிடக்கும் இராமாநுசர் நம் வினைகளைக் களைந்து, "நாராயணாய" என்னும் திருமந்திரார்த்த ஞானத்தையும் அருள்வார்.

(ஆ) பரசுராமர்!

முள்ளை முள்ளால் எடுக்க வேண்டும்! மூடர்களைக் கோடாரி கொண்டே தகர்க்க வேண்டும்! அழித்தலின் சின்னமான,கோடாரிக்கு அப்பனான அனைத்து அழித்தலின் சின்னமாக விளங்கியது சிவ தனுசு! இந்த சிவ தனுசையே உடைத்து விட்ட இராமனின் திருக்கரங்களுக்கு "எந்த வேலை தருவது பொருந்தும்!" என எண்ணினார் பரசுராமர்,

இராமனுடைய திருக்கரங்களில் காத்தலின் சின்னமான நாராயண தனுசைச் சேர்த்து, இராம பிரானுக்கு அவனுடைய காக்கும் கடவுளான ஸ்ரீமந் நாராயண அவதார ரகசியத்தை நினைவூட்டினார்!

இராமனைக் கோதண்ட ராமனாக விளங்க வைத்த பரசுராமன் சாதாரண மனிதரா? அவரைத் "தேவன்' என்றல்லவா துதிக்க வேண்டும்! அவ்விதம் போற்றும் புனிதரே நம் இராமாநுசர்!

(இ) கண்ணன்:

கிருஷ்ணாவதாரத்தின் சிகரமான கட்டம் கீதை உபதேசமே! ஜிதேந்திரியனில் தலைவனாய், ஆஸ்திக அக்ரேசனனாய் "கேசவஸ்ய ஆத்மா!" என்று

கிருஷ்ணனுக்குத் தாரகமாய் இருக்கிற அர்ச்சுனனுக்கு தோஷம் பந்துக்கள் பக்கம் சிநேகமும், காருண்யமும், வதபீதியும்! (ஸ்ரீவசனபூஷணம் 20) இவைகளைக் களைந்தான் கண்ணன், கீதை உபதேசத்தாலே!

இந்தச் செம்மைப் பொருளைப் பாரினர் நன்கு அறிய கீதைக்குப் பாஷ்யம் (வியாக்கியான - விளக்க உரை) அருளியதால் இராமாநுசரும் பாஷ்யகாரர் எனச் சிறப்படைந்தார். "இந்த ஞானம் கிடைத்ததால் அடியேனுக்கு நிகர் யாரோ!'' எனக் குதூகலிக்கின்றார் அமுதனாரும்!

ஐந்தாவது அர்ச்சை:-

திவ்ய தேசத்-திருஆராதனப் பெருமான்; இறைவனிடம் சரணாகதி புரிய வேண்டும். இறைவன் ஐந்து நிலைகளில், அதாவது, அந்தர்யாமித்துவம், 2. பரம் 3. வியூகம், 4 விபவம், 5. அர்ச்சை என்ற நிலைகளில் எழுந்தருளி யுள்ளான்.

1. பூகத ஜலம் போலே (பூமிக்குள் இருக்கிற தண்ணீரைப் போல) அந்தர்யாமித்துவம்.

2. ஆவரண ஜலம். (ஆகாய மண்டலத்தில் உலவும் ஆவி நீரைப்) போல பரத்துவம்.

3. பாற்கடல் போலே (கேள்விப்பட்டும், காண முடியாதது போலது) வியூகம்.

4. பெருக்காறு போலே (வெள்ளப் பிரவாகக் காலத்தவர்கட்கு மட்டும் உதவுவது) விபவம்.

5. அதிலே தேங்கின மடுக்களைப் போலே (பிரவாகம் ஒய்ந்ததும் ஆற்றுப் படுகையிலே தேங்கிக் கிடக்கும் நீர் நிலைகள் போலே) அர்ச்சை.

இது பின்னானோர் வணங்கும் சோதியாகத் திருக்கோயில்களிலும் அடியார்களுடைய திருமாளிகை களிலும் எழுந்தருளியிருக்கும் நிலை!

இறைவன் வழிபடும் திருமேனியுடன் பூ மண்டத்தில் சேவை சாதித்தருளுவது அர்ச்சை நிலையில்தான். இங்கே எம்பெருமானுடைய கருணை முதலிய அருங்குணங்கள் சுடர் விட்டுப் பிரகாசிக்கின்றன. பரமபதத்தில் கருணை முதலிய குணங்களுக்கு அவசியமில்லை. எனவே, இறைவனுடைய கல்யாண குணங்கள் பூர்த்தியடைந் திருப்பது பூமண்டல-அர்ச்சையில் தான். இதனால்தான் ஸ்ரீ பிள்ளைலோகாசாரியாரும், ஸ்ரீவசனபூஷணத் திலே. "பூர்ணம் என்கையாலே எல்லாக் குணங்களும் புஷ்கலங்கள்" (சூத்திரம்39) எனத்திருவுள்ளம் பற்றுகின்றார்

மேலும். "பிரபத்திக்கு அபேக்ஷிதங்களான (சரணா கதிக்குத் தேவையான) சௌலப்யாதிகள் (எளிமை முதலானவை) இருட்டறையில் விளக்குப்போலேபிரகாசிப்பது இங்கே') (அர்ச்சையில்) என்றும்;

"பூர்த்தியையும், சுவாதந்தரியத்தையும் குலைத்துக் கொண்டு (ஒரு தேவையும் ஏற்படாது, தன் வழக்கமாக இருத்தலைக் கைவிட்டு) தன்னை அனாதரிக்கிறவர்களைத் (லட்சியம் செய்யாத உலகத்தவரை) தான் ஆதரித்து (இறைவன் வலியக் காப்பாற்றுதல்) நிற்கிற இடம். (அர்ச்சை) (சூத்திரம் 40, 41)

பெருமாள் கோயில்; யாக மண்டபம்-கச்சி

அர்ச்சைநிலை 108 திவ்ய தேசங்களில் சிறந்து விளங்கு கிறது.

108 திவ்ய தேசங்களிலும், சரணாகதி புரிவதற்கு அத்தியூர் என்னும் கச்சிப் பதிக்கு உச்ச நிலை தருகிறார் வேதாந்த தேசிகர்.

"பக்தி முதலாம் அவற்றுள் பதி எனக்குக் கிட்டாமல்
எத்திசையும் பறந்தோடி இளைத்து விழும் காகம்
போல்
முத்திதரு நகர் ஏழில், முக்கியமாம், கச்சி தன்னில்
அத்திகர் அருளாளர்க்கு அடைக்கலம் நான்
புகுந்தேனே!'
என்கிறார்.

அருளாளனுடைய திருவடிகளுக்கு, 'துயர் அறு சுடர் அடி' என நம்மாழ்வார் சிறப்புத் திருநாமம் சூட்டுகின்றார், அருளாளனான இந்த இமையோர் தலைவன் எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தவனை, தம்மையும் நம்மையும் மீண்டும் பிறவா வண்ணம் காப்பாற்ற வேண்டுகிறார் நம்மாழ்வார்.

இத்தகைய சிறப்பு மிக்க அசுத்தியூரர் கழலிணைகளில் இராமாநுசர் அன்பு பூண்டவர்! இங்ஙனம் அன்பு பூண்டு இராமாநுசர் நமக்குக் கிடைத்தது பாக்கியமல்லவா!

திருமலை-புஷ்ப மண்டபம்:

செடியாய வல்வினைகள் தீர்க்கும் நெடியான். வேங்கடவன்! இவனுக்கும் ஒரு வினை ஏற்பட்டது!

அதாவது, சென்னி ஓங்கு தண் திருவேங்கடமுடையான், 'திருமால்தானா' என்ற ஐயம் ஏற்பட்டு விட்டது!

முதலுக்கே மோசம் வந்தது! இராமாநுசரே இந்த வினையிலிருந்து திருவேங்கடவரைக்காப்பாற்றினார்.

அவனைச் சங்கும் ஆழியும் சூட வைத்தார். இதனால் இவருக்கு 'அப்பனுக்குச் சங்காழி அளித்தருளும் பெருமாள்!' என்ற விருது ஏற்பட்டது!

இப்பேருபகாநந்தத்திற்காகவே, திரு வேங்கடத்தையே விட்டு, எம்பெருமானாருடைய திருவுள்ளத்தையே இருப்பிடமாகக் கொண்டு விட்டான் திருவேங்கடவன்!

அந்த இராமாநுசரே அடியேனது மனதையும் இருப்பிடமாக்கிக் கொண்டாரே எனக் களிக்கின்றார் அமுதனார்.

நாறு நறும் பொழில் மாலிரும் சோலை நம்பிக்கு, நான்
நூறு தடாவில் வெண்ணெய் வாய்நேர்ந்து
பராவி வைத்தேன்;
நூறுதடா நிறைந்த அக்கார அடிசில் சொன்னேன்!
ஏறு திருவுடையான் இன்று வந்து இவை கொள்ளும்
கொலோ!

என்று வாய்ப்பந்தல் போட்டு விட்டாள், பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானவளான ஸ்ரீ ஆண்டாள்!

ஸ்ரீ ஆண்டாள் நிறைவேற்றாத இந்த ஆசையை இராமாநுசர்—அபகீர்த்தி ஏற்படாத வண்ணம் நிறை வேற்றினார். இதனால் மாலிருஞ்சோலைப் பெருமாளுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியில்,அவரும் உடையவரின் உள்ளத்தையே வாசமாக்கிக் கொண்டார். இத்தகைய உடையவரும் அமுதனாரின் உள்ளத்தில் வந்து உகந்தருளினார். பழம் நழுவிப் பாலில் விழவும், அதுவும் நழுவி வாயில் விழுந்த அதிர்ஷ்டம்தான்.

போக மண்டபம்; திசை விளக்காக நிற்கின்ற திருவரங்கம்.

நூற்றெட்டுத் திவ்விய தேசங்களுள் தலையாயது திருவரங்கம்.இது பூலோக வைகுண்ட மல்லவா. ஸ்ரீவைணவ பரிபாஷையிலே "கோயில்" என்றாலே, திருவரங்கம் பெரிய கோயில் தானே! எண்ணல் அளவையில் கணக்கிட்டாலும், "திருவரங்கம்" என்றால் "ஒன்று". பெரிய கோயில் என்றால் என்ன? இரண்டு என்று தானே பொருள்! இத் திருவரங்கனின் செல்வம் சிதைவுற்றிருந்த காலத்தில் இராமாநுச ரல்லவா ஸ்ரீவைணவ உலகின் ஆச்சாரிய பீடத்தை அலங்கரித்துப் பன்னெடும் ஆண்டுகள் 'திருவரங்கம் திருப்பதியே இருப்பதாகப் பெற்றோம்'"

என்று உவந்து நித்யவாசம் புரிந்து தென்னரங்கன் செல்வம் முற்றும் திருத்தி வைத்தருளினார்! இராமாநுசர் பரமபதத்திற்கு எழுந்தருளிய பிறகும் அவரது திருமேனியைத் திருவரங்கனின் 'பிரிவு' ஏற்படா வண்ணம் அவனுடைய பெரிய கோயிலிலல்லவா சந்நிதிப் படுத்தப்பட்டுள்ளது!

இராமாநுசர் திருச் செவிகளில் 'பொன்னரங்கம்' எனப் புகன்றாலே போதுமே! மயலே பெருகி, அம்மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கி விடுவாரே!

வைணவ ஆழ்வார்கள் பதின்மரையும் இணைக்கும் சக்தி எது?

அர்ச்சையில் (வணங்கப்படும் திரு உருவச் சிலை மண்டிக் கிடந்தவர்கள் ஆழ்வார்களே! இதுவே அவர்களுடைய பெருமை! ஒற்றுமை! ஒரே நோக்கு!

ஆழ்வார்கள் திவ்ய சூரிகள்! அவர்களுடைய பாடல்களோ திவ்வியப் பிரபந்தம்! அவர்களால் பாடல் பெற்ற திருத்தலங்களோ "திவ்வியத்தேசங்கள்" தான்! எல்லாம் திவ்வியமாயிற்று ஆழ்வார்களின் திருவாக்காம் அருளிச் செயல்களால்

ஆழ்வார்கள் :

உலகம் ஏத்தும், கண்டியூர், அரங்கம், மெய்யம், கச்சி, பேர் மல்லை என்று மண்டிக் கிடந்து உய்ந்தவர்கள் உய்ய வழி காட்டினவர்கள்! ஆழ்வார்கள் பல விடங்களிலும் (நிலைகளிலும்) பிரபத்தி (சரணாகதி) பண்ணிற்றும், அர்ச்சாவதாரத்திலே! (சூத்—38)

வடமொழியில் அமைந்துள்ள வேதக் கருத்துக்களில் தெளியாத மறை நிலைகள் உள்ளன. அவைகளைத் தெளிய வைப்பது ஆழ்வார்களின் அருளிச் செயல்களே! திருவாய் மொழியின் துணை கொண்டு சூத்திர வாக்கியங்களை வேதவியாசரின் பிரம சூத்திரங்களுக்கு, இராமாநுசர்

விளக்கம் தந்தார், முரண்பாடுகளை அகற்றி ஒருங்கு விடுவர்! என்று பெரும் புகழும் உண்டே.

இத்தகைய ஆழ்வார்களின் அருளிச் செயல்களை ஸ்ரீ வைணவ தேசங்கள், திருவிழாக் காலங்கள், ஏனைய வழி பாடுகளின் போதும் ஓதும்படி ஏற்பாடு செய்தவர் இராமாநுசரே!

ஆழ்வார்கள் பதின்மருடைய கீர்த்திகளையும் இணைத்து, இராமாநுசரின் புகழைப் பாடுகின்றார் திரு வரங்கத்து அமுதனார்!

திருச்செவி சாற்றி உகந்தருளினார் ஸ்ரீஉடையவரும்:

ஒவ்வொரு ஆழ்வார்களுடைய பெருமைகளையும் அவர் களில் ஒவ்வொருவருடைய தனித் தன்மையையும் சிறப்பை யும் வெளியிடுகிறார் அமுதனார்.

ஆழ்வார்களுடைய அவதார காரணங்களையும் பகுத் தறிவின் அடிப்படையில் தர்க்க ரீதியாக விளக்குகின்றார் அமுதனார். பன்னிருவருடன் ஆழ்வார்களின் சங்கிலித் தொடர் அமைவதையும் முற்றுப் பெருவதையும் ஆழமாக வும், அழகாகவும் அமுதனார் விளக்கியருள்கிறார்.

**புறவிருள் அகலப் பொய்கைமுனி ஏற்றும் விளக்கு!**

முதலாழ்வார்கள் மூவர். பொய்கையார், பூதத்தார், பேயார். இவர்கள் முதன்மையானவர்கள். ஸ்ரீ வைணவச் சமயத்தின் முதன்மையான முப்பொருள் விளக்கம் அல்லது தத்துவத் திரயத்தை வெளியிட்டருளினார்கள் தமது திரு வந்தாதிகளிலே!

உலகில் பரவியுள்ள 'அசித்' சொரூபத்தையும் அறிவுத் திருவிளக்கால் விளக்கினார் பொய்கை ஆழ்வார்.

அசித் தருவது புற இருளே.

ஆத்மாவிற்குப் புறத்தே உள்ள இருள் சூழ்ந்த உலகையே விளக்காக அமைத்துக் காட்டினார்.

அசித்தாலான உலகம் சுடராழி ஏந்திய ஸ்ரீமந் நாராயணனுக்குள் அடக்கம் என விளக்கினார். முதல் திருவந்தாதியில் முதல் பாட்டில் பொய்கை ஆழ்வார்!

''வையம் தகளியா வார் கடலே, நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காக—செய்ய
சுடராழியான் அடிக்கே சூட்டினேன் சொல்மாலை!
இடராழி நீங்குகவே'' என்று

பொய்கையார் ஏற்றிய திருவிளக்கைத் தம் திருவுள்ளத்தில் ஏற்றார் இராமாநுசரும்!

**பாசுரம்**

1. புறஇருள் = புறத்தைப் பற்றிய இருள்.
2. மறையின் குருத்து—வடமொழிக் கருத்துக்கள்.

**பொய் நின்ற ஞானம் அகற்றும் பூதத்தார் விளக்கு!**

'சித்' தத்துவத்தை விளக்க ஞானமென்னும் நிறை விளக்கை ஏற்றியவர் பூதத்தாழ்வார். அறைகுறை விளக்கு அல்ல.

இறைஞானம் ஏற்படாமல் இருந்த போது நமது இதயத்தில் அல்லது சித்தினிடம் இருள் இருந்தது. பூதத்தாரின் இரண்டாவது திருவந்தாதியே 'சித்' சொருபத்தை விளக்கும் ஞானத் திருவிளக்கு!

அன்பே தகளியா, ஆர்வமே நெய்யாக!
இன்புறுகு சிந்தை இடுதிரியா—நன்புருகி
ஞானச்சுடர் விளக்கு ஏற்றினேன்! நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான்!

பூதத்தாரின் ஞானமென்னும் நிறைவிளக்கை நெஞ்சத்தில் கொண்டார் உடையவர்!

1. ஆத்ம சொரூபம் : ஞானம், ஆனந்தம். ஞானம் ஏற்பட்டால் ஆனந்தம் ஏற்படும். இவை அடியாக தாஸ்யம்-கைங்கரியம் ஏற்படும்.

2. ஸ்ரீமத் வேதமார்க்கப் பிரதிஷ்டாபநாசாரியர்.

**ஆழிவண்ணனைக் காணும் பேயார்**

முப்பொருள் உண்மையான தத்துவத்திரயத்தில் மூன்றாவது அம்சமான ஈசுவர தத்துவத்தை விளக்குபவர் பேயாழ்வார்!

மன்னிய இருள் : அசித்தைப் பற்றியது!
மன்னிய பேர் இருள் . சித்தைப் பற்றியது!

இவை இரண்டைப் பற்றிய அஞ்ஞானம் ஒழியவும் ஈஸ்வரனைக் காண முடிகிறது!

ஓங்கி உலகளந்த உத்தமனை! திருவிக்கிரமனை!
ஈஸ்வரனைக் காட்டியவரே தமிழ்த் தலைவர்!

''திருக்கண்டேன்! பொன்மேனிகண்டேன் திகழும்
அருக்கன் அணி நிறமும் கண்டேன் —செருக்கிளரும்,
பொன்னாழி கண்டேன்! புரி சங்கம் கைக் கண்டேன்!
என் ஆழி வண்ணன்பால் இன்று!''

ஈஸ்வரனைப் பற்றிய ஞானத்தை அருளிய இத் தமிழ்த் தலைவனின் பொன்னடியைப் போற்றுகின்றார் இராமானுசர்! ஸ்ரீவைணவ சமயத்தின் முதன்மையான கருத்தை அருளியதால், இவர்களே முதலாழ்வார்கள்!

**பழ மறையின் பொருள் அருளும் பாணர்!**

முதலாழ்வார்களான மூவரால் `தத்துவத்திரய ஞானம் ஏற்பட்டதும் வேத சாரமே கிட்டி விட்டது எனலாம்!

இந்த வேத சாரத்தைப் பிழிந்து அருளியவர், திருப்பாண் ஆழ்வார்! வேதாந்த தேசிகரின் திருவாக்கு,

காண்பனவும், உரைப்பனவும் மற்றொன்றிக்
கண்ணனையே கண்டு உரைத்த கடிய காதல்
பாண் பெருமாள் அருள் செய்த பாடல் பத்தும்
பழமறையின்பொருள் என்று பரவுகின்றோம்! அதனால்;
வேண் பெரிய விரிதிரை நீர் வையத்துள்ளே
வேதாந்த ஆரியன் என்று இயம்ப நின்றோம்
நாண் பெதியோம் அல்லோம் நாம் நன்றும், தீதும்
நமக்கு உரைப்பார் (திருப்பாணர்) உளரென்று
நாடுவோமே!

அரங்கனைச் சேவித்து ''மற்றொன்றினைக் காணாவே!' எனக் கண்களை நாட்டியவர்! இப் பாண்பெருமாளின் சரண மலர்களையே இராமாநுசர் தம் சென்னியிற் சூடுவது

**இடம்கொண்ட கீர்த்தி மழிசைக்கு இறைவர்**

மற்றொன்றினைக் காணாவே என்ற மனத்திடம் ஏற்பட்ட பிறகு, அடுத்த பக்திசாரர் உருவிய வாளை உறையிலிடாதவராகிறார்.

மழிசைக்கு இறைவர் மார்தட்டுகின்றார்—

''காணிலும் உருப்பொலார் செவிக்கினாத கீர்த்தியார்
பேணிலும் வரந்தர மிடுக்கிலாத தேவரை
ஆணம் என்று அடைந்து வாழும் ஆதர்காள்!
எம் ஆதிபால்
பேணி நும் பிறப்பு எனும் பிணக்கு அறுக்ககிற்றிரே!''

பேறு தப்பாது என்று மார்பிலே கை வைத்து ஊக்கம் ஊட்டுகின்றார்—

"அத்தனாகி அன்னையாகி ஆளும் எம்பிரானுமாய்
ஒத்துஒவ்வாத பல்பிறப்பு ஒழித்து நம்மை
ஆட்கொள்வான்
முத்தனார் முகுந்தனார் புகுந்து நம்முள் மேவினார்
எத்தினால் இடர்க்கடல் கிடத்தி ஏழை நெஞ்சமே!"

இந்த ஞானத்தை அருளிய திருமழிசையாரின் கீர்த்தி உலகமெங்கும் பரவியது.

இராமாநுசரும் இவரது இணையடிகளில் அடங்கினார்.

**துளபத் தொண்டர் அடிப் பொடியார்**

தொண்டர் அடிப் பொடியாரின் நிலை இன்னும்
ஒருபடி அதிகம்!
மழிசையாரைப் போல் இவர் மறந்தும்
புறந்தொழாதவர்
மட்டுமல்ல! மறந்தும் மதிளரங்கனைத் தவிரப் புறம்
தொழாதவர்!
இதனால், பத்தினி ஆழ்வார் என்றே விருது
பெற்றவர்!
திருவரங்கத்து ஐயன் கழற்கு மாலையும் அணிவார்!

மேலும் செந்தமிழ் மாலையும் அணிவார்!

இவரது தேர்ந்த நிலை:

புலை அறம் ஆகி நின்ற புத்தொடு சமணம் எல்லாம்
கலை அறக்கற்ற மாந்தர் காண்பரோ! கேட்பாரோ தாம்!
தலை அறுப்புண்டும் சாகேன் சத்தியம் காண்மின் ஐயா!
சிலையினால் இலங்கை செற்ற தேவனே தேவன் ஆவான்!

அதனால் இராமாநுசர் தொண்டர் அடிப் பொடி ஆழ்வாரின் திருவடிகளை விரும்புகின்றவர்!

### குலசேகரன் குறை கழலே கூறுவோம்

திரு அரங்கனின் கீர்த்தியைச் திருச்செவி ஏற்ற குலசேகரர், தினே, தினே ரங்க யாத்திரையை மேற் கொண்டார்.

அரங்கனின் மெய்யடியார்களுடன் கூடி ஆடுவதே அவரது பாரிப்பு!

''தூராத மனக்காதல் தொண்டர் தங்கள்
குழாம் குழுமித் திருப்புகழ்கள் பலவும் பாடி
ஆறாத மனக் களிப்போடு அழுத கண்ணீர்
மழைசோர நினைத்து உருகி ஏத்தி, நாளும்
சீரார்ந்த முழவோசைப் பரவை காட்டும்
திருவரங்கத் தரவணையில் பள்ளி கொள்ளும்
போராழி அம்மானைக் கண்டு துள்ளிப்
பூதலத்தில் என்று கொலோ! புரளும் நாளே!

கொல்லி காவலன், கூடல் நாயகன், கோழிக் கோன் குலசேகரரின் கவிகளைப் பாடும் பெரியவர்களுடைய பாதங்களைத் துதிப்பவர் எம்பெருமானார்!

இப்படியான இராமாநுசரை அடைபவர்க்கு வேறு தவமும் வேண்டாம்!

தம் (அரண்) மனையில் இருந்து கொண்டே அரங் கனிடம் ஈடுபடலாம்!

### பதறிப் பல்லாண்டு பாடும் பெரியாழ்வார்!

இராமபிரான் கர தூடணர்களை வதைக்கச் சீதையின் காவலுக்காக இலச்சுமணனை விட்டு விட்டு, தன்னந்தனி யாக ஆயிரக்கணக்கான, இராட்சதர்களை வதைக்கப் புறப் பட்டதை அறிந்ததும், குலசேகராழ்வார் தன் படைகளுடன் புறப்பட்டு விட்டார் உதவி செய்ய!

இராவணன் சீதையைச் சிறை எடுத்துப் போனது அறிந்ததும், மறுபடியும் படைகளுடன் புறப்பட்டார் குலசேகரர்!

இந்தச் சமயம் இராமரே, சீதா இலட்மணருடன் எதிர் வந்து சேவை சாதித்தார். குலசேகரரும் அமைதியும் ஆனந்தமும் அடைந்தார்!

இதே நிலையை அடைந்தவர் பெரியாழ்வாரும்! தம்மைக் காப்பவராகவும், பெருமாளைக் காக்கப்படுபவராகவும் நினைத்துக் கொண்டு, கூடல் (மதுரைப்) பதியின் வானவீதியிலே பறவை ஏறும் பரம புருடனாகக் காட்சியளித்த போது பெருமாளுக்குப் பல்லாண்டு பாடிய பெரியவர்!

ஏழுபிரகாரங்களால் பாதுகாக்கப்பட்ட திருவரங்கக் கருவறையில் கண் வளரும் கருமணியைக் காக்க வேண்டுமென்று யாவருக்கும் எச்சரிப்பார்!

உறகல்! உறகல்! உறகல்! ஒண் சடர் ஆழியே! சங்கே!
அறவெறி நாந்தகவாளே! அழகிய சார்ங்கமே !
தண்டே!
இறவு படாமல் இருந்த எண்மர் லோக பாவீர்காள்!
பறவை யரையா! உறகல்! பள்ளியறைக் குறிக்
கொண்மின்!''

**பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள்!**

தம் தந்தையான பெரியாழ்வார் மணமுடைய மாலையைச் சாற்றிய பெருமாளுடைய திருத்தோள்களுக்கு, மணமாலையும் சாற்றியவள் ஸ்ரீ ஆண்டாள்!

வேதத்தின் உயர்வு குறைந்து உலக முழுவதும் கலிபுருஷனின் காலம் ஓங்கி இருந்த சயயம்.

வேதம் அனைத்துக்கும் வித்தான திருப்பாவையால் உலகை மீண்டும் பக்தி மார்க்கத்தில், திருத்திக் கொணர்ந்தவள் ஸ்ரீ ஆண்டாள்.

ஆண்டாளுடைய அருள் நிரம்பியவர் இராமாநுசர்.

திருவரங்கம் திருவீதிகளில் பிட்சைக்கு எழுந்தருளிய போதும் திருப்பாவை அநுசந்தானம் தான்!

இதனால் திருப்பாவை ஜீயர் என்றே போற்றப் படுபவர்.

பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானவள் தானே ஆண்டாள்.

இதனால் தான் திருவரங்கம் திருப்பதியிலே, நடை பெறும் திருவாய்மொழித் திருவிழாவிலே, எம்பெருமானார் தமது தங்கையான ஆண்டாளின் சார்பிலே திருப்பாவை நாச்சியார் திருமொழி சேவாகால மரியாதைகளைப் பெற்றுக் கொள்கிறார்!

**பொங்கு புகழ் மங்கையர் கோன்:**

திருப்பாவையானாலும், நாச்சியார் திருமொழியானாலும் ஸ்ரீ ஆண்டாள் உடனிருக்கும் பக்தர்களை அழைத்துக் கொண்டு நோன்பு நோற்றாள்; எம்பெருமானை அநுபவித்தாள்!

திருமங்கை மன்னனும், தமது சகாக்களான, நீர்மேல் நடப்பான், நிழலில் ஒதுங்குவான், உயரத் தொங்குவான், தோலா வழக்கன் கோஷ்டியாகவே திவ்ய தேசங்கள் தோறும் சென்று வணங்கினார், அனுபவித்தார்!

பொருள் இருந்த போதும் பொருள் அற்ற போதும் ஸ்ரீ வைணவத் ததியாராதனையைக் கைவிடவில்லை.

இறைவனை எண்ணாதே இருப்பாரை இறைப் பொழுதும் எண்ணார்.

கள்ளார் பொழில் தென்னரங்கன் கமலப்பதங்கள் நெஞ்சில் கொள்ளும், குறையல் பிரானடிக்கீழ் விள்ளாத அன்பர் இராமாநுசர்!

**மதுரகவியின் மாண்பு:**

பரகால நாயகியும், பராங்குச நாயகியும் ஒரே மனம் உடையவர்கள்.

இருவரும் ஆயிரம் பாசுரங்களுக்கு மேல் அருளியவர்கள்:

நம்மாழ்வார் நல்கிய நான் மறைக்கு ஆறங்கம் கூற அவதரித்தவர் ஆலிநாடராம் மங்கை மன்னன்!

வேதத்தின் சாரமே இவைகள். வேதம் தமிழ் செய்த மாறனையும் அவரது சீடரான மதுரகவிகளையும் தம் சிந்தையுள்ளே கொண்டவர் எம்பெருமானார்!

**நம்மாழ்வாரே நாதன்!**

நம்மாழ்வரைப் பற்றி நினைக்க ஆரம்பித்ததுவே தாமதம்! இராமாநுசருக்கு நம்மாழ்வாரிடமும், திருவாய் மொழியினிடமும் கொண்டிருந்த அபார ஈடுபாட்டை வெளியிட்டருள்கின்றார் அமுதனார்!

ஆம்! இராமாநுசருக்குத் திருவாய்மொழிதான் மகா நிதி! தாய்! தந்தை! குரு! ஏன்? எம்பெருமான் கூடத்தான்!

திருவாய்மொழி ஏற்படவில்லையானால் உலகம் வெறும் பாழ்தான்!

பகவத் விஷயம், அதாவது பகவானுடைய திருக் கலியாண குணங்களை விளக்கும் திருவாய்மொழிதான் எல்லாமும் நமக்கு!

ஆழ்வார்களுடைய தென்மொழித் திவ்வியப் பிரபந்தங் களை, உடையவர், திவ்விய தேசங்களில் வேதமாகவே ஓதும் முறையை ஏற்படுத்த வில்லையானால், உலகம் இவைகளை இழந்திருக்குமே!

நாம்மாழ்வார் இராமாநுசரைப் பவிஷ்யத் (வருங்கால-எதிர் கால) ஆசாரியராகக் காட்டியருளிய பாசுரம்:

"பொலிக! பொலிக! பொலிக!
போயிற்று வல் உயிர்ச் சாபம்!
நலியும் நரகமும் நைந்த?
நமனுக்கு இங்கு யாதொன்றும் இல்லை!
கலியும் கெடும் கண்டு கொண்மின்!
கடல் வண்ணன் பூதங்கள் மண்மேல்
மலியப் புகுந்து இசை பாடி
ஆடி உழிதரக் கண்டோம்!"

நம்மாழ்வாரின் திருவாய்மொழி எப்படி எப்படி எல்லாம் விளங்குகின்றது நமது இராமாநுசருக்கு!

"உறுபெறும் செல்வமும்! தந்தையும்!
தாயும்! உயர் குருவும்
வெறிதரு பூமகள் நாதனும்
மாறன் விளங்கிய சீர்
நெறிதரும் செந்தமிழ் ஆரணமே
என்று இந்நீண் நிலத்தோர்
அறிதர நின்ற, இராமாநுசன்
எனக்கு ஆர் அமுதே!"

**ஆழ்வார் அளிக்கும் அமுது அர்த்த பஞ்சகமே!**

ஆழ்வார் என்றாலே நம்மாழ்வார்தான்! இவரே உடல்; ஏனைய ஆழ்வார்கள் இவரது உடலின் உறுப்புகள்-அதாவது திருவாய்மொழியில் உள்ள திரண்ட கருத்துக்களை ஒவ்வொரு ஆழ்வாரும் பங்கிட்டுப் பாடி இருக்கிறார்கள்!

நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழியின் ஏற்றம் என்ன?

அர்த்த பஞ்சக ஞானம் அளிப்பதே!

பட்டர் அருள்வது:

"மிக்க இறை நிலையும் (1) மெய்யாம் உயிர் நிலையும்
(2) தக்க நெறியும் (3) தடையாகித்—தொக்கியலும்
ஊழ்வினையும், (4) வாழ்வினையும் (5) ஓதும் குருகையர்
யாழினிசை வேதத்து இயல்! [கோன்

திருவரங்கத்து அமுதனார், தமது நூற்றந்தாதி மூலமாக இராமாநுசரது புகழாகிய அமுதத்தையும், ஸ்ரீவைணவ தரிசனத்தின் அடிப்படைக் கொள்கையான அர்த்த பஞ்சக அமுதத்தையும் குழைத்து அருளுகின்றார்!

அளவுக்கு மீறினாலும் இந்த அமுதம் அமுதமே!

**1. மிக்க இறை நிலை**

நமக்கு மோட்சம் கிடைக்குமென்றால் மகிழ்ச்சி அடைகிறோம்,

"நரகம் தான் முடிவு" என்று ஏற்பட்டு விட்டால் வருந்துகின்றோம்.

இந்த நிலை ஏற்படுவது எப்படி? நம் முயற்சியால் தான் நாம் வாழ்கின்றோம்; பலன்களை அடைகிறோம் என்று எண்ணினால்.

'ஆச்சாரிய கடாட்சத்தினால் நாம் வாழ்கின்றோம்' என்ற நம்பிக்கையும் பணிவும் ஏற்பட்டு விட்டால், மோட்சமும் நரகமும் கூட நம் உணர்ச்சிகளைப் பாதிக்காது!

ஆச்சாரியரான இராமாநுசர் இதை எப்படிச் செய்கின்றார்?

அசித்தால் ஆன, அனாதி காலமாக உள்ள இந்த உலகத்தில் பொருந்தி வாழ்கின்ற எல்லா ஆத்மாக்களுக்கும், ரட்சகனானவன், ஆச்சரியமான குணங்களை உடைய திருமால்தான் என்று மிக்க இறைநிலையைப் போதித்தருள்கின்றார்;

"சுய அபிமானத்தாலே ஈசுவர அபிமானத்தைக் குலைத்துக் கொண்ட இவனுக்கு, (ஆத்மாவுக்கு) ஆசார்ய அபிமானம் ஒழியக் கதி இல்லை!'' என்று வடக்குத் திரு வீதிப் பிள்ளை பலகாலும் அருளிச் செய்யக் கேட்டிருக்கை யாய் இருக்கும்!'' (ஸ்ரீவசனபூஷணம். 446)

''இன்பம் தரும் பெருவீடு வந்து எய்தில் என்!
எண்ணிறந்த
துன்பம் தரும் நிரயம் பல சூழில் என்! தொல் உலகில்
மன்பல் உயிர்கட்கு இறையவன் மாயன் எனமொழிந்த
அன்பன் அனகன் இராமாநுசன் என்னை
ஆண்டனனே!

மிக்க இறைநிலையே; ரட்சகத்தன்மையே! இறைவனது ரட்சகத்துவம் :

ஏன் இந்த ஆத்மாக்களை இறைவன் ரட்சிக்க வேணும்?

இது அவனுடைய கடமையா?

உயிர் வேறு உடல் வேறானாலும் உடலில் பொருந்தி யுள்ளது உயிர்! உயிரை ஒட்டியுள்ளது உடல்!

உயிர் உடலை ரட்சிப்பது போல! உடலுக்கு உற்ற துன்பத்தை உயிர் விலக்குவது போல!

ஆத்துமாக்கள் இறைவனுக்கு உடலைப் போல அமைந் துள்ளன எனவே இந்த உடலை ரட்சிப்பது உயிராகிய இறைவனே! சித், அசித்தாலான உலகத்தை உடலாகக் கொண்டவன் ஈஸ்வரனாகிய ஸ்ரீமந் நாராயணன்!

இந்த சரீரி—சரீர சம்பந்தத்தைத் தெளிவாகவும், சிறப்பித்தும் காட்டியருளியவர் இராமாநுசரே!

''பரமாத்மா ஒருவனே உண்மை'' எனும் அத்துவைதத்தையும் ''பரமாத்மா ஜீவாத்மா இரண்டு தான் உண்மை'' எனும் துவைதத்தையும் இணைத்து, அசித்,சித், ஈஸ்வரன் இவை மூன்றும் உண்மையே! ஈஸ்வரன் அசித்தையும்,சித்தையும் உடலாகக் கொண்டு, அவைகளைக் காக்கும் உயிராக உள்ளான் என்று விசிஷ்டாத்துவைத, ஸ்ரீ வைணவ சமய மேன்மையை வடமொழி—தமிழ் மொழி மறைகளால் வெளியிட்டவர் இராமாநுசரே!

இது ஒரு அற்புதம் தானே! ஞானக் கலக்கத்தை விலக்கி செம்மை படுத்துவது தானே அற்புதம்!

இந்த ஞானத்தால் நம்மை ஆட்கொண்டார் இராமாநுசர்!

**2. மெய்யாம் உயிர் நிலை :**

இறைவனின் குணம் ரட்சகத்துவம்—காப்பாற்றல்.

ஆன்மாவின் குணம் — சேஷத்துவம்— இறைவனுக்கு அடிமைப்பட்டு இருத்தல்.

''அகம்'' (ஆன்மா) அர்த்தத்திற்கு ஞான ஆனந்தங்கள் தடஸ்தம்—(புறத் தோற்றங்கள்) என்னும் படி தாஸ்யமிறே (அடிமைப்பட்டிருத்தலே) அந்தரங்க நிரூபகம் (உண்மை—உள்—நிலை) என்பதுவே உண்மை நிலை.

(ஸ்ரீ வசனபூஷணம் 74(

அதாவது அரங்கனாகிய இறைவனது மலரடிக்கு, ஆள் உற்றவராக இருந்து வாழ்தல்.

இப்படி வாழ்பவர்களே, மதிக்கத்தக்கவர்கள்! நாம் விரும்பி அடையத்தக்கவர்கள்!

இப்படியாக வாழ்ந்தருளிய பெரியோர்களை, ஆத்ம உறவினர்களாகத் துணை கொண்டு வாழ்ந்து காட்டியவர் இராமாநுசர்!

இறைவனுக்கு அடிமைப் பட்டிருத்தலாகிய சேஷத்துவ ஞானத்தைப் பெற்ற பிறகு, வேறு ஒரு அஞ்ஞானம் நம் மதிப்பிற்கு இலக்காகுமா!

> "மற்றொரு பேறு மதியாது, அரங்கன் மலர் அடிக்கு ஆள்
> உற்றவரே தனக்கு உற்றவராகக் கொள்ளும் உத்தமனை
> நற்றவர் போற்றும் இராமாநுசனை இந்நானிலத்தே
> பெற்றனன், பெற்ற பின்மற்று அறியேன் ஒரு
> பேதைமையே!"

மிக்க இறை நிலை தனிப்பட்டது. மெய்யாம் உயிர் நிலையும் தனிப்பட்டது. காப்பாற்றுகிற இறைவன் வேறு! காப்பாற்றப்படுகிற ஆன்மா வேறு! ஆட்சி செய்கின்ற இறைவன் வேறு! அடிமை செய்கின்ற ஆன்மா வேறு!

எனவே, இவை இரண்டும் தனித்த தன்மை உடையவை; ஒன்றில் ஒன்று கலந்து விடாது.

இதற்கு மாறாக ஆன்மா இறைவனிடம் இரண்டறக் கலந்து விடுகிறது என்று வேதப் பொருளைத் தவறாகச் சொல்லுவது எல்லாம் பேதமைதான்!

இந்த வினைகளை எல்லாம் தமது தர்க்க ஞானத்தாலே வென்றவர் இராமாநுசர்.

சித், அசித், ஈஸ்வரன் என்ற மூலப் பொருள்கள்மூன்று;
இவை மூன்றுமே சத்தியமும், நித்தியமும்.
சித், அசித் என்பவை ஈஸ்வரனுக்குச் சரீரங்கள்:

எம்பெருமானுடைய திருவருளாலே கரும வினைகள் ஒழிந்து பரமபதத்தில் இறைவனுக்குக் குற்றேவல் புரிவதும் பாடுவதுமே மோட்சம்!"

இவைகளை நிலை நாட்டி வெற்றி பெற்றார் உடையவர்!

**தக்க நெறி!**

''சர்வ தர்மாந் பரித்ய ஜயமாம் ஏகம் சரணம் விரஜ!''

என்ற சரம சுலோகத்தாலே நாம் கடைப்பிடிக்கத் தக்க நெறியை கீதையில் போதித்தவன், பஞ்ச பாண்டவர் களின் பிரதிநிதியான, அர்ச்சுனனுடைய தேர்த்தட்டிலே எழுந்தருளிய கண்ணன்!

தன்னையே சரணாகப் பற்ற வேண்டுமென்று, அர்ச்சுனன் மூலமாக உலகிற்குக் காட்டித் தந்தான்!

''கையும், உழவுகோலும்! பிடித்த சிறு வாய்க் கயிறும்; சேனாதூளி தூசரிதமான திருக்குழலும்! தேருக்குக் கீழே நாற்றின திருவடிகளுமாய்;

நிற்கின்ற சாரத்திய வேஷத்தை 'மாம்'
என்று காட்டுகிறான்!''

கீதையிலே இறைவன் உபதேசித்தருளிய—நாம் அடையத் தக்க நெறியை—எளிதில் நாம் தெரிந்து கொள்ளும் வகை யில் எம்பெருமானார் கீதா பாஷ்யம் அருளிச் செய்தார்.

'எம்பெருமானாருடைய இந்தப் பரம கருணைக்குத் தோற்று, அவரைப் பணியும் நல்லோர்களையும் பணி கின்றன எனது ஆவியும் (ஆன்மாவும்) சிந்தையுமே (மனமும்)' என்று உள்ளம் கரைகின்றார் அமுதனார்!

**4. தடையாகித் தொக்கியலும் ஊழ்வினை!**

தக்க நெறியை நாம் அடைவதற்கு உலக ஆசைகளே நமக்கும தடை!

இத்தடைகள் ஒன்றை ஒன்று பின்னிக்கிடக்கின்றன. ஒன்று மற்றையதற்கு வழிகாட்டி! பாதை! சருக்குமரம்.

இத்தடைகள் விதி வசத்தாலே நம்மை வந்து அடைகின்றன.

இத்தடைகளிலே வீழ்ந்து, தவிக்கின்ற நம் ஆவியை (ஆன்மாவை)க் கை கொடுத்துத் தூக்கிக் காப்பாற்றி அருள்பவர் இராமாநுசர்! எப்படிக் காப்பாற்றுகின்றார்?

லட்சுமி காந்தனாகிய திருமால்தான் நமக்கும் எல்லோருக்கும் நாயகன்;

அவன் நம்முடைய எல்லா பாபங்களையும் அகற்றித் தூய்மை அளிப்பவன், என்று உபதேசிக்கின்றார்.

"போய பிழையும், புகு தருவான் நின்றனவும்
தீயினில் தூசாகுமே"

காமம், குரோதம், மத, மாச்சாரியங்களுக்கு உபலட்சணம்,

வாழ்வினை! வைணவர்தம் பேறு!

பூரண வாழ்வு, புகழுடைய வாழ்வு இவையே நான்கு சேர்ந்ததாகும். இவையே அறம், பொருள், இன்பம், வீடு; இவையே புருஷார்த்தங்களாம். அதாவது புருஷர்கள் (பெண்களையும் உள்ளிட்ட சொல்) இவ்விடத்தில் மனிதர்கள் அடையத் தக்கன.

இன்பம் என்ற சொல்லுக்குச் சிற்றின்பம் என்று தவறாகப் பொருள் கொள்ளக் கூடாது.

மூவடி மண்தா என வாமனன் மாவலியைக் கேட்ட போது, அவன் குறுகிய பொருள் கொண்டது போல,

"இன்பம் என்றால் அது பேரின்பமே! அது கண்ணனிடம் செலுத்தும் பேர் இன்பமே யாகும்;" என்பது இராமாநுசரின் திருவுள்ளம்.

நமது இன்பத்தை (காமத்தைக்) கண்ணனிடம்செலுத்தினால் அது பேரின்பமாகப் பரிணமிக்கிறது.

இப்படிக் கண்ணனை அடையப்பெறும் பேரின்பத்திற்கு உதவுபவைதான் அறம், பொருள், வீடு என்று விளக்கம் அருள்கின்றார் இராமாநுசர்.

கண்ணன் மீதுள்ள காமத்தினால் அல்லது அவன் மீது காமம் ஏற்படுவதற்கு அறம் செய்ய வேணும், பொருள் ஈட்ட வேணும், வீட்டை (பரமபதத்தை) அடைய விரும்ப வேண்டும்.

இவ்விதமாக இன்பம் என்ற சொல்லுக்கு உயர்ந்த பொருளைக் காட்டும் போது, ஓங்கி உலகளந்த உத்தமனாக திரிவிக்ரமனாக சேவை தருகிறார்! எம்பெருமானார்!

வைணவர் திரு வாழ்வு என்ன வென்றால், இறைவனை அடையும் பேரின்பத்திற்காகவே அறம், பொருள், வீட்டைப் பயன்படுத்த வேண்டும்.

**எம்பெருமானாரால் ஏற்பட்ட ஏற்றங்கள்;**

எம்பெருமானாருடைய வைபவத்தாலே ஏற்பட்ட நன்மைகள் யாவை?

தென் குருகூரில் திருவவதரித்து ஞானத்தை வாரி வழங்கிய வள்ளலான நம்மாழ்வாருடைய, அர்த்த பஞ்சக அறிவை வெளியிடும் திருவாய் மொழியாம் தமிழ் மறை வாழ்வு பெற்றது.

அதனால் பிறரால் வெகு சிரமப்பட்டு நாட்ட முயன்ற நீச மதங்கள் செத்து ஒழிந்தன.

அதனால் ஸ்ரீமந்நாராயணனே, பரம் பொருள் என்று காட்ட ஏற்பட்ட வேதம் உற்ற துணை கிடைத்தது எனக் களிப்புற்றது.

# ஆண்டவன் கட்டளை ஆறு!

தரிசனம் என்றால் மதம். ஸ்ரீவைணவ தரிசனம் என்று நிலவிய மதத்தை, ஸ்ரீ ராமாநுஜர் இவ் உலகில் 125 ஆண்டு கள் எழுந்தருளியிருந்து, மகோன்னதமாக விளங்கச் செய் தார். இந்த மகா உபகாரத்திற்காக' உகப்பு மேலிட்டுத் திருவரங்கத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ ரங்கநாதப் பெருமாள், ஸ்ரீ வைணவ மதத்திற்கு ராமாநுஜ தரிசனம் எனகிற மறு பெயர் சூட்டி மகிழ்ந்தாராம்! பெரிய பெருமாளின் நியமனம் இது.

எம்பெருமானார் தரிசனம் என்றே இதற்கு
நம்பெருமாள் பேரிட்டு நாட்டி வைத்தார் —
அம்புவியோர்
இந்தத் தரிசனத்தை எம்பெருமானார் வளர்த்த
அந்தச் செயல் அறிகைக்கா!

கேள்விச் செல்வ ரசிகர், திருவரங்கர், ஓர் ஆண்டுக் காலம் தம் உற்சவங்களையும் நிறுத்திக் கொண்டு, ஸ்ரீ மணவாள மாமுனிகள் திருவாக்கின் நயத்தில் லயித்துத் திருவாய்மொழியை அநுபவித்துக் களித்தார்! ஸ்ரீராமாநுஜரின் மறு அவதாரம் ஸ்ரீமணவாள மாமுனிகள். ஏனவே. ஸ்ரீ ரங்கநாதர், ஸ்ரீ ராமாநுஜர் இவர்களின் பரமகிருபைக்கு இலக்கான ஸ்ரீ மணவாள மாமுனிகள் திருவாக்கால், இது ராமாநுஜ தரிசனம் என்ற உண்மை உறுதியிடப்பட்டுள்ளது மிகப்பொறுத்தமாகும்!

ஸ்ரீ வைணவ மதத்திற்கு ஸ்ரீராமாநுஜர் புரிந்த மகோன்னத சேவை என்ன? ஸ்ரீ வைணவ மதத்தின் மிக உயரிய கொள்கைகளைத் திரட்டி உலகறியச் செய்து, பிரகாசப் படுத்திப் பரப்பியதுதான்! ஆழ்வார்கள் காலத் திற்குப் பிறகு, பொது ஜனத் தொடர்புக் குறைவால் மங்க ஆரம்பித்த ஸ்ரீவைணவ மதம், சூரிய சோதியாகச் சுடர்விட ஆரம்பித்தது ஸ்ரீராமாநுஜர் காலத்தில்தான்.

ராமாநுஜரது வாழ்க்கையில் மூன்று நிகழ்ச்சிகளைப் பற்றித் தெரிந்து கொள்ளவேணும்.

I. திருவல்லிக்கேணி திவ்ய தேசத்தில் தேர் விடுங்கோனின் திரு முன்பு இயற்றப்பட்ட யாகப் பிரார்த்தனைகளின் பலனாக ஸ்ரீ ஆதிகேசவப்பெருமாள் எழுந்தருளியுள்ள ஸ்ரீ பெரும்பூதூரில் திருவவதரித்த மிகு ஞானச் சிறு குழவிக்கு திருவேங்கடமுடையானின் திருமலையிலிருந்து எழுந்தருளிய திருமலை நம்பிகள் ராமானுஜன் என்று திருப் பெயர் சூட்டினார். ராமாநுஜரும் கல்வி கற்பதற்காக அத்திகிரி அருளாளன் எழுந்தருளியுள்ள கச்சி நகர் சேர்ந்தார். யாது காரணத்தாலோ ஸ்ரீவைணவரான ராமாநுஜர் விஜயராகவப்பெருமாள் எழுந்தருளியுள்ள திருப்புட்குழியில் அத்வைதியான யாதவப் பிரகாசரை அடுத்து வேதம் பயின்றார்! குருவுக் கும் சீடருக்கும் வியாக்கியான விஷயங்களில் விரோதக் கருத்துகள் தோன்றலாயின. குரு, சீடரைக் கங்கையில் ஆழ்த்தி உள்ளூரத் திட்டமிட்டு வடநாட்டு யாத்திரையாக அழைத்துப் போனார்! வழியில் உண்மையைத் தெரிந்து கொண்டு விலகிக் கொண்டார் ராமாநுஜர், சிக்கிக் கொண்ட காட்டிலிருந்து வெளிவர முயன்றார். கல்வித் தாபத்துடன் கச்சிநாடி வந்த ராமாநுஜர் அத்வைத வேதாந்தக் காட்டிலிருந்து வெளிவர முயன்றது போல.

ராமாநுஜரது அவதி கண்டு இரங்கி, அவரைக் காப்பாற்றத் திருவுள்ளம் பற்றியது புள்ளையூரும் அத்தியூரான் தான்! திருவல்லிக்கேணி, திருப்பெரும்பூதூர்,

திருமலை, திருப்புட்குழி சம்பந்தங்களிலிருந்தும் பயன் ஏற்படவில்லை! பெருந்தேவித் தாயாரும் தானும், வேடுவக் கோலத்துடன் வந்து வெம்கானப் பயம் நீக்கி தான் எழுந்தருளியுள்ள புனிதப் புண்ய கோடி விமானம் காட்டி, கச்சி நகர்க்கே ராமானுஜரை மீட்டுவந்தான் அத்திகிரியான்! ஜகதாசாரியராக விளங்க விருக்கும் ராமானுஜரைக் காட்டு மிருகங்களுக்குப் பலியாகாமலும், பசியால் வாடி உயிர் துறக்காமலும் காத்து, மீட்டு வந்த அத்திகிரியானை அருளாளன் என்று தானே போற்ற வேண்டும்! அருளாளன் அருள் பாலிக்கவில்லையானால் ஸ்ரீ வைணவ உலகம் அடைந்திருக்கக் கூடிய நஷ்டத்தைக் கணக்கிட முடியுமா? ராமானுஜருக்கு அருள் புரிந்து, அருளாளன் ஆனான் அத்தியூரான்! அதே சமயத்தில் ஸ்ரீ வைணவ தரிசனத்திற்கே அருள் புரிந்து வரதன் (பேர் அருளாளன்) ஆனான்!

II. காட்டிலிருந்து கச்சி வந்தடைந்த ராமானுஜரை மறுபடியும் சேர்த்துக் கொண்டார் யாதவப்பிரகாசர்! அத்வைதக் காட்டிலிருந்து வெளியேறினாலும் அதன் சிறு புதர்களிடையில் சிக்காமலிருக்க வேண்டியதாயிற்று!

கல்வி உணவு பெற கச்சிப்பதி வந்த ராமானுஜரைக் காட்டில் உணவாகிவிடாமல் காப்பாற்றியதுடன் கல்வி உணவளிக்க வேண்டிய கடமை ஏற்பட்டு விட்டது கச்சி நகர்ப் பெருமாளுக்கு!

குருவை மிஞ்சிய சீடரான ராமானுஜரின் பெருமை திருவரங்கம் எட்டிற்று! ஸ்ரீ வைணவ தரிசனத்தின் ஆசாரியராக எழுந்தருளியிருந்த ஸ்ரீ ஆளவந்தார் ராமானுஜரைக் கண்டு மகிழ கச்சி நகர் வந்தார்.

யாதவ பிரகாசரின் கோஷ்டியில் சேர்ந்து, பேர் அருளாளன் சந்நிதிக்கெழுந்தருளினார் ராமானுஜர். அந்த சமயம், தன் திருவடிவாரத்தில் தொழுது கொண் டிருக்கும் ராமானுஜரைத் தகுந்த குருவிடம் காட்டித்தர விரும்பினான் பேரருளாளன். யாதவப் பிரகாசருடன் தன்

திருவடி வாரத்தில் எழுந்தருளிய ராமாநுஜரைப் பேரருளாளன் ஆளவந்தாருக்குக் காட்டித் தந்தான்!

ஆளவந்தார் அந்தக் கணமே ராமாநுஜரைத் தம் சீடராக மனதில் ஏற்றுக் கொண்டதோடன்றி, தனக்குப் பிறகு ஸ்ரீ வைணவ தரிசனத்தின் ஆசாரியாக நியமிக்கத் திருவுள்ளம் கொண்டு "ஆம் முதல்வன்" என்று கடாட்சித்தார்! இங்ஙனமாக, ஆளவந்தாருக்குச் சீடரை அருளினான் வரதன்; ஸ்ரீ வைணவ தரிசனத்திற்கு ஆசாரியனை அருளினான் வரதராஜன்!

III. திருவரங்கம் திரும்பிய ஆளவந்தார், ராமாநுஜரைத் தரிசனத்தின் தலைவராக்கத் திருவுள்ளங்கொண்டு. அவரை அழைத்துவர பெரிய நம்பிகளைக் கச்சிப் பதிக்கு அனுப்பினார். ஆனால், ராமாநுஜர் ஸ்ரீரங்கம் சேருமுன் ஆளவந்தார் வைகுண்ட பதவி அடைந்தார்! மனங்கலங்கிய ராமாநுஜர், ஆளவந்தார் திருவுள்ளப்படி ஸ்ரீ வைணவ தரிசனத்திற்குச் சேவை செய்வதாக சபதம் பூண்டு கச்சி நகர்க்கே திரும்பி வந்துவிட்டார். திருக்கச்சி நம்பிகளை ஆசானாக ஏற்றுக் கொண்டு யாதவப் பிரகாசரின் உறவையும் முடித்துக் கொண்டார்!

ஆளவந்தாருக்குப் பிறகு ஸ்ரீ வைணவதரிசனத்திற்கு ஆசாரியனாக எழுந்தருள வேண்டியிருந்த நிலைமையில், ராமாநுஜரது உள்ளம் ஆழ்ந்து சிந்தித்த வண்ணம் இருந்திருக்க வேண்டும்! கடல் அளவாய் திசை எட்டின் உள்ளும் கதயிருளேமிடைலிரு காலம் இராமநுஜர் காலம் சைவ மதத்தைச் சேர்ந்திருந்த சோழ அரசன், வைணவ மதத்தை கடுமையாகத் தாக்கிக் கொண்டிருந்தான். மைசூர் ராஜ்யத்திலும், மன்னன் ஜைன சமணர்களின் சீடனாகி விட்டான் திருமலையில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் திருமால் தானா என்பதிலும் சந்தேகம் ஏற்பட்டு, ஸ்ரீ வைணவப் பொலிவு குறைந்திருந்தது. கன்னடதேசத்தில் அத்வைதியான யக்ஞ மூர்த்தியை வெல்வாறில்லை. அருளாளனின்

கச்சிப்பிராந்தியத்திலும் அத்வைதியான யாதவப் பிரகாசனை அடுத்தே கல்வி பயில நேர்ந்தது. இச்சூழ்நிலையில் அப்பெரும் பொறுப்பை நிர்வகித்து, ஸ்ரீ வைணவ தரிசனத்தை மேன்மேலும் வளம் பெறச் செய்யும் உபாயங்களைப் பற்றியே ராமாநுஜர் எண்ணி வாழ்ந்திருக்க வேண்டும். சொல்லார் தமிழொரு மூன்றும் சுருதிகள் நான்கும், எல்லையில்லா அறநெறியாவும் தெரிந்து எண்ணருஞ்சீர் நல்லார் பரவும் இராமநுசராகத் திகழ்ந்த இவர், ஸ்ரீ வைணவதரிசனத்தின் பெருங்கொள்கைகளைத் திரட்டிச் சுருக்கி மக்களுக்கு எளிய முறையில் உபதேசிக்க எண்ணியிருக்க வேண்டும்! அப்படியாகத் தனக்குள் திட்டங்களையும், தேர்வுகளையும் வகுத்துக் கொண்டு. அவைகளை இறைவனிடம் சமர்ப்பித்து அவன் ஆசியைப் பெற விரும்பியிருக்க வேண்டும். அதுசமயம், பேசும் பெருமாளாகத் திகழ்ந்தவன் பேரருளாளனே! அதுவும், தன் குருவான திருக்கச்சி நம்பிகளிடமல்லவா பேசுகிறான்! எனவே, தன் திருவுள்ளத்தில் உருவெடுத்தவைகளை, பேர் அருளாளனின் துயர் அறு சுடரடிகளில் சமர்ப்பிக்க விரும்பியிருக்கின்றார்!

தன் குருவான திருக்கச்சி நம்பிகளிடம், பேர் அருளாளன் பேசிக்களிக்கும் சமயம், பேர் அருளாளனிடம் தன் விண்ணப்பங்களை வெளியிட்டு ஆசிகோரும்படி திருக்கச்சி நம்பிகளை வேண்டினார் ராமாநுஜர்! முதலில் காட்டில் அபாயத்திலிருந்து ராமாநுஜரைக் காப்பாற்றி ஆண்டான் அருளாளன்! பிறகு அத்வைதக் காட்டிலிருந்து காப்பாற்ற, யாதவப்பிரகாசர் உறவை நீக்கி, ஆளவந்தார் திருவடி சம்பந்தத்தை ஏற்படுத்தி ஆண்டான் வரதராஜன்! ஸ்ரீவைணவ ஆசார்ய பீடத்தை அலங்கரிக்கவிருக்கும் தருணம், ராமாநுஜர் திரு உள்ளத்தில் திரண்டு எழுந்து தீர்க்கதரிசன விண்ணப்பங்களை ஆமோதித்து ஏற்கவிருக்கும் தலைமையை ஆசீர்வதித்து ஆண்டருளின அருளாளனை ஆண்டவன் என்று வாழ்த்துவது தான் சாலப்பொருந்தும்!

ராமாநுஜரது விண்ணப்பங்கள், அருளாளனால் அசீர்வ தித்து அங்கிகரிக்கப்பட்டதும், அவை அருளாளனான ஆண் டவன் கட்டளைகள் ஆயின! அவ்வாண்டவன் கட்டளைகள் ஆறு; அவைகளைக் கவனிப்போம்!

## கட்டளைகள் ஆறு!

1. முழு முதற்கடவுள் யார் என்பது வேதத்தில் தெளி வாக நிர்ணயம் செய்யப்படவில்லை. ஆழ்வார்கள் பாடலில் திருமாலின் பரதத்துவம் உறுதி செய்யப்பட்டது. நாரா யணனே முழு முதற் கடவுள் என்பதை உலகம் அறியச் செய்யவேண்டியது முதற் கடமையாக அமைந்தது "நாமே பரதத்துவம்'' என்று அருளாளனும் அருளி, அதைப் பரப்பு வதையே முதற் கட்டளையாக விடுத்தான்!

திருமாலின் பரத்வத்தை நிலைநாட்டி யருளினார் ராமாநுஜர் என்பதை திருவரங்கத்து அமுதனார் வெளி யிடுகிறார்:

ஓதிய வேதத்தின் உட் பொருளாய், அதன் உச்சி மிக்க
சோதியை,நாதன் என அறியாது உழல்கின்ற தொண்டர்
பேதமை தீர்த்த நம் இராமாநுசன்! 85

மருள் சுரந்துஆகம வாதியர் கூறும் அவப் பொருளாம்
இருள் சுரந்து, எய்த்த உலகு இருள் நீங்க, தன் ஈண்டியசீர்
அருள் சுரந்து, எல்லா உயிர்கட்கும் நாதன் அரங்கன்
என்னும்
பொருள் சுரந்தான் எம் இராமானுசன்! மிக்க
புண்ணியனே! 91

இறைஞ்சப்படும் பரன் ஈசன் அரங்கன் என்று இவ்வுலகத்து
அறஞ் செப்பும் அண்ணல் இராமநுசன் 47

இதனால்,
பொன்னரங்கமெனில் மயலே பெருகும் இராமானுசனாகத்
திகழ்ந்தார்! 35

2. முழு முதற் கடவுளான விஷ்ணுவைவழிபடும் சமயமே வைணவம், ஸ்ரீ வைணவ தரிசனம் உலகை அசித் (உயிரற்ற பொருள்), சித் (உயிர் அல்லது ஆன்மா), ஈச்வரன் (கடவுள்) என்ற முப்பிரிவாகக் காண்கின்றது. எனினும் சித், அசித், கூறுகள், ஈச்வரனுக்கு உடலாக அமைந்துள்ளன சித்தும் அசித்தும் ஈச்வரனுக்கு உடலாக அமைந்திருப்பினும், தங்கள் தனித்தன்மையுடன் தான் இருக்கும் ஆன்மாவாகிய, சித், ஈச்வரனோடு இரண்டறக் கலந்து விடுவதில்லை. அங்ஙனமே, சித்தாகிய ஆன்மாவின் கட்டளைக்கு உட்பட்டு அசித்தாகிய உடல் இயங்கினாலும், உடலும் உயிரும் வேவ்வேறானவை; ஒன்றல்ல. இங்ஙனம் சித், அசித், ஈச்வரன் என்னும் தத்துவங்கள் வேறு வேறு என்றும் அசித், சித் இவைகளை உடலாகக் கொண்டு அவைகளின் உயிர் போன்று இறைவன் திகழ்கின்றான் என்பதே விசிஷ்டாத் வைத ஸ்ரீ வைணவ தரிசனமாகும்,

இம்மூன்று தத்துவங்களையும் ஒன்று என்று உரைப்பது தவறாகையால், பரத்வ தெய்வமான திருமாலின் சமயக் கொள்கைகளான இவற்றையே நிலை நாட்ட வேண்டு மென்பது இரண்டாவது கட்டளையாக அமைந்தது!

உயிர்கள் வேறு, இறைவன் வேறு, இறைவன் உயிர் கட்கு உயிராம்! இவைகளை நிலை நாட்டியதே ராமாநுஜரின் வாழ்க்கை விவரமாகும்!

''மன்னு பல்லுயிர் கட்கு இறையவன் மாயன்''
என மொழிந்த அன்பன், அனகன், இராமாநுசன் 30

என்று போற்றுகிறார் அமுதனார்!

மேலும்,

மாமலராள்
நாயகன், எல்லா உயிர் கட்கும் நாதன், அரங்கன்
என்னும்,
தூயவன், (என்றான்) தீதில் இராமாநுசன் தொல்
அருள் சுரந்தே! 42

இப்படிக் கல்லாமல் அறியாமையால்;

பேதையர், வேதப் பொருள் இது என்று உன்னி, பிரமம் நன்று என்று
ஓதி மற்றெல்லா உயிரும் அஃது என்று உயிர்கள் மெய்விட்டு
ஆதிப் பரனோடு ஒன்றாம் என்று சொல்லும் அவ் அல்லல் எல்லாம்
வாதில் வென்றான்! எம் இராமாநுசன் மெய் மதிக்கடலே! 58

என்று குதூகலிக்கின்றார் அமுதனார்! இந்த ஆச்சரியத்தால் மேலும் பேசுகிறார் அமுதனார்!

அற்புதன்! செம்மை இராமாநுசன் என்னை ஆளவந்த
கற்பகம்! கற்றவர் காமுறு சீலன்! கருதரிய
பற் பல் உயிர்களும், பல் உலகு யாவும் பரனது என்னும்
நற்பொருள் தன்னை இந்நானிலத்தே வந்துநாட்டினனே!53

3. உலகையும் உயிரையும் உடலாகக் கொண்டு இலகும் பரம் பொருளான நாராயணனை அடையும் வழியையே அடுத்தபடி மக்கள் தெரிந்து கொள்ள வேணும். பிரபத்தி அல்லது சரணாகதி மார்க்கமே சிறந்தது என்று முடிவு கட்டினார் ராமாநுசர். அப்படியே உபதேசிக்கலாம் என்று கட்டளையிட்டான் அருளாளனும்!

பூங்கமலத்
தேன் நதிபாய் வயல் தென்னரங்கன் கழல் சென்னிவைத்துத்
தான் அதில் மன்னும் இராமாநுசன் இத்தலத்துதித்ததால்49

என்ன ஆயிற்று என்பதை அறிவிக்கிறார் அமுதனார்!

ஆனது செம்மை அறநெறி! பொய்ம்மை அறு சமயம் போனது!
பொன்றி இறந்தது வெங்கலி! சரணாகதி மார்க்கத்தில் திளைத்ததால்!

மற்றொரு பேறு மதியாது, அரங்கன் மலர் அடிக்கு ஆள்
உற்றவரே தனக்கு உற்றவராக் கொள்ளும் உத்தமனை
நல்தவர் போற்றும் இராமாநுசனை இந்நானிலத்தே
பெற்றனன்; பெற்ற பின் மற்றறியேன் ஒரு பேதமையே! 57

என எக்களிக்கின்றனர் அமுதனார்!

கீதோபதேசத்தில், கடைசியாகக் கண்ணன் வெளியிட்ட சுலபமான மார்க்கம் பிரபத்தி மார்க்கமே! இச் செழும் பொருளைத் தெளிவாக எடுத்துரைத்தார் இராமாநுசர்! இதற்கு உருகிய அமுதனார் பாடுகிறார்:

ஆரெனுக்கு நிகர் சொல்லில்? மாயன் அன்று ஐவர் தெய்வத்
தேரினில் செப்பிய கீதையின் செம்மைப் பொருள் தெரியப்
பாரினில் சொன்ன இராமாநுசனைப் பணியும் நல்லோர்
சீரினில் சென்று பணிந்தது என் ஆவியும் சிந்தையுமே!

4. இவ்வண்ணமாகத் (1) திருமாலின் பரத்துவத்தை அறிந்து, (2) அவனுக்கு உடலான நாம் (3) அவனிட்ட வழக்காக சரணாகதி மார்க்கத்தைக் கடைப்பிடித்து, (4) ஞானம் அநுஷ்டானங்களில் சிறந்த ஆசாரியனை அடைந்து ஒழுகினால் (5) வைகுந்தப் பேற்றை வாழ்க்கையின் முடிவில் அடைவது திண்ணம் என மார்பிலே கை வைத்திருக்கலாம் அன்றோ! வாழ்ந்தால், கடைசியாக மரண அவஸ்தையில் உள்ளபோதும் இறைவனை சரணாகதி அடைய வேண்டுமென்ற அவசியம் இல்லை என்ற கருத்து வெண்ணெயைக் கடைந்து எடுத்தார் இராமாநுசர் வேத சாஸ்திரக் கடலிலே! மரண தசையில் இருக்கும்போது மனதும் வசம் நில்லாது! இக்காரணத்தால் அந்திம ஸ்மிருதி அவசியம் என்று ஏற்பட்டால் இறைவனடி சேர்வது கை கூடாது. எனவே ஞாபகம் தவறும் மரணகாலத்திலும் எம்பெருமானையே நினைத்தே மரிக்க வேண்டும் என்ற எண்ணத்தை ஏற்க வேண்டியதில்லை என்று உறுதிப்

படுத்தினார் இராமாநுஜர். அமுதனார் இதனை அருள்கிறார்.

கருத்தில் புகுந்து, உள்ளில் கள்ளம் கழற்றிக் கருதரிய
வருத்தத்தினால் மிக வஞ்சித்து நீ இந்த மண்ணகத்தே
திருத்தித் திருமகள் கேள்வனுக்கு ஆக்கியபின் என்நெஞ்சில்
பொருத்தப் படாது எம் இராமாநுச மற்றோர்
பொய்ப் பொருளே!

இதையும் ஏற்று ஆசிர்வதித்தான் அருளாளனும்!

5. வைகுந்தப் பதவி யடைவதற்காக இம்மண்ணுலகில் தனி முயற்சிகள் செய்ய வேண்டியதில்லை, சரணாகதி மார்க்கத்தைக் கடைப்பிடித்து வாழ்ந்தால் சகல கர்மங்களும் தொலைந்து போகும்; சகல பாபங்களின் பலன்களையும் அநுபவித்து முடிக்க வேண்டியதில்லை. இந்த வாழ்வின் முடிவிலேயே, சரணாகதிசெய்தவனுக்கு வைகுந்த வாழ்வு தானாகவே சித்திக்கும்!

சரணமாகும் தன தாள் அடைந்தார்க் கெல்லாம்,
மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான்;
அரண் அமைந்த மதில் சூழ் திருக்கண்ணபுரத்
தரணியாளன், தனதன்பர்க்கு அன்பாகுமே!

என்பது நம்மாழ்வர் திருவாக்காகும்! நம்மாழ்வாரின் திரு உள்ளத்தைப் போற்றி, உலகுக்கு இக்கருத்துகளை வழங்கினார் ராமாநுசர். அமுதனார் இதனை விவரிக்கின்றார்:

கூறும் சமயங்கள் ஆறும் குலையக் குவலயத்தே
மாறன் பணித்த மறை உணர்ந்தோனை, மதியிலியேன்
தேறும்படி என் மனம் புகுந்தானைத் திசையனைத்தும்
ஏறும் குணனை; இராமாநுசனை இறைஞ்சினமே' 46

இடர் மிகுந்த வாழ்வின் முடிவில், சரணாகதி மார்க்கத்தால் இறைவனடி எய்துவது எளிது என்று இராமாநுசர் நிர்ணயம் செய்ததையும் இயம்புகிறார் அமுதனார்.

மயக்கும் இருவினை வல்லியில் பூண்டு|மதிமயங்கித்
துயக்கும் பிறவியில் தோன்றிய என்னைத்|துயர் அகற்றி
உயக்கொண்டு நல்கும் இராமாநுச! 101

கர்மம் தொலைந்தால்தான் பேறுஎன்று பிறர் கூறுவது ஸ்ரீ வைணவ தரிசனத்திற்கு ஒப்புதல் ஆகாது. பிரபத்தி மார்க்கத்தில் நிற்பவனுக்கு கர்மமே கிடையாது. சஞ்சித, பிராரப்த கர்மங்கள்கூட தொலைந்தே போகும்! வாழ்வின் முடிவில் வைகுந்தப் பெருநாடு அருளப்படும்: இதற்காகத் தனி முயற்சிகள் வேண்டா. இதனை விவரிக்கின்றார் அமுதனார்!

சீர் கொண்டு பேர் அறம் செய்து, நல்வீடு செறிதும் என்னும்
பார் கொண்ட மேன்மையர் கூட்டன் அல்லேன்;
உன்பதயுகமாம்
ஏர் கொண்ட வீட்டை எளிதில் எய்துவன் உன்னுடைய
கார் கொண்ட வண்மை இராமாநுச! இது கண்டு
கொள்ளே! 83

ஆன்மாக்களுக்கு மிக உபகாரமான இப்பெரும் கொள்கையை விளக்கியருளினார் ராமாநுசர். 'தானாக வைகுந்தம் தரும்!' எம்பெருமானது கருணையைவிட மிகவும் அதிகமான இவரது கருணையால், இராமாநுசர் எம்பெருமானார் என்று போற்றப்பட்டார். இப்படியாக வேதப் பொருள்களை விரித்துரைத்த இராமாநுசர் பெருமையை அமுதனார் போற்றுகிறார்.

உண்ணின்று உயிர்களுக்கு உற்றனவே செய்து,
அவர்க்கு உயவே
பண்ணும் பரனும் பரிவிலனாம்படி, பல்லுயிர்க்கும்
விண்ணின் தலை நின்று வீடளிப்பான் எம் இராமாநுசன்
மண்ணின் தலத்து உதித்து மறை நாலும்
வளர்த்தனனே! 95

'மரணமானால் வைகுந்தம்!' என்னும் அரிய கொள்கையை ஆசீர்வதித்து அருளாளனும் கட்டளை

யிட்டருளினான். இந்நில வுலகப் பேறுகளையும், வைகுந்தவான் உலகின் பேறுகளையும் அளிக்கும் அதிகாரம் பெற்று, அதனால் உடையவர் ஆனார் ராமாநுசர்!

6. வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிவது மிக்க பலன் தரும்.

ஞானம் அனுட்டானம் இவை நன்றாகவே உடைய
னான குருவை அடைந்தக் கால்
தேனார் கமலத் திருமகள் கொழுநன்
தானே வைகுந்தம் தரும்! அல்லவா!

இப்பெருங் கொள்கைகளை அநுஷ்டிக்கவும் உபதேசிக்கவும் தீர்மானித்த இராமாநுசர், அதற்கு உபகாரமான ஆசாரியனையும் நாடுகிறார்! அது சமயம் ஆளவந்தார் பரமபதித்து விட்டார்- அவருடைய தூதுவராக கச்சிக்கு ராமநுஜரிடம்எழுந்தருளியவர்பெரியநம்பிகளே!ஆளவந்தார் இயற்றிய சுலோகங்களை ஓதி, ராமாநுஜரின் உள்ளத்தைக் கவர்ந்தவர் பெரிய நம்பிகள்! மதுராந்தகம் ஏரிக்கரையில் ராமாநுஜருக்குத் திரு விலச்சனை செய்தருளியவரும் பெரிய நம்பிகளே! எனவே, பெரிய நம்பிகளை ஆசார்யனாக வரித்தது ராமாநுஜரின் திருவுள்ளம். அங்கீகரித்து ஆசிபுரிந்தான் அருளாளனும்!

'உந்து மதகளிற்றன்' பாசுரத்தை சேவித்த முடிவில், அத்துழாயைக் கண்ட ராமாநுஜர், அத்துழாய்தான் நப்பின்னைப்பிராட்டி எனக்கொண்டு அடியில் வீழ்ந்து வணங்கியதின் உண்மையைப் பெரிய நம்பிகளே விளக்க முடிந்தது.

ராமாநுஜரின் சீடரான, கூரத்தாழ்வானுடன், ஆசாரியனான பெரிய நம்பிகளும் சோழ ராஜ சபைக்கு இராமாநுஜருக்குப் பதிலாக எழுந்தருளித் தம் கண்களைத் தாமே பிடுங்கி இழந்தனர், சிவபரத்வத்தை ஒப்புக்கொள்ள மறுத்து! அந்தக் கண் புண் காரணமாகவே வயோதிகரான

பெரிய நம்பிகள் பரமபதம் அடைந்தார்! தம் சீடருக்காகக் கண்களையும் அதனால் உயிரையுமே பறி கொடுத்த ஆசாரியன் என்ற பெருமை, பெரிய நம்பிகளுக்கு உரியது! அருளாளன் அருளுடன் ராமாநுஜரையே சீடராகப் பெறும் பெருமையும் பெரிய நம்பிகளுக்குக் கிடைத்தது!

ஆசாரியன் துணைகொண்டே ஆண்டவனை வழிபடல் நலம் என்று சீரிய ஸ்ரீவைணவர் கொள்கையினையே இது குறிக்கின்றது! இது பற்றி ருசியான ஒரு சேதியும் உள்ளது. ராமாநுஜர் வேண்டுகோளின்படி திருக்கச்சி நம்பிகள் அருளாளரை, ''ராமாநுஜருக்கு மோட்சம் உண்டா'' என்று வினவ, அருளாளரும் ''அவர் ஆசாரியனை அடுத்துள்ளதால் உண்டு!'' என்றாராம்! தமக்கு மோட்சம் உண்டா எனத் திருக்கச்சிநம்பிகள் வினவவும், அருளாளர் நம்பிகள் இதுவரை ஆசாரியனைத் துணைகொள்ளாததால் அவருக்கு மோட்சம் இல்லை என்றே கூறி விட்டாராம்! பிறகு திருக்கச்சி நம்பிகளும் ஆசாரியனை அடைந்து ஒழுகியதாக வரலாறு கூறுகிறது!

பேரருளாளரின் இப்பெருங் கட்டளைகளைத் தமிழில் பாடல் வடிவமாக அமைந்துள்ளதையும் காணலாம்! ஆசிரியர் பெயர் கிடைக்க வில்லை!

செப்புகின்ற பரதத்துவம் யானே! எனச் செப்புதி! வேறு
ஒப்பிலாதாய்! தரிசனமும் பேதம் என்றே உரைத்திடுக!
தப்பிலாத உபாயமதுவும் பிரபத்தி என்றே சாற்றிடுக!
அப்ப! புகல்க! இவையன்றி நினைவும் வேண்டா
அந்திமத்தில்!

இந்தச் சரீராவதனந் தன்னில் இசையும் மோட்சமது!
அந்தமிலா குணத்தினனுக்கு ஆசாரியனும் பெரிய நம்பி!
சிந்தையுள்ளே இவை எல்லாம் தெளிந்து நோக்கி
இளையாழ்வான்
முந்த நினைந்தான் இவை! இவையே மொழிந்து வருக!
போ!'' என்றான்.

கச்சிப்பதிநாதன், நம்பிகள் மூலம் அருளிய இக்கட்டளைகள், வடமொழிச் சுலோகமாக அமைந்துள்ளது லோகப் பிரசித்தம்!

ஆகையால், ஞானக்கடலான ராமாநுஜர், ஸ்ரீவைணவ சித்தாந்தத்தில் சந்தேகம் தெளியாமல் அச்சந்தேகங்களுக்கு விளக்கம் கேட்டார் என்பது பொறுந்தாது. நம்தரிசனக் கொள்கைகள் சந்தேகத்துக்கிடமானவை அல்லவே

நாம் ஒன்றை நினைக்கையில் பல்லியும் கொட்டினால், நாம் நினைத்தது சரி என்று நிச்சயம் செய்து கொள்கின்றோம்! ராமாநுஜர் தம் திரு உள்ளத்தில் நினைத்தவைகளேயே, பேரருளாளனும் ஆசீர்வதித்து ஆமோதித்தான் என்பதைக் காட்டவே ஒரு நினைவுக் குறியும் எழுந்துள்ளது. அதாவது, திருக்கச்சியில் அத்திகிரி என்னும் திருமலையில் அமைந்துள்ள வையமாளிகை திருச்சுற்றில் வட கிழக்கு மூலையில் உள்ள கச்சிவாய்த்தான் மண்டபத்தில் அருளாளர் இவ்வார்த்தைகளை அருளினாராம். இதைக் குறிக்க இம்மண்டபத்தை அடுத்து மேல் தளவரிசையில் "வைய மாளிகைப்பல்லி" என்று சிலை வடிவில் அமைக்கப்பட்டுள்ளதை இன்றும் காணலாம்!

மேற்கூறிய பாடலில் உள்ள கடைசி இரண்டு அடிகளாலும், ராமாநுஜர் முதலில் நினைத்தவைகளையே அருளாளப் பெருமாள் ஆமோதித்தார் என்பதை வலியுறுத்துகின்றது!

அருளாளன் பெருங்கருணையால் வெளிப்பட்ட இந்த ஆறு கட்டளைகள்தான் ஸ்ரீ வைணவ தரிசனத்தின் சாரம். இந்த ஆறுகட்டளைகளான ஸ்ரீ வைணவ தரிசன சாரத்தை ராமாநுஜருக்கு அளித்து வரதனும் அருளாளனுமான இறைவன், அவர் மூலமாக உலகுக்கெல்லாம் அருளி வரதராசனும், பேர் அருளாளனும் ஆனான்! அத்தியூரான்

கழலிணை அடைந்த இராமாநுசர் கழலிணைகளை நாம் பணிந்தால் பல காலம், பல பிறவிகளாக அடைந்த கஷ்டங்கள் நீங்கிப் பெறும் பேற்றைப் பெறலாம் என்று உரைக்கின்றார் அமுதனார்!

ஆண்டுகள் நாள் திங்களாய் நிகழ்காலம் எல்லாம்மனமே!
ஈண்டு பல் யோனிகள் தோறு உழல்வோம்! இன்று ஓர்
எண்ணின்றியே
காண் தகு தோள் அண்ணல் தென் அத்தியூரா கழல்
இணைக் கீழ்
பூண்ட அன்பாளன்; இராமாநுசனைப் பொருந்தினமே! 33

இந்த ஆறு ஆண்டவன் கட்டளைகளையும் ஆசாரியனான இராமாநுசர் கட்டளைகள் என்றே கொள்ள வேணும். அவருடைய பிரார்த்தனையினால் வெளிப் பட்டவையன்றோ இந்த ஆறு வார்த்தைகள்! ராமாநுசர் இப்படியாக உண்மை நல் ஞானம் உரைத்த மகா உபகாரத்தைப் போற்றுகிறார் அமுதனார்!

வண்மையினாலும் தன் மாதகவாலும் மதி புரையும்
தண்மையினாலும் இத்தரணியோர்கட்குத் தான் சரணாய்
உண்மை நல் ஞானம் உரைத்த இராமாநுசனை உன்னும்
திண்மையல்லால் எனக்கில்லை மற்றோர் நிலை
தேர்ந்திடிலே!

இப்படியாக இராமாநுஜரது பெருஞ் சேவையால்பட்ட பலன்களை விவரித்து இன்புறுகிறார் அமுதனார்!

நாட்டிய நீசச் சமயங்கள் மாண்டன! நாரணனைக்
காட்டிய வேதம் களிப்புற்றது! தென்குருகை வள்ளல்
வாட்டமிலா வண் தமிழ் மறை வாழ்ந்தது! மண் உலகில்
ஈட்டிய சீலத்து இராமாநுசன் தன் இயல்வு கண்டே!

இந்தக் கட்டளைகள் ஆறையும் கடைப்பிடித்து வாழ்வதே நம்பெருங் கடமையாகும்!

# 'இலட்சுமண முனி'

"இலட்சுமண முனி என்னும் தலைப்பில் விண்ணப்பிக்க நியமித்தருள வேண்டுகிறேன்."

இராமாநுசன், இராமாநுச முனி என்பவை அதிகமாய் வழக்கிலுள்ள திருநாமங்கள், திக்கு நிறை புகழ் பெற்றவை! 'திருவரங்கத்து அமுதனார்', 'இராமாநுசமுனி' என மங்களாசாசனம் செய்தருள்கிறார்!

பேரியல் நெஞ்சே! அடிபணிந்தேன் உன்னை

பேய்ப் பிறவிப்

பூரிய ரோடு உள்ள சுற்றம் புலற்றிப் பொரு

வழுஞ்சீர்

ஆரியன் செம்மை இராமாநுச முனிக்கு அன்பு செய்யும்

சீரிய பேறுடையார் அடிக்கீழ் என்னைச் சேர்த்ததற்கே,

அமுதனாருக்குத் திருப்தி இல்லை! எல்லோரும் முனி, இராமாநுசரும் முனியா! எனவே,

இராமாநுசனை "இராமாநுச மாமுனி" என்று மங்களாசாசனம் செய்தருள்கிறார்!

தாழ்வு ஒன்று இல்லா மறை தாழ்ந்து, தல முழுதும் கலியே

ஆள்கின்ற நாள் வந்து அளித்தவன் காண்மின்!

அறங்கர் மௌலி

சூழ்கின்ற மாலையைச் சூடிக் கொடுத்தவள் தொல்
அருளால்
வாழ்கின்ற வள்ளல்! இராமாநுசன் என்னும் மாமுனியே!

மேலும் சிந்திக்கலாம்:

''இராமாநுசன்'' என்பது 'இராமனுக்கு அநுசன்' என்று பொருள்படும்.

அதாவது ''இராமனுக்கு இளையவன்'' அல்லது ''இராமனுக்குத் தம்பி'' எனப் பொருள்படும்.

அப்படியானால், 'இ ரா ம ா நு ச ன்' என்னும் சொற்றொடர், இராமன் தம்பியாகிய பரதாழ்வானையும் குறிக்கும்; சத்ருக்னாழ்வானையும் குறிக்கும்;

''இலட்சுமணனையே குறிக்கும்'' எனக் கூறுவதற்கில்லை.

''தேவுடைய மீனமாய், ஆமையாய், ஏனமாய் அரியாய்க்
குறளாம்
மூவுருவில் இராமனாய்க் கண்ணனாய்க் கற்கியாய்
முடிப்பான் கோயில்,
சேவலொடு பெடையன்னம் செங்கமல மலரேறி ஊசலாடி
பூவணைமேல் துதைந்தெழு செம்பொடியாடி விளையாடும்
புனலரங்கமே''
—பெரியாழ்வார்—4-9-9

என்ற கணக்கில், 'இராமன்' என்பது பலராமன் என்றும் பொருள் கொண்டு பலராமன் தம்பியாகிய கண்ணனையும் குறிக்கலாம். எனவே, 'இராமாநுசன்' என்ற திருநாமம் ஈர் அரசு பட்ட திருநாமமே! ஆனால், ''இலட்சுமணன்'' என்ற திரு நாமம் இலட்சுமணனையே குறிக்கும்.

இராமாநுச முனியை ஈர் அரசு படாத இலட்சுமணத் திரு நாமத்துடன் சேர்த்து 'இலட்சுமண முனி' என்றும் போற்றுகிறது ஸ்ரீ வைணவ உலகம். அபூர்வமான இந்த 961 ஆம் இராமாநுசரது அவதார ஆண்டிலே அபூர்வ

திருநாமான "இலட்சுமண முனி" என்னும் தலைப்பில் விண்ணப்பிக்க விரும்புகின்றேன்.

## ஸ்ரீ அமுத அமுதம்

பிங்கள ஆண்டு— மங்கள ஆண்டு; எம்பெருமானார் திருவவதரித்த ஆண்டு. இது 961 வது திரு நட்சத்திரம்.

அடியேனும் பிங்கள சித்திரையில் பிறக்கும் பேறு பெற்றவன்.

எனவே, இன்றைய விண்ணப்பத்தை இராமாநுசர் விஷய ாக அமைக்கலாம். அமுத அமுதம், என்பது மகுடம்
அமுத : திருவரங்கத்து அமுதனார் அருளிய

அமுதம் : இராமாநுச நூற்றந்தாதி.

நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் இது சேர்க்கப்பட்டு, அநுசந்தானத்தில் உள்ளது. இத்தகைய பெருமை இராமாநுசருக்கே உரியது.

இராமாநுச நூற்றந்தாதியின் ஏற்றம்!

திருவரங்கத்து அமுதனாரால்அருளிய நூற்றந்தாதிக்கு, இராமாயணத்திற்கு நிகரான ஒரு பெருமை உண்டு. ஸ்ரீ வால்மிகி பகவான் அருளிய ஸ்ரீ இராமாயணத்தை 'அண்டர்கள் துயரம் திர அயோத்திமா நகரம் வந்து, தண்டகாரணியம் சேர்ந்து சமுத்திரமீதணையாகக் கட்டிக் கொண்ட லிராவணனை மீட்டுக் கோதண்டம் கையில் ஏந்தும் சக்ரவர்த்தித் திருமகனே திருச்செவி சாற்றி யருளினார். அதாவது சக்ரவர்த்தித் திருமகனான ஸ்ரீ இராமபிரான் சக்ரவர்த்தியாகவே பட்டாபிஷேகம் கொண்டருளிய பிறகு தமது திருக்குமாரர்களின் திருவாக்காலே திருச்செவி சாற்றியருளினார். குலசேகரப் பெருமாளின் பெருமாள் திரு மொழித் திருவாக்கு இது.

அப்பொனெடு மணிமாட அயோத்தி எய்தி,

அரசெய்தி அகத்தியன் வாய்த்தான் முன் சொன்றான்.

தன்பெருந் தொல் கதைகேட்டு; மிதிலைச் செல்வி
உலகுய்யத் திருவயிறு வாய்த்தமக்கள்
செம்பவளத் திரள்வாய்த்தன் சரிதை கேட்டான்
தில்லை நகர்த் திருச்சித்ர கூடந்தன்னுள்
எம்பெருமான் தன் சரிதை செவியால் கண்ணால்
பருகுவோம்! இன்னமுதம் மதியோம் அன்றே!

எனவே, ஸ்ரீராமாயணம் பாடலுக்குப் பாடல், வரிக்குவரி, சொல்லுக்குச் சொல், எழுத்துக்கு எழுத்து உண்மை!

திருவரங்கத்து அமுதனார் அருளிய இராமாநுச நூற்றந்தாதியும்

இலட்சுமண முனியே, அறிவிற் சிறந்த ஆதி சேடனின் அவதாரமான இராமாநுச முனியே, 'இருள் இரியச் சுடர் மணிகள் இமைக்கும் நெற்றி இனத்துத்தி அணிபணம் ஆயிரங்கள் ஆர்ந்த அரவு அரசப் பெருஞ்சோதி' அனந்தனின் அம்சமான இலட்சுமணமுனியே திருச்செவி சாற்றியருளிய பெருமை உடையது. இராமாநுசரின் திருஓலக்கத்தில் அரங்கேற்றப்பட்டு, அவராலேயே அங்கீகரித்து ஏற்றுக் கொள்ளப்பட்ட பெருமை உடையது.

எனவே, இராமாநுச நூற்றந்தாதியும் பாடலுக்குப் பாடல்; வரிக்கு வரி, சொல்லுக்குச் சொல், எழுத்துக்கு எழுத்து உண்மை!

இராமபிரான் வட நாட்டிலிருந்து தென்னாட்டுக்கு எழுந்தருளினார். எம்பெருமானாரும் அப்படியே தென்னாட்டிலிருந்து டில்லி காஷ்மீரம் வரையிலான வட நாட்டுக்கு எழுந்தருளினார். நாலாயிரதிவ்யப் பிரபந்தத்துள் சேர்க்கப்பட்டு நித்யானநுசந்தானத்திலும் உள்ளது இராமாநுச நூற்றந்தாதியின் சிறப்பேயாகும்.

நாம் சேவிக்கும் இந்த இராமாநுச நூற்றந்தாதியே ஒரு அநுசன் தான்!

திருவரங்கத்து அமுதனார் முதலில் உடையவர் நியமனம் பெறாமல் அவர் விஷயமாகத் தாமாகவே ஒரு நூற்றந்தாதியை இயற்றி அதை உடையவர் திருமுன்பு சமர்ப்பித்தாராம்! உடையவர், அதைப் பார்வையிட்டுக் கடாட்சித்தருளவில்லை; அங்கீகரிக்க வில்லை எனினும் திருவரங்கத்து அமுதனாரின் திருவுள்ளப்பாரிப்பை மெச்சி தம் (கல்யாண குணங்கள்) விஷயமாக இயற்றப்படும் நூலில் தம்மை உய்வித்த ஆழ்வார்களைப் பற்றி இருக்க வேண்டிய சிறப்புக் கருத்துக்களைக் குறிப்பிட்டு அதன்படி நூலையும் இயற்றும்படி நியமித்தருளினாராம். உடையவர் தம் விஷயமாக அந்தாதி பாட நியமித்தருளி யதும் திருவரங்கத்து அமுதனாரும் அகம் குழைந்து விட்டார்! நெஞ்சில் அச்சம் மேலோங்கி விட்டது! சொல் அழகு. பொருளழகு பொலிய கவியழகை அமைத்துப் பாட வேண்டிய இராமாநுசனை அறிவுக் குறைவும், பக்திக் குறைவும் நிறைந்த என் நெஞ்சால் பாடலாமா?

...இராமானுசனின் பெருங்கீர்த்தியை மொழிந்திட நிய மனப்படி ஏதோ முயலுவேன்!

இயலும் பொருளும் இசையத் தொடுத்து,
ஈன் கவிகள் அன்பால்
மயல் கொண்டு வாழ்த்தும் இராமாநுசனை
மதியின்மையால் பயிலும் கண்களில் பத்தியில்லாத
என் பாவி நெஞ்சால் முயல்கின்றனன்,
அவன் தன் பெரும் கிர்த்தி மொழிந்திடவே!

எனக்குக் கிடைத்த நிதி இராமாநுசனே! எனக்குக் கிடைத்த நிதியைப் பாடுகிறேன். இதைத் தெரிந்து கொள் ளாதவர்கள் என் பாட்டைப் பார்த்துப் பழித்தால் அது எனக்குப் புகழ்தானே! அவன் சீர்மையைத் தெரிந்தவர்கள்

என் கவிகளில் குற்றம் காண மாட்டார்கள். மிக்க பக்தி யினால் பாடுகிறது இது என்பார்கள்.

எனக்குற்ற செல்வம் இராமாநுசன் என்று, இசையகில்லா
மனக்குற்ற மாந்தர் பழிக்கில் புகழ்! அவன் மன்னியசீர்,
தனக்கு உற்ற அன்பர், அவன் திருநாமங்கள் சாற்றும் என்பா
இனக் குற்றம் காணகில்லார் பக்தி ஏய்ந்த இயல்பு இது என்றே!

ஆனாலும் ஒரு அச்சம் மேலோங்குகிறது! எம்பெரு மானாரே உயர்ந்த நிதி என்று நல்லோர்கள் தம்மனத்தில் வைத்துப் போற்றும் இராமாநுசனை, ஒப்பு உவமை இல்லாத தீவினையேனான நான் என்னுடைய வஞ்சகம் நிறைந்த நெஞ்சில் வைத்து முப்போதும் பாடினால் அது அவனுடைய பெரும் புகழுக்கு என்ன தாழ்வு தருமோ! என அஞ்சுகிறார் அமுதனார்.

வைப்பாய வான் பொருள் என்று! நல் அன்பர் மனத்து அகத்தே
எப்போதும் வைக்கும் இராமநுசனை! இரு நிலத்தில்
ஒப்பார் இலாத உறுவினையேன் வஞ்சநெஞ்சல்வைத்து
முப்போதும் வாழ்த்துவன்! என்ஆம் இது அவன் மொய் புகழ்க்கே!

இப்படி அஞ்சி நடுங்குகையில் ஒரு அதிசயமே நிகழ்ந்து விட்டது! என்நெஞ்சம், வஞ்ச நெஞ்சமென்றும், பாவி நெஞ் சம் என்றும்தெரிந்திருந்தும் எம்பெருமானார் தமக்கே உரித் தான பொங்கும் பரிவாலே, தளித்துத் தழைக்கும் வள்ளல் தனத்தினால் என் நெஞ்சு நிறைப் புகுந்து பாடநியமிக்கி றார்! ஆனால் என் நெஞ்சம் அவரிடமிருந்து பிரிந்து தனித் தல்லவா தன் நீசத் தன்மைக்கு ஏங்குகிறது.

கொள்ளக் குறைவற்று! இலங்கி கொழுந்துவிட்டு ஓங்கிய உன்
வள்ளல் தனத்தினால் வல்வினையேன் மனம் நீ புகுந்தாய்!

வெள்ளைச் சுடர்விடும் உன் பெருமேன்மைக்கு இழுக்கு
இது என்று
தள்ளற்று இரங்கும்! இராமாநுச, என்தனி நெஞ்சமே!

மொழியைக் கடக்கும் பெரும் புகழ் இராமாநுசா! உன் புகழை அறிந்து பாட விரும்புகிறேன்! உன் புகழை அறிந்து பிறகு நான்பாட அருகதையில்லாததை அறிந்து நிறுத்துகிறேன். அப்படி நிறுத்தினால் என் மனம் பாடித்தான் ஆக வேணுமென்கிறது! இதைத் தேவரீர் எப்படித் திருவுள்ளம் பற்றுமோ!

போற்ற அரும் சிலத்து இராமாநுச! நின் புகழ்தெரிந்து
சாற்றுவனேல் அது (உமக்குத்) தாழ்வு, அது தீரில்! உன்
சீர் தனக்கோர்
ஏற்றமென்றே கொண்டு (பாடாமல்) இருக்கிலும் என்
மனம் ஏத்தி அன்றி
ஆற்றகில்லாது! இதற்கு என்—நினைவாய் என்றிட்டு
அஞ்சுவனே!

நாம் வாழ நவில்வோம் அவன் நாமங்களை. சொல்லித் தான் தீர வேண்டுமென்று துடிக்கும் நெஞ்சே! இராமநுசனது நாமங்களைச் சொல்லுவாயாக! பல புலமை உடையவர்களும், அப்புலமைகளைத் (அவற்றைத்) தள்ளி இராமாநுசனையல்லவா பற்றுகிறார்கள்! இராமாநுசனும் பலவற்றையும் தள்ளி நம்மாழ்வார் திருவடிகளையல்லவா பற்றுகிறார்! நம்மாழ்வாரும், திருவாய்மொழி முதலான அருளிச் செயல்களின் மூலம் பூ. மன்னுமாது பொருந்திய மார்பன் புகழையல்லவா பரப்புகிறார்.

பூ மன்னுமாது பொருந்திய மார்பன்! புகழ் மலிந்த
பா மன்னுமாறன் அடி பணிந்து உய்ந்தவன்
பல்கலையோர்
தாம் மன்ன வந்த இராமாநுசன் சரணாரவிந்தம்
நாம் மன்னி வாழ? நெஞ்சே! சொல்லுவோம் அவன்
நாமங்களே!

இராமாநுசனுடைய புகழ் தவிர வேறு விஷயங்களில் என் நெஞ்சை செலுத்த இயலவில்லை.

மாறன் பணித்தது மறை நான்கும்; அதற்கு ஆறங்கும் கூறியது அருள்மாரி. பராங்குச பரகாலர்களின் திருவடிகளில் அன்பு கொண்ட ராமாநுசன், அரங்கன் செய்ய தாளிணை தவிர மற்றொன்றை நினைப்பவரை' மதிப்பாரா? இராமாநுசர் அரங்கத்து உறைவாரை எண்ணாதே இருப்பாரை இறைப்பொழுதும் எண்ணாரே. ''கள்ளார் பொழில் தென் அரங்கன் கமலப் பதங்கள் நெஞ்சில் கொள்ளா மனிசரை நீங்கிக் குறையல் பிரான் அடிக்கீழ் விள்ளாத அன்பன் இராமாநுசன் மிக்க சீலம் அல்லால் உள்ளாது என் நெஞ்சு, ஒன்று அறியேன் எனக் குற்ற பேரியல்வே!''

பராங்குச பரகாலர்கள் திருவடிபணியும் பாஷ்யகாரருடைய திருவடிபணியும் பெரியோர்களுடைய திருவடி பணிய உதவிய நெஞ்சே!

(மற்றவர்களுடன்) நீசர்களுடன் கூடிப் பேயாட்டங்கள் போடாமல் தடுத்த நெஞ்சே! உனக்கும் ஒரு வணக்கம்!

''பேரியல் நெஞ்சே! அடிபணிந்தேன் உன்னை!
பேய்ப் பிறவிப்
பூரியரோடு உள்ள சுற்றம் புலர்த்திப் (ஒப்பற்ற)
பொருவு அரும்சீர்
ஆரியன் செம்மை இராமாநுசமுனிக்கு அன்பு செய்யும்
சீரிய பேருடையார் அடிக்கீழ் என்னைச்
சேர்த்ததற்கே!''

''ஆசையாய்ச் சென்ற சிந்தையராகி
அன்னை! அத்தன்! என் புத்திரர்! பூமி!
வாசவார்குழலாள்! என்று

மருண்டு வருந்துகிறோம் நாம்! இப்பாசங்களை அகற்றித் தம் கல்யாண குணங்களையே நினைக்க இராமாநுசர் அருளினாரே! அவர் புரியும் இந்த நலன்களை மற்றவர்கள் செய்யக் கூடுமே!

> "பொருளும் புதல்வரும் பூமியும், பூங்குழலாரும்
> என்றே
> மருள் கொண்டு இளைக்கும் நமக்கு நெஞ்சே!
> மற்றுளார் (ஆறேனும்) தரமோ?
> இருள் கொண்ட வெந்துயர் மாற்றித் தன் ஈறுகில்
> பெரும்புகழே
> தெருளும் தெருள் தந்து, இராமாநுசன் செய்யும்
> சேமங்களே!

இராமாநுச! உன் திருவடித் தாமரையில் நிறைந்துள்ள தேனான உன் கல்யாண குணங்களைப் பருகுவதற்கு விரும்பிவிட்டது என் மனமாகியவண்டு! இனி வேறொன்றையும் உணவாகக் கொள்ளாது! தேவரீரும், உம்முடைய கல்யாண குணங்களைத் தவிர வேறொன்றைக் காட்டி என் மனத்தை மயக்க வேண்டாமே!

> போந்தது என் நெஞ்சு என்னும் பொன் வண்டு!
> உனது அடிப்போதில் ஒன்ன சீர்
> ஆம் தெளிதேன் உண்டு அமர்ந்திடவேண்டி,
> நின்பால் அதுவே
> ஈந்திட வேண்டும், இராமாநுச! இது அன்றி ஒன்றும்
> மாந்த கில்லாது! இனி மற்றொன்று காட்டி
> மயக்கிடலே!
> இராமாநுசன் அடிப்பூச்சூட பங்கயமாமலர்
> பாவையைப் போற்றுவோம்!

இராமாநுசனது திருவடித் தாமரைகள் நம் தலை மிசை எப்போதும் மலர்ந்து பரிமளிக்கும்படி இருப்பது வேண்டிய ஒரு பெரிய பாக்கியமாகும்.

இந்தப் பெரிய பாக்கியம் கிடைப்பதற்காக பெரிய சிபார்சும் பிடித்துக் கொள்ளவேணும். பெரிய சிபார்சை யார் செய்தருள முடியும்? பெரிய பிராட்டியார் தான் புரிந்தருள முடியும். பெரிய பிராட்டியார் இந்த சிபாரிசை செய்தருள்வாரா! அதற்காகத் தானே அவர் பெரிய பெருமாளின் பெரியத் திருமார்பிலே நித்யவாசம் புரிந்து கொண்டிருக்கிறார்!

அம் கியல் பாய் வயல் தென் அரங்கன்
அணி ஆகம் மன்னும்
பங்கய மாமலர்ப் பாவையைப்
போற்றுதும்! பத்தி எல்லாம் (நம்மிடம்)
தங்கியது என்னத் தழைத்து நெஞ்சே! நம் தலை
மிசையை
பொங்கிய கீர்த்தி, இராமாநுசன் அடிப் பூ
மன்னவே!

உலக மயக்குகளில் ஈடுபட்டு வெற்றியின் உச்சிப் படியில் ஏறிவிட்டோம் என்று அகங்கசித்திருந்த அடியேனை இப்படியாக முன்பு புறப்பொருள்களில் ஈடுபடவிட்டிருந்த என்னை உம்முடைய நிர்கேதுகக் கிருபையினாலே கூரத்தாழ்வானைக் கொண்டு பயனன்றாகிலும் பாங்கலராகிலும் செயல் நன்றாகத் திருத்திப் பணி கொண்டீரே!

உமது அருளின் வண்ணத்தைத் தெரிந்து கொள்ள முடியுமா!

சரணாகதி : அடிமைக் கொள்கையிலிருந்து தொடங்குகிறார் அமுதனார். உம்முடைய கருணையை இடைவிடாது அநுபவிக்கிறவர்கள் உண்மையிலேயே புண்ணியம் புரிந்தவர்கள்.

ஆக்கி அடிமை நிலைப் பித்தனை! என்னை இன்று!
அவமே (வீணாக)
போக்கிப் புறத்திட்டது என் பொருளா முன்பு!
புண்ணியர் தம்

வாக்கிற் பிரியா இராமாநுச! நின் அருளின் வண்ணம்
நோக்கில் தெரிவு அரிதால்! (அறிய முடியாதது)
உரையாய்! இந்த நுண் பொருளே!

வெறிதே அருள் செய்யும். இராமாநுசரின் பரம உன்னத குணங்களை என் சொல்வேன்! அவருடைய வள்ளல் தனத்தைப் புகழவா! பெருந்தன்மையைப் புகழவா! சந்திரக் குளிர்ச்சியான திரு உள்ளத்தைப் புகழவா! எல்லாவற்றிற்கும் மேலாக அவர் அருளும் உண்மை நல் ஞானத்திற்கு நிகர் உண்டோ! இதற்குத் தோற்று அவரையே தஞ்சமாகப் பற்றினேன். இதைத் தவிர ஒரு பெருநிலையும் உண்டா! ஆராய்ந்து பார்த்தாலும் கூட

வண்மையினாலும், தன் மாதக (கிருபை)வாலும்,
மதிபுரையும்
தண்மையினாலும், இத்தரணியோர்கட்கு, தான்
சரணாய்
(தாமே ரட்சகராய்க் கொண்டு)
உண்மை நல் ஞானம் உரைத்த இராமாநுசனை
உன்னும் (மனத்)
திண்மை அல்லால் எனக்கு இல்லை! மற்றோர் நிலை
தேர்ந்திடிலே!

அப்படி என்ன உண்மை நல் ஞானம் உபதேசித்து விட்டார் இராமாநுசர்!

உண்மை நல் ஞானத்திற்கு உறைவிடம் வேதம். வேதத்தில் உள்ள ஞானத்தை உறுதிப்படுத்தி எடுத்துக் காட்டுபவை இதிகாச புராணங்கள். ''வேதார்த்தம் அறுதியிடுவது ஸ்மிருதி இதிகாச புராணங்களாலே'' சொல்லார் தமிழ் ஒரு மூன்றிலும் சுருதிகள் நான்கிலும் இவை உள்ளன. இவைகளிலே மிக வல்லவர் இராமாநுசர். இவரைத்தவிர சரண்வேறுள்ள தென்று மருளலாமா! ஸ்ரீ ராமாநுச நாம சங்கீர்த்தனமே புருஷார்த்தம்!

''சொல்லார் தமிழ் ஒரு மூன்றும், சுருதிகள் நான்கும், எல்லை
இல்லா அற நெறி யாவும் தெரிந்தவன், எண்ணருஞ்சீர்
நல்லார் யாவும் இராமாநுசன் திரு நாமம் நம்பிக்
கல்லார் அகல் இடத்தோர், எது பேறு என்று காமிப்பரே!''

இதிகாச சிரேஷ்டமானது ஸ்ரீராமாயணம்:

ஸ்ரீ ராமாயணத்தால் சிறையிருந்தவள் ஏற்றம் சொல்லு கிறது. இராமாயண மென்னும் பக்தி வெள்ளம் இராமா நுசரிடமல்லவா தேங்கிக் கிடக்கிறது! பெருமாள் பூசித்த பெரியபெருமாள் எழுந்தருளியுள்ள கோயிலான திருவரங்கம் திருப்பதியே இருப்பாகப் பெற்றதனால் கோயில் இராமாநுசன் என்றே திரு நாமம் ஆகி விட்டதே! இவருக்கு ஆளானவர்கள் அடியேனையும் அவருக்கு ஆளாக்கி விட்டார்களே! அடியேனும் இராமாநுசருக்கு அடிமைப் பட்டவனே என்ற மூல உண்மையைத் தெரிந்தவர்கள் தானே!

படி கொண்ட கீர்த்தி இராமாயணம் என்னும் பக்தி வெள்ளம்
குடிகொண்ட கோயில் இராமாநுசன் குணம் கூறும், அன்பர்(களது)
கடி கொண்ட மாமலர்தாள் நெஞ்சு கலந்து உள்ளம் கனியும் நல்லோர்;
அடி கண்டுகொண்டு உகந்து என்னையும் ஆள் அவர்க்கு ஆக்கினரே!''

**ஆசார்யன் மூலம் ஆண்டவனிடம் சரணாகதி :**

பன்னி உரைக்குங்கால் பாரதமாம். என்று பிரமிக்கத்தக்கதான மற்றொரு இதிகாசமான பாரதத்தின் உட்பொருளைக் கையில் கனி என்னக் காட்டித் தருகிறார் இராமாநுசர், நமக்குக் கை கால்கள், உடல் உறுப்புக்கள் ஏற்பட்டது எதற்காக? எதோ, சினிமா பார்ப்பதற்கும், சிற்றுண்டி, பேருண்டிச் சாலைகளை அலங்கரிப்பதற்கும் மற்றும் வீண் வம்பளப்பதற்கும் தான் என்று எண்ணிக்

கொண்டிருக்கிறோம் நாம்! ஐயோ! இப்படி உங்களை மயக்கிவிட்டவன், மாயவன்!

உண்மையிலேயே இந்த உறுப்புகளும் உடலும், ஆச்சரிய மான குணங்களை உடையவனான அவனை வணங்கு வதற்காகவே அளிக்கப் பட்டுள்ளன! இதற்கு விளக்கமும் வேண்டுமா! தமக்கு ஏற்பட்ட உடல் உறுப்புகளைக் கொண்டு தர்மபுத்ரர் தொடக்கமான பாண்டவர்களும் திரௌபதியும் என்ன செய்து நமக்கு வழி காட்டினார்கள்! சரணாகதி செய்து காட்டினார்கள்!

எனவே நாமும் நம் உடல் உறுப்புகளால் சரணாகதியையே செய்ய வேண்டுமென்று நம் மற்ற விபரித எண்ணங்களுக்கு வரம்பு கட்டியவர் எம்பெருமானார் தான்!

சரணம் அடைந்த தருமனுக்கா,
பண்டு நூற்றுவரை
மரணம் அடைவித்த மாயவன்,
தன்னை வணங்க வைத்த
கரணம் இவை உமக்கு அன்று, என்று
இராமாநுசன் ஆருயிர்கட்கு
அரண் அங்கு அமைத்திலனேல்
அரண் ஆர் மற்று இவ் ஆருமார்க்கே!

### இறைவனின் நிலைகள் ஐந்து

நாம் சரணாகதி பண்ண வேண்டும். இறைவன் எங்குள்ளான்? ெவ்விதம் எழுந்தருளியுள்ளான்? அவன் ஐந்து நிலைகளில் எழுந்தருளி உள்ளான்.

அவையே!-

1. அந்தர்யாமித்வம், 2. பரம், 3. வியூகம், 4, விபவம் 5. அர்ச்சை எனப்படுபவையாகும்.

காலத்தின் அளவுகளான கண்ணுக்கும், கருத்திற்கும் எட்டாதது காலம்.

நிமிடம் மணியிலும், மணி நாளிலும், நாள் மாதத்திலும், மாதம் வருடத்திலும், ஆண்டுகள் 60 ஆண்டு கணக்கிலும், இக்கணக்கு யுகம், மற்றும் யுகம் ஊழியாலும் அடங்கிய இவை ஊனக் கண்ணுக்கும் அப்பாற்பட்டவை.

அந்தர்யாமித்வம் ஊழ் முதல்வன் திருமால்.

எக்காலத்திலும் எழுந்தருளியுள்ளவன் ஆண்டுகள், நாள், திங்களாய், நிகழ்காலமெல்லாம், ஈண்டுபல்யோனி கள் தோறும் பிறந்து நாம் உழல்கின்றோம். எனவே, இந்த ஊழியிலே மாறி மாறிப் பல பிறப்பும் பிறக்கின்ற நாம் வினைச் சுழலில் சிக்கிக் கொண்டோம். இந்த வினைச் சுழலினின்றும் நம்மை இராமானுசர் காப்பாற்றி ஊழியை யும் அடக்கியாளும் ஊழி முதல்வனை வணங்க வைத்தார். புலன்களுக்கு எட்டாமல், அந்தர்யாமியாக ஊழிக்கால மெல்லாம் நீக்கமற நிறைந்தவன் நெடுமால். எனவே

என்னைப் புவியில் ஒரு பொருளாக்கி, மருள் சுரந்த<br>
முன்னைப் பழைவினை வேர் அறுத்து ஊழி, முதல்வனையே<br>
பன்னப் பணித்த இராமாநுசன் பரன் பாதமும் என்<br>
சென்னித் தரிக்க வைத்தான். எனக்கு ஏதும்<br>
சிதைவில்லையே!''

உயர்ந்தவரான தன்னுடைய இரண்டாவது (அடுத்தது) பரம்:

பரமபதம் எம்பெருமானார்க்கு பரம போக்யமானது.

பரம பதத்திற்கு நித்திய விபூதி என்று பெயர். அந்த நித்திய விபூதியாம் பரம பதத்திற்கு லீலாவிபூதியான இப்பூமண்டலத்திற்கும் இராமாநுசர் அதிகாரியாகையாவே உடையவர் என்ற விருது பெற்றார். எல்லாவற்றைக் காட்டிலும் சிறந்தஇருப்பு பரம பத இருப்பு. பரமபதத்தைக் காட்டிலும் உடையவருடைய பாதார விந்தத்திருவடிவாரம் அமுதனாருக்கு அதிக உகபைத் தருகிறதாம்.

நின்ற வண் கீர்த்தியும், நீள் புனலும், நிறைந்த வேங்கடப்
பொன்(ற்)
குன்றமும் வைகுந்த நாடும் குலவிய பாற்கடலும்,
உன்தனக்கு எத்தனை இன்பம் தரும் உன் இணை
மலர்த்தாள்
என் தனக்கும் அது, இராமாநுச இவை ஈந்தருளே!

**மூன்றாவது வியூகம் பாற்கடல்;**

இராமாநுச நாற்றந்தாதி பிரபன்ன காயத்திரி, பத்தர்கட்குக் காயத்திரி மந்திரம் போலச் சிறந்தது. இராமாநுசரைத் துதிக்கும் முகாந்தரத்தினாலே திருமால் எழுந்தருளியுள்ள ஐந்து நிலைகளையும் மங்களாசாசனம் புரிந்தருளுகிறார் அமுதனார்!

வியூக நிலை எனப்படுவது பாற் கடலுள் பையத் துயிலும் நிலை, வியூக நிலையில் உள்ள விஷ்ணுவை வணங்கும் பெரியார்களுடைய திரு உள்ளத்தில் குடி கொண்டுள்ளார் எம்பெருமானார். இத்தகைய பெரியோர்கள் கூடிக் குலாவுகிற இடமே அமுதனாரும் உகந்து வசிக்கும் இடமாம்! இருப்பிடமாம்.

செழுந்திரைப் பாற்கடல் கண் துயில் மாயன் திருவடிக் கீழ்
விழுந்திருப்பா நெஞ்சில் மேவும் நல்ஞானி நல்வேதியர்கள்:
தொழும் திருப்பாதன் இராமாநுசனைத் தொழும்
பெரியோர்
எழுந்துஇரைத்து ஆடும் இடம்; அடியேனுக்கு இருப்பிடமே!

நான்காவதான விவபம் அல்லது அவதாரம்:

1. **நரசிம்மர்.** தாயின் கருப்பையில் பிறந்து வளர்ந்து கருவில் அடங்காமல் கைகால் வளராமலும், காதலும், கலியாணமும் காட்டாமலும், இரணியன் நினைத்த மாத்திரத்தில், நினைத்த இடத்தில், இரணியன் நினைத்து நினைத்துக் கேட்டுப் பெற்ற வரங்களையெல்லாம் தகர்த்து, இரணியனும் நினையாத உருவிலே சேவை சாதித்தது

நரசிங்க அவதாரமாம்! பாகவதனான பிரகலாதன் பக்கல் இரணியனால் ஏற்பட்ட அபசாரத்தைப் பொறாமல் சீரிய, சீறிய சிங்கத்தின் புகழில் மண்டிக் கிடக்கும் இராமாநுசர் நம் வினைகளைக் களைந்து 'நமோ நாராயண' திருமந்திரார்த்த ஞானத்தையும் அளிப்பார்! நாராயணனைக் கண்டதும், கண்ட துண்டமாக வெட்ட இடுப்பிலே வாளைத் தொங்கவிட்டுக் கொண்டிருந்தானாம் இரணியன், அதனால் வாள் அவுணனானான் என்கிறார்.

வளர்ந்த வெங்கோப மடங்கல் ஒன்றாய்! அன்று
வாள் அவுணன்
கிளர்ந்த பொன் ஆகம் கிளித்தவன்! கீர்த்திப் பயிர் எழுந்து
விளைந்திடும் சிந்தை இராமாநுசன் என் தன் மெய்வினை
நோய்
களைந்து நல் ஞானம் அளித்தனன்! கையில் கனி என்னவே!

பரசுராமர்!

முள்ளை முள்ளால் எடுக்க வேண்டும். மூடர்களைக் கோடாரி கொண்டு தகர்க்க வேண்டும். அழித்தலின் சின்னமான கோடாரிக்கு அப்பனான அனைத்து அழித்தலின் சின்னமாக விளங்கியது சிவதனுசு. இந்த சிவதனுசையே உடைத்து விட்ட (அழித்த) இராமனின் திருக்கரங்களுக்கு ஏற்ற வேலை தருவது பொருந்தும் என எண்ணினான் பரசுராமன்.

காத்தலின் சின்னமான இராமன் திருக் கரத்தில் நாராயண தனுசைச் சேர்த்து அவனுக்கு அவனுடைய காக்கும் கடவுளான நாராயண அவதார ரகசியத்தை நினைவூட்டி,

"அண்டர்கள் துயரம் தீர,
அயோத்தியா நகரம் வந்து,
தண்ட காரணியம் சென்று
சமுத்திரம் அணையாய்க் கட்டிக்

கொண்டல் இராவணனை வீட்டிக்
கோதண்டம் கையில் ஏந்தும்
புண்டரீகக் கண்ணன் இராமனாக''

விளங்க வைத்தவன் பரசுராமன் சாதாரண மனிதனா!
அவனைத்தேவன் என்றல்லவா ஓதித் துதிக்க வேண்டும்!
அவ்விதம் போற்றும் புனிதரே இராமாநுசர்!

கோக்குலம் மன்னரை மூ எழுகால் (முறை)ஒரு கூர் மழுவால்
போக்கிய தேவனைப்போற்றும் புனிதன் புவனம்எங்கும்
ஆக்கிய கீர்த்தி இராமானுசனை அடைந்த பின், என்
வாக்கு உரையாது, மனம், நினையாது, இனி
மற்றொன்றையே!

**கண்ணன்:**

கிருஷ்ணாவதாரத்தின் சிகரமான கட்டம் கீதோபதேசமே!

''ஜிதேந்திரியனில் தலைவனாய், ஆஸ்திக அக்ரேசனராய் கேசவஸ்க ஆத்மா, என்று கிருஷ்ணனுக்குத்தாரகமாய், இருக்கிற அர்ச்சுனனுக்குத் தோஷம் ஏது? என்னில் பந்துக்கள் பக்கல் சிநேகமும், காருண்யமும், வதபீதியும்.''

இவைகளைக் களைந்தான் கண்ணன் கீதோபதேசத் திலே. இந்த செம்மைப் பொருளைப் பாரினில் நன்கு அறிய கீதாபாஷ்யமிட்டார் பாஷியகாரரான இராமாநுசர், இந்த ஞானம் கிடைத்த அடியேனுக்கு நிகர் யாரோ! இல்லை எனக்கு எதிர், இல்லை எனக்கெதிர், இல்லை எனக்கெதிரே!

''ஆர் எனக்கு இன்று நிகர் சொல்லில்!மாயன் அன்றுஐவர்
தெய்வத்
தேரினில் செப்பிய கீதையின், செம்மைப் பொருள் தெரியப்
பாரினில் சொன்ன இராமாநுசனைப் பணியும் நல்லோர்
சீரினிற் சென்று பணிந்தது என் ஆவியும் சிந்தையுமே!

**அர்ச்சை**

இறைவனிடம் சரணாகதி செய்ய வேண்டும். இறைவன் ஐந்து நிலைகளில் (அந்தர்யாமித்வம், பரத்வம், வியூகம், விபவம், அர்ச்சை) எழுந்தருளியுள்ளான்.

பூகத (பூமிக்கு அடியில் உள்ள) ஜலம் போலே அந்தர்
யாமித்வம்
ஆவரண (ஆகாயத்தில் உலவும் மண்டல) ஜலம்போல
பரத்வம்,
பாற்கடல் போலே வியூகம், பெருக்காறுபோலே விபவம்
அதிலே தேங்கின மடுக்கள் போலே அர்ச்சாவதாரம்!
அர்ச்சாவதாரம் 'பூர்ணம்' என்கையாலே எல்லாக்
குணங்களும் புஷ்கலங்கள் குறைவற்றிருக்கும்

பிரபத்திக்கு அபேக்ஷிதங்களான சௌலப்யாதிகள், இருட்டறையில் விளக்குப் போலே பிரகாசிப்பது இங்கே தான் (அர்ச்சையிலே). பூர்த்தியையும் சுவாதந்தரியத்தையும் குலைத்துக் கொண்டு தன்னை ஆராதிக்கிறவர்களையும் தான் ஆதரித்து நிற்கிற இடங்கள் அர்ச்சைத்தலங்கள். அதாவது திவ்ய தேசங்கள், ஆழ்வார்களுடைய மங்களாசாசனம் பெற்ற ஸ்ரீவைணவத் திருத்தலங்கள். இவற்றுள் மூன்று மண்டபங்கள் உண்டு.

பெருமாள் கோயில் யாகமண்டபம் (கச்சி).

அர்ச்சை நிலை 108 திவ்ய தேசங்களில் சிறந்து விளங்குகிறது.

108 திவ்ய தேசங்களில் சரணாகதி புரிவதற்கு அத்தியூரென்னும் கச்சிப்பதிக்கு உச்சநிலை தருகிறார் வேதாந்த தேசிகர்.

'பக்தி முதலாமவற்றுள் பதி எனக்குக் கிட்டாமல்
எத்திசையும் பறந்தோடி இளைத்து விழும்காகம்போல்
முத்தி தருநகர் ஏழில் முக்கியமாய் கச்சிதனில்
அத்திகிரி அருளாளர்க்குஅடைக்கலம் நான்புகுந்தேனே'

அருளாளன் திருவடிகளுக்குத் துயரறு சுடரடி என்று நம்மாழ்வார் சிறப்புத் திருநாமம் சூட்டுகிறார்.

அருளாளனான இந்த இமையோர் தலைவன் எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தவன். தம்மையும் நம்மையும் பிறவாவண்ணம் காப்பாற்ற வேண்டுகிறார். இத்தகைய சிறப்பு மிக்க அத்தியூரானடிகளில் இராமாநுசர் அன்பு பூண்டவர். இத்தகையது நமக்குக் கிடைத்தது பாக்கியமல்லவா?

ஆண்டுகள் நாள் திங்களாய் நிகழ்காலம் எல்லாம்
மனமே!
ஈண்டு பல்யோனிகள் தோறு உழல்வோம்! இன்று ஓர்
எண் இன்றியே (நினையும் இல்லாமல்)
காண் தகு தோள் அண்ணல் தென் அத்தியூரர்
கழலிணைக்கீழ்ப்
பூண்ட அன்பாளன், இராமாநுசனைப்பொருந்தினமே!

### திருமலை புட்ப மண்டபம்

செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமால், நெடியான் வேங்கடவன். இவனுக்கும் ஒரு வினை ஏற்பட்டது!

அதாவது சென்னி ஓங்கு தண் திருவேங்கடமுடையான் திருமால்தானா என ஐயம் ஏற்பட்டு விட்டது. முதலுக்கே மோசம் வந்தது! இராமாநுசரே இந்த வினையிலிருந்து திருவேங்கடவனைக் காப்பாற்றினார். அவனைச் சங்கும் ஆழியும் சூட வைத்தார். அதனால் இவருக்கு 'அப்பனுக்குச் சங்காழி அளித்தருளும் பெருமாள்' என்ற விருதும் ஏற்பட்டது. இந்த பேருபகாரத்திற்காக வேங்கடத்தையே விட்டு எம்பெருமானார் திருஉள்ளத்தை இருப்பிடமாகக் கொண்டான் திருவேங்கடவன். அந்த இராமாநுசர் அடியேனது மனதை இருப்பிடமாக்கிக் கொண்டாரே!

இதற்கு நடுவில் 'திருமாலிருஞ் சோலை' இறைவனும் இதையே செய்தார்.

நாறு நறும்பொழில் மால் இருஞ்சோலை நம்பிக்கு,
நான்
நூறுதடாவில் வெண்ணெய்வாய் நேர்ந்து பராவி
வைத்தேன்
நூறுதடா நிறைந்த அக்கார அடியில் சொன்னேன்.
ஏறு திருவுடையான் இன்று வந்திவை கொள்ளும்
கொலோ!

என்று வாய்ப் பந்தல் போட்டு விட்டாள், பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானவளான ஆண்டாள். ஆனால், இவரின் தங்கை, ஆசைகாட்டி அதை நிறைவேற்றவில்லை. அந்த மாதிரி அபகீர்த்தி ஏற்படாவண்ணம் அதை நிறைவேற்றி வைத்தார் இராமாநுசர். அதனால் மாலிருஞ் சோலைப் பெருமானுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியில் அவரும் உடையவரின் உள்ளத்திற்கு வாசகமாக வரவும், உடையவர் அமுதனாரின் உள்ளத்திற்கு எழுந்தருளி விட்டார். பழம் நழுவிப் பாலில் விழுந்தது அதுவும் நழுவி வாயில் விழுந்த கதையானது!

''புவியும் இருவிசும்பும் நின் அகத்த நீ என்
செவியின் வழி புகுந்து என் உள்ளாய்—அவிவின்றியான்
பெரியன் நீ பெரியை என்பதனை யாரறிவார்
ஊன் பருகு நேமியாய்! உள்ளு''

நீ என்பதற்கு ஒரு நாளும் விட்டு நீங்காமல் உபயவிபூதிகளையும் உள்ளடக்கிய என்றும் அவிவின்றி என்பதற்கு ஒருநாளும் இடைவிடாமல் என்பது பொருள்!

''இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம் மாலிருஞ்சோலை
என்னும்
பொருப்பிடம் மாயனுக்கென்பர் நல்லோர்
அவைதன்னொடும் வந்து
இருப்பிடம் மாயன் இராமாநுசன் மனத்து இன்று
அவன் வந்து
இருப்பிடம் என் இதயத்துள்ளே! தனக்கு இன்புறவே''

**கோயில், திருவரங்கம், போகமண்டபம் :**

பொன்னரங்கம் எனில் மயலே பெருகும் இராமாநுசன்! ஆழ்வார்களுடைய கீர்த்திகளை இணைந்து இராமாநுசரின் புகழைப் பாடுகிறார் அமுதனார்! திரு உள்ளம் உகந்து திருச் செவிசாற்றி உகக்கின்றார் உடையவர்.

ஆழ்வார்களுடைய பெருமைகளை அவர்கள் திருவாய் மலர்ந்த திவ்ய பிரபந்தங்களிலே காணலாம்! ஒவ்வொரு ஆழ்வாரின் பிரபந்தத்திலும் ஒரு தனித்தன்மையை அல்லது சிறப்பை வெளியிடுகிறார் அமுதனார்.

**ஆழ்வார்களுடைய அவதாரக் காரணம் :**

தர்க்கரீதியாக பகுத்தறிவின் அடிப்படையில் விளக்கு கின்றார் அமுதனார். ஆழ்வார்களின் எண்ணிக்கை பத்து வரை நீடிப்பதற்கும் பத்துடன் முடிவதற்கும் காரணத்தை யும் பார்க்கலாம். முதலாழ்வார்கள் முதன்மையான ஆழ்வார்கள் போதித்தது தத்துவத்திரயம். முதலாழ்வார் களில் முதல் ஆழ்வாரான பொய்கை ஆழ்வார், உலகில் பரவியுள்ள அசித் சொரூபத்தைத் தம் அறிவுத்திருவிளக்கால் விளக்கினார். அசித் தருவது புற இருள். ஆத்மாவிற்குப் புறத்தே உள்ள (சூழ்ந்த) இருள், உலகையே அகல் ஆக்கிக் கதிரோனை விளக்காக அமைத்துக் காட்டிச்சுடராழி ஏந்திய இறைவனுக்குள் அது அடைக்கலம் என விளக்கினார் பொய்கையார்.

''வையம் தகளியா, வார்கடலே நெய்யாக
வெய்யகதிரோன் விளக்காகச்—செய்ய
சுடராழியான் அடிக்கே சூட்டினேன் சொன்மாலை
இடராழி நீங்குகவே! என்று''

ாய்பைபெகயார் ஏற்றியிருந்த திருவிளக்கைத் தன் உள்ளத் திற்கு ஏற்றார் இராமாநுசரும்,

''வருத்தும் புற இருள் மாற்ற,
எம் பொய்கைப் பிரான் முறையின்
குருத்தின் பொருளையும், செந்தமிழ் தன்னையும் கூட்டி,
ஒன்றத்
திரித்து அன்று எரித்த திருவிளக்கைத் தன் திரு
உள்ளத்தே
இருத்தும் பரமன், இராமாநுசன் எம் இறைவனே!

சித் தத்துவத்தை விளக்க ஞானமென்னும் நிறை விளக்கை ஏற்றினார் பூதத்தாழ்வார். அரை குறை விளக்கல்ல. இறை ஞானம் ஏற்படாமல் இருந்தபோது நமது இதயத்தில் அல்லது சித்தினிடம் இருள் இருந்தது.

பூதத்தாரின் இரண்டாம் திருவந்தாதியே சித் சொரூபத்தை விளக்கும் ஞானத் திருவிளக்கு!

அன்பே தகளியா, ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடு திரியா—நன்புருகி
ஞானச் சுடர் விளக்கு ஏற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ் புரிந்த நான்!

பூதத்தாரின் ஞான மென்னும் நிறை விளக்கை நெஞ்சத்தில் கொண்டார் உடையவர். ஆத்ம சொரூபம், ஞானம், ஆநந்தம். ஞானம் ஏற்பட்டால் அதன் அடிப்படையில் ஆநந்தம் ஏற்படச் செய்யும்

''இறைவனைக் காணும் இதயத்து இருள் கெட ஞானம்
என்னும்
நிறை விளக்கு ஏற்றிய பூதத் திருவடித் தாள்கள்,
நெஞ்சத்து
உறைய வைத்து ,ஆளும் இராமாநுசன் புகழ்
ஓதும் நல்லோர்
மறையினைக் காத்து, இம் மண்ணகத்தே
மன்ன வைப்பவரே!'

### ஸ்ரீமத் வேதமார்க்கப் ப்ரதிஷ்டாபராவார்.

முப்பொருள் உண்மை: தத்துவத்திரயத்தில் மூன்றாவது அம்சமாவ ஈஸ்வர தத்துவத்தைப் பேயார் விளக்கினார். மன்னிய இருள்—அசித்தைப் பற்றியது; மன்னிய பேர் இருள்—சித்தைப் பற்றியது. இவை இரண்டைப் பற்றிய அஞ்ஞானம் ஒழியவும், ஈஸ்வரனைக் காண முடிகிறது. ஓங்கி உலகு அளந்த உத்தமனை, திருவிக்ரமனை, ஈஸ்வரனைக் காட்டியவரே தமிழ்த் தலைவர்.

"திருக் கண்டேன்! பொன் மேனி கண்டேன்! திகழும்
அருக்கன் அணி நிறமும் கண்டேன், செருக்கிளரும்
பொன் ஆழி கண்டேன் புரிசங்கம் கைக்கண்டேன்!
என் ஆழி வண்ணன் பால் இன்று!"

ஈஸ்வரனைப் பற்றிய ஞானத்தை அருளிய இத்தமிழ்த் தலைவனின் பொன்னடியைப் போற்றுகிறார் இராமாநுசர், இவர்களே முதலாழ்வார்கள், முதன்மையான கருத்தை அருளியவர்கள்.

மன்னிய பேர் இருள் மாண்டபின், (திரு) கோவலுள் மாமலராள்
தன்னொடு மாயனைக் கண்டமை காட்டும், தமிழ்த் தலைவன்
பொன்னடி போற்றும் இராமாநுசற்கு அன்பு பூண்டவர் தாள்
சென்னியில் சூடும் திரு உடையார் என்றும் சீரியரே!

முதலாழ்வார்களான மூவரால் தத்துவத் திரய ஞானம் ஏற்பட்டதும், வேதசாரமே கிட்டி விட்டது எனலாம்.

வேதசாரத்தைப் பிழிந்து அருளியவர் திருப்பாணாழ்வார்; வேதாந்த தேசிகர்வாக்கு:

காண்பனவும் உரைப்பனவும் மற்றொன்றின்றி. கண்ணையே கண்டுரைத்த கடிய காதல்—பாண்பெருமாள்

அருள் செய்த பாடல் பத்தும் பழமறையின் பொருளென்று பரவுகின்றோம்.'' (அதனால்) வாண் பெரிய விரி திரைநீர் வையத்துளே வேதாந்த ஆரியன் என்றியம்ப நின்றோம். நாம் பெரியோம் அல்லோம் நாம் நன்றும் தீதும் நமக்கு ரைப்பார் (திருப்பாணாழ்வார்) உளரென்று நாடுவோமே,''

அரங்கனைச் சேவித்த பின் மற்றொன்றினைக் காணாவே! எனக் கண்களை மூடிய பாண்பெருமாளின் சரணமலர்களையே இராமாநுசர் தம் சென்னியிலே சூடுவது.

சீரிய நான்மறைச் செம்பொருள், செந்தமிழாலளித்த
பாரினும் புகழ்ப் பாண்பெருமாள், சரணாம் பதுமத்
தாரியல் சென்னி இராமாநுசன் தன்னைச் சார்ந்தவர்தம்
காரிய வண்மை என்னால் சொல்லொணாதிக்கடலிடத்தே

மற்றொன்றினைக் காணாவே! என்ற மனத்திடம் ஏற்பட்டபிறகு அடுத்த பக்திசாரர் உருவிய வாளை உரையிலிடாதவராகிறார்!

மழிசைக்கு இறைவர் மார் தட்டுகிறார்!

''காணிலும் உருப்பொலார் செவிக்கினாத கீர்த்தியார்
பேணிலும் வரந்தர மிடுக்கிலாத தேவரை
ஆண மென்றடைந்து வாழும் ஆதர்காள் எம்மாதி பால்
பேணி நும் பிறப்பெனும் பிணக்கு அறுக்ககிற்றிரே!''

பேறு தப்பாதென்று மார்பிலே கை வைத்துத் ஊக்கம் ஊட்டுகின்றார்!

''அத்தனாகி அன்னையாகி ஆளும் எம்பிரானுமாய்
ஒத்து ஒவ்வாத பல் பிறப் பொழித்து நம்மை
ஆட்கொள்வான்!
முத்தனார்! முகுந்தனார் புகுந்து நம்முள் மேவினார்!
எத்தினால் இடர்க்கடல் கிடத்தி ஏழை நெஞ்சமே!''

ஸ்ரீராமானுச பக்த பக்த பக்தன் அடியேன் என்கிறார் அமுதனார். இந்த ஞானத்தை அருளிய மழிசையாரின் கீர்த்தி உலகமெங்கும் பரவியது. இராமானுசரும் இவர் இணையடிகளில் அடங்கினார்.

''இடம் கொண்ட கீர்த்திமழிசைக்கு இறைவன்
இணை அடிப் போது
அடங்கும் இதயத்து இராமானுசன் அம்பொன் பாதம்
என்றும்
கூடம் கொண்டு இன்றஞ்சும் திரு முனிவர்க்கு அன்றிக்
காதல் செய்யாத்
திடம் கொண்ட ஞானியர்க்கே அடியேன் அன்பு
செய்வதுவே!''

தொண்டரடிப் பொடியாழ்வார் நிலை இன்னும் ஒருபடி அதிகம்.

இவர் மறந்தும் புறம் தொழா மாந்தர் மாத்திரம் அல்ல; இவர் மறந்தும் மதிளரங்கனைத் தவிரப் புறந் தொழார்! பத்தினி ஆழ்வார் என விருது பெற்றவர். சீரரங்கத்து ஐயன் கழற்கு மாலையும் அணிவார், மேலும் செந்தமிழில் திருமாலையும் அணிவார்.

புலையறமாகி நின்ற புத்தொடு சமணமெல்லாம்
கலையறக் கற்றமாந்தர் காண்பரோ கேட்பரோ தான்!
தலையறுப்புண்டும் சாகேன் சத்தியம் காண்மின் ஐயா
சிலையினால் இலங்கை செற்றதேவனே தேவனாவான்.

★

வெறுப்பொடு சமணர்முண்டர் விதியில் சாக்கியர்கள்
நின்பால்
பொறுப்பரியனகள் பேசில் போவதே நோயதாகிக்
குறிப்பெனக் குடையுமாகில் கூடுமேல்
(பிறர்) தலையை ஆங்கே அறுப்பதே கருமங்கண்டாய்
அரங்கமாநகருளானே''

அதனால், இராமாநுசர் தொண்டர் அடிப் பொடியாருடைய திருவடிகளை விரும்புகிறவர்.

செய்யும் பசுந் துளவத் தொழில் மாலையும் செந்தமிழில்
பெய்யும் மறைத் தமிழ் மாலையும் பேராத சீர் அரங்கத்து
ஐயன் கழற்கு அணியும் பரன் தாள் அன்றி ஆதரியா
மெய்யன், இராமாநுசன் சரணே கதி வேறு எனக்கே!

அரங்கனின் கீர்த்தியை திருச்செவி ஏற்ற குலசேகரர் தினே தினே ரங்கயாத்ரையை, மேற் கொண்டார்.

அரங்கனது மெய் அடியார்களுடன் கூடிச் சூடுவதே அவரது பாரிப்பு:

'தூராத மனக் காதல் தொண்டர் தங்கள் குழாம்
குழுமித் திருப்புகழ்கள் பலவும் பாடி
ஆறாத மனக் களிப்போடு அழுத கண்ணீர் மழை
சோரி நினைத்துருகிப் போற்றி, நாளும்
சீரார்ந்த முழவோசைப் பரவை காட்டும் திருவரங்கத்
தரவணையில் பள்ளி கொள்ளும்
போராழியம்மானைக் கண்டு துள்ளிப் பூதலத்தில்என்று
கொலோ புரளும் நாளே!''

கொல்லிகாவலன், கூடல் நாயகன், கோழிக்கோன் குலசேகரரின் கவிகளைப் பாடும் பெரியவர்களுடைய பாதங் களைத் துதிப்பவர் எம்பெருமானார்.

இப்படியான இராமாநுசரை அடைபவர்கட்கு வேறு தவமும் வேண்டாம். தம் (அரண்) மனையில் இருந்து கொண்டே அரங்கனிடம் ஈடுபடலாம்.

கதிக்குப் பதறி, வெம் கானமும் கல்லும் கடலும் எல்லாம்
கொதிக்கத் தவம் செய்யும் கொள்கை அற்றேன், கொல்லிக்
காவலன் சொல்
பதிக்கும் கலைக்கவி பாடும் பெரியவர் பாதங்களே
துதிக்கும் பரமன் இராமாநுசன் என்னைச் சோர்விலனே!

இராமபிரான் கரதூடணர்களை வதைக்க, சீதையின் காவலுக்காக லட்சுமணனை விட்டு விட்டுத் தன்னந் தனியாக ஆயிரக்கணக்கான இராட்சதர்களை வதைக்கப் புறப்பட்டதை அறிந்ததும் குலசேகரர் தன் படையோடு புறப்பட்டுவிட்டார். உதவி செய்ய, இராவணன் சீதையைச் சிறையெடுத்துப் போனது அறிந்ததும் மறுபடியும் படையுடன் புறப்பட்டார் குலசேகரர். இந்த சமயம் இராமரே—சீதா லட்சுமணர்களுடன் எதிர் வந்து சேவை சாதித்தார்! குலசேகரரும் அமைதியும், ஆனந்தமும் அடைந்தார்! இதே நிலையை அடைந்தவர் பெரியாழ்வாரும், தம்மைக் காப்பவராகவும் பெருமாளைக் காக்கப்படுபவராகவும் நினைத்துக் கொண்டு, மதுரைப் பதியின் வான வீதியிலே பறவை ஏறும் பரமபுருடனாகக் காட்சியளித்த போது பெருமானுக்குப் பல்லாண்டு பாடியருளியவர். ஏழு பிரகாரங்களால் பாதுகாக்கப்பட்ட திருவரங்கக் கருவறையில்கண்வளரும் கருமணியைக் காக்க வேணுமென்று யாவருக்கும் எச்சரிப்பார்

"உறகல் உறகல் ஒண் சுடராழியே! சங்கே!
அறவெறி நாந்தக வாளே! அழகிய சார்ங்கமே! தண்டே!
இறவு படாமலிருந்த எண்மர் உலோக மாவீர்காள்!
பறவை யறையா! உறகல்! பள்ளியறைக்குககறிக்
கொண்மின்"

இவரது திருவடிகளைத் திருவுள்ளத்தில் எப்போதும் உடையவர் உடையவர்.

சோராத காதல் பெருஞ் சுழிப்பால் தொல்லை மாலை
ஒன்றும் (சிறிதும்)
பாராதவனைப் பல்லாண்டு என்று கூப்பிடும்
பான்மையன் தாள்
பேராத உள்ளத்து இராமாநுசன் தன் பிறங்கிய சீர்
சாராமனிசரைச் சேரேன், எனக்கு என்ன தாழ்வு
இனியே!"

பெரியாழ்வார் மணமுடைய மாலையை—பூமாலையைச் சாற்றிய பெருமாளுடைய திருத் தோள்களுக்கு மணமாலையும் சாற்றியவள் ஸ்ரீ ஆண்டாள். வேதத்தின் உயர்வு குறைந்து உலக முழுவதும் கலி புருஷனின் காலம் ஓங்கியிருந்த சமயம்.

ஆண்டாளுடைய அருள் நிரம்பியவர் இராமாநுசர். வேதம் அனைத்திற்கும் வித்தான திருப்பாவையால் உலகை மீண்டும் பக்திமார்க்கத்தில் திருத்திக் கொணர்ந்தவள் ஸ்ரீ ஆண்டாள். திருப்பாவை அநுசந்தானம் தான் திருவரங்கம் திருவீதியில் பிட்சைக்கு எழுந்தருளிய போதும்.

திருப்பாவை ஜீயர் எனப் போற்றப்படுவார்.
நம் பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானவள் தானே ஸ்ரீ
ஆண்டாள்!

இதனால் தான் திருவரங்கம் திருப்பதியிலே நடைபெறும் திருவாய் மொழி விழாவிலே எம்பெருமானார் தமது தங்கையான ஸ்ரீ ஆண்டாளின் சார்பிலே நாச்சியார் திருமொழி மரியாதைகளைப் பெறுகிறார்,

தாழ்வு ஒன்று இல்லா மறை(யும்) தாழ்ந்து தலம்
முழுதும் கலியே
ஆள்கின்ற நாள் வந்து அளித்தவன் காண்மின்! அரங்கர்
மௌலி (யில்)
சூழ்கின்ற மாலையைச் சூடிக்கொடுத்தவள் தொல்
அருளால்
வாழ்கின்ற வள்ளல், இராமாநுசன் என்னும்
மாமுனியே!

திருப்பாவையானாலும் சரி, நாச்சியார் திருமொழியானாலும் சரி, ஸ்ரீ ஆண்டாள் உடனிருந்தே சக பக்தர்களையும் அழைத்துக் கொண்டு நோன்பு நோற்றாள், எம்பெருமானை அநுபவித்தாள். திரு மங்கை மன்னனும் நிழலில் ஒதுங்குவான், உயரத்தொடுவான், தாழ்ஊதுவான்

நீர்மேல் நடப்பான். இவரோடு கோஷ்டியாகவே திவ்ய தேசந்தோறும் சென்றுஅனுபவித்தார். பொருளிருந்தாலும், பொருளற்று இருந்தாலும் ஸ்ரீ வைணவ ததீயாராதனையை விடவில்லை. இறைவனை எண்ணாதே இருப்பாரை, இறைப்பொழுதும் எண்ணார். செல்வத்தால் மயங்காத திருமங்கை மன்னனை இனிமையாக ஏற்றுக் கொண்டவர் உடையவர்.

''கள்ளர் பொழில் தென்னரங்கன் கமலப் பதங்கள்
நெஞ்சில்
கொள்ளா மனிசரை நீங்கிக் குறையல் பிரானடிக்கீழ்
விள்ளா அன்பன் இராமாநுசன் மிக்க சீலமல்லால்
உள்ளாது என் நெஞ்சு, ஒன்றறியேன் எனக்குற்ற
பேரியல்வே.''

திரு நெடுந்தாண்டகத்தில் திரு மங்கை மன்னரும் ஏரார் முயல் விட்டுக் காக்கை பின் போவரோ என இன்பந்தருபெரு வீட்டை எள்ளி நகையாடி நஞ்சு தான் கண்டீர் நம்முடை வினைக்கு நாராயணா என்னும் நாமம் என உபதேசித்த நீலன் தனக்கு இனியரான எம்பெருமானாரை வந்து எய்திவர்களும்; ''இன்பந்தரு பெரு வீடு வந்து எய்தில் என்? எண்ணிறந்த துன்பந்தரு நிரயம் பல சூழில் என்?'' என்றல்லவோ வாழ்வார்கள்.

முனியார், துயரங்கள் முந்திலும்; இன்பங்கள்
மொய்த்திடினும்
கனியார்; மனம் கண்ண மங்கை நின்றானை,
கலை பரவும்
தனியானையைத் தண்தமிழ் செய்த நீலன் தனக்கு
உலகில்
இனியானை, எங்கள் இராமாநுசனை வந்து
எய்தினரே!''

பரகால நாயகியும், பராங்குச நாயகியும் ஒரே மனம் உடையவர்கள். ஆயிரம் பாசுரங்களுக்கு மேல் அருளியவர்

கள். நம்மாழ்வார் நல்கிய நான்மறைக்கு ஆறங்கம் கூற அவதரித்தவர் ஆலி நாடராய் மங்கை மன்னன்.

வேதத்தின் சாரமே இவைகள்:

வேதம் தமிழ் செய்த மாறனையும் அவர் சீடராம் மதுர கவிகளையும், சிந்தையுள்ளே கொண்டவர் எம்பெருமானார்.

''எய்தற்கு அரிய மறைகளை ஆயிரம் இன் தமிழால்
செய்தற்கு உலகில் வரும் சடகோபனை, சிந்தையுள்ளே
பெய்தற்கு இசையும் பெரியவர் சீரை உயிர்கள் எல்லாம்
உய்தற்கு உதவும் இராமாநுசன் எம் உறு துணையே!''

நம்மாழ்வாரைப் பற்றிப் (பேச) நினைக்க ஆரம்பித்தது தான் தாமதம். இராமாநுசருக்கு நம்மாழ்வாரிடமும் திருவாய்மொழியிடமும் கொண்டுள்ள அபார ஈடுபாட்டை வெளியிடுகிறார் அமுதனார். ஆம்! திருவாய்மொழி, இராமாநுசருக்கு மகாநிதி! தாய்! தந்தை! குரு! ஏன் எம்பெருமானே கூடத்தான்!! திருவாய் மொழி ஏற்பட வில்லையானால் உலகம் வெறும் பாழ் தான்!

பகவத் விஷயம்: அதாவது பகவானுடைய திருக் கல்யாண குணங்களை விளக்கும் திருவாய்மொழிதான் எல்லாமும் நமக்கு! ஆழ்வார்களுடைய தென்மொழித் திவ்யப் பிரபந்தங்களை உடையவர் திவ்ய தேசங்களில் வேதமாகவே, ஓதும் முறையை ஏற்படுத்தவில்லையானால் உலகம் இவைகளை இழந்திருக்குமே. நம்மாழ்வார் இராமாநுசரைப் பவிஷ்யதி ஆசாரியர் (வருங்கால) எனக் காட்டியருளிய பாசுரம்

''பொலிக! பொலிக! பொலிக போயிற்று வல் உயிர்ச்
சாபம் நலியும் நரகமும், நைத்த நமனுக்கு இங்கு
யாதொன்றுமில்லை!
கலியும் கெடும் கண்டு கொண்மின்! கடல் வண்ணன்
பூதங்கள் மண்மேல்
''மலியப் புகுந்து இசைப்பாடி............''
''நாடகம் செய்கின்றவே..............!''

நம்மாழ்வார் எப்படி எப்படி எல்லாம்விளங்குகின்றதாம் நமது இராமானுசருக்கு:—

''உறுபெரும் செல்வமும் தந்தையும் தாயும் உயர்குருவும்
வெறிதரு பூ மகள் நாதனும், மாறன் விளங்கிய சீர்
நெறிதரும் செந்தமிழ் ஆரணமே (வேதம்) என்று
இந்நீள் நிலத்தோர்
அறிதர நின்ற, இராமாநுசன் எனக்கு ஆர் அமுதே!''

ஆழ்வார்கள் அருளிய அர்த்த பஞ்சகம் நம்மாழ்வார் அருளிய திருவாய் மொழியின் ஏற்றம் என்ன? அர்த்த பஞ்சக ஞானம் அளிப்பதே!

ஆழ்வார் என்றால் நம்மாழ்வார் தான்! அவரே உடல். ஏனைய ஆழ்வார்கள் இவரது உடலின் உறுப்புக்களே! அதாவது திருவாய் மொழியில் உள்ள திரண்ட கருத்துக் களை பங்கிட்டுப் பாடியிருக்கின்றார்கள்!

''மிக்க இறை நிலையும் மெய்யாம் உயிர் நிலையும்
தக்க நெறியும், தடையாகித்-தொக்கியலும்
ஊழ்வினையும், வாழ்வினையும் ஓதும் குருசையார்கோன்
யாழின் இசை வேதத்தியல்

திருவரங்கத்து அமுதனார் தமது நூற்றந்தாதி மூல மாக இராமாநுசரது புகழாகிய அமுதத்தையும், ஸ்ரீவைணவ தரிசனத்தின் அடிப்படைக் கொள்கைகளின் அர்த்தத் தையும் அமுதையும் குழைத்து பராங்குச, பரகால, எதிராஜ தரிசனத்தை அமுதமென அளிக்கிறார். அளவுக்கு மீறி னாலும் இந்த அமுதம் அமுதமே!

**மிக்க இறை நிலை (ஈஸ்வரன்)**

''நமக்கு மோட்சம்'' கிடைக்குமென்றால் மகிழ்ச்சி அடைகிறோம். ''நரகம் தான் முடிவு'' என்று ஏற்பட்டால் வருந்துகிறோம். இந்த நிலை ஏற்படுவது எப்படி? நம் முயற்சியால் தான் நாம் வாழ்கிறோம். பலன்களை

அடைகிறோம் என்று எண்ணினால்; ஆசாரிய கடாட்சத்தினால் நாம் வாழ்கிறோம் என்ற நம்பிக்கையும் பணிவும் ஏற்பட்டு விட்டால் மோட்சமும், நரகமும் நம் உணர்ச்சிகளைப் பாதிக்காது. ஆசார்யனான இராமாநுசர் இதை எப்படிச் செய்கிறார் அசித்தால் ஆன, அநாதி காலமாக உள்ள, இந்த உலகத்தில் பொருந்தி வாழ்கின்ற எல்லா ஆத்மாக்களுக்கும், ரட்சகனானவன் ஆச்சரியமான குணங்களை உடைய திருமால்தான் என்று மிக்க இறைநிலையால் போதித்தருள்கிறார். ஸ்வ அபிமானத்தாலே ஈச்வர அபிமானத்தைக் குலைத்துக் கொண்ட இவனுக்கு, ஆசாரிய அபிமானம் ஒழியக் கதியில்லை என்று (வடக்குத் திருவீதிப்) பிள்ளை பலகாலும் அருளிச் செய்யக் கேட்டிருக்கையாய் இருக்கும்!

"இன்பந்தரு பெரு வீடு வந்து எய்தில் என்? எண் இறந்த
துன்பந்தரு நிரயம் பல சூழில் என்? தொல் உலகில்
மன்பல் உயிர்கட்கு இறைவன் மாயன் என மொழிந்த
அன்பன் அனகன் இராமாநுசன் என்னை ஆண்டனனே.

மிக்க இறைநிலை ரட்சகத்தன்மையே! ஏன் இந்த ஆத்மாக்களை இறைவன் ரட்சிக்கவேணும்?

இது அவனுடைய கடமையா?

ஆம் இது அவன் கடமையே! உயிர் உடலை ரட்சிப்பது போல, உடலுக்கு உற்ற துன்பத்தை உயிர் விலக்குவது போல, ஆத்மாக்கள் இறைவனுக்கு உடலைப் போல அமைந்துள்ளதால் இந்த உடலை ரட்சிக்கும் உயிராகிய இறைவனே ரக்ஷகன். உயிர்வேறு உடல் வேறானாலும் உடலில் பொருந்தியுள்ளது உயிர்; உயிரை ஒட்டியுள்ளது உடல், சித் அசித்தாலான உலகத்தை உடலாகக் கொண்டவன் ஈஸ்வரன் நாராயணன், இந்த சரீர சரீரி சம்பந்தத்தைத் தெளிவாகச் சிறப்பித்துக்

காட்டியவர் இராமாநுசரே! ஈசுவரன் ஒருவனே என்னும் அத்துவைத, ஈசுவரன், ஆத்மா இரண்டே என்னும் துவைதக் கருத்துகளை இணைத்து அசித், சித், ஈஸ்வரன் என்னும் இவை மூன்றும் உண்மையே, ஈஸ்வரன் அசித்சித்தை உடலாகக் கொண்டு அவைகளைக் காக்கும் உயிராக உள்ளான் என்று விசிட்டாத்வைதத்தின் மேன்மையை வெளியிட்டவர் இராமாநுசரே.

இது ஒரு அற்புதம் தானே! ஞானக் கலக்கத்தை விலக்கிச் செம்மைப் படுத்துவது அற்புதம் தானே! இந்த ஞானத்தால் நம்மை ஆட்கொண்டாரே!

"அற்புதன், செம்மை இராமாநுசன் என்னை ஆளவந்த
கற்பகம், கற்றவர் காமுறு சீலன், கருதரிய
பற்பல் உயிர்களும் பல் உலகு யாவும் பரனது என்னும்
நற்பொருள் தன்னை, இந்தநானிலத்தே வந்து
நாட்டினனே!"

மெய்யாம் உயிர் நிலை:

இறைவனின் குணம் : ரட்சகத்வம் (காப்பாற்றல்)

ஆத்மாவின் குணம் : சேஷத்வம் (அடிமைப்பட்டது)

காப்பாற்றும் இறைவனுக்கு, அடிமைப்பட்டிருத்தல் அதாவது அரங்கனாகிய இறைவனது மலர் அடிக்கு ஆள் உற்றவராக இருந்து வாழ்தல். இப்படி வாழ்பவர்கள் மதிக்கத்தக்கவர்கள். நாம் விரும்பி அடையத்தக்கவர்கள். இப்படியாக வாழ்ந்தருளிய பெரியோர்களை ஆத்ம உறவினர்களாகத் துணை கொண்டு வாழ்ந்து காட்டியவர் இராமாநுசர். இறைவனுச்கு அடிமைப்பட்டிருத்தலாகிய சேஷத்வ ஞானத்தைப் பெற்ற பிறகு வேறு ஒரு அஞ்ஞானம் நம் மதிப்பிற்கு இலக்காகுமா?

பிள்ளைலோகாச்சாரியரின் திருவாக்கு:

"அஹம் அர்த்தத்துக்கு ஞான ஆநந்தங்கள் தடஸ்தம் என்னும்படி தாஸ்யயிறே அந்தரங்க நிரூபகம்." (ஸ்ரீவசன பூஷண சூத்திரம் 74)

அகம் : ஜீவாத்மா

தடஸ்தம் : புறம் பொருள்கள். தோற்றம்

தாஸ்யம் : அடிமை, இதுவே உண்மை நிலை.

''மற்றொரு பேறு (பலன்களை) மதியாது, அரங்கன் மலர் அடிக்கு ஆள்
உற்றவரே தனக்கு உற்றவர் ஆக்கொள்ளும் உத்தமனை
நற்றவர் போற்றும் இராமாநுசனை இந்நானிலத்தே
பெற்றனன், பெற்றபின் மற்று அறியேன் ஒரு பேதைமையே!''

மிக்க இறைநிலை தனிப்பட்டது, மெய்யாம் உயர்நிலை தனிப்பட்டது

காப்பாற்றுகிற இறைவன் வேறு, காப்பாற்றப்படுகிற ஆத்மா வேறு, ஆட்சி செய்கின்ற இறைவன் வேறு, அடிமை செய்கின்ற (அடிமை பூண்ட) ஆத்மாவேறு,

எனவே இவை இரண்டும் தனித்த தன்மை உடையவை, ஒன்றில் ஒன்று கலந்துவிடாது. இதற்குமாறாக 'ஆத்மா இறைவனிடம் இரண்டறக் கலந்து விடுகிறது' என்று வேதப் பொருளைத் தவறாகச் சொல்வது எல்லாம் பேதைமை தான்!

''தத்வமஸி'' ''ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி'' என்ற வேத வாக்கியங்களை இப்படித் தப்பு அர்த்தம் செய்வார்கள். இந்த வினைகளை எல்லாம் தம்முடைய தர்க்க ஞானத்தால் வென்றவர் இராமாநுசர்.

'சித், அசித், ஈஸ்வரன் என்ற மூலப் பொருள்கள் மூன்றே இவை மூன்றும் சத்தியமும் நித்தியமும். சித், அசித் என்றவை ஈஸ்வரனுக்குச் சரீரங்கள். எம்பெருமானின் திருவருளால் கருமவினைகள் ஒழிந்து பரம பதத்தில் இறைவனுக்குக் குற்றேவல் புரிவதும், பல்லாண்டு பாடுவதுமே மோட்சம்.

இவைகளை நிலை நாட்டி வெற்றி பெற்றவர் உடையவர்.

''பேதையர் வேதப் பொருள் இது என்று உன்னி,
பிரமம் நன்று (உயர்ந்த) என்று
ஓதி, மற்றெல்லா உயிரும் அஃது என்று உயிர்கள்
மெய்விட்டு
ஆதிப் பரனோடு ஒன்றாம் என்று சொல்லும்
அவ் அல்லல் எல்லாம்
வாதில் வென்றான், எம் இராமாநுசன் மெய்ம்மதிக்
கடலே.''

தக்க நெறி;

'சர்வ, தர்மாந், பரித்யஜ்ய, மாம், ஏகம், சரணம் வ்ரஜ' என்ற ஆறு பதங்களைக் கொண்ட சரம சுலோகத்தாலே, நாம் கடைப்பிடிக்கத்தக்க நெறியை கீதையில் போதித்தவன், பஞ்ச பாண்டவர்களின் பிரதிநிதியான அர்ச்சுனனுடைய தேர்த்தட்டில் எழுந்தருளிய கண்ணன் : தன்னையே சரணாகப் பற்ற வேணுமென்று. அர்ச்சுனன் மூலமாக உலகுக்குக் காட்டித்தந்தான்.

'கையும் உழவுக் கோலும், பிடித்த சிறுவாய்க் கயிறும், சேனாதூளி தூசரிதமான திருக்குழலும் தேருக்குக் கீழே நாற்றின திருவடிகளுமாய் நிற்கிற சாரத்ய வேஷத்தை ''மாம்'' என்று காட்டுகிறான்!'

கீதையிலே இறைவன் உபதேசித்தருளிய, நாம் அடையத்தக்க நெறியை எளிதில் நாம் தெரிந்துகொள்ளும் வகையில் எம்பெருமானார் கீதாபாஷ்யம் அருளிச் செய்தார்.

எம்பெருமானாருடைய இந்தப் பரம கருணைக்குத் தோற்று அவரைப் பணியும் நல்லோர்களைப் பணிகின்றன, என் ஆவியும் (ஆத்மா), சிந்தையுமே (மனது) என்று உள்ளம் கரைகிறார் அமுதனார்!

'ஆர் எனக்கு இன்று நிகர் சொல்லில்: மாயன் அன்று
ஐவர் தெய்வத்
தேரினில் செப்பிய கீதையின் செம்மைப் பொருள் தெரியப்
பாரினில் சொன்ன இராமாநுசனைப் பணியும் நல்லோர்
சீரினில் சென்று பணிந்தது என் ஆவியும் சிந்தையுமே.'

தடையாகித் தொக்கியலும் ஊழ்வினை:

தக்க நெறியை நாம் அடைவதற்கு உலக ஆசைகளே நமக்குத் தடை! காம, க்ரோத, மத, மாச்சரியத்திற்கு உப லட்சணம்,

இத்தடைகள் ஒன்றை ஒன்று பின்னிக் கிடக்கின்றன. ஒன்றுமற்றையதற்கு வழிகாட்டி! (பாதை) இந்தத்தடைகள் விதிவசத்தாலே நம்மை வந்து அடைகின்றன.

இத்தடைகளிலே வீழ்ந்து தவிக்கின்ற நம் ஆவியை (ஆத்மாவை) கை கொடுத்துத் தூக்கிக் காப்பாற்றியவர் இராமாநுசர். எப்படிக் காப்பாற்றினார்? லட்சுமி காந்தனாகிய திருமால்தான் நமக்கு எல்லோருக்கும் நாயகன், அவன் நம்முடைய எல்லாப் பாவங்களையும் அகற்றித் தூய்மை அளிப்பவன் என்று உபதேசித்தார். "போய பிழையும், புகு தருவான் நின்றனவும் தீயினில் தூசாகும்."

'ஆயிழையார் கொங்கை தங்கும் அக்காதல் அள்றழுந்தி
மாயும் என் ஆவியை வந்தெடுத்தான், இன்று மாமலராள்
நாயகன் எல்லாவுயிர்கட்கும் நாதன் அரங்கன் என்னும்
தூயவன், தீதில் இராமாநுசன் தொல் அருள் சுரந்தே!

பூரண வாழ்வு அல்லது புகழுடைய வாழ்வு நான்கு சேர்ந்ததாகும். அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு. இவ்வையே புருஷார்த்தங்கள். புருஷர்கள் அடையத் தக்கன. இன்பம் என்றால் சிற்றின்பம் எனப் பொருள் கொண்டனர் பலர். 'மூவடி மண் தா!' என வாமனன் கேட்டபோது குறுகிய

பொருள் கொண்ட மாவலிச் சக்கரவர்த்தியைப் போல, இன்பம் என்பது பேரின்பமே! அதுவும் கண்ணனிடம் செலுத்தும் பேர் இன்பமே என்பது இராமாநுசரின் திரு உள்ளம். நமது இன்பத்தை—காமத்தை—ஆசையைக் கண்ணனிடம் செலுத்தினால் அது பேரின்பமாகப் பரிமளிக்கிறது.

இப்படிக் கண்ணனை அடையப்பெறும் பேரின்பத்திற்கு உதவுபவைதாம் அறம், பொருள், வீடு என்று விளக்கம் தந்தார் இராமாநுசர். இவ்விதமான உயர்ந்த பொருள் களைக் காட்டிய போது, ஓங்கி உலகளந்த உத்தமனான திரிவிக்ரமனாகச் சேவை தருகிறார் எம்பெருமானார்!

வைணவர்தம் வாழ்வு என்னவென்றால் இறைவனை அடைந்து நாம் பெரும் பேரின்பத்திற்காகவே அறம் பொருள் வீட்டைப் பயன்படுத்த வேண்டுவதே!

'சேமம் நல் வீடும் பொருளும் தருமமும், சீரிய நல்
காமமும் என்று இவை நான்கு என்பர், நான்கினும்
கண்ணனுக்கே
ஆம், அது காமம், அறம் பொருள் வீடு இதற்கு என்று
உரைத்தான்
வாமனன் சீலன் இராமாநுசன் இந்த மண்மிசையே!''

கண்ணன் மீதுள்ள காமத்திவாலே அல்லது அவன் மீது காமம் ஏற்படுவதற்கு : 1. அறம் செய்கிறோம். 2, பொருள் ஈட்டுகிறோம். 3. வீட்டை அடைய விரும்புகிறோம்.

எம்பெருமானார் தரிசனத்தால் விளைந்தது என்ன?

ஆழ்வார்கள் அடி சூடும் எம்பெருமானாருடைய வைபவத்தாலே ஏற்பட்ட நன்மைகள் யாவை? தென் குருகூரில் திருவவதரித்து ஞானத்தை வாரி வழங்கிய வள்ளலான நம்மாழ்வாருடைய அர்த்த பஞ்சக ஞானத்தை வெளியிடும் திருவாய்மொழியாம் தமிழ் மறை வாழ்வு பெற்றது.

பிறரால் வெகு கஷ்டப்பட்டு நாட்ட முயன்ற நீச மதங்கள் செத்து ஒழிந்தன. நாராயணனே பரம் பொருள் என்று காட்ட ஏற்பட்ட வேதம் துணை கிடைத்துக் களித்தது.

எனவே, அனந்தாழ்வான் அருள்கிறார்:

'ஏய்ந்த பெரும் கீர்த்தி இராமானுச முனிதன்
வாய்ந்த மலர்ப்பாதம் வணங்குகிறேன் — ஆய்ந்த பெரும்
சீரார் சடகோபன் செந்தமிழ் வேதம் தரிக்கும்
பேராத உள்ளம் பெற!'

பட்டர் மதிப்பிடுகிறார்:

'வான் திகழும் சோலை மதிள் அரங்கர் வண்புகழ்மேல்
ஆன்ற தமிழ் மறைகள் ஆயிரமும்—ஈன்ற
முதல் தாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்த
இதத்தாய் இராமாநுசன்'

''நாட்டிய நீசச் சமயங்கள் மாண்டன! நாரணனைக்
காட்டிய வேதம் களிப்புற்றது!'' தென் குருகை வள்ளல்
வாட்டம் இலா வண் தமிழ் மறைவாழ்ந்தது மண் உலகில்
ஈட்டிய சீலத்து இராமாநுசன்தன் இயல்பு கண்டே!''

இதனால், யாழின் இசை வேதத்து இயலான நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழியை அநுபவித்த இராமாநுசர் அடைந்த நிலை என்ன?

திருவாய்மொழி அநுபவத்தாலே, ஆனந்தப் பரவசமாகி ஆனந்தம் அளிக்கும் பக்திக் கன்னமதமும் கபோல மதமும் பெருகி வழிய ஆரம்பித்தனவாம். இராமாநுசன் ஆனந்தம் பெருகுமத வேழமானார். இந்த இராமாநுசமுனி வேழம்

தமிழ்மறையாம் வேதத்தைத்தண்டமாகப் பற்றிக்கொண்டு தன் உபதேசத்தாலே பிறமதங்களைத் தாக்கியதாம் :

பலன் ; குதர்க்கவாதியர்களுடைய வாழ்வு அற்று விட்டது! இதோ இந்த இராமாநுசமுனி வேழத்தைச் சேவிக்கலாம்.

மாமுனிகளின் விருது கட்டியம்—வெற்றி முழக்கம்!
'சாருவாக மதம் நீறு செய்து சமணச் செடிக்கனல் கொளுத்தியே!
சாக்கியக் கடலை வற்றுவித்து மிகு சாங்கியக் கிரிமுறித்திட
மாறு செய்திடு கணாதவாதியர்கள் வாய்தகர்த்துஅற மிகுத்துமேல்
வந்த பாசுபதர்சிந்தையோடும் வகை வாது செய்த எதிராசனார்,
கூறுமா குருமதத் தொடோங்கிய குமாரிலன் மதமவற்றின்மேல்
கொடிய தர்க்க சரம் விட்டபின் குறுகி மாய வாதியரை வென்றிட
மீறி வாதில் வருபாற்கரன் மதவிலக்குடிக்கொடி யெறிந்து போய்
மிக்க யாதவ மதத்தை மாய்த்த பெருவீரர் நாளும் மிகவாழியே'"

'பண் தரு மாறன் பசும் தமிழ் ஆனந்தம் பாய் மதமாய் விண்டிட, எங்கள் இராமாநுசமுனிவேழம், மெய்ம்மை கொண்ட நல் வேதக் கொழுந்தண்ட மேந்திக் குவலயத்தே
மண்டி வந்து ஏன்றது, வாதியர்காள்! உங்கள் வாழ்வு அற்றதே!"

நம்மாழ்வார் அருளிய இருக்கு வேதத்தின் சாரமான திருவிருத்தத்தையும், யசுர் வேதத்தின் சாரமான திருவாசிரியத்தையும், அதர்வண வேதத்தின் சாரமான

பெரிய திருவந்தாதியையும், சாந்தோக சாமவெதத்தின் சாரமான திருவாய்மொழியையும் சேவித்த இராமானுசர் பெருகு மத வேழமானார்.

மாறன் பணித்த இந்நான்மறைக்கு, ஆறங்கம் கூற அவதரித்த திருமங்கை மன்னன் அருளிய ஆறு பரபந்தங்களையும் சேவித்த எம்பெருமானார் வேழத்திற்கும் வேந்தனான சிங்கமாக மாறி, பிற சமயப் புலிகளை அடக்கினார்.

'கலி மிக்க செந்நெல் கழனிக் குறையல்
கலைப் பெருமான்
ஒலி மிக்க பாடலை உண்டு தன் உள்ளம் தடித்து
அதனால்
வலி மிக்க சீயம் இராமாநுசன் மறைவாதியராம்
புலிமிக்கது என்று இப்புவனத்தில் வந்தமை
போற்றுவனே!'

திருமங்கை மன்னலின் திவ்ய பிரபந்தங்கள் நம் மனதில் தங்க வேணுமானால், அதற்கு உதவுவதும் இராமாநுசருடைய திருவருள் தான்

எம்பார் அருளிச் செய்வது,

'எங்கள் கதியே! இராமாநுச முனியே!
சங்கை கெடுத்து ஆண்ட தவராசா!— பொங்கு புகழ்
மங்கையர் கோன் ஈந்த மறை ஆயிரம் அனைத்தும்
தங்கும் மனம் நீ எனக்குத்தா!'

திருமங்கை மன்னன், பெரிய திருமொழி மூலம் அருளிய முதல் உபதேசம் பெரிய திருமந்திரமான நாராயணா என்னும் நாமத்தின் மகிமையே.

"குலம் தரும், செல்வம் தந்திடும் அடியார்
படுதுயராயின வெல்லாம்
நிலந்தரம் செய்யும் நீள்விசும்பு அருளும்
அருளொடு பெருநில மளிக்கும்

வலந்தரும் மற்றுந்தந்திடும் பெற்ற
தாயினுமாயின செய்யும்
நலம்தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம்.''

இந்த நாராயண நாமத்தை எப்பொழுதெல்லாம் சொல்ல வேணும்; யாரெல்லாம் சொல்ல வேணும் :

''துஞ்சும் போதழைமின்! துயர் வரில் நினைமின்
துயர் இலீர் சொல்லிலும் நன்றாம்!
நஞ்சு தான் கண்டீர் நம்முடை வினைக்கு நாராயணா
என்னும் நாமம்.''

''தேனும் பாலும் அமுதம் ஆய திருமால் திரு நாமம்
நானும் சொன்னேன் நமரும் உரைமின்நமோ
நா ராயணமே!''

என்று நாவில் பரவி நெஞ்சில் கொண்டு உபதேசித்துக் கொண்டிருந்த திருமங்கையாழ்வார் பெரிய திருமந்திரத்தின் உட்பொருளைத் தெரிந்து கொண்டது தான் தாமதம், தமது உபதேசத்திற்கு ஒரு திருப்பத்தைத் தந்தருளுகிறார்.!

பெரிய திருமந்திரத்திற்குள்ளே அறியவேண்டும் அர்த்தம் எல்லாம் உண்டு, அதாவது அர்த்த பஞ்சக ஞானமும் உண்டு. ஆனால் நான் அறிந்து கொண்ட சிறப்பு அர்த்தம் வேறு

''நாராயணாய'' என்று இறைவன் திருவடிகளிலே அடிமைப் பட்டுக் கிடப்பவர்களுடைய திருவடிகளிலே ''நம'' என்று நான் அடிமைப்பட்டுக் கிடப்பேனாகவும்! பகவத் சேஷத்துவம் முற்றவும் பாகவத சேஷத்வம் சித்தித்தது. இனி நாராயணன் தவிர மற்ற ஒரு தெய்வம் உண்டென்பார்களுடன் உறவும் கிடையாது!

''மற்றும் ஓர் தெய்வம் உளது என்று இருப்பாரோடு
உற்றிலேன் உற்றதும் உன் அடியார்க்கு அடிமை
மற்றெல்லாம் பேசிலும் நின் திரு எட்டெழுத்தும்
கற்று, நான் கண்ண புரத்துறை அம்மானே!''

''அம் கமலத் தடவயல் சூழ் ஆலி நாடன்!
அருள் மாறி! அரட்டமுக்கி, அடையார் சீயம்
கொங்குமலர்க் குழலியர் வேள் மங்கை வேந்தன்
கொற்றவேல் பரகாலன் கலியன்''

கடைந்து எடுத்த பாகவத சேஷத்வமாகிற 'உற்றதும் உன் அடியார்க்கு அடிமை என்ற அமுதத்தையே;

''எம்பெருமானார் திருநாமத்தால்
''முனி தந்த நூற்றெட்டுச் சாவித்திரி என்னும்
நுண்பொருளை
கனி தந்த செஞ்சொல் கலித்துறை அந்தாதி
பாடித்தந்தான்
புனிதன் திருவரங்கத்து அமுதாகிய புண்ணியனே!''

அமுதரின் ஆசை!

''இன்புற்ற சீலத்து இராமாநுசா! என்றும் எவ்விடத்தும்,
என்புற்ற நோயுடல் தோறும் பிறந்து, இறந்து எண்ணரிய
துன்புற்று வீயினும் சொல்லுவது ஒன்று உண்டு! உன்
தொண்டர்கட்கே
அன்புற்றிருக்கும் படி, என்னை ஆக்கி அங்கு ஆட்படுத்தே!''

பத்து அவதாரங்கள் எடுத்துத் தோற்றான் இறைவன். இதைப் பத்து ஆழ்வார்கள் அவதரித்துத் தலைக்கட்டினர்!

எம்பெருமானும் எம்பெருமானாரும்;
''எம்பெருமானார் தரிசனம் என்றே இதற்கு
நம்பெருமாள் பேரிட்டு நாட்டி வைத்தார்—அம்புவியோர்
இந்தத் தரிசனத்தை எம்பெருமானார் வளர்த்த
அந்தச் செயல் அறிகைக்கா''

ஆண்டவனாகிய எம்பெருமானுடைய முயற்சியையும் எம்பெருமானாருடைய முயற்சியையும்ஒப்பிட்டுப்பார்த்தால் தெரியும், யார் முயற்சி பலனளிக்கிறது என்று! வேதங்களாகிற கடலிலே மூழ்கி மறைந்து கிடந்த நல்ல அர்த்தங்களை ஆராய்ந்து கீதையின் மூலமாக அர்ச்சுனனுக்குச் சாரதியாக விளங்கி உபதேசித்தான் உலகுக்கு

உலகம் அவைகளை மறந்து விட்டது! அபிமன்யு மரித்த போது அர்ச்சுனனே நிலை தவறினான்:

இராமானுசர் தமது பரம கருணையாலே ஸ்ரீ கீதாபாஷ்யம் அருளிச் செய்யவும் உலகம் சரணாகதி ஞானம் பெற்றது.

''அடல் கொண்ட நேமியன், ஆருயிர் நாதன்
அன்றாரணச் சொல்
கடல் கொண்ட ஒண்பொருள் கண்டளிப்பப் பின்னும்
காசினியோர்
இடரின் கண் வீழ்ந்திடத் தானும் அவ்வொண்பொருள்
கொண்டு அவர்பின்
படருங் குணன், எம் இராமானுசன் தன் படி இதுவே!''

அதனால் உற்றதும் உன் அடியார்க்கு அடிமை.
மற்றைய அவதாரங்களும் அப்படியே!
உயிரளிப்பான் எந்நின்ற யோனியுமாய்ப்
பிறந்தான் இமையோர் தலைவன்.

கல்கி அவதாரம் இனி ஏற்படும். எனவே இதுவரை கணக்குப்படி கடைசி அவதாரம் கிருஷ்ணாவதாரமே.

ஒவ்வொரு அவதார மூலமும் தன் திருக் கல்யாண குணங்களைப் பற்றி உலகுக்கு ஞானம் அளிக்க முயன்றான். கண்ணுக்கு எதிரே நின்று கண்ணனாக கீதா உபதேசம் செய்தான். உலகோர் அவன் பெருமையை, பரத்வத்தைக் கண்டு கொள்ளமாற் போனார்கள்.

அண்ணல் இராமாநுசன் வந்து அவதரித்தது தான் தாமதம், பெறுதற்கரிய ஞானத்தை உடனே அடைந்து நாராயணனே முழு முதற் கடவுள் என அறிந்து அவனுக்கு ஆட்பட்டனர். ஸ்ரீ பெரும்பூதூரில் நடைபெறும் ஸ்ரீ ஆதி கேசவப் பெருமாள் விழாவும் ஸ்ரீ எம்பெருமானர் விழாவும் இவர்களுடைய திருத்தேர் விழாக்கள் இதற்குச் சான்று பகரும்.

''மண் மிசை யோனிகள் தோறும் பிறந்து, எங்கள்
மாதவனே
கண்ணுற நிற்கிலும் காணகில்லார் உலகோர்கள் எல்லாம்
அண்ணல் இராமாநுசன் வந்து தோன்றிய அப்பொழுதே
நண்ணரு ஞானம் தலைக் கொண்டு நாரணற்காயினரே!''

எம்பெருமான் மக்களுக்கு மோட்சம் அளிப்பதனால் கடுமையான நிபந்தனைகளை விதிக்கிறான். அவன் அருளும் மோட்சத்தை அடைய நாம் ஞானம் பக்திரூபமாகச் பரிபச்குவமாகி, அந்த பக்தியினால் நித்யமும் உருகிக் கொண்டிருக்க வேணும்.

நம்முடைய மனது ஈனமானது: எம்பெருமானார் இதை அறிந்தவர். அதனால் ஒரு வித நிபந்தனையும் போடாமல் தன் கிருபையின் காரணமாகவே நமக்கு மொட்சத்தை அருள வல்லவர். இவரை கிருபா மாத்திர பிரஸந்நாசாரியர் என்று போற்றுகிறோம். இதனால்,

''ஞானம் கனிந்த நலம் கொண்டு நாள்தோறும்
நைபவர்க்கு
வானம் கொடுப்பது மாதவன் வல்வினையேன்
மனத்தில்
ஈனம் கடிந்த இராமாநுசன் தன்னை எய்தினர்க்கு அத்
தானம் கொடுப்பது தன் தகவு என்னும் சரண்
கொடுத்தே!''

என்கிறார் அமுதனார்.

வேதம் விதிக்கின்ற வழிகளை மனத்தால் தேர்ந்து கொள்ளாமல் வாழ்கின்ற பாவிகளை எம்பெருமான் தன் கொலை ஆழியாலே தண்டித்து விடுகின்றான்.

கருணை நிரம்பிய குணங்களை உடைய எம்பெருமானாரிடம் தண்டிக்கும் குணமே கிடையாது. வேத மார்க்கத்தை அறிந்து அதன்படி நடவாதவர் களைத் தம் கருணை நிரம்பிய சிந்தையினாலே அவர்கள் திருந்தும் படியான ஒரு உபாயத்தை உபதேசத்தைக் கடைப்பிடித்துத் திருத்தி அந்த எதிர் வாதர்களின் நிலையைச் சிதைத்து விடுவார்.

"தேரார் மறையின் திறம் என்று மாயவன் தீயவரைக்
கூர் ஆழி கொண்டு குறைப்பது கொண்டல் அனைய
வண்மை
ஏரார் குணத்து எம் இராமாநுசன் அவ் வெழில் மறையில்
சேராதவரைச் சிதைப்பது அப்போது ஒரு சிந்தை செய்தே!"

எம்பெருமானுக்கும் எம்பெருமானார்க்கும் ஓரே போட்டிதான். எம்பெருமானோ ஆத்மாக்களுக்கு அந்தர் யாமியாயிருந்து, அநுகூலங்களைச் செய்து கொண்டு கடைத் தேற்றிக் கொண்டு இருப்பினும், எம்பெருமானார் வைகுண்ட வாசத்தை விட்டு பூலோகத்தில் அவதாரம் செய்து உய்யும் வழி அருளும் நான்கு வேதங்களையும் வளரச் செய்து அதனால் ஆத்மாக்கள் மோட்சம் அடையும் படி அருளினார். எம் பெருமான் சுதந்திரன். அந்தர்யாமி யாக இருப்பினும் நிக்ரக குணமும் உண்டு அவனிடம்: உடையவரிடம் அது இல்லை.

"உள் நின்று உயிர்களுக்கு உற்றனவே செய்து, அவர்க்கு
உயவே
பண்ணும் பரனும் பதிவு இலனாப்படி பல் உயிர்க்கும்

விண்ணின் தலை நின்று வீடு அளிப்பான் எம்
இராமாநுசன்
மண்ணின் தலத்து உதித்து (உய்) மறை நாலும்
வளர்த்தனனே!''

கைம்மாறு கருதாது கருணை மழை பொழிகின்ற மேகம் எம்பெருமானார். இவரைச் சேவிப்பதே ஆனந்தம். கையிலே நெல்லிக்கனியை வைத்துக் காட்டுவது போல சாக்ஷாத் கண்ணனை எழுந்தருளப்பண்ணி அவனைச் சேவிக்க நியமித்தாலும் அந்தக் காட்சியைக் காண என் கண் கூசும், எம் பெருமானாரைச் சேவிக்கின்ற போது ஏற்படும் சீர்மைகளைத் தவிர்த்து வேறொன்றில் கண் வைக்கலாமோ!

எம்பெருமானாரைச் சேவிக்கையிலே சம்சாரக் குழியில் கிடந்தாலென்ன மோட்ச சாம்ராஜ்யத்தில் மூழ்கினாலென்ன. இவைகளின் உணர்ச்சி மேலோங்குமா?

''கையில் கனி ்ன்னக் கண்ணனைக் காட்டித் தரிலும்,
உன் தன்
மெய்யில் பிறங்கிய சீர் அன்றி வேண்டிலன் யான்,
நிரயத்
தொய்யில் கிடக்கிலும்,சோதிவிண் சேரிலும்,
இவ்வருள் நீ
செய்யில் தரிப்பன், இராமாநுச என் செழுங்
கொண்டலே!''

தேங்கின மடுக்கள் போல அர்ச்சாவதாரம். அர்ச்சையிலே சிறந்தவன் கோயில் அரங்கன்; சிந்தைக்கும் எட்டாத பிரளய காலத்திலே உடலும் அதனுள் ஐம்புலன்களும் அமையப் பெறாமல் உழலும்போது, அர்ச்சையிலே உள்ள தன்னை வணங்க நமக்கு உடல் உறுப்புகளை அருளுகிறான். அந்நிலையே நமக்குத் தஞ்சம்.

''திருக்கையிலே விடித்த திவ்ய ஆயுதங்களும், வைத்து அஞ்சல் என்ற கையும், கவித்த முடியும், முகமும் முறுவலும்

ஆசன பத்மத்திலே அழுத்தின திருவடிகளுமாய் நிற்கிற நிலையே நமக்குத் தஞ்சம்.'' அப்படி நின்றருளிய அரங்கனும் தன் திருவடிகளைக் காட்டிக் கொடுக்கவில்லை. ஆனால் எம்பெருமானார் நமக்கு அந்தத் திருவடிகளே தஞ்சம் என்று காட்டித் தந்தருளி நம்மை உய்வித்தார். சரணாகதி கத்யம், ஸ்ரீரங்ககத்யம், ஸ்ரீ வைகுண்ட கத்யம் ஆகிய கத்யத்ரயம் அருளி, அரங்கன் செய்ய தாளிணை யோடு ஆர்த்தான்.

'சிந்தையினோடு காரணங்கள் யாவும் சிதைந்து, முன்னாள்
அந்தம் உற்று ஆழ்ந்தது கண்டு, அவை என் தனக்கு அன்று
அருளால்
தந்த அரங்கனும் தன் சரண் தந்திலன் தான் அது தந்து
எந்தை இராமாநுசன் வந்து எடுத்தனன் இன்று
என்னையே!''

அப்படியே அந்தத் திருவரங்கச் செல்வனார் தம் திரு உள்ளத்தில் சங்கல்பம் செய்து கொள்கிறார். திருக் கைகளிலே

''கையினார் சுரிசங்கு அனல் ஆழியர், நீள்வரை போல்
மெய்யினார், துளப விரையார் கமழ் நீள்முடி எம்
ஐயனார், அணி அரங்கனார், அரவின் அணை மிசை
மேய மாயனாராகி

செய்யவாயுடன் நம் கண் எதிரிலேரே வந்து சேவை சாதித்து நம் மனதை மருட்டி, உன்னை விடவே மாட்டேன் என்று மடியைப் பிடித்துக் கொண்டாலும், கீர்த்திப் பிரவா கத்திலே மிளிரும் எம்மெருமானாரல்லவா நம்மை ஈர்த்துக் கொண்டருளுகிறார்.

அவன், திருவரங்கத்து எம்பெருமான்!
இவர், திருவரங்கத்து எம்பெருமானார்!
எம்பெருமான் ஆர்? எம்பெருமானாரே!

''செய்த் தலைச் சங்கம் செழு முத்தம் ஈனும், திரு அரங்கர்
கைத் தலத்து ஆழியும், சங்கமும் ஏந்தி நங் கண்முகப்பே
மொய்யத்து அலைத்து உன்னை விடேன் என்று இருக்கிலும்
நின் புகழே
மொய்த்து அலைக்கும் வந்து இராமாநுச என்னை முற்றும்
நின்றே!''

**உடையவர் உயர்வும் அடியேனது தாழ்வும்.** இராமாநுசரது திருவடிகளே உபேயம்-அடையக்கூடிய லட்சியம். அந்த லட்சியத்தை அடைவதற்கு அந்தத்திருவடிகளே வழிகாட்டி உபாயம்.

இப்படியான மனத் திடம், விஸ்வாசம் கொண்ட ஆழ்வான், ஆண்டான் போன்றவர்களையும் ஆட்கொள்ளுகிறார்.

இந்தத் தெளிவு இல்லாத அடியேனையும் இந்தமகான்கள் எண்ணிக்கையில் வைத்து ஆட்கொள்கிறார், நீர் எல்லா பாத்திரத்திலும் நிறைவது போல. இப்படியான இராமாநுசரது நீர்மையை வாயால் பேசிவிட முடியுமா?

''பேறு ஒன்று மற்று இல்லை நின்சரண், அன்றி
அப்பேறளித்தற்கு
ஆறு ஒன்றும் இல்லை மற்று அச்சரண் அன்றி, என்று
இப்பொருளைத்
தேறும் அவர்க்கும் எனக்கும் உனைத் தந்த செம்மை
சொல்லால்
கூறும் பரம் அன்று இராமாநுசமெய்ம்மை கூறிடிலே!''

மேன்மக்களால் புகழப்படுபவர் இராமாநுசர். எதற்காகப் புகழ்கின்றனர் இவர்கள்? எனது தாழ்மைக்கு ஈடும் எடுப்பும் கிடையாது. இப்படியான அடியேனுக்குப் புகல் இராமாநுசரது அருள்தான். இராமாநுசரது அருளுக்குப் பாத்திரம் அடியேனைப் போன்றவர்களே. எனவே அடியே

னுக்கு அவரை விட்டால் கதி இல்லை: அவருக்கும் அடி யேனை விட்டால் கதி இல்லை. ஒருவருக்குப் பயன் மற் றொருவர் தான்!

''நிகர் இன்றி நின்ற என் நீசதைக்கு, நின் அருளின் கண் அன்றிப்
புகல் ஒன்றும் இல்லை, அருட்கும் அஃதே புகல்! புன்மையிலோர்
பகரும் பெருமை இராமாநுச இனி நாம் பழுதே
அகலும் பொருள் என்? பயன் இருவோருக்கும் ஆன பின்னே''

ஒரு பக்கம், ஒரு குணமும் இல்லாமல் குற்றமே நிறைந்துள்ள என்னையும் நோக்கி, இனிமேலும் ஒரு நல்ல குணத்தையும் தேடிக் கொள்ள முடியாத எனது தன்மையை யும் நோக்கினால், மறுபக்கம் தேவரீரது எண்ணிறந்த திருக்குணங்களையும் வைத்துப் பார்த்தால், இப்போது போல எப்போதும் அருள் செய்வதே நலம்.

இப்படித் தீர்மானிக்காமல் அடியேனிடம் ஏதாவது நன்மையுண்டா என்று தேவரீர் ஆராய்ந்தால் தேவரீ ருடைய கிருபையின் பலத்தை அறிந்தவர்கள் தேவரீரைப் பற்றி என்ன நினைக்கமாட்டார்கள்.

''என்னையும் பார்த்து என் இயல்பையும் பார்த்து, எண்ணில் பல் குணத்த
உன்னையும் பார்க்கில் அருள் செய்வதே நலம், அன்றி என்பால்
பின்னையும் பார்க்கில் என்பால் நலம் உளதே? உன் பெருங் கருணை
தன்னை என் பார்ப்பர்? இராமாநுச உன்னைச் சார்ந்தவரே''

ஒரு வித ஞானமும் இல்லாமல் தீவினையால் பற்றப் பட்டு போய் நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும்,

அழுக்கு உடம்பும் இந்நின்ற நீர்மையில்இருந்த அடியேனை, ஒரு கணப் பொழுதில், இனியான் உளுமை செய்து என்னைத் தன் உபதேசத்தாலே கேள்விச் செல்வனாக்கினார். உலகம் நிறைந்த புகழாளரான கருணையிலே மேகம் எனப்பொழியும் இராமாநுச புண்ணிய சிலர்.

''தெரிவுற்ற ஞாவம் செறியப் பெறாது,
வெம் தீவினையால்
உருவற்ற ஞானத்து உழல்கின்ற
என்னை, ஒரு பொழுதில்
பொருவற்ற கேள்வியன் ஆக்கி
நின்றான், என்ன புண்ணியனோ
தெரிவுற்ற கீர்த்தி இராமாநுசன் என்னும் சீர்
முகிலே!'' (82)

அடியேன், பல நல்ல குணங்களுக்கு இலக்காகி சரணாகதியாகிய பெரிய தர்மத்தைக் கடைப்பிடித்து மோட்சத்தை அடையலாம் என்ற பிரபன்னர்களுடைய (முமுட்சுக்களுடைய) திருக் கூட்டத்தைச் சேர்ந்தவன் இல்லை. தேவரீருடைய பாதங்களையே மோட்சம் என்று கொண்டு எளிதில் அவைகளை அடைவேன். மேகமெனக் கருணை மழை பொழியும் இராமாநுசரே! தேவரீர் இதைக் கடாட்சித் தருள வேணும்.

மோட்சம் என்பது ஆச்சாரியன் திருவடிகள் தான்!

''சீர் கொண்டு பேர் அறம் செய்து, நல் வீடு செறிதும்
என்னும்
பார் கொண்ட மேன்மையர் கூட்டன் அல்லேன்,
உன்பதயுகமாம்
ஏர் கொண்ட வீட்டை எளிதினில் எய்துவன், உன்னுடைய
கார் கொண்ட வண்மை இராமாநுச! இது கண்டு
கொள்ளே!'' (83)

அமுதனார் ஆனந்தக் கடலில் ஆழ்கிறார். தேவரீருடைய கல்யாண குணங்களைச் சிந்திக்க என் மனம் குழைகிறதே! என்னையும் அறியாமல் எனது நா 'எம் ஐயன் இராமாநுசன்' என்றழைக்கின்றது.

வினையின் ஆழத்தைக் கண்டவனான அடியேனது கைகளும் தேவரீரைத் தொழுகின்றன. கண்கள் தேவரீரைச் சேவிக்கத் துடிக்கின்றன. தேவரீருடைய திருக் கல்யாண குணங்கள் அடியேன் மனதில் குடி கொண்டு வளர்வதற்கு என்ன காரணமோ!

''நையும் மனம் உன் குணங்களை உன்னி' என் நா
இருந்து'' எம்
ஐயன் இராமாநுசன் என்று அழைக்கும் அருவினையேன்
கையும் தொழும், கண் கருதிடும் காணக் கடல்
புடை சூழ்
வையம் இதனில், உன் வண்மை என் பால் என்
வளர்ந்ததுவே!''

**இராமாநுச தாசர்கள் :**

இராமாநுசரை ஏதோ சாமானிய மனிதர் என்று நினைத்திருந்தேன். பக்திக் கண் கொண்டு பார்த்ததுதான் தாமதம். இவர் உலகத்தை வாழ்விக்க ஸ்ரீ வைகுண்டத்தி லிருந்தும் வந்து அவதரித்த நித்திய சூரியே எனத் தெளிவு பெற்றேன்.

அதனால் எனது கொடிய வினைகளை நீக்கிக் கொண்டேன். அவர் புகழ்ப் பிரவாகத்தை என் வாயில் மடுத்துக் கொண்டேன். நிறைவு பெற்றேன்! அவருடைய குணானுபவமே எனக்கு உண்ணும் சோறு, பருகும் நீர், தின்னும் வெற்றிலை எல்லாமாகப் பெற்றேன்.

மேலும் ஒரு மகத்தான திருப்பம் பெற்றேன்

இராமாநுசரது இணையடிகள் மூலம் அவருடைய தொண்டர்களுடைய பொன்னான திருவடிகளிலே நான்

அடிமைப்பட்டு விட்டேன். இராமாநுசனைத் தொழும் பெரியோர்களது திருவடிகளே சரணம் என்றுள்ளேன்! திருமங்கை மன்னன் பணித்தபடி உற்றதும்உன் அடியார்க்கு அடிமை என்ற நிலைக்கு வந்து விட்டேன்.

"கண்டு கொண்டேன் எம் இராமாநுசன் தன்னைக்
காண்டலுமே
தொண்டு கொண்டேன் அவன் தொண்டர் பொன்
தாளில், என் தொல்லை வெந்நோய்
விண்டு கொண்டேன், அவன் சீர் வெள்ள வாரியை
வாய் மடுத்து இன்று
உண்டு கொண்டேன், இன்னம் உற்றன ஓதில்
உலப்பில்லையே!"

**பாகவதர் பெருமை :**

கடல் அளவாய திசை எட்டினும் தம் புகழ்க் கதிரைப் பரப்பியுள்ள இராமாநுசரை விட்டு, ஏன்! உங்களுடைய மாபாவங்களைக்கழுவிய கருணை மேகமாம் இராமாநுசரை விட்டு அவருடைய தொண்டர்களுடைய பாதங்களிலா அடிமைப்படுகிறீர்கள்? அய்யோ! அவர்கள் எப்படி எல்லாம் வாழ்ந்து கிடந்தார்கள். முன்பு எவ்வளவு குற்றங்களைப் புரிந்தார்கள்! அவர்களுடைய பிறப்பு எத்தகையது! அவர் களுடைய நடத்தைகள் எப்படி என்றா அடியேனது மனதைக் கலைக்கின்றீர்கள்?

இந்த இராமாநுச பக்தர்கள், முன்பு எத்தனைக் குற்றங்கள் புரிந்திருப்பினும், என்ன பிறப்பை அடைந்தவர் களாயினும் என்ன நடத்தையுடையவர்களாயினும் அவர் களுடைய அக்குற்றம் அப்பிறப்பு அவ்வியல்பே அடியேனை ஆட்கொள்ளா நின்றது.

அவர்கள் குற்றமே நற்றம் அடியேனுக்கு, இராமா நுசரின் தொண்டர்களாகி விட்டால்.

''திக்குற்ற கீர்த்தி இராமாநுசனை, என்
செய்வினையாம்
மெய்க்குற்றம் நீக்கி விளங்கிய மேகத்தை மேவும்
நல்லோர்
எக் குற்றவாளர், எது பிறப்பு ஏது இயல்பாக நின்றோர்
அக்குற்றம்? அப்பிறப்பு அவ்வியல்வே நம்மை யாட்
கொள்ளுமே!''

இராமாநுசரைப் புகழ்கின்றனர் அவருடைய பக்தர்கள்.

அன்னிய மதங்களைக் காட்டிக் கலகம் விளைவிப்பார்களை ஒழித்தருளினவர் நம் இரர்மாநுசரே; வேத நெறிதழைத் தோங்கச் செய்தவர் இராமாநுசரே!

இத்தகைய நிறைகுடங்களுடன் என்னையும் ஒருசமமாக வைத்துக் கொள்ளப்பெற்றேன்.

புழு, தேன் குழவியானது!

''கைத்தனன் தீய சமயக் கலகரை, காசினிக்கே
உய்த்தனன் தூயமறை நெறி தன்னை என்று உன்னி
உள்ளம்,
நெய்த்துஅன்போடு இருந்து ஏத்தும்நிறைபுகழோருடனே
வைத்தனன் என்னை இராமாநுசன் மிக்க வண்மை
செய்தே!''

குணங்களால் உயர்ந்தவர்களால் ஏற்றப்படுபவர் இராமாநுசர்.

இவரது திருநாம சங்கிர்த்தனத்தையே மறவாமல் வாழ்க்கை லட்சியமாக வைத்து வாழும் பக்தர்களைப் போற்றி அவர்கட்கு எல்லா தேசங்களிலும் எல்லாக் காலங்களிலும் உயர்த்தி தாழ்ச்சி பாராமல் எந்தவிதக் குற்றேவல்களையும் மனம், மொழி, மெய்களால் பிரியாமல் பிரியமுடன் இயற்றுவேன் அலுக்காமல்.

KOVILOOR VEDANTA MUTT



"'நல்லார் பரவும் இராமாநுசன், திரு நாமம் நம்ப
வல்லார் திறத்தை மறவாதவர்கள் யாவர்? அவர்க்கே
எல்லா இடத்திலும் எப்போதிலும் எத்தொழும்பும்
சொல்லால், மனத்தால் கருமத்தினால் செய்வன்
சோர்வு இன்றியே!''

அடியேனது வாழ்க்கை திசை திரும்பி விட்டது. இது வரை ஸ்ரீ உடையவரது திருவடிகளைப் பற்றாதவர்களைப் பற்றிக் கொண்டிருந்தேன். உலக பந்தங்களின் பற்றை விடாத அவர்களையே என் உற்றார்கள் என்று உழன்று நாடினேன். அவர்கள் பால் மனம் நைந்தேன்.

என் வாழ்வில் திருப்பம் ஏற்பட்டுவிட்டது. சுடர் மிகு சுருதியுள் மிக்க வேதியர்கள் போற்றும், கற்றோர் காமுறு சீலன் இராமாநுசரைத் தாம் உள்ளத்தில் எழுந்தருளப் பண்ணித் தொழும் பெரியோர்கள் தான் என்னை ஆளும் சுவாமிகள்.

ஆர் எண்ணும் நெஞ்சுடையார் அவர்எம்மை ஆள்வாரே

"பற்றா மனிசரைப் பற்றி, அப்பற்று விடாது அவரே
உற்றார் என உழன்று ஓடி நையேன் இனி, ஒள்ளியநூல்
கற்றார் பரவும் இராமாநுசனைக் கருதும் உள்ளம்
பெற்றார் எவர், அவர் எம்மை நின்று ஆளும் பெரியவரே''

அடியேன் தினே தினே வளர்ந்து வரும் வல்வினையான பிணியால் பிணைப்புண்டவன்; பக்தியாகிற வினையில் பரமபக்தியாகிற நல்வினையில், சரணாகதி மார்க்கமாகிற மிக்க நல்வினையில் ஊக்கமும் நம்பிக்கையும் கொள்ளாதவன்; கெட்ட நாற்றங்களுக்கு உறைவிடமான ஊன்பொதிந்த உடல் குலையும் வரையில், துணையில்லாமல் இதையே பூஷணமாகத் தரித்தும், அதனாலே விழுந்தும் கிடக்கும் அடியேனுக்கு நல் துணையாகக் கிடைத்தார்கள் இராமாநுச பக்தர்கள். இவர்களே என்னை ஆளும் இறைவர்கள், இராமாநுசரைக் கொண்டாடும் நெஞ்சுடையார் அவர் எங்கள் குல தெய்வமே;

"வளரும் பிணி கொண்ட பல்வினையால் மிக்கநல்வினையில்
கிளரும் துணிவு கிடைத்து அறியாது முடைத்தலை ஊன்
தளரும் அளவும், தரித்தும் விழுந்தும் தனி திரிவேற்கு
உளர் எம் இறைவர். இராமாநுசன் தன்னை உற்றவரே!"

1. சாருவாக மதம் நீறு செய்து!
2. சமணக் கொடிக்கு அனல் கொளுத்தியே!
3. சாக்கியக் கடலை வற்றுவித்து,
4. மிகு சாங்கியக் கிரி முறித்திட்!
5. மாறு செய்திடு கணாத வாதியர்கள்'

வந்த பாசுபதர் சிந்தை ஓடும் வகை வாது செய்த எதிராசனார், கூறும் மாகுரு மதத்தோடோங்கிய கொடிய தர்க்க சரம் விட்ட பின், குமாரிலன் மதம் அவற்றின் மேல் மீறிவாதில் வரு பாஸ்கரன் மதம் மிக்க யாதவ மதத்தை மாய்த்த பெரு வீரர் நாளுமிக வாழியே!

"பொருந்திய தேசம், பொறையும் திறலும் புகழும் நல்ல
திருந்திய ஞானமும் செல்வமும் சேரும், செறுகலியால்
வருந்திய ஞாலத்தை வண்மையினால் வந்து எடுத்து
அளித்த
அருந்தவன் எங்கள் இராமாநுசனை அடைபவர்க்கே!"

**ஐந்து ஆச்சார்யர்கள் :**

ஸ்ரீ பெரும்பூதூரில் திரு அவதரித்த இளையாழ்வார் பெரிய நம்பிகளிடம் திருவிலச்சினை பெற்று, அருளாளன் நியமனப்படி அவரை ஆசார்யனாக ஏற்றார் அவர் திருவடிகளிலே மதுராந்தகத்திலே மந்திரார்த்னமான துவயத்தின் பொருளையும் சேவித்தார். மதுராந்தகமும் இதனால் துவயம் விளைந்த பூமியாயிற்று. திருமலையில்

தமது தாய் மாமனான திருமலை நம்பிகள் திருவடிகளிலே ஸ்ரீராமாயணக் காலட்சேபம் சேவித்தார், இலட்சுமணமுனி.

திருக்கச்சி நம்பிகள் மூலமாக அருளாளனிடம், ஆறு வார்த்தைகள் அருளப்பெற்றார் **இராமாநுச முனி;** திருமாலையாண்டான் பக்கலிலே திருக்கோட்டியூர் நம்பியின் நியமனப்படி திருவாய்மொழிக் காலட்சேபம் சேவித்தார். தமது பரமாச்சாரியரான ஸ்ரீ ஆளவந்தார் நியமனப்படி திருக்கோட்டியூர் நம்பிகள் பக்கலிலே திருமந்திரார்த்தம் சேவிக்கத் திருவரங்கத்திலிருந்து திருக்கோட்டியூருக்கு 17 முறை எழுந்தருளினார் **எதிராசர்; ஸ்ரீ உடையார்** இவ்விதமாக எழுந்தருள்வதையும், சோகத்துடன் பெரிய கோயிலுக்குத் திரும்புவதையும் கண்ட திருக்கோட்டியூர் சுவாமிகள் **ஸ்ரீபாஷ்யகாரரைக்** காரணம் கேட்கவும், திருக்கோட்டியூர் நம்பி பக்கலில் திருமந்திரார்த்தம் சேவிக்க வந்து போய்க் கொண்டிருப்பதாக விண்ணப்பித்தார்.

திருக்கோட்டியூர் சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளினார்கள்:—

"தாம் இருக்கிற இடமே தெரியாமல் உள்ள இந்த திருக்கோட்டியூர் நம்பிக்குத் திருமந்திரார்த்தம்தெரியும்என்றால் அது எங்களுக்குத் தெரியாதா? அப்படித் தெரிந்திருந்தால் அடியோங்களுக்குச் சாதித்திருப்பாரே! 17 தடவை வந்து போகும் உமக்காவது உபதேசித்திருப்பாரே! அதெல்லாம் இந்த நம்பிக்குத் தெரியாது காணும்; ஆகையால் நீர் மறுபடியும் வந்து சிரமப்படாதீர்கள்!" என்றார்கள்.

ஸ்ரீ ஆளவந்தாரின் நியமனம் ஆகையினாலே நம் **கோயிலண்ணரும்,** மகாபாரதம் 18 பர்வம், பாரதப் போர் 18 நாள், அஷ்டாதசரகசியங்கள் 18, கீதை 18 அத்தியாயம் புராணங்கள் 18 ஆகையாலே.

18வது முறையாகச் சென்று நாம் சேவித்தால், அந்த நம்பிகளும் ஆவாவென்று திருமந்திர அர்த்தத்தை அருள்வாரென்று திடமாய் நம்பி திருக்கோட்டியூருக்குஎழுந்தருளினார்.

நம்பிகளும், திருக்கோட்டியூர் ஸ்ரீ சௌம்மிய நாராயணப் பெருமாள் சந்நிதியிலே, நரசிம்மர் எழுந்தருளியுள்ள ஒரு இருட்டான இடுக்கிற்கு **சடகோபன் பொன்னடியாம்** ஸ்ரீ இராமாநுசரை அழைத்துப் போய்த் தன் அடிகளைக் காட்டித் தாம் அருளப்போகும் திருமந்திரார்த்தத்தை ஒருவருக்கும் வெளியிடக் கூடாதென்றும், அப்படி வெளியிடின் நரகம்தான் சித்திக்கும் என்றும் உறுதி வாங்கிக் கொண்டு திருமந்திரார்த்தத்தைச் சாதித்ததே தாமதம்! ஆகாசத்தை எட்டிப் பிடிக்கும் ஏற்றக் கோல் பாதாளத்தில் கிணற்று நீரை அடைவதற்காகத் தன்முனையில்கட்டியுள்ள சாலைக் கீழே குனிந்து கொண்டுவந்து நீரை முகந்து கொள்வது தான் தாமதம், உடனே உயரக் கிளம்புகிறது கிணற்றைத் திரும்பிக் கூடப் பாராமல் தன்னை எதிர் நோக்கியிருக்கும் வாய்க்காலையும் வயலையும் நினைத்து! நம் **திருப்பாவைச்சீயரும்** அவ்விதமே கிளம்பி, திருக்கோட்டியூர் கோபுரம் ஏறித் திருமந்திரார்த்தத்தைச் சகலருக்கும் அருளிய பிறகே அமைதி பெற்றார். காரணம், இந்த சரீரம் பரோபகாரத்துக்காகவே; தனக்கென வாழார் பிறர்க்குரியாளர்—பகுத்துண்டு பல்லுயிரோம்புதல் நூலோர் தொகுத்தவற்றுள் எல்லாம் தலை எனப்படுதலால், இதனைப் பொறாது பொங்கி எழுந்த கோட்டியூர் நம்பிகட்கு நம் பூதபுரீசரும் திருமந்திரார்த்தத்தைச் சேவித்த கோஷ்டியார் அனைவருக்கும் பரமபதம் சிந்திப்பது நிச்சயமானால், அதற்காகத்தாம் ஒருவரே நரகம் புகநேரின் என்? என விண்ணப்பிக்கவும்,

நீர்ப்பண்டமாய் உருகிவிட்ட நம்பிகளும், நம் **தேசிகேந்திரரைக்** கட்டித் தழுவிக் கொண்டு "எம்பெருமான் கருணைக் கடல்; ஆனால், கருணையில் எம்பெருமானையும்

விஞ்சிய நீர் கருணைப் பெருங் கடல் தான்; கருணையிலே எம்பெருமானைவிட உயர்ந்தவராகச் சேவை சாதிக்கின்ற படியினாலே நீர் எம்பெருமானார் தான்!'' என்று பாராட்டி மகிழ்ந்தாராம்.

''அடியேனது இந்த விண்ணப்பங்களைத் திருச்செவி சாற்றியருளும். இத் திருக்கோஷ்டியிலே எழுந்தருளியுள்ள சுவாமிகள் அனைவரும் போர உகந்தருளி அடியேனைக் குளிரக் கடாட்சித்தருள்வீர்கள்.

மேலும், வளர்த்ததனால் பயன் பெற்றோம்! வருக!, வருக! என்று இந்த மடக்கிளியைக் கைகூப்பி வணங்கவும் செய்வீர்கள்.

ஆனால் அடியேனது பொல்லாத—போறாத காலத்தினால் இவ்விண்ணப்பங்களை ஒரு கல்லூரி மாணவர்கள் கூட்டத்திலாவது அல்லது 10+2 பாடசாலை மாணவர்கள் கூட்டத்திலாவது அல்லது வீதியிலே ஒலிபெருக்கியுடன் நிர்மாணிக்கப்பட்ட மேடைக் கூட்டத்திலாவது வெளியிட்டால் என்ன ஆகும்.

மூலைக்கு ஒருவராகவும் திக்கிற்கு ஒருவராகவும் திசைக்கு ஒருவராகவும் பலர் நின்ற திருக்கோலமாகசேவை சாதித்து, கேள்விக் கணைகளை ஏவுவார்கள்.

'ஓ சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளையே! இவைகளைச் சொல்வதற்கு முன் கொஞ்சம் சிந்தித்திருக்க வேண்டாமா? பகுத்தறிவின் அடிப்படையில் இந்த நிகழ்ச்சியை அலசியிருக்க வேண்டாமா?

திருக்கோட்டியூர் நம்பிக்கு இராமாநுசர் பக்கல் அவர் பதிலைக் கேட்டதும் அளவுகடந்த அன்புபீறிட்டுக்கொண்டு வந்து விட்டதென்றால் அவர் எப்படி ஆச்சரியப்பட்டு இருக்க வேணும்.

திருமந்திரார்த்தத்தைத் தெரிந்து வைத்திருந்தும் ஊரிலுள்ள ஒருவருக்கும் சாதிக்காமல் 17 தடவை எழுந்தருளி மீண்ட ஸ்ரீ உடையவருக்கும் சாதிக்காமல் போன

தன்னுடைய கல்நெஞ்சை விட இராமாநுசரின் நெஞ்சு கனிந்த நெஞ்சு என்றல்லவா பாராட்டியிருக்க வேணும்.

பல்லாயிரக்கணக்கான பக்தர்கட்குத் திருமந்திரார்த் தத்தை உபதேசித்து அவர்கட்கு எல்லாம் பரம பதம் சித்திக்கும்படி அருளாமல்,

''பழுதே பல பகலும் போயின வென்று அஞ்சி''
அழுதேன். எனைப்போல் பிழை செய்வார் இப்புவியில்
உண்டோ?''
''உனைப்போல் பொறுக்கவல்லாரும் உண்டோ,
அனைத்து உலகும்''
''வாழப்பிறந்த எதிராச மாமுனிவா ஏழைக்கு
இரங்காயினி''
என்றல்லவா புலம்பியிருக்க வேணும்!

இராமாநுசர் திருமந்திரார்த்தத்தைத் தம் திருஉள்ளத் தில் தேக்கியதே தாமதம்,

''வான் கொண்டு கிளர்ந்து எழுந்த மாமுகிலைப்
போன்றும்,''
''சலங் கொண்டு கிளர்ந்து எழுந்த தண்முகிலைப்
போன்றும்''
''கார் காலத்து எழுகின்ற கார்முகிலைப் போன்றும்''

''மாமுத்த நிதி சொரியும் மாமுகிலைப்போன்றும் திருக் கோட்டியூர் சந்நிதிக் கோபுரத்தின் மீது ஏறி எழுந்தருளி பக்தர்களின் மனம் குளிரத் திருமந்திரார்த்தத்தைத்,

திரண்டேறிப் பொழிந்தமைக்கும் நிரந்தேறிப்
பொழிந்தமைக்கும்
மத யானை போல் எழுந்த இராமாநுச முனி
வேழத்திற்கு

வற்றிய வறண்ட சூல் கொள்ளாத மேகம் என வாழ்ந்த தம்மை ஒப்பிட்டுக் கொண்டு,

"காரேய் கருணை இராமாநுச!
இக்கடல் இடத்தில்
ஆரே அறிபவர் நின் அருளின் தன்மை! அல்லலுக்கு
நேரே உறைவிடம் நான்! வந்து நீ என்னை உய்த்த
பின் உன்

சீரே உயிர்க்கு உயிராய் அடியேற்க்கு
இன்று தித்திக்குமே''

என்றல்லவா தம்மட்டில் இப்புகழ் மாலையை முடித்திருக்க வேண்டும்.

இத்துடன் அமையாமல் சிறப்புப் பட்டமும் கொடுத்துப் பாராட்ட வேணுமானால்,

நான் திருக் கோட்டியூர் நம்பி, நீர் பெரும்பூதூர் நம்பிகள் அல்லது நம்பியார் எனப் பாராட்டி இருக்கலாம்; அப்படிக்கில்லாமல் அதை விட்டு விட்டு அந்த அப்பாவி எம்பெருமானை இழுத்துப் போட்டு, அவனுடைய கருணையை விட, உம்முடைய கருணை அளவு கடந்துள்ள படியினாலே அவன் எம்பெருமான்! நீரோ எம்பெருமானார் என்றும், அவன் கருணாநிதி, நீர் கருணை மாநிதி என்றும் போற்றியது யாங்கனம் பொருந்தும்;என்று கடாவுவார்கள். இப்படி வெளியிலுள்ளவர் யாராவது கேள்வி கேட்டு மடக்கினால் என்ன சொல்வது?

இத்தகைய கேள்விகளை நாம் வரவேற்க வேண்டும்! இக்கேள்வியிலே நிகழ்காலத்தின் குரல், எதிர் காலத்தின் குரல்; இக் குரலுக்குச் செவி சாய்த்துப் பதில் அளிப்பதே நமது பெருங்கடமை, திருமந்திரார்த்தத்தைக் கேட்ட உடனே கோபுரம் ஏறி எல்லோருக்கும் கூறியமைக்காக இராமாநுசரை எம்பெருமானார் என்று போற்றினார் திருக் கோட்டியூரார் நம்பிகள்.

அப்படியானால் திருமந்திரார்த்தம் விஷயமாக எம்பெருமான் எப்படி நடந்து கொண்டான் என்பதைக்

கவனிக்க வேண்டியிருக்கிறது. இறைவன் எழுந்தருளியுள்ள நிலைகள் ஐந்து 1. பரம பதத்திலே பெரிய பிராட்டியாருக்கு துவயமந்திரத்தை உபதேசித்தருளினான். 2. வியூகமாகிற திருப்பாற்கடலிலே அவதியினால் அவசர மனுப் போடும் முனிவர் கட்கும் தேவர் கட்கும் அபயமளிப்பதே வேலை; உபதேசம் செய்ய இது இடமில்லை 3 அந்தர் யாமித்துவத்திலே அவனைப் பார்க்கவும் முடியாது, கேட்கவும் முடியாது! எனவே அங்கும் உபதேசத்திற்கு இடமில்லை. 4. விபவமாகிற அவதாரத்திலே, (a) வராகநயினாராக வராக சரம சுலோகத்தையும் (b) இராமபிரானாக ஸ்ரீ ராம சரம சுலோகத்தையும் (c) கண்ணனாக ஸ்ரீ கிருஷ்ண சரம சுலோகத்தையும் அருளினான்

**இதற்கும் ஆதியிலே இறைவன் :**

> ''மின்னுமா மழை தவழும் மேக வண்ணா!
> விண்ணவர் தம் பெருமானே அருளாய்! என்று
> அன்னமாய் முனிவரோடு அமரர் ஏத்த
> அருமறையை வெளிப்படுத்தினான்.''

**இதையே.**

கலைகளும் வேதமும் நீதி நூலும் தானும் மற்றை கற்பமும், சொல், பொருள் நிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும் நீர்மையால் அருளினான் என்று போற்றுகிறோம். ஆனால் இதுவரை திருமந்திரத்தை வெளியிடாத ஒரு குறையைத் தீர்த்து வைத்தான், அர்ச்சையிலே:

''பின்வானார் வணங்கும் சோதியாகி'' ''மண் மீது உழல்வாய்'' என்கிற படியே திருவதரியாச்சிரமத்திலே பதரி விருட்சத்தின் கீழ் பதரிநாராயணனாக எழுந்தருளி, திருமந்திரத்தை முதன் முதலாக வெளியிட்டான், வேதங்களிலும் சொல்லப்படாத குறையை நீக்கி ஆனால் எப்படி வெளியிட்டான்? தற்காலத்தில் இரட்டை வேடத்தில் ஒருவனே நடிப்பதைக் கண்டு வியக்கிறார்கள்!

இதை கௌரவமாகவும் சொல்லுகிறார்கள். மாட்டுக் கார வேலனைப் பார்த்தும் மகிழ்கிறார்கள். ஆனால் முதன் முதலில் இரட்டை வேடம் பூண்டவன் நமது மாட்டுக் கார கோபாலன்தான் இறைவன். ஒருவனே ஆசாரியனான வதரி நாராயணனாகவும் சிஷ்யனான ஒரு நர நாராயண னாகவும் தன்னையே இரு கூறாக்கிக் கொண்டு திருமந்திரத்தை வெளியிட்டான்.

ஓய்வு பெற்ற அதிகாரிகள் தாங்கள் ஒருவராகவே திண்ணையில் சீட்டுக் கட்டைக் குலுக்கிப்போட்டு, இரண்டு பக்கத்துக்கும் ஆடுவது போல!

திருமந்திரத்தை ஏன் வெளியிட்டான்? இதோ, பிள்ளை லோகாசாரியாரின் சாட்சியத்தைக் கேளுங்கள்!

முமுட்சுப்படியிலே, திருமந்திரப்பிரகரணத்திலே எட்டு வாக்கியங்களிலே!'

''1. சம்சாரிகள் தங்களையும் ஈஸ்வரனையும் மறந்து, 2. ஈஸ்வர கைங் கரியத்தையும் இழந்து, 3. இழந்தோம் என்கிற இழவு மின்றிக்கே, 4. சம்சாரமாகிற பெருங் கடலிலே விழுந்து நோவுபட, 5. சர்வேஸ்வரன் தன் கிருபையாலே, இவர்கள் தன்னை அறிந்து 6. கரைமரம் சேரும்படி. 7. தானே சிஷ்யனுமாய் 8. ஆசாரியனுமாய் நின்று, திருமந்திரத்தை வெளியிட்டருளினான்!

இங்கே முக்கியமான சொற்கள்: தன் கிருபையினாலே இவர்கள் தன்னை அறிந்து கரைமரம் சேரும்படி திருமந்திரத்தை வெளியிட்டருளினான்

இங்கே இவன் கிருபை—கருணை பலித்ததா!—பள்ள மடையாகப் பாய்ந்ததா! சம்சாரிகள் தன்னை அறிந்தும் கரைமரம் சேர்ந்தார்களா? அன்றும் இன்றும் அதேவதரியிலே சந்நிதிக் கருவறையிலே, படி தாண்டாப் பத்தினிகளாக நாராயணனும் எழுந்தருளியுள்ளார் நர. நாராயணனும் எழுந்தருளியுள்ளார்.

உலகம் முழுவதும்-கடல் சூழ்ந்த மண் உலகம் வாழ — திருமந்திரம் அவ்விடமிருந்து பரவியிருப்பின், அந்தக் கிருபையின் கனத்தை ஒப்புக் கொள்ளலாம்! தன் அழகை நிலைக் கண்ணாடியிலே தானே கண்டு ஆனந்தப்பட்ட கதையாகத்தான் தானே ஆசரியனுமாய் தானே சிஷ்யனுமாய் திருமந்திரத்தை வெளியிட்டுக் கொண்டது. நர நாராயணனும் கரைமரம் சேரவில்லை,

அர்ச்சைக்கு சோபை அளிக்கவே ஆழ்வார்கள் அவதரித்தார்கள்.

''ஆழ்வார்கள் பல விடங்களிலும் பிரபத்திபண்ணிற்றும் அர்ச்சாவதாரத்திலே!'' ஆழ்வார்களில் கடைக் குட்டி திருமங்கை மன்னன். திரு ஆலி திருநகரியிலே எழுந்தருளி வயலாலி மணவாளன் திருமணக் கோலத்துடன் திருமணங் கொல்லைக்கு எழுந்தருளவும், அவர் ஆபரணங்களை அபகரித்துக் கொண்ட ஆலி நாடர் மூட்டையாய்க் கட்டிக் கீழே வைத்ததை எடுக்க முடியாமற் போகவும், 'என்ன மந்திரம் செய்தீர்' எனக் கேட்டு, அம்மாயோனை வாள் வலியால் திரு மந்திரங் கொண்டார் மங்கையர் கோன்.

வதரிகாசிரமத்தில் செவியால் திருமந்திரங் கேட்கப் பெற்ற நரன் நடிப்பு நரன் தான்! அதனால் வாயைத் திறக்கவில்லை.

மாலைத் தனியே வழி பறிக்க வேணும் என்று
கோலிப்பதிலிருந்த கொற்றவனான திருமங்கை
மன்னன் அசல் நரன்.
திறந்த வாயை மூடாமல் பாடினார் ஆயிரக்கணக்கிலே!

ஆறு பிரபந்தங்களாக!

பரகாலனின் இப்பனுவல்கள்:

''நெஞ்சுக்கு இருள் கடி தீபம் அடங்கா நெடும் பிறவி
நஞ்சுக்கு நல்ல அமுதம் தமிழ் நன்னூல் துறைகள்

அஞ்சுக்கு இலக்கியம் ஆரண சாரம்

பர சமயப்பஞ்சுக்குக் கனலின் பொறி!''

இறைவன் தானே ஆசாரியனுமாய், ஆலி நாடரே சிஷ்யனுமாய்நின்று திருமந்திரத்தை வெளியிட்டருளியதால் இறைவன் தன் கிருபை—கருணை திருமங்கை ஆழ்வாரிடம் பாய்ந்தது. ஆழ்வாரும் உயர்ந்தார். இதை ஆழ்வாரே அருள்வதைச் சேவிக்கலாம்.

......''உய்வதோர் பொருளால்
உணர்வு எனும் பெரும் பதம் தெரிந்து
நாடினேன் நாடி நான் கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம்!''

''குலம் தரும், செல்வம் தந்திடும், அடியார்
படுதுயராயின எல்லாம்
நிலந்தரம் செய்யும், நீள் விசும்பு அருளும்,
அருளொடு பெரு நிலம் அளிக்கும்,
வளந்தரும், மற்றும் தந்திடும், பெற்ற
தாயினும் ஆயின செய்யும்,
நலம் தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன்
நாராயணா! என்னும் நாமம்''

இப்பேருபகாரத்தைப் புரிந்தருளியவனை மறக்கக் கூடாதாம் தம் நெஞ்சு திருமந்திரம் பெறாமல்—

''எஞ்சா வெந்நாகத்து அழுந்தி நடுங்கு கின்றேற்கு,
அஞ்சேல் என்று அடியேனை ஆட்கொள்ள வல்லானை
நெஞ்சே! நீ நினையாது இறைப் பொழுதும் இருத்தி கண்டாய்!
மஞ்சார் மாளிகை சூழ்வயலாலிமைந்தனையே''
திருமங்கை மன்னனும் கரை மரஞ் சேர்ந்தார்.

''கற்றார் பற்று அறுக்கும் பிறவிப் பெருங்கடலே!
பற்றா வந்து அடியேன் பிறந்தேன்! பிறந்த பின்னை
வற்றாநீர் வயல் சூழ் வயலாலி அம்மானைப் பெற்றேன்!
பெற்றதும் பிறவாமை பெற்றேனே!

''வாவித் தடஞ்சூழ் மணி முத்தாற்று நறையூர் நெடுமாலாம் திருநறையூர் நம்பியிடம் திருவிலச்சினை பெற்ற மங்கை மன்னன் திருமந்திரத்தை உலகோருக்கு வெளியிடுவதைச் சேவையாகக் கொண்டார்.

''.. எனக்கு என்றும்
தேனும் பாலும் அமுதுமாய
திருமால் திருநாமம்
நானும் சொன்னேன் நமரும் உரைமின்
நமோ நாராயணமே!''

''குன்று குடையா எடுத்த அடிகள் உடைய திருநாமம்
நன்று காண்மின் தொண்டீர்! சொன்னேன் நமோ
நாராயணமே''

''எங்கள் அடிகள் இமையோர் தலைவர் உடைய திரு நாமம்
தங்கள் வினைகள் தவிர உரைமின் நமோ நாராயணமே!

எம்பெருமானிடம் திருமந்திரத்தைச் சேவித்த திருமங்கை மன்னன் அதன் அர்த்தத்தை ஆராய்ந்தார். எம்பெருமானன்றி வேறு ஒருத்தனுக்கும் உரியேன் அல்லேன் என்று திருமந்திரார்த்தமான அநந்யார்ஹ சேஷத்வத்தை அறிந்தார்.

''மடையார் நீலம் மல்கும் வயல் சூழ் கண்ணபுரம் ஒன்று
உடையானுக்கு, அடியேன்; (மற்று) ஒருவர்க்கு
உரியேனோ?''

இதுவே பகவத் சேஷத்வம்:

திருமந்திரார்த்தத்தின் பொருள் பகவத் சேஷத்வம் என்று மேல் எழுந்த வாரியாகக் காணப்படினும்; பாகவத சேஷத்வமே தாம் அதிகரித்துத் தெரிந்து கொண்ட பொருள் என்பதை அறிந்தார் திருமங்கை மன்னன்.

8 பிரிவாக வெளியிட்டருள்கிறார்!

(2) "மற்றும் ஓர் தெய்வம் உளது! என்று இருப்பாரோடு
உற்றிலேன்! (7) உற்றதும் உன் (8) அடியார்க்கு அடிமை
(4) மற்றெல்லாம் பேசிலும் (3) நின் திரு எட்டெழுத்தும்
(6) கற்று (5) நான் (1) கண்ண புரத்துறை அம்மானே!

அறிய வேண்டும் அர்த்தமெல்லாம் இதுக்குள்ளே உண்டு (மு. படி) ஆனால் அவற்றில் ஊற்றம் இல்லை; அதில் ஊற்றம்-உற்றதும் உன் அடியார்க்கு அடிமை. இவ்விதமாக திருமந்திரார்த்தத்தை ஆழ்வார்கள் வெளியிட்டதை நம் பூர்வ ஆசாரியர்கள் ஓராண் வழியாய் உபதேசித்தார்கள். இந்த வரம்பை அறுத்தார் ஸ்ரீ உடையார். இதுவும் 8 பிரிவே :

(2) "ஓராண் வழியாய் உபதேசித்தார் (1) முன்னோர்
(4) ஏரார் எதிராவர் இன் அருளால் (6) பார் உலகில்
(7) ஆசை உடையோர்க்கெல்லாம் (5) ஆரியர்காள் கூறும் என்று
(8) பேசி வரம்பு அறுத்தார் (3) பின்."

கருணைக் கடலான இறைவன் திருமந்திரத்தை உபதேசித்தான்; ஒருவருக்குப் பின் ஒருவர் உபதேசிக்கும் முறையையே ஆரம்பித்தான்.

கருணைப் பெருங் கடலான இராமாநுசர் திருமந்திரார்த்தத்தையே உபதேசித்தார் ஆசையுடையோர் கெல்லாம். திரள் திரளாகச் சேர்த்தே கூறுமின் என்று அநுஷ்டித்துக் காட்டினார்.

எம்பெருமான் திருமந்திரத்தை வெளியிட அர்ச்சை வரையில் காலங் கடத்தினான்; எம்பெருமானார் க்ஷண

நேரமும் தாமதிக்காமல் திருமந்திரார்த்தத்தை வெளியிட்டு அருளினார். திருக்கோட்டியூர் வைபவத்தைப்பாடும் அமுதனார் எம்பெருமானார் என்ற கீர்த்திக் கிரீடம் உடையவருக்குப் பொருந்தும் எனப் பொய்யில்லாத மணவாள மாமுனி புகல்கின்றார். இவர் தம்மைவிடக் கருணையில் உயர்ந்தவரே எனக் கைச்சாற்று இடுகிறான் எம்பெருமான்.

திருமந்திரத்தை வளர்த்த எம்பெருமான் (இராமாநுசர்) திருமந்திரார்த்தத்தை வளர்த்துத் தன் தரிசனத்தையும் வளர்த்ததையும் வாழ்த்துகின்றானாம்.

''எம்பெருமானார் தரிசனம்'' என்றே இதற்கு
நம் பெருமாள் பேரிட்டு நாட்டி வைத்தார்
—அம்புவியோர்
இந்தத் தரிசனத்தை எம்பெருமானார் வளர்த்த
அந்தச் செயல் அறிக்கைக்கா''

இவை எல்லாவற்றையும் திருவுள்ளத்தில் தேக்கிய எம்பெருமானாருடைய கருத்தறிவாளரான திருவரங்கத்து அமுதனார் அருளும் அமுதங்களைச் சேவிப்போம்.

# எட்டும் வீழ்ந்ததே!
# கட்டும் அவிழ்ந்ததே!!

தயவு செய்து சப்தம் செய்யாதீர்கள். உற்றுக் கவனியுங்கள்.

தூரத்திலே, குதிரைகள் வருகிற காலடி சப்தம் கேட்கிறதா?

ஆம்! ஒரு கொள்ளைக்கூட்டமாகஇருந்த வழிப்போக்கர் திருக்கூட்டம் தான்!

அதோ! பாடிக் கொண்டும் வருகின்றார்களே! கேட்க வில்லையா உங்களுக்கு!

அந்தக் கூட்டத்தார் கூட்டாகப் பாடுகின்ற அந்தப் பாடலைக் கேட்போம்!

"எவ்வுள் கிடந்தானை ஏத்த, எவ்வுள் கிடந்தானை
தொண்டர் ஏத்த, எவ்வுள் கிடந்தானை
இண்டை கொண்டு தொண்டர் ஏத்த எவ்வுள்
கிடந்தானை!"

ஆம்; திருமங்கை மன்னனுடைய பாடல்தான்!
மங்கையர்கோன் கலியன்; வண்டு பாடும்
பைம்புறவில் மங்கையர் கோன் கலியன்!

திருவெவ்வுள் கிடந்தருளும் வீரராகவப் பெருமானை மங்களாசாசனம செய்தருளியாயிற்று, திருமங்கை மன்னன் அழகிய தமிழ்ப் பாடல்கள் பத்தினாலே!

கொண்ட சீரால், தண் தமிழ் செய் மாலை ஈர் ஐந்தும் வல்லார்.

சரி? பாடுகிற இவர்கள் யார்?

திருமங்கை மன்னனுடைய குழாம் தான்!

(a) நிழலில் ஒதுங்குவான்! (b) நீர் மேல் நடப்பான்! (c) தோலா வழக்கன்! (d) உயரத்தில் தொங்குவான் (e) தாள் ஊதுவான் (f) சாயைப் பிடிப்பான்.

முதலிய திவ்யத் திருநாமங்கள் தாம்!

திருமங்கை மன்னன் திரு வெவ்வுள் கிடந்தானை மாங்களாசாசனம் செய்தருளிய திவ்யப் பாடல்களை வாய் இனிக்கப் பாடிக் கொண்டே வருகிறார்கள்.

திருவெவ்வுள் ஊரிலிருந்து மேற்கு நோக்கி வருவது— பாடிக் கொண்டு வருவது மாத்திரமல்ல!

நம் எல்லோரையும் தான் பாடச் சொல்லுகிறார்கள். எதற்காகவாம்! அவர்களோடு பாடுகிறவர்களும்,

அண்டம் ஆள்வது ஆணை, அன்றேல்
ஆள்வர் அமர் உலகே.
இதோ முழுப் பாடல்களையும் கேளுங்கள்.

"இண்டை கொண்டு தொண்டர் ஏத்த, எவ்வுள் கிடந்தானை
வண்டு பாடும் பைப் புறவில் மங்கையர் கோன் கலியன்
கொண்ட சீரால் தண் தமிழ் செய் மாலை ஈரைந்தும் வல்லார்
அண்டமாள்வது ஆணை, அன்றேல் ஆள்வர் அமர் உலகே'''

பணைத் பாங்கான கடற்கரை ஓரம் வந்து விட்டார்கள்.

இதோ குதிரைகளின் காலடி வேகத்தின் ஓசை குறைந்து விட்டது. ஆம், கம்பீரமாக ஆடல் மாவின்

மேல் தலைமை வகுத்து எழுந்தருளும் திருமங்கை மன்னன் லாகவமாக கீழே இறங்குகிறார்! உடனே என்ன கண்டார் எதிரில்!

''கேணி கண்டேனே!''

நல்ல வளமான குளத்தைக் கண்டாராம். அதனாலே, சிரமப் பரிகாரம் செய்து கொள்ளத் தகுந்த குளமென்று இறங்குகிறார்.

அந்தக் குளத்தின் வளத்துக்கு சாட்சியும் காணப்படு கிறது. குளம் நிறைய அல்லி அல்லவா பூத்துக் குலுங்கு கிறது!

''அல்லிக் கேணி கண்டேனே!''
என்ன விசேஷம் மேலும் இந்தக் குளத்திற்கு?

சாட்சாத் எம் பெருமான் எழுந்தருளியுள்ள திவ்ய தேசத்தைச் சேர்ந்துள்ளதாக இருக்கும்.

'திரு'வுடைய தாம் இந்த அல்லிக் கேணி.
திரு அல்லிக் கேணி கண்டேனே'

சரி; இந்தத் திரு அல்லிக் கேணியிலே தீர்த்தமாடி, திருமண் காப்புத் தரித்துக் கொண்டு சேவிக்கத் தயாராகி விட்டார் திருமங்கை மன்னன்.

அவர் என்றால் அவருடைய திவ்யத்திருக் கூட்டத் தாரும் தான்!

ராசகோபுரம் தாண்டிக் கொடி மரத்தின் எதிரில் விழ்ந்து வணங்கி எழுந்தது தான் தாமதம். எம்பெருமான் பார்த்த சாரதியாக சேவை சாதித்தருளும் திருக்கோலத்தைச் சேவித்தாராம்.

''பார்த்தன் தன்தேர் முன் நின்றானை திருவல்லிக்கேணி கண்டேனே!

என்ன எளிமை! என்ன எளிமை! பரம பதத்தில் நித்திய சூரிகள் தொழுது சூழ்ந்து புரியும் பூவினையை ஏற்றருளும்

நாயக மணி, பூசையின்போது எழும்பிய தூபப் புகை மண்டலத்தைப் பயன்படுத்திக்கொண்டு, பூ மண்டலத்திலே, கண்ணனாகத் திருவல்லிக்கேணியிலே வீழ்ந்தருளவும் பக்தர் கட்குக் கிடைத்த அசாதாரண சேவையல்லவா இது.

உயர்ந்தவன் தாழ்ச்சியல்லவா அவதாரம் என்பது?

பரமன் கண்ணனாக அவதரித்தபோது வீழ்ந்தவை பலப் பலவாம்! அவைகளைக் கணக்கிடுகிறார், இப்பாடலில் திருமங்கை மன்னன்.

கோலாகலமான விழாவாம். வடமதுரைப் பெரும் பதியிலே! ஆம், கம்ச மகாராஜா நடத்துகிற விழாவாகை யாலே பெரு விழாவாகவே நடத்த ஏற்பாடாகி இருந்தது.

கிருஷ்ண பலராமர்கள் கோகுலத்திலே யமுனைக்கு எதிர்ப்புறத்திலே திருவாய்ப்பாடியிலே வளர்ந்தருளு கிறார்கள்.

பெருவிழாவை ஏற்படுத்தி அக்குரூரர் மூலம் அழைத்தால் சிறுவர்களான கண்ண-பலராமர்கள் வரத்தானே செய்வார் கள், வேடிக்கை பார்க்க!

அவர்கள் வடமதுரைப் பெருவிழாவில் வந்து வேடிக்கை பார்க்கிறவரை விடுகிறதாவது! அவர்களை ஒழித்துக் கட்ட வல்லவா சதித் திட்டம் தீட்டப்பட்டுள்ளது கம்சனாலே.

அக் குரூரரும் சூசகமாக இதைத் தெரிவித்து விட்டார். விழாவில் நுழை வாயிலிலேயே மலையை நிகர்த்த குவலயாபீடம் என்னும் யமனல்லவா காத்துக் கிடக்கிறது. அது வீழ்ந்தாலும் அதை உயிர்ப்பித்து நடத்த வல்ல பாகனல்லவா முன்பு கங்கணம் கட்டிக் கொண்டு நிற்கிறான்.

கண்ணன் கையிலே இந்த கிங்கிரனான பாகன் என்ன ஆனான்? பாகனும் வீழச் செற்றவன். அந்தப் பாகன்தான் முதலில் பலியானான். வீழ்ந்ததிலேயே நம்பர் ஒன்று.

அப்படிப்பாகனை வீழச்செய்தவனையே திருவல்லிக் கேணி கண்டேனே.

''பாகனும் வீழச்செற்றவன் தன்னை திருவல்லிக்கேணி கண்டேனே'' பாகனுக்குப் பின்னால் மலையாக நின்ற குவலயாபீடம் என்னும் யானையை என்ன கதி செய்தான் கண்ணன்?

''வேழமும் வீழச் செற்றவன் தன்னை திருவல்லிக்கேணி கண்டேனே!'' வீழ்ந்ததிலே நம்பர் இரண்டு இது.

பாகனையும் வேழத்தையும் ஒரு கால் தாண்டி விழாக் களத்தில் கண்ண பலராமர்கள் வந்து விட்டாலும் மூன்றாவதான ஒரு அரண் ஏற்படுத்தப் பட்டிருந்ததாம்.

அதுவே மலைகள் துள்ளினால் போலே பெரிய கிளர்த்தியோடே கூடின மல்ல வர்க்கமாம். அதாவது பொறுக்கி எடுக்கப்பட்ட குண்டர்கள். வெறும் குண்டர்கள் மாத்திரமல்ல, அவர்கள் எதிர் வரும் ஆளைக் கீழே தள்ளி மல்யுத்தம் செய்து கொன்று விடுவார்கள்!

அந்த மல்லர்களை என்ன செய்தானாம் கணணன்! ''மல்லும் வீழச் செற்றவன் தன்னை திருவல்லிக்கேணி கண்டேனே.''

மல்லாண்ட திண் தோளுக்குப் பல்லாண்டு பாடுகிறார் மங்கை மன்னன்.

இதற்குப் பின்னாலே குண்டர்களின் தலைவனான கம்ச ராஜன் பெரும் சிங்காதனத்தில் வீற்றிருந்தான்

அவனை என்ன செய்தானாம் கண்ணன்?

சிம்மாதனத்திலிருந்த அந்த மாமிச மலையைக் குடுமி பற்றிக் கீழே உதைத்துத் தள்ளித் தாக்கிக் கொன்றானாம் கண்ணன்.

''கஞ்சனும் வீழச் செற்றவன் தன்னைதிருவல்லிக்கேணி கண்டேனே!''

ராஜாவே மண்ணைக் கவ்வி விட்டார்! அவனுக்கு ஒரு வில்லாவது, அதற்கு ஒரு விழாவாவது!

சிம்மக் குட்டி போலே துள்ளினான் கண்ணன். கம்சன் வில் என்று அலங்காரம் செய்து வைக்கப்பட்டிருந்த கோலை ஒடித்துப் போட்டு விட்டான்.

பிறகு விழா ஏது? அதுவும் வீழ்ந்தது ஐந்தாம் கணக்கிலே. விற் பெரு விழவும் வீழச் செற்றவன் தன்னை திருவல்லிக்கேணி கண்டேனே!

இங்கே பாடலைக் கொஞ்சம் நிறுத்தி வீழ்ந்த ஐந்தை வரிசைப் படுத்திக் கொள்ளலாம்.

1 விற்பெரு விழவும் 2. கஞ்சனும் 3. மல்லும் 4. வேழமும் 5. பாகனும் வீழச் செற்றவன் தன்னைத் திருவல்லிக்கேணி கண்டேனே.

அசுரர்களுக்கு அகங்காரம் பிடித்தால் அடக்குபவன் கண்ணன்.

அவர்களுக்கும் மேலே உள்ள தேவதைகளுக்கு அகங்காரம் பிடித்தால் என்ன ஆகிறது என்று பார்ப்போம்.

ஆகாயத்திலே அழிவு அட்டகாசங்களைச் செய்து கொண்டு கொக்கரித்துத் திரிந்தார்கள் மூன்று அரக்கர்கள்.

திருமாலை பாணத்தின் முனையிலே எழுந்தருளச் செய்து, அதற்குத் தக்கபடி படைகள், தேர் முதலிய வற்றைத் தயாராக்கித் திரிபுராந்தக தகனம் செய்தார் சிவன்

இதனால் கொஞ்சம் கிறுக்கு வந்தது சிவனுக்கு,

திரிபுராந்தக தகனம் செய்த தான் அல்லவா பெரியன் என்ற அகங்கார எண்ணம் வந்து விட்டது.

நமக்கும் ஐந்து தலை; இந்த வெறும் உற்பத்தி வேலை செய்யும் பிரமனுக்குமா ஐந்து தலை என்று இகழ்ச்சியும் வந்தது.

தன் தந்தை என்றும் பாராமல் பிரமனுக்கு ஆதியில் இருந்த ஐந்து தலைகளில் ஒன்றைத் திருகி எடுத்து விட்டார் சிவன்.

ஆனால், அந்தப் பொல்லாத பிரமனின் தலை சிவன் கையில் ஒட்டிக் கொண்டது. ஊன் ஒழிந்த மண்டை ஒடு கபாலமாகிவிட்டது.

இப்படி பிரமகபாலமானது தன் கையில் ஒட்டிக் கொண்டதால், அகும்பாவம் பிடித்துத் தன் தந்தையின் தலையைக் கிள்ளியவர் என்ற பட்டமும் நிந்தனையும் துயரமும் இவரைப் பிடித்துக் கொண்டது

இந்தப் பாவமும் துயரமும் நீங்க ஒரு வழியும் சொல்லப் பட்டது. அதாவது பிரமகபாலத்துடன் சிவன் பிச்சை எடுக்க வேண்டும்; அந்தக் கபாலியின் கையில் உள்ள கபாலம் எப்போது நிறைகிறதோ அப்போது கபாலம் கீழே விழுந்து விடும். எங்கு எங்கோ, எவர் எவரிடமோ சென்று பிச்சை எடுத்தார் கபாலி.

கபாலமாவது நிறைகிறதாவது. கையிலிருந்து கபாலமானது விழுகிறதாவது. கடைசியாக பரம புருஷ னான திருமாலிடம் வந்து பிச்சை கேட்டார். திருமாலும் தம் பரம கிருபையினாலே கருணை நிறைந்த அன்பு வழியும் தன் திரு மார்பிலிருந்த வியர்வைத் துளியை விரலாலே வழித்து பிரம கபாலத்தில் தெளிக்கவும் கபாலம் நிறைந்து விடவும், உடனே அது சிவன் கையிலிருந்து விழுந்துவிட்டது.

ஒரு வேளை, திருமங்கை மன்னன் மங்களாசாசனம் செய்தருளிய போது, தெற்கே இரண்டு மைல் தூரத்தில் பிட் சாண்டவர் விழாவில் எழுப்பிய வாத்திய ஓசை, கபாலீச் சுரத்திலிருந்து காதில் விழுந்திருக்கக் கூடும். ஆகவே ஆறாவ தாக வீழ்ந்தது சிவனுடைய துயரம் தான், ஒட்டிக் கொண் டிருந்த பிரம கபாலம் வீழ்ந்ததினாலே

"புரம் எரி செய்த சிவன் உறு துயர் களை தேவை
திருவல்லிக்கேணி கண்டேனே."

பார்த்தனுடைய தேரின் முன் எப்படி நின்றான் கண்ணன்! கோல் கையில் கொண்டு பார்த்தன் தன் தேர் முன் நின்றான். கையும் உழவுக்கோலும், பிடித்த சிறுவாய்க் கயிறும், சேனா தூளி தூசரிதமான திருக்குழலும், தேருக்குக் கீழே நாற்றின திருவடிகளுமாய், நிற்கின்ற சாரத்ய வேஷத்தை 'மாம்' என்று காட்டுகிறான். எதற்காக நிற்கின்றானாம் பெருமான், இப்படிக் கோல் கையில் கொண்டு பார்த்தன் தன் தேர் முன்பே? தன் பக்தர்களான துரியோதனாதியரைப் போர்க்களத்திலே மடிந்து விழும்படிச் செய்வதற்காகவே!

ஆகவே ஏழாவதாக வீழ்ந்தவர் பற்றலர்கள்! "பற்றலர் வீயக் கோல் கையில் கொண்டு பார்த்தன் தன் தேர் முன் நின்றானைத்திருவல்லிக்கேணி கண்டேனே." ஆஜானுபாகு வான பார்த்தசாரதிப் பெருமாளின் திருக்கல்யாண குணங் களில் ஈடுபட்டு அர்த்த மண்டபத்தில் திருவடிச் சந்நிதிக்கு எதிரில் நின்றபடியே மங்களாசாசனம் செய்து கொண் டிருந்த திருமங்கை மன்னன்,

நின்றபடியே சற்று வலப்புறம் திருமுக மூண்டலத்தைத் திருப்பிப் பார்த்தார்; சக்கரவர்த்தித் திருமகன் சேவை சாதித்தார்.

திருவாய்ப் பாடிக் கண்ணனாகவும் பரமபத தாமரைக் கண்ணனாகவும் எளிமையின் எல்லை நிலத்தில் நின்று செய்தருளிய தூது சென்றதும், சிவன் துயர் தீர்த்தனவு மான மகா உபகாரங்களுடன் சேர்த்து எண்ணத் தக்க இராமாவதார எளிமைத் திருக்குணமும் திருமங்கை மன்னன் மனக் கண்முன் பட்டதாம்!

அசோக வனத்தில் துயரில் உழன்று கொண்டிருந்த பிராட்டிக்குத் தன் துயரைவிட, ராமனுக்கு ஏற்பட்ட துயரமே பெரிதாகப்பட்டதாம்.

சக்கரவர்த்தியே அழைத்து "இராம! நாளை மகுடம் சூடுவாய்" என்றார். மறுநாள், சிற்றவையான கைகேயி,

''இல்லை இராமா! நீபோய்த் தாழிரும் சடைகள் தாங்கி தாங்கரும் தவமேற்கொண்டு பூழி வெம்கானம் நண்ணிப் புண்ணியத்துறைகள் ஆடி ஏழிரண்டாண்டில் வா!,'' என்று இயம்பினள்.

இந்தக் காட்சியைத் தன் துயரத்தையும் மறந்து விட்டு நினைக்கிறாள் பிராட்டி.

தயரதன்...மெய்த்திருப்பதம் மேவு என்ற போதிலும்
கைகேயி....இத்திருத்துறந்து ஏகு என்ற போதிலும்
சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை! ஒத்திருந்த
முகத்தினை உன்னுவாள்

அத்தகைய மகா தியானத்தின் எளிமையை நினைத்து நீர்ப்பண்டமாக உருகுகிறார் மங்கை மன்னன்.

எட்டாவதாக விழுவது இராமன் சிரசில் எட்டுவதாக இருந்து காலை எட்டாத படி வீழ்ந்த திருமுடிதான். கம்சன் முடியைக் கண்ணன் வீழ்த்தியதால் உலகம் உயர்ந்தது; இராமபிரான் தன் முடியைத் தானே வீழ்த்தியதாலும் உலகம் உயர்ந்தது. ''சிற்றவைப்பணியால் முடிதுறந்தானை திருவல்லிக்கேணி கண்டேனே'' இப்படியாக முடி துறந்தவனும் திருவல்லிக்கேணியிலே நின்ற திருக்கோலத்தில் தான் சேவை சாதிக்கின்றான்.

'எட்டும் வீழ்ந்ததே' என்பதால் எவை அந்த எட்டு என்பதைப் பார்க்கலாம்.

1. விற்பெரு விழவும் 2. கஞ்சனும் 3. மல்லும்
4. வேழமும் 5. பாகனும் வீழச் செற்றவன்
தன்னை 6. புரம் எரி செய்த சிவன் உறு துயர்களை
தேவைப் 7. பற்றலர் வீயக் கோல் கையில் கொண்டு
பார்த்தன் தன் தேர்முன் நின்றானைச் 8. சிற்றவை
பணியால் முடி துறந்தானைத் திருவல்லிக்கேணி
கண்டேனே!'

பாகவத இராமாயணக் காட்சிகளை இறைவன் சாதிக்கவும் பாடியருளினார் ஆழ்வார் காத்துக் கொண்டி

ருந்த திருக் கூட்டமும் பாடல் மனப்பாடம் ஆகி விடவே பக்திச் சுவை சொட்டச் சொட்டக் களிக்கின்றார்கள்.

''கட்டும் அவிழ்ந்ததே!''

என்ற தலைப்பில் மற்ற பாடல்களைச் சேவிப்போம். திருமங்கை மன்னன் (சக்கரவர்த்தித் திருமகன் சந்நிதியிலிருந்து) தம் திருமுக மண்டலத்தை மேற்கே திருப்பிப் பார்த்தசாரதியைச் சேவிக்கின்றார்.

வேதம் என்றால் சிறந்த அறிவு, ஞானம்தான்; எனவே இறைவன் ஞானமான வேதமாக விளங்குகிறான்.

''வேதத்தைத் திருவல்லிக்கேணி கண்டேனே!''

வேதம் சுலபமானதல்ல; வியாச முனிவர் அதை நான்கு பாகங்களாக்கினார். பிறகு பிரம்ம சூத்திரங்கள், உபநிஷத்துக்கள் இப்படி விளக்கங்கள் ஏற்பட்டன. இங்ஙனமாகிய வேதங்களின் சுவையாகவும் அந்தச் சுவையை அனுபவித்தால் ஏற்படுகிற பயனாகவும் விளங்குகின்றான்' இறைவன், கீதையை உபதேசம் செய்த பார்த்த சாரதித் திருக்கோலத்திலே!

வேதத்தின் சுவைப் பயனை திருவல்லிக்கேணி கண்டேனே! நம்முடைய ஆகாரம் தானிய காய்கனிகள். இவை, நம் உடலைத் தான் வளர்க்கும். ஞானிகள் ஆத்ம வளர்ச்சியை வாழ்வையே முக்கியமாக கவனிப்பவர்கள்; தேகத்தை வெய்யிலிலே வைத்து ஆத்மாவை நிழலிலே வைப்பவர்கள். ஆகவே அவர்கள் ஆத்ம ரட்சணத்துக்காக உட்கொள்ளும் கனி மெய்ஞ்ஞானக் கனியாகிற இறைவன்!

அம் மெய்ஞ்ஞானக்கனி பழுதற்ற கனியாம்; அதனால் முனிவர்கள் அதை உட்கொள்ளவில்லையாம், விழுங்குகிறார்களாம்.

''விழுமிய முனிவர் விழுங்கும் கோது இல் இன் கனியை
திருவல்லிக்கேணி கண்டேனே!''

இவ்வளவு உயரிய பெருமையை உடைய சுவாமித்வத்தை உடையவன் பரம எளிமையும் உடையவனாம்.

திருவாய்ப் பாடியிலே கூர்வேல் கொடும் தொழிலன் நந்தகோபன் குமரனாக எழுந்தருளி விடுவானாம்.

யானை மிகப் பெரிய ஜந்துவே!

மத யானையானாலும் சரி: பாகனுக்கு அடங்கி நடந்து கொள்ளும்; சுவாமித்வமான பெரிய பெருமையை விட்டு சௌலப்யமான எளிமையையும் அடையும். 'நந்தகோபன் அணி சிறுவா! நான் சுரந்த முலையுணாயே?' என்றால் வந்து விடுவானாம் தவழ்ந்தபடியே. அதனால் யானைக் குட்டி மாதிரி ஒய்யாரமாக அசைந்து நிறகிறான் பார்த்த சாரதி. சேவிக்க சேவிக்க அதிசயமாகவே இருக்கும்.

"நந்தனார் களிற்றைத் திருவல்லிக்கேணி கண்டேனே,"

திருமங்கை மன்னன் தம் திருமுக மண்டலத்தை மறுபடியும் சற்று வடக்கே திருப்பவும் மந்நாதன் சந்நிதி சேவையாயிற்று; அருகே போய்ச் சேவிக்கிறார்.

மன்னாதர் அனந்தாழ்வான் மீது கிடந்தருளும் திருக்கோலத்தை சேவித்தால், திருமழிசை ஆழ்வாரைப் போல கீழ்க்கண்டபடி உபசார வார்த்தையால் வினவவும் தோன்றும்!

"தாளால் உலகம் அளந்த அசைவே கொல்?
வாளா கிடந்தருளும்! வாய் திறவான்!—நீள் ஓதம்
வந்தலைக்கும் மாமயிலை மாவல்லிக் கேணியான்
ஐந்தலைவாய் நாகத்து அணை."

திருப்பாற்கடலிலே திருவனந்தாழ்வான் மீது வியூக தசையிலே போன்று இறைவன் எழுந்தருளியிருக்கிறான், இங்கும். பரம பதம் கும்பிடு போடுமிடமே. யாருக்கும் குறை இல்லை அங்கே. எல்லோரும் நித்ய சூரிகள்.

ஆனால் கூப்பாடு போடும் இடம் திருப்பாற் கடலில் தான்.

தேவலோகத்திலுள்ள தேவர்களாகட்டும்! பூலோகத் திலுள்ள முனிவர் பக்தர்களாகட்டும், பாற்கடலில் வந்து தான் முறையிட்டாகவேணும். ''என் அனைய முனிவரரும் இமையவரும் இடையூறு ஒன்று உடையவர் ஆனால் பாற்கடலும் அல்லாது புகல் உண்டோ?'' என்று பேசுகிறார் விஸ்வாமித்திர முனி.

இப்படி உலகத்தார் தங்களுடைய குறைகள் நீங்கும் படியாக பாற்கடலில் தொழுது ஏத்தும் படியாகக் கிடந்தருளும் இறைவன், உடலோடு வரும் எல்லோருக்கும் சேவை சாதிக்கும் ஆதியானவன் முதன்மையானவன்' இல்லையாயின் குறைதீர்க்க முடியாதே! எனவே மந்நாதன்.

''குவலயத்தோர் தொழுது ஏத்தும் ஆதியைத்
திருவல்லிக்கேணி கண்டேனே!''

குவலயத்தோர் விஷம் போன்ற குறைகளால் வருத்தப் பட்டு மந்நாதனை வந்து தொழுது விட்டால் என்ன ஆகிறது! மந்நாதன் அவர்களுக்கு அமுதமாகவே ஆகி விடுகிறான். அமுதம் உண்டவர்கட்கும் உண்டோ குறை.

''அமுதைத் திருவல்லிக்கேணி கண்டேனே!''

ஒருமுறை மந்நாதனைக் கூப்பாடு போட்டுத் தொழுது விட்டால் அவன் அமுதமாகி நம்மை எப்போதும் அடிமை கொண்டு ஆட்சி செய்து காக்கின்ற சர்வ சுவாமியாகவே ஆகிவிடுகிறான்.

''என்னை ஆளுடைய அப்பனை! திருவல்லிக்கேணி கண்டேனே!'' அமுதமாகவும் ஆளுடை அப்பனாகவும் எழுந்தருளியுள்ள இறைவனைத் திருமங்கைமன்னன் சேவிப்பது எங்கே? மாடமயிலைத் திருவல்லிக்கேணியிலே யாம்.

''திருவல்லிக்கேணி கண்டேனே.''

"திருவல்லிக்கேணி கண்டேனே"

மேல்பாடலிலும் "திருவல்லிக்கேணி கண்டேனே" என்று முடித்தார். இந்தப் பாடலையும் திருவல்லிக்கேணி' கண்டேனே' என்று முடிக்கின்றார். இந்தப் பதிகத்தின் ஒவ்வொரு பாடலையும் திருவல்லிக்கேணி கண்டேனே என்று முடிக்கின்றார்.

வதரியிலிருந்து திரு எவ்வுளூர் வரை மங்களாசாசனம் செய்தருளிய திருமங்கை மன்னன், திருவல்லிக்கேணி வந்ததும் 'கண்டேனே' என்கிறார். மற்ற இடங்களில் இறைவனைக் காணவில்லையா இவர்! இதில் ஏதோ ஒரு பூட்டு, ஒரு முடிச்சு உள்ளது! இதைக் கவனிக்க வேண்டும்.

திருவல்லிக்கேணியை மங்களா சாசனம் செய்தருளும் திருமங்கை மன்னன், அதனுடன் சேர்த்து மயிலையையும் மங்களாசாசனம் செய்துள்ளார்.

புரம் எரி செய்த சிவன் உறுதுயர் களை தேவை என்று முதற் பாட்டிலேயே கபாலியையும் கபாலீச்சுரத்தையும் குறிப்பிட்டு விட்டார்! பிறகும் ஏன் மயிலையைக் குறிக்க வேண்டும். அதுவும் எத்தகைய மயிலையாம். 'மாமயிலை!

மாட மா மயிலை! மாடங்கள் எங்கேயும் இருக்கலாம்; மயிலை எப்படி மா மயிலை யாயிற்று இந்த ஸ்ரீ வைணவ ஆழ்வாருக்கு!? இந்த மா மயிலை என்ற பதத்தைத் திருமங்கை மன்னன் வேறு ஒரு ஆழ்வாரிடமிருந்து திருடி விட்டார்; அல்லது காப்பி அடித்து விட்டார்! அது தான் திருமழிசையாழ்வாருடைய நான்முகன் திருவந்தாதி 35வது பாடல்.

அங்கே திருமழிசையாழ்வார் திருவாக்கு: "நீளோதம் வந்தலைக்கும் மாமயிலை மாவல்லிக்கேணியான்" திருமழிசையார் எதற்காக மயிலையை, தேவதாந்தரங்கள் முனைப்பாக உள்ள மயிலையை, 'நீளோதம் வந்தலைக்கும் மயிலை, அதாவது கடற்கரையை அடுத்த மயிலை என்றால் பரவாயில்லை! ஆனால் 'மா மயிலை' என்று ஏன் சிறப்பித்துக்கொண்டாட வேண்டும்?

திருமழிசை ஆழ்வார் தம்முடைய ஆசாரியரான பேயாழ்வாரை உலகுக்கு அருளிய திருத்தலமாகையினாலே! திவ்ய தேசமான மாவல்லிக்கேணியோடு ஆச்சாரிய அபிமானம் விளங்கும் வகையில் மயிலையை 'மாமயிலை" எனக்குறிப்பிட்டு 'மா மயிலை மாவல்லிக் கேணியான்' என மங்களாசாசனம் செய்தருளினார்.

இதை மனத்தில் ஏற்ற திருமங்கை மன்னன் 'மாடமா மாயிலைத் திருவல்லிக்கேணி' என மங்களாசாசனம் செய்தருளினார்.
மாவல்லிக்கேணி, திருவல்லிக்கேணி ஆயிற்று.

திருமழிசை ஆழ்வார் காலத்தில் விளங்கிய மாமயிலை, திருமங்கை மன்னன் காலத்தில் மாட மாமயிலையாகப் பெருகிவிட்டது. 'மாட மாமயிலைத் திருவல்லிக்கேணி' என்று குறிப்பிட்டது சரி! ஆனால், இன்னும் அதிகமாக 'திருவல்லிக்கேணி கண்டேனே!' என்று ஏன் சாதித்தருளினார்? ஒவ்வொரு பாடலிலும் சாதிக்கின்றார். வதரியிலிருந்து எவ்வுள் வரை காணவில்லையா?

பேயாழ்வார் அவதரித்தருளிய மாமயிலையை மங்களாசாசனம் செய்தருள்கையில் திருமங்கை மன்னன் திரு உள்ளத்தில் பேயாழ்வாருடைய வைபவமும் சரித்திரமும் உதித்து உற்சாகப் படுத்துகின்றன.

ஆழ்வார்களிலே முதல் முதலாக இறைவனைக் கண்டவரே பேயாழ்வார்தான்.

திருக்கோவலூரில், பொய்கையார், வையகத்தைத் தகளியாக்கி விளக்கேற்றினார். அடுத்து, பூதத்தாழ்வார் அன்பைத் தகளியாக்கி ஒரு விளக்கு ஏற்றினார்.

இந்த இரு விளக்குகளின் உதவியாலே இறைவனைக் கண்டவர் பேயாழ்வாரே!

ஒரு ஆபரணம் தேவைப்படுகிறது. விளக்கில்லாமல் இருட்டான சமயத்தில் தேடவேண்டி வந்தது. இருவர் இரு மெழுகு வர்த்திகளை ஏற்றிக் கொண்டு வந்து உதவினார்கள். ஆபரணம் கீழே இருப்பது தெரிந்து விட்டது. உடனே "கண்டேன்; கண்டேன்" என்று குதிக்கிறார் தேடியவர்

கேவலம் ஆபரணத்திற்கே இப்படியானால், இறைவ னைக் கண்ட பேயாழ்வார் எப்படிக் களித்திருப்பார் அதனால் தான் 'திருக்கண்டேன்' என்று ஆரம்பிக்கிறார்.

அது மாத்திரமல்ல. அடிக்கடி கண்டேன் என்ற சொல்லை உபயோகிக்கிறார், 5 தடவை ஒரே பாட்டில் கண்டேன் என்ற சொல் வரும் பாடல் இதுவேயாகும்.

'திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன், திகழும்
அருக்கன் அணி நிறமும் கண்டேன்,—செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன், புரி சங்கம் கைக் கண்டேன்
என் ஆழி வண்ணன் பால் இன்று.''

குருகைக் காவலப்பன் அருளிச் செய்த தனியனும் இதை வலியுறுத்துகிறது.

''சீராரும் மாடத் திருக்கோவலூ ரதனுள்,
காரார் கருமுகிலைக் காணப் புக்கு—ஓராத்
திருக் கண்டேன் என்றுரைத்தசீரான் கழலே
உரைக் கண்டாய்! நெஞ்சே! உகந்து''

திருவல்லிக்கேணி என்ன, பேயாழ்வார் இறைவனைக் கண்ட திருக்கோவலூருக்கே எழுந்தருளுகிறார் திருமங்கை மன்னன். அங்கேயும் 'மஞ்சாடு வரையேழும்' என்ற பதிகத்தில் ஒவ்வொரு பாட்டின் கடைசியிலும் 'திருக்கோவலூர் அதனுள் கண்டேன் நானே!' என்றே முடிக்கிறார் திருமங்கை மன்னன். திருக் கோவலூரில் கண்டேன் நானே' என்று சேவிக்கும் பொழுது முன்பு கண்டேனே என்று மங்களாசாசனம் செய்தருளிய திருவல்லிக்கேணி திவ்யதேச சேவையும் மனதில் வர, இரண்டு திவ்ய தேசங்களையும் தேனும் பாலுமாகக் கலந்து பாடுகிறார்.

''பார் ஏறு பெரும் பாரம் தீரப் பண்டுபாரதத்துத் தூது
இயங்கிப் பார்த்தன் செல்வத்
தேரேறு சாரதியாய் எதிர்ந்தார் சேனை செருக்களத்துத்
திறல் அழியச் செற்றான் தன்னைப்
போர் ஏறு ஒன்றுஒடையானும், அளகைக்கோனும்,
புரந்தரனும், நான் முகனும் பொருந்தும் ஊர்போல்

சீரேறு மறையாளர் நிறைந்த செல்வத் திருக்கோவலூர்
அதனுள் கண்டேன் நானே!''

அர்ச்சுனனுடைய திருத்தேரிலே எழுந்தருளிய சமயம், யுத்தம் முடியு முன்னே வெற்றி முழக்கம் செய்வதற்காக பாஞ்சசன்யமான திருச்சங்கை இடது கையிலிருந்து வலது திருக்கரத்தில் எழுந்தருள்வித்துக் கொண்டான் இறைவன்.

மாபலியிடமிருந்து தாரை ஏற்று அவன் தன்னுடையது என மதித்திருந்த அவன் செல்வங்களை எல்லாம் இறைவன் ஏற்று அடைந்த வெற்றியை விளம்பரப் படுத்தத் திருச் சங்கத்தை வலது கையிலே வைத்து முழக்கியருளியமை தோன்ற திருக்கோவலூரிலும் காட்சி அளிக்கின்றான்.

மனிதப் பிறவிகளான கவுரவர்களை வென்றதைவிட அசுரப் பிறவியான மகாபலியை வென்றதினாலும், மகாபலியிடமிருந்து, வென்றவைகளைத் தானே அங்கீ கரித்ததினாலும் இறைவன் திருமேனி புளகாங்கிதமாக, வாமனத்திலிருந்து திருவிக்ரமமாயிற்று; அதனால்தான் திருவல்லிக்கேணியில், 'கண்டேனே', என்று களித்த ஆழ்வார், திருக்கோவலூரில் 'கண்டேன் நானே' என்று எல்லை இல்லா ஆனந்தத்தில் மார் தட்டுகிறார்.

''வேதத்தை வேதத்தின் சுவைப் பயனை விழுமிய
முனிவர் விழுங்கும்
கோதில் இன்கனியை நந்தனார் களிற்றைக்
குவலயத்தோர் தொழுது ஏத்தும்
ஆதியை அமுதை என்னை ஆளுடை. அப்பனை ஒப்பவர்
இல்லா
மாதர்கள் வாழும் மாட மா மயிலைத் திருவல்லிக்கேணி
கண்டேனே!''

திருமங்கை மன்னன், 'மாட மா மயிலைத் திருவல்லிக்கேணி' என்று விவரிக்கையில் இந்த திவ்ய தேசங்களுக்கு இன்னொரு அடைமொழியும் தருகிறார்

அதாவது : 'ஒப்பவர் இல்லா மாதர்கள் வாழும் மாட மாமயிலைத் திருவல்லிக்கேணி' என்று வர்ணிக்கின்றார்.

திருமங்கை மன்னன், தம்மைப் பற்றிப் பறை சாற்றுகையில், 'கொங்கு மலி குழலியர் வேள் மங்கை வேந்தன்" எனக் கூறிக் கொள்ளட்டும்; ஆனால் திருவல்லிக்கேணியை வருணிக்கையில் 'ஒப்பவர் இல்லா மாதர்கள் வாழும் மாட மாமயிலைத் திருவல்லிக்கேணி' என்று கூறுவானேன்?

மாட மாமயிலைத் திருவல்லிக்கேணியில் தான் ஒப்பவர் இல்லா மாதர்கள் வாழ்கின்றனரா? அப்படியானால், பலர் மாட மாமயிலைத்திருவல்லிக்கேணிதான் கதி என்று இருந்து விடுவார்களே!

இங்கும் ஒரு முடிச்சு உள்ளது; இதையும் ஆராய வேண்டும்!

ஐந்து திவ்ய தேசங்களைக் கொண்ட திருவல்லிக்கேணியிலே மாட மா மயிலையிலே அவதரித்தருளிய பேயாழ்வாருடைய மங்களாசாசனம் மந்நாதனுக்குக் கிடைத்தது மூன்றாம் திருவந்தாதியிலே.

திருவல்லிக்கேணியிலே ஸ்ரீமந் நாராயணனாக, அதாவது தாமரையாளான லட்சுமி திருமார்பில் வசிக்கும் மந்நாதன் சேவை சாதிக்கின்றானாம்.

''வந்து உதைத்த வெண் திரைகள் செம்பவள
வெண் முத்தம்,
அந்தி விளக்கும் அணி விளக்காம்—எந்தை
ஒரு வல்லித் தாமரையாள் ஒன்றிய சீர் மார்பன்
திருவல்லிகேணியான் சென்று.''

மந்நாதன் சந்நிதிக்கு மாத்திரமே தனித்தாயார் சந்நிதியும் உள்ளது இங்கு.

மேலும் திருக்கோவலூரிலே சேவித்தபோது பேயாழ்வார் முதலில் லட்சுமியைத்தான் சேவித்தாராம். 'திருக்

கண்டேன்'. அந்த லட்சுமியின் பொன் கிரணங்களிலே தோய்ந்து பொன்மேனி அடைந்த திருமாலை அடுத்துதான் கண்டாராம். ''பொன் மேனி கண்டேன்''—

எனவே திருமங்கை மன்னன் மந்நாதனைச் சேவித்த போது முன்பு இப்பெருமாளைச் சேவித்து மங்களாசாசனம் செய்தருளிய பேயாழ்வார் காட்டிய வழியை அதாவது லட்சுமியோடு கூடின திருமாலைச் சேவிக்கும் முறையைப் பின் பற்றுகிறார்.

பேயாழ்வார் காட்டிய வழியைத் திருவரங்கத்து அமுதனார் சேவிக்கிறார்.

'மன்னிய பேர் இருள் மாண்டபின், கோவலுள்,
மாமலராள்
தன்னொடு மாயனைக் கண்டமை காட்டும் தமிழ்த் தலைவன் (பேயாழ்வார்)
பொன்னடி போற்றும் இராமனுசற்கு அன்பு பூண்டவர் தாள்
சென்னியில் சூடும் திரு உடையார் என்றும் சீரியரே!''

இறைவன் திருவல்லிக்கேணியிலே மந்நாதனாக ஸ்ரீமந் நாராயணனாக எழுந்தருளியதால் ஆண்களோடு பெண்களும் சரி நிகர் சமானமான பத்தியோடு வணங்குகின்றார்களாம்.

மன்னிக்க வேணும். ஆண்களை விடப் பெண்கள் தான் ஸ்ரீமந் நாராயணனாக எழுந்தருளியுள்ள இந்தச் சேர்த்தியை வணங்குகிறார்களாம். எனவே இப்படியான சேர்த்தியை, பத்தியிலும் வணங்குவதிலும் ஒப்பவர் இல்லா மாதர்கள் வாழும் மாட மாமயிலைத் திருவல்லிக்கேணி கண்டேனே என சமத்காரமாக முடிக்கின்றார் திருமங்கை மன்னன்.

மந்நாதனை ஆண்கள் 10ல் இருவர் சேவிப்பது அருமை; பெண்கள் அனைவரும் சேவிப்பார்கள்.

சரி, இந்தப் பாடலில் கட்டும் அவிழ்ந்ததே! என்ற பொருள் எங்ஙனம் பெறப்படுகிறது என்று கேள்வி.

பூமியிலுள்ளவர்கள் தங்கள் பந்தம் தீர வேண்டும் என்றால், திருப்பாற்கடலில் போய் முறையிடுவார்கள். திருவல்லிக்கேணியிலே, மந்நாதனாகக் கிடந்தருள்வதால் திருப்பாற் கடலுக்குப் போக வேணுமா இனியும்? மந்நாதனைச் சேவிக்கும் குவலயத்தோர் கட்டு எல்லாம் தானாக அவிழுமே! "குவலயத்தோர் தொழுது ஏத்தும் ஆதியை, என்னை ஆளுடை அப்பனை" என்பதில் குவலயத்தோர் கட்டு அவிழ்ந்தது, ஆழ்வாரின் கட்டும் அவிழ்ந்தது!

மூன்றாவதான பாடல் திருமங்கை மன்னன் மறுபடியும் பார்த்த சாரதி சந்நிதிக்கு எழுந்தருளி, மேலும் மங்களாசாசனம் செய்தருள்கிறார்.

பக்தியில் ஒப்பவர் இல்லா மாதர்கள் வாழும் மாடமா மயிலை என்று பொருள் கொண்டதை அங்கீகரிக்கும் முறையிலே இப்பாடல் அமைந்துள்ளது.

தோற்றத்தில் மாத்திரம் ஒப்புதல் கூற முடியாத கோலத்துடன் ஒருத்தி வந்தாள்; தாய் போல வந்தாள்; தாய் உள்ளமில்லை, மடிந்தாள்.

உருவத்திலும் உள்ளத்தின் அன்பிலும் ஒப்புதல் இல்லாத இன்னொரு பெண் தோன்ற உருவத்தின் அழகிலே மயங்கினர் அரக்கர்; உள்ளத்தின் அன்பிலே மயங்கினர் விஞ்சை வானவர், சாரணர், சித்தர்.

முன்னது அசுரமாது; பின்னது தெய்வீகமாது.

"வஞ்சனை செய்யத் தாய் உருவாகி வந்த பேய்
அலறி மண்சேர
நஞ்சு அமர் முலை ஊடு உயிர்செக உண்ட நாதனைத்
தானவர் கூற்றை,

விஞ்சைவானவர், சாரணர்சித்தர் வியந்து துதி செய்யப்
பெண் உருவாகி
அஞ்சுவை அமுதம் அன்று அளித்தானைத் திருவல்லிக்
கேணி கண்டேனே''

உருவமும் விஷமும் கலந்து வந்தாள் பூதனை அவளுக்கும் அசுரர்கட்கும் நஞ்சானான் கண்ணன். உருவமும் அமுதமும் கலந்து வந்தான் இறைவன்

இப்பாடலில் அவிழ்ந்த கட்டு எது?

அமுதம் உண்டதினாலே, அடிமைகளாக இருந்த தேவர்களுடைய கட்டு அவிழ்ந்தது. பூதனையின் கட்டும் அவிழ்ந்தது என்றும் கொள்ளலாம்.

கிருஷ்ணன் தீண்டியதாலே அவளும் உய்ந்தாள். அவளை எரித்தபோது, சந்தன மரங்கள் எரிந்தால் ஏற்படும் நறுமணம் உண்டானதாம்.

''வஞ்சனை செய்யத் தாய் உருவாகி வந்த பேய் அலறி
மண் சேர,
நஞ்சமர் முலையூடு உயிர் செக உண்ட நாதனைத்
தானவர் கூற்றை
விஞ்சை வானவர் சாரணர் சித்தர் வியந்து துதி
செய்யப் பெண் உருவாகி
அஞ்சுவை அமுதம் அன்று அளித்தானைத்
திருவல்லிக்கேணி கண்டேனே!''

தன் சாமர்த்தியத்தால் ஒரு அசுரப் பெண்ணை புறம் கண்டதில் மட்டுமல்ல, அசுரக் கூட்டத்தையே புறம் கண்டதில் மட்டுமல்ல, தேவர்களின் தலைவனான இந்திரனையே எதிர்க்கும் சாமர்த்தியம் உடைய கோபாலனான பார்த்தசாரதியின் திருக்கல்யாண குணவழகிலே ஈடுபடுகிறார் அடுத்த பாட்டிலே. இதுவும் பாகவதத்தின் தொடர்ச்சி தான்.

''இந்திரனுக்கு என்று ஆயர்கள் எடுத்த எழில் விழவில்
பழ நடை செய்
மந்திர விதியில் பூசனை பெறாது மழை பொழிந்திடத்
தளர்ந்து ஆயர்
எந்தம்மோடு இன ஆனிரைதளராமல் எம்பெருமான்
அருள் என்ன.
அந்தமில் வரையால் மழை தடுத்தானைத்
திருவல்லிக்கேணி கண்டேனே.

இப்பாடலில் யாருடைய கட்டு அவிழ்ந்தது குறிக்கப் படுகிறது? வெளிப்படையாக நன்றாகத் தெரிகிறது.

ஆயர் பெருமக்கள் ஒவ்வொரு ஆண்டும் இந்திர பூசை செய்வது வழக்கம், மழை பொழிந்துநீர்வளமும் நிலவளமும் அளித்துத் தங்களையும் தங்கள் பசுக் கூட்டங்களையும் காப்பதற்காக.

இதற்குக் காரணம் இந்திரனல்ல. அவனுக்கு நிர்வாகனான தானே என்று கண்ணன் கூற முனைந்தான். ஆனால் இவைகளுக்குக் காரணம் இக்கோவர்த்தனகிரியே எனக்கூறி பூசையை அம்மலைக்கு இடச் செய்ததும், இந்திரன் கடும் கோபம் கொண்டு சப்த மேகங்களையும் கொண்டுமழை பெய்விக்கவும்ஆயர்பெருமக்கள்கண்ணனைச் சரணம் அடைந்தனர். கண்ணும் கோவர்த்தனத்தைக் குடையாகப் பிடித்துக் காத்தனன். பெரியாழ்வாரும் கூறுகின்றார்.

''அம்மைத் தடம் கண் மட ஆய்சியரும் ஆனாயரும்
நிரையும் அலறி,
எம்மைச் சரண் என்று கொள், என்றிரப்ப,
இலங்கு ஆழிக்கை எந்தை எடுத்த மலை.''

''வழுவு ஒன்றும் இல்லாச் செங்கை வானவர் கோன்
வலிப்பட்டு முனிந்து விடுக்கப்பட்ட
மழை வந்துஎழு நாள் பெய்து மாத்தடுப்ப மதுசூதனன்
எடுத்து மறித்த மலை.''

''சலமா முகில் பல் கணப்போர்க் களத்துச், சரமாரி
பொழிந்து எங்கும் பூசலிட்டு
நலிவான் உறக்கேடகம்கோப்பவன் போல்,நாராயணன்
முன் முகம் காத்தமலை.''

பரதேவதையான இந்திரனைப் பூசித்துக் கிடந்த ஆயர் பெருமக்களின் கட்டு அவிழ்ந்ததை இப்பாடல் கூறுகிறது.

''இந்திரனுக்கு என்று ஆயர்கள் எடுத்த எழில் விழவில்
பழ நடை செய்.
மந்திர விதியில் பூசனை பெறாது. மழை பொழிந்திடத்
தளர்ந்து, ஆயர்
எந்தம்மோடு இன ஆனிரை தளராமல் எம்பெருமான்
அருள் என்ன
அந்த மில் வரையால் மழை தடுத்ததானைத்
திருவல்லிக்கேணி கண்டேனே!''

பார்த்தசாரதிச் திருக்கோலத்தைச் சேவித்துக் கொண்டிருக்கும் திருமங்கை மன்னனுக்குக் கண்ணனுடைய லீலைகளான வேறு சில நிகழ்ச்சிகளும் மனக் கண்முன் வருகின்றன. தூது சென்ற எளிமையல்லவா மனதை உருக்குவது மகாபாரதத்தில். கௌரவர்களால் கொடிய துன்பங்களுக்கு உட்படுத்தப்பட்ட பாண்டவர்களின் கட்டு அவிழ்ந்ததைக் கூறுகிறது அடுத்த பாடல்.

மேலும் இப்பாட்டில் முதல் பாகத்தில் மூன்று பிராட்டி களைப் பற்றியும் பேசப்படுகிறது.

திருவல்லிக்கேணி சந்நிதியை கவனப் படுத்திக் கொள்ளுங்கள்.

அக்காலத்தில் சந்நிதிகள் தனித் தனியாக இருந்து இடையில், திருச்சுற்றுகளுக்கான வெளிநடைப் பாதைகளும் இருந்திருக்கலாம்.

ஸ்ரீ பார்த்தசாரதியைச் சேவித்து பிரதிட்சணமாக அதாவது வலப்பக்கமாக எழுந்தருளிய திருமங்கை மன்னன், தாமரைப் பூவில் வீற்றிருக்கும் பெரிய பிராட்டியாரின் அம்சமான வேதவல்லித் தாயாரைச் சேவிக்கிறார் போலும். ''இன் துணைப் பதுமத்து அலர் மகள் தனக்கும் இன்பம்''

அப்படியே பிரதட்சிணமாகப் பார்த்தசாரதிக்குப் பின்புறமாக வந்து இடப்பக்கத்தில் பூமிப் பிராட்டியின் அவதாரமாக அவதரித்த ஆண்டாளைச் சேவித்திருந்தார் போலும். ''நல் புவி தனக்கு இறைவன்'' மறுபடியும் பிரதட்சிணத்தைத் தொடர்ந்து பூர்த்தி செய்து கொண்டு மந்நாதன் சந்நிதிக்குப் பின்புறமாக வந்து பார்த்த சாரதியைச் சேவிக்கிறார்.

பார்த்தசாரதியின் அருகில் எழுந்தருளியுள்ள ருக்மிணிப் பிராட்டி தானாகவும் தன் கணவன் முயனறு அடைந்த நப்பின்னையின் அம்சமாகவும், சேவை சாதித்திருக்கலாமே! நப்பின்னையை அடைவதற்காகவே கண்ணன் இரு பெற்றோர்களையும் இரு ஜாதியையும் வரித்தான்.

'தன் துணை ஆயர் பாவை நப்பின்னை தனக்கு இறை.' 'ஆயனாகி ஆயர் மங்கை வேய தோள் விரும்பினாய், ஆய! நின்னை யாவர் வல்லர்'

மற்றும் சுற்றிலும் சூழ்ந்துள்ள தம் கோஷ்டியைக் கடாட்சிக்கின்றார், ''மற்றையோர்க்குஎல்லாம் வன் துணை. இப்போது பார்த்தசாரதியைச் சேவிக்கிறார். பாதாதி கேசம். திருப்பாதங்களைச் சேவித்ததும், அப்பாதங்கள் சிவக்க பாண்டவர்க்காகத் தூது நடந்து போன எளிமை மனதில் சேவையாகிறதால், திருமுக மண்டலத்திலுள்ள

திருப்பவழவாய் சேவையாகிற போது, இறைவன் தூது பேசியதும் சேவையாகிறது.

"பஞ்ச பாண்டவர்க்காக வாயுரை தூது சென்று இயங்கும்"

துணையாக இருக்கிற காரியம் கண்ணனாக அவதரித்த போது மாத்திரமில்லை. இங்கே அந்தத் திருக்கோலத்தில் எழுந்தருளி இருக்கிறது ஆழ்வார் போன்ற பக்தர்கட்காகவுமே.

"என் துணை." பார்த்தசாரதியில் உயர்ந்து நீண்ட திருமுடியைச் சேவிக்கின்றார்.

அவனுடைய பரத்வமும், சுவாமித்வமும் சேவையாகிறதல்லவா?

"எந்தை தந்தை தம்மானைத் திருவல்லிக்கேணி கண்டேனே!"

'இன் துணை பதுமத்து அலர் மகள் தனக்கும்
இன்பன் நற்புவிதனக்கு இறைவன்
தன் துணை ஆயர் நப்பின்னை தனக்கு இறை
மற்றையோர்க்கு எல்லாம்
வன்துணை பஞ்ச பாண்டவர்க்காகி வாய் உரை தூது
சென்று இயங்கும்
என் துணை எந்தை தந்தை தம்மானைத் திருவல்லிக்
கேணி கண்டேனே!"

மேலும் ஈடுபட்டு லயிக்கிறது திருமங்கை மன்னன் திருவுள்ளம் பார்த்த சாரதியின் கல்யாண குணக் கடலிலே.

பாண்டவர்களுடைய கட்டை அவிழ்த்தது யாருக்காகவாம்? தன் பக்தையான திரௌபதியின் வாழ்விற்காகவே. எனவே திரௌபதியின் கட்டு அவிழ்ந்தது பேசப்படுகிறது இப்பாடலிலே.

கௌரவர்களுக்கு அடிமையாகி விடாமல் திரௌபதி சரணாகதி செய்யவும் (அந்த சேஷத்வத்தை விலக்கி) எம் பெருமான் அருள் சுரந்தானாம்.

எதிரிலே உள்ள கணவன்மார்களை, அதாவது பஞ்ச பாண்டவர்களை நோக்கிக் கதறாமல் கண்ணனை நோக்கிக் கதறியதே பொருந்தும்.

"கணவன் கையைப் பிடித்துக் கடுவழி போகிற மனைவி காலில்
இடறினால் அம்மே என்றல்லவோ விளிப்பாள்'—பட்டர்.

தன் சிறுவனான பார்த்தனுக்கு வந்த ஆபத்தை இந்திரனே தடுக்கவில்லையே! மறை முகமாக இதையும் பாடலில் காணலாம்,

பாகவதக் கதைகளை தொடர்கிறார் ஆழ்வார்.

"அந்தகன் சிறுவன் அரசர் தம் அரசற்கு இளையவன் அணி இழையைச் சென்று
எந்தமக்கு உரிமை செய் எனத் தரியாது எம்பெருமான் அருள்: என்ன,
சந்தமல் குழலாள் அலக்கண் நூற்றுவர் தம் பெண்டிரும் எய்தி நூல் இழப்ப
இந்திரன் சிறுவன் தேர்முன் நின்றானைத் திருவல்லிக்கேணி கண்டேனே!"

தேர் முன் நின்றருளியது இந்திரன் சிறுவன் வெற்றிக்காக அல்லவாம், பாஞ்சாலியின் துயர் அகற்றவே யாம்! திருமங்கை மன்னன் ஒருவாறாகப் பார்த்தசாரதியைச் சேவித்துக் கொண்டு வந்த வழியே கிழக்கு நோக்கி வருதலும் சக்ரவர்த்தித் திருமகன் சந்நிதி சேவையாகிறது.

"பரதனும் தம்பி சத்துருக்னனும் இலக்குமணனோடு மைதிலியும்
இரவு நன் பகலும் துதி செய்ய நின்ற திருவல்லிக்கேணி கண்டேனே"

எதற்காக இப்படித் துதிக்கின்றார்? இவர்கள் மட்டிலும் அல்ல உலகத்தார் அனைவரையும் சொன்னதாகக் கொள்ள வேணும்.

பரதன்: பக்தி மார்க்கம்.
சத்துருக்கன் : பிரபத்தி மார்க்கம்.
இலக்குவன் : கர்ம மார்க்கம்

மைதிலி : கேவலம் கிருபையாலே ஆட்கொள்ளப்பட்ட வர்கள்.

பரதாதிகள் தொடக்கமாக, ஏன், உலகம் எல்லாம் ஏத்துகிறது, இரவும் பகலுமெல்லாம்; இராமபிரான் இராவண வதம் செய்தருளி எல்லோருடைய கட்டையும் அவிழ்த்ததற்காகவே.

''இராவணாந்தகனை எம்மானைத் திருவல்லிக்கேணி
கண்டேனே!''

''அண்டர்கள் துயரம் தீர அயோத்தி மா நகரம் வந்து
தண்ட காரண்யம் சென்று சமுத்திரம் அணையாய்க் கட்டி
கொண்டல் ராவணனைவீட்டிக் கோதண்டம் கையில்
ஏந்தும்
புண்டரீகக் கண்ணன் ராமன் பொன்னடிக் கமலம்
போற்றி,''

நண்பகலும் : இரவில்தானே கூனியால் இராமா யணமே திருப்பம் பெற்றது. இப்படி தராதலத்தோர் குறை

முடித்த தன்மை யானை ஆங்கரும்பிக் கண்ணீர் சோர்ந்து அன்பு கூறும் அடியவர்கள்'' ஏத்துகின்றனர்.

14 ஆண்டுகள் பெருமாள் காட்டிற்கு எழுந்தருளிய போது, மேலே எவ்வளவு வெய்யில், கீழே எவ்வளவு முள், கல்—கஷ்டங்களைச் சகித்திருப்பார்.

தயரதன் வேடத்தில் குலசேகரர் கூறுவது :

''வென்றி. மைவாய களி றொழிந்து தேரொழிந்து
மாவொழிந்து வனமே மேவி
நெய்வாய வேல் நெடுங்கண் நேரிழையும் இளங்கோவும்
பின்பு போக
எவ்வாறு நடந்தனை எம் இராமா ஓ! எம்பெருமான்
என் செய் கேனே!'

★

''மெல்லணை மேல் முன்னுயின்றாய் இன்றினிப்போய்
வியன்கான மரத்தின் நீழல்
கல்லணை மேல் கண் துயிலக் கற்றனையோ காகுத்தா!
கரியகோவே!''

''பொருந்தார் கைவேல் நுதி போல் பரல் பாய
மெல்லடிகள் குருதி சோர
விரும்பாத கான் விரும்பி வெயிலுறைப்ப வெம்பசி
நோய் கூற''

சென்றதெல்லாம் திருமங்கை மன்னனுக்குச் சேவையா கிறது. இராவண வதம் செய்த சிரமமும் தேவையாகிறது இந்தச்சிரமம் எல்லாம்தீரவேணுமென்றுத் திருவல்லிக்கேணி யில் எழுந்தருளியுள்ள சக்ரவர்த்தித் திருமகன் சந்நிதியைக் குளிர்ச்சியாக்கும் வகையில் இயற்கை அமைந்திருப்பதை மங்களா சாசனம் செய்தருள்கிறார்.

அது மாத்திரமா? ஆடல் பாடல் கச்சேரிகளும் நடை பெறுகின்றனவாம்.

''குரவமே கமழும் குளிர் பொழிலோடு குயிலொடு
மயில்கள் நின்றால
இரவியின் கதிர்கள் நுழைதல் செய்தறியாத்
திருவல்லிக்கேணி கண்டேனே.''

★

''வண்டினம் முரலும் சோலை மயில்இனம் ஆலும்சோலை
கொண்டல் மீதணவும் சோலைக் குயிலினம் கூவும்
சோலை

அண்டர்கோன் அமரும் சோலை அணி திருவரங்கம்
தோற்று நிற்கிறதாம் திருவல்லிக்கேணிக்கு.''

''பரதனும் தம்பி சத்துருக்னனும் இலக்குமணனோடு
மைதிலியும்
இரவுநன்பகலும் துதிசெய்ய நின்ற இராவணாந்தகனை
எம்மானைக்
குரவமே கமழும் குளிர் பொழிலோடு குயிலொடு
மயில்கள் நின்றால
இரவியின் கதிர்கள் நுழைதல் செய்தறியாத்
திருவல்லிக்கேணி கண்டேனே.',

திருமங்கை மன்னன் சக்கரவர்த்தித் திருமகனைச் சேவித்த பின் திருவாய்மொழி மண்டபம் கடந்து வந்து தாயார் சந்நிதியை வலமாக வந்து மேற்கே எழுந்தருள்கையில் தெள்ளிய சிங்கர் சேவை சாதிக்கிறார்.

இது இரண்டாவது திருச்சுற்று, பிரகலாதாழ்வானுக்கு தீர்க்கமாக மங்களாசாசனம் நிறைந்த நரசிம்மாவதாரப் பாடல் இதுவே.

பிரகலாதாழ்வானுடைய கட்டு அவிழ்கிறது இப்பாடலிலே.

'பள்ளியில் ஓதி வந்த தன் சிறுவன் வாயில் ஓர் ஆயிரம்
நாமம்
ஒள்ளிய வாகிப் போத ஆங்கு அதனுக்கு ஒன்றும் ஓர்
பொறுப்பிலன் ஆகிப்
பிள்ளையைச் சீறி வெகுண்டு தூண்புடைப்பப் பிறை
எயிற்று அனல் விழிப் பேழ்வாய்
தெள்ளிய சிங்கம் ஆகிய தேவைத் திருவல்லிக்கேணி
கண்டேனே!''

இந்த அடைமொழிகளை எல்லாம் இன்றும் அர்ச்சையிலே இங்கு சேவிக்கலாம்.

அழகிய சிங்கரைச் சேவித்த பின் அவரைப் பிரதட்சிண மாக வந்த திருமங்கை மன்னர் தெற்கே திரும்பியதும் கஜேந்திர வரதனைச் சேவிக்கிறார்.

வெளியிலே சேவித்துத் தீர்த்தமாடிய அல்லிக்கேணிமீன் அமராத பொய்கை; இங்கே ஆழ்வார் சாதிக்கும் கதையில் வருவது மீன் அமர் மொய்கை!

இந்தப் பொய்கையில் அன்று அலர்ந்த மலரைக்கொய்ய வந்த கஜேந்திராழ்வான், முதலையின் வாயில் அகப்படவும் துக்கத்துடன் சரணாகதி செய்யவும் இறைவன் காத்தருளினானாம்.

ஆனைக்கு என்ன துயரம்: பறித்த புட்பம் வாடாத முன் இறைவன் திருவடியில் சேர்த்து விட வேண்டு மென்பதை ''கான் அமர் வேழம் கைஎடுத்து அலறக் கரா அதன் காலினைக் கதுவ ஆனையின் துயரம் தீரப் புள் ஊர்ந்து சென்று நின்று ஆழி தொட்டானைத் திருவல்லிக்கேணி கண்டேனே.''

இந்தப் பாடலிலும் இரண்டாவது முறையாக இப் பதிகத்தில் மாட மயிலைத் திருவல்லிகேணி என்று பேசப்படுகிறது.

இதில் என்ன விசேஷமோ?

மீனமர் பொய்கையிருந்து கானிலே இருந்து வருந்திக் கதறிய கஜேந்திராழ்வானைக் காப்பாற்றிய இறைவன் மேலும் இவ்விதமாக சரணாகதர்களின் கூப்பாடு கேட்டால் நிரந்தரமாக இருந்து ரட்சிக்க ஒரு இடம் தேடினானாம்.

மீன் அமராத ஒரு பொய்கையைக் கண்டானாம்; அந்தப் பொய்கை அருகே ஒரு சோலையும் இருந்ததாம்.

சாதாரணமான பொய்கையா அது! தேன் சொட்டுகிற அல்ல தேன் அமர்ந்த (மாறாத) சோலையாம்; எதனாலே

எப்போதும் புஷ்பித்துள்ள மலர்களாலே. இச்சிறப்புகளை திருவல்லிக்கேணியிலே கண்ட இறைவன் நிரந்தரமாகவே தங்கி விட்டானாம்.

''தேன் அமர் சோலை திருவல்லிக்கேணி கண்டேனே''

இறைவன் உகப்புக்காகவும் பக்தரட்சணத்துக்காகவும் எழுந்தருளிய தேன் அமர்சோலையை வளர்த்துப் போற்றிய பெருமை பேயாழ்வாரைச் சேரும். பேயாழ்வார் அல்லவா திருவல்லிக்கேணியில் திரு நந்தவன கைங்கர்யம் செய்து திருமழிசையாரையும் திருத்தியவர். எனவே தேனமர் சோலையாம் திருவல்லிக்கேணியை வளர்த்தருளிய பேயாழ்வாரும், இப்பாடல் அநுசந்தானத்தின்போது திருமங்கை மன்னனுக்கு சேவை சாதிக்கவும், அந்த அபிமானத்தை மனதில் வைத்து, அப்பேயாழ்வார் அவதரித்தருளிய அருகிலுள்ள அவதாரத்தலத்தையும் வெறும் மயிலை என்று சொல்ல வாய் கூசி மாமயிலை என்று சிறப்பித்து மாட மயிலையாகவும் திகழ வேண்டுமென மங்களா சாசனம் செய்தருளி, இப்பாடலிலே இரண்டாவது முறையாக 'தேனமர் சோலை மாட மாமயிலைத் திருவல்லிக்கேணி கண்டேனே' என்று திருவாய் மலர்ந்தருளினார்.

முழுப்பாடலையும் சேவிக்கலாம்:

''மீன் அமர் பொய்கை நாண் மலர் கொய்வான்
வேட்கையினோடு சென்றிழிந்த
கான் அமர் வேழம் கைஎடுத்து அலறக் கரா அதன்
காலினைக் கதுவ
ஆனையின் துயரம் தீரப்புள் ஊர்ந்து சென்று நின்று
ஆழிதொட்டானைத்
தேனமர் சோலை மாட மாமயிலைத்திருவல்லிக்கேணி
கண்டேனே.''

மூன்றாவது திருச்சுற்று.

திருவல்லிகேணி மாட வீதியை குளிரக் கடாட்சித்து வலம் வந்து ஆழ்வார், திருக்கோயிலாழ்வானையும் திவ்ய தேசப் பெருமைகளையும் இவைகளை உண்டாக்கிய மன்னனையும் பத்தாம் பாசுரத்திலே மங்களாசாசனம் செய்தருளி மகிழ்கிறார்.

''மன்னு தண்பொழிலும் வாவியும் மதிலும் மாட
மாளிகையும் மண்டபமும்
தென்னன் தொண்டையர்கோன் செய்த நன் மயிலைத்
திருவல்லிக்கேணி நின்றானை
கன்னி நன் மாட மங்கையர் தலைவன் காமரு
சீர்க்கலிகன்றி
சொன்ன சொல் மாலை பத்துடன் வல்லார் சுகமினி
தாள்வர் வான் உலகே.'

முதலாவதான ''விற்பெருவிழவும்''பாசுரத்திலே எட்டும் வீழ்ந்ததைப் பார்த்தோம். இதர பாசுரங்களிலே கட்டும் அவிழ்ந்ததைப் பார்த்தோம். எத்தனை கட்டுகள் அவிழ்ந்தன என்பதையும் காணலாம்.

''வேதத்தை வேதத்தின் சுவைப் பயனை' என்னும் பாடலில் குவலயத்தோர் தொழுதேத்துவதால் குவலயத்தோர் கட்டு அவிழ்ந்தது. (1)

'வஞ்சனை செய்யத் தாய் உருவாகி' என்ற பாடலில் அஞ்சுவை அமுதம் பெற்றதால் வானவர்கள் கட்டு அவிழ்ந்தது. (2)

'இந்திரனுக்கு என்று ஆயர்கள் எடுத்த' பாடலிலே எம்பெருமான் அருள் என்று சரணாகதி செய்த ஆயர்கள் கட்டு அவிழ்ந்தது. (3)

''இன்துணைப் பதுமத்து அலர் மகள்' பாடலிலே எந்தை தந்தை தம்மான் பஞ்ச பாண்டவர்க்காகி வாயுரைத்தூது சென்றியங்கியதால் பாண்டவர்கள் கட்டு அவிழ்ந்தது; (4)

'அந்த கன் சிறுவன்' பாடலிலே எம்பெருமான் அருள் என்று சரணாகதி செய்த சந்த மல் குழலாள் திரௌபதியின் கட்டு அவிழ்ந்தது. (5)

'இரவும் நண் பகலும் துதி செய்ய நின்ற தேவர் உலகர் யாவர் கட்டும் அவிழ்ந்தது. 'பரதனும் தம்பி சத்துருக்கனும்' என்ற பாடலிலே, (6)

தெள்ளிய சிங்கம் ஆகிய தேவால் பள்ளியில் ஓதி வந்த சிறுவன் கட்டு அவிழ்ந்தது, அடுத்த பாடலிலே; (7)

'மீனமர் பொய்கைப்' பாடலிலே ஆனையின் துயரம் தீர்ந்து ஆனையின் கட்டும் அவிழ்ந்தது. (8)

எனவே எட்டும் வீழ்ந்ததே? என்பதுடன், எட்டு கட்டும் அவிழ்ந்ததே என்றே நாவலிடலாம்.

அனைவரின் கட்டும் அவிழ்வதற்காக இறைவன், தன்னை ஐந்து நிலைகளிலே வெளிப்படுத்திக் கொள்கிறான்.

இதனை 1. பரம் 2. வியூகம் 3. விபவம் 4. அந்தர்யாமித்வம் 5. அர்ச்சை எனக்கூறுவர்.

தேனமர் சோலை மாட மாமயிலைத் திருவல்லிக்கேணி யிலே, இந்த ஐந்து நிலைகளையும் சேவிக்கலாம்.

ஆதி மூலமே என்று கஜேந்திராழ்வான் சரணாகதி செய்த போது பரமபதத்திலிருந்த இறைவன்தான் ஓடி வந்தான் காக்க. எனவே பரம பதத்தைக்குறிக்கும் பாடல்,

மீனமர் பொய்கை நாண்மலர் கொய்வான்
வேட்கையினோடு சென்று இழிந்த
கான் அமர்வேழம் கையெடுத்து அலறக் கரா அதன்
காலினைக் கதுவ
ஆனையின் துயரம் திரப்புள் ஊர்ந்து சென்று நின்று ஆழி
தொட்டானைத்
தேன் அமர் சோலை மாடமாமயிலைத்
திருவல்லிக்கேணி கண்டேனே''

திருப்பாற் கடலிலே இறைவன் எழுந்தருளியுள்ளமைக்கு வியூகம் என்று பெயர்.

மாவல்லிக்கேணியிலே ஐந்தலைவாய் நாகத்தணையிலே எழுந்தருளியுள்ள மந்நாதன் வியூகத்தைக் குறிக்கின்றார்.

'வேதத்தை வேதத்தின் சுவைப் பயனை விழுமிய முனிவர் விழுங்கும்
கோதுஇல் கனியை நந்தனார் களிற்றைக் குவலயத்தோர் தொழுதேத்தும்,
ஆதியை அமுதை என்னை ஆளுடை அப்பனை ஒப்பவர் இல்லா
மாதர்கள் வாழும் மாட மாமயிலைத் திருவல்லிக்கேணி கண்டேனே.'

வியூகத்திற்குப் பிறகு விபவத்தைக் குறிக்கும் பாடல்கள் பல,

பூர்ண அவதாரப் பாடல்கள்,
விற்பெரு விழவும் : அந்தகன் சிறுவன்:
வஞ்சனை செய்ய : பரதனும் தம்பி;
இந்திரனுக்கு என்று; இன்துணைப் பதுமம்;

அடுத்தபடியாக அந்தர்யாமித்வம்: எங்கும் உளன் கண்ணன் என்றான் மகன்.

திட விசும்பு எரி வளி நீர் நிலம் இவை மிசை படர் பொருள் முழுவதுமாய் அவை அவை தொறும் உடல் மிசை உயிர் எனக் கரந்து எங்கும் பரந்துள, சுடர் மிகு சுருதியுள் இவை உண்ட சுரனைக் காணாமல் தானே வலியவன் எனத் தருக்கிய (தந்தை) இரணியன் அக்கனை அம்மகனைக் காய்ந்து ஈங்கில்லையால் என்று இரணியன் தூண்புடைப்ப, இதுவரை அந்தர்யாமியாக எழுந்தருளியிருந்த இறைவன், அங்கப் பொழுதே அவன் வீயத்தோன்றினான், 'பள்ளியில் ஓதி வந்த தன் சிறுவன். பாடலிலே' நம் சிங்கப் பெருமான் பெருமை ஆராயும் சீர்மைத்தே.

அர்ச்சை நிலை:

மன்னுதண் பொழிலும் வாவியும் மதிலும் மாட மாளிகையும் மண்டபமும் தென்னன் தொண்டையர்கோன் செய்ததே நன் மயிலைத்திருவல்லிக்கேணிலேயே இறைவன் வந்து நின்றதால் தான்,

அதனால்தான் கன்னி நன்மாட மங்கையர் தலைவன் காமரு சீர்க்கலி கன்றியும் சொன்மாலை பத்துடன் சொன்னார். எதற்காக? இதனை வல்லார் சுகமினி தாள்வர் வானுலகே.

மங்கை மன்னன் பாடல்களின் மகிமைகளைச் சரியாகத் தெரிந்து கொண்டவர்கட்கு இதில் சந்தேகம் இருக்காது.

ஆழ்வான் அருளிச் செய்கிறார். கேளுங்கள்;

பரகாலன் பனுவல்களே, நெஞ்சுக்கு இருள் கடி தீபம், அடங்கா நெடும் பிறவிக்கு நல்ல அமுதம், தமிழ் நன்னூல் துறைகள் அஞ்சுக்கு இலக்கியம், ஆரணசாரம், பரசமயப் பஞ்சுக்கு அனலின் பொறி,

பரகாலன் பனுவல்கள் நெஞ்சுக்கு இருள் கடி தீபம் என்பதைப் பற்றிப் பேசுவதைப் பார்ப்போம்:

நெஞ்சுக்கு இருள்: அஞ்ஞானம்<br>
நெஞ்சுக்கு இருள் கடி தீபம் : ஞானம்<br>
நெருப்பு முதல் நிலை; தீபம் இரண்டாவது நிலை.

ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓர் இரவில் ஒருத்தி மகனாய் ஒளித்து வளரத் தரிக்கிலானாகித் தான் தீங்கு நினைந்த கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில் நெருப்பென்ன நின்றான் நெடுமால்; அதனால் முதற் பாட்டிலே தீபம் காணலாம்.

விற்பெருவிழவும் கஞ்சனும் மல்லும் வேழமும் பாகனும் வீழ்ந்தன.

புரம் எரி செய்த சிவன், தானே பெரியன் எனக் தருக்கியதால் கபாலியானான். அச்சிவனுறு துயர்களை நீக்கி அவன் நெஞ்சிலே இருந்த இருளைக் கடிந்த தேவைத் திருவல்லிக்கேணியிலே காண்கிறோம்.

நெஞ்சிலே இருள் நிறைந்த கௌரவர்களான பற்றலர் வீயக் கோல் கையில் கொண்டு பார்த்தன் தன் தேர் முன் நின்றான்.

இது இவனுக்கு வழக்கமே. ஏனென்றால் முன் அவதாரத்திலே, இருள் நிறைந்த மனத்தனளான கைகேயி, கலக்கிய மாமனத்தனளாய்க் கைகேயி வரம் வேண்ட மலக்கிய மா மனத்தினனாய், மன்னவனும் மறாது ஒழிய குலக்குமரா காடுறையப் போ, எனறு விடை கொடுப்ப இலக்குமணன் தன்னோடும் அங்கு ஏகியதோர் அடையாளத் தைச் சிற்றவை பணியால் முடி துறந்தானைத் திருவல்லிக்கேணி காணலாம்.

அர்ச்சுனனுடைய நெஞ்சில் இருந்த இருளை நீக்கினான் இறைவன் கீதையின் மூலமாக.

பற்றலர்: இறைவனிடம் பற்றில்லா அஞ்ஞானிகள் வீய: அவர்களுடைய அஞ்ஞானம் தொலைய; கோல்: மந்திரக்கோல், (கீதை), கையில் கொண்டு பார்த்தன் தன் தேர் முன் நின்றான். பரகாலன் பனுவல்கள், அடங்கா நெடும் பிறவிக்கு நல்ல அமுதம் பற்றிப் பேசும். அடங்கா நெடும் பிறவி பெறும் குவலயத்தோர் தொழுது ஏத்தும் ஆதியும் அமுதுமாவான்.

ஒப்பவர் இல்லா மாதர்கள் வாழும் மாட மா மயிலைத் திருவல்லிக்கேணியில் எழுந்தருளியுள்ள என்னை ஆளுடை அப்பன் அது மாத்திரமா? தேவர்களே, தம் அடங்கா நெடும் பிறவியை ஒழித்து சாகா வரம் பெற்றது எப்படி?

விஞ்சை வானவர் சாரணர் சித்தர் வியந்து துதி செய்யப் பெண்ணுருவாய் அம் சுவை அமுதம் அன்றளித் தானைத் திருவல்லிக்கேணியிலே காணலாமே!

தேவதாந்தர பஜனம் செய்து தம் ஜீவனத்தைக் கவனித்து ஆனால் தம் உஜ் ஜீவனத்தைப் புறக்கணித்த ஆயர்களை அழைத்துக் கண்ணன் 'மற்றும் ஓர் தெய்வம் உண்டே (அறிவு ஒன்றும் இல்லாத ஆய்க் குலம்) மதியிலா மானிடங்காள் நான் உங்களிடையே உற்றபோதன்றி நீங்கள் ஒருவன் என்று உணர மாட்டீர்; அற்ற மேல் ஒன்று அறியீர்; அவன் அல்லால் தெய்வம் இல்லை; கற்றினம்

மேய்த்த எந்தை கழலிணை பணிமின் நீரே! என்று உபதேசிக்கவும், ஆயர்கள் இந்திரனுக்கு என்று எடுத்த எழில் விழவில் பழ நடை செய் மந்திரவிதியில் பூசனை பெறாது மழை பொழிந்திடத் தளர்ந்து ஆயர் எந்தம்மோடு ஆநிரை தளராமல் எம் பெருமான் அருள் என்ன அந்தமில் வரையால் மழை தடுத்து ஆயர் கொடுத்த அமுதை ஏற்று அவர் தம் அடங்கா நெடும் பிறவி நஞ்சுக்கு நல்ல அமுதமானான்.

பரகாலன் பனுவல்கள் தமிழ் நன்னூல் துறைகள் அஞ்சுக்கு இலக்கியம் காட்டும். தமிழிலே ஐந்து வகை அலங்காரங்கள்: 1. எழுத்து 2. சொல் 3. பொருள் 4. யாப்பு 5. அணி.

இந்த ஐந்து அலங்காரங்களால் தமிழில் உள்ள பாடல் களை இரண்டு வகையாகப் பிரிக்கலாம்.

இல்லறத்தைப் பற்றிய பாடல்கள் அகம்: ஏனைய பாடல்கள், புறம்.வீட்டை வளம் பெறச் செய்வது இல்லறம்; நாட்டை வளம் பெறச் செய்வது வில்லறம்:

இல்லறத்தை இறைவன் சோபிக்கச் செய்வது,

1. இன் துணைப் பதுமத்து அலர் மகள் தனக்கும் இன்பன்
2. நற்புவிதனுக்கு இறைவன்
3. தன் துணை (ருக்மிணிப் பிராட்டியார்)
4. ஆயர் பாவை நப்பின்னை தனக்கு இறை
5. புருஷோத்தமனான அவனுக்கு மற்றையோர்கள் நாயகிகள் தானே.

மற்றையோர்க்கெல்லாம் வன்துணை: புறத்திணையில் இறைவன் திருவருள்.

பஞ்ச பாண்டவர்க்காகி வாயுரை தூது சென்றிய வரும் என் துணை, வீரத்தைக் காட்டி வெல்வதை, வினையத்தால் (வேலைக்காரனாக) வென்றார்.

வில்லறம் செய்ய அர்ச்சுனனுக்கு சொல்லறம் செய்தார் எந்தை தந்தை தம்மான்.

பரகாலன் பனுவல்கள் ஆரண சாரத்தை அள்ளித்தரும்;

ஆரணம் என்றால் வேதம்; வேதத்தின் சாரம் சிறப்பாகப் போற்றப்படும் பொருள் என்ன? ஒவ்வொரு தேவதையை சிறப்பித்துப் பேசுவதாக இருக்கும் வேதத்தில்.

தமிழ் மறைகளான ஆழ்வார்களின் பாடல்களால் தான் வேதமும் வேதத்தின் சுவைப் பயனும் ஸ்ரீமந் நாராயணனே என்று தேறப்பட்டது. ஸ்ரீமந் நாராயணனே ரட்சகன்; அவனையே சர்வ கால சர்வ அவஸ்தைகளிலும் சரணாகதி அடைய வேணும் என்று போதிக்கின்றார் மங்கை மன்னன்.

திரௌபதியின் சரணாகதி ''அந்தகன் சிறுவன்;'' வேதசாரம் தான் இராமாயணம் பரதனும் தம்பி சத்துருக்கனனும்; திருவஷ்டாட்சரமே ஆரணசாரம்—பள்ளியில் ஓதி வந்த தன் சிறுவன்.

பரகாலன் பனுவல்கள், பர சமயப்பஞ்சுக்கு அனல் காட்டும்; ஆதிமூலமே என கஜேந்திராழ்வான் அழைத்த போது இதர சமய தேவதைகள் ஏற்கவில்லை; இக்குரல் பரசமயப் பஞ்சுக்கு அனலின் பொறியைக் காட்டிவிட்டது;

எனவே இப்பனுவல்களை அருளிய பரகாலரை எப்படிப் போற்ற வேண்டும் நாம்,

''வாழி பரகாலன்! வாழி கலிகன்றி
வாழி குறையலூர் வாழ்வேந்தன்—வாழியரோ
மாயோனை வாள் வலியால் மந்திரம் கொள்
மங்கையர்கோன்
தூயோன் சுடர் மானவேல்.''

## "மொழி விளக்கு"

இறைவன் மீது பத்தியிலே ஆழ்ந்து இருப்பவர்கள் ஆழ்வார்கள்! இவர்களுக்குள்ளே பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் என்னும் மூவரை "முதலாழ்வார்கள்" என்று கூறுவது மரபு.

இதர ஆழ்வார்களின் காலத்தைவிட முற்பட்ட காலத்தில் அவதரித்தவர்கள். ஆதலால் முதலாழ்வார்கள் என்று பெயர் ஏற்பட்டதாம்:

மற்றுமுள்ள ஆழ்வார்களுக்கு முன்னே வந்துதித்து நற்றமிழால் நூல் செய்து நாட்டை உய்த்தபெற்றிமையோர் என்னும் பெயர் இவர்க்கு நின்றது-உலகத்தே நிகழ்ந்தது!

இம் முதலாழ்வார்களைப் பற்றி ஒரொரு கதை-இல்லை ஒரே ஒரு கதைதான் உண்டு! மதில் கச்சியிலே அவதரித்தவர் பொய்கையார்; கடல் மல்லையிலே அவதரித்தவர் பூதத்தார்; மாடமாமயிலையிலே அவதரித்தவர் பேயார்! இவர்கள் பலகாலம் பல இடங்களுக்கு எழுந்தருளியவர்கள்.

ஒரு நாள் இரவு: அடைமழை; இடியும் மின்னலுமாய் அச்சப்படுத்தும் அலைக்கழிப்பு; இடம் திருக்கோவலூர்; மழையில் சிக்குண்ட பொய்கைமுனி தத்தளிக்கிறார்.

ஒரு முனிவருடைய ஆஸ்ரமம் மின்னல் ஒளியில் தெரிகிறது; கதவைத் திறந்தார்; நடையிலே,இடைகழியிலே படுத்து விட்டார், மழை நீடிக்கிறது; கொஞ்ச நேரம்

கழித்துக் கதவு தட்டப்படுகிறது; பொய்கையார் கதவைத் திறக்கிறார்; மின்னல் தெறிப்பில் வெளியில் ஓர் பக்தர் உருவம்! 'அடடா' மழையில் இப்படி நனையலாமா? 'ஒருவர் கிடக்கிற இடங்களில் இருவர் இருக்கலாமே!' 'உள்ளே வாருங்கள்' என அழைக்க, பூதத்தார் உள்ளே வந்தார். இருவரும் அமர்ந்து கொண்டார்கள். மழை மீண்டும் நீடிக்கிறது; மறுபடியும் கொஞ்சம் கழித்துக் கதவு தட்டப் படுகிற சத்தம்!

இன்னும் ஒரு பக்தர் தான், வந்து இடம் தேடுகிறார். இவர் பேயார். 'இருவர் இருக்கும் இடத்திலே மூவர் நிற்கலாமே!' என்று கதவைத் திறக்க பேயார் உள்ளே வந்தார்.

மூவராக நிற்கிறார்கள்; இடைகழியிலே மேலும் நெருக்கடி ஏற்பட்டது! கதவு தட்டப்படவும் இல்லை! அதனால் கதவு திறக்கப்படவும் இல்லை! ஆனால் எப்படி ஏற்பட்டது இந்த நெருக்கடி? புரியவும் இல்லை! உள்ளே மின்னல் இல்லை! வேறு விளக்கும் இல்லை.

நெருக்கடியின் காரணத்தை அறிய ஞானவிளக்கைக் கையாண்டார்களாம்.

பொய்கையார் ஏற்றினார் ஒரு விளக்கு!

'வையம் தகளியாய்! வார்கடலே நெய்யாக!
வெய்ய கதிரோன் விளக்காக—செய்ய
சுடர் ஆழியான் அடிக்கே சூட்டினேன் சொன்மாலை!
இடர் ஆழி நீங்குகவே! என்று!''

அடுத்து பூதத்தார் ஏற்றினார் ஒரு ஞானச் சுடர் விளக்கை.

''அன்பே தகளியாய்! ஆர்வமே நெய்யாக,
இன்புருகு சிந்தை இடு திரியாய்—நன்புருகி
ஞானச் சுடர் விளக்கு ஏற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ் புரிந்த நான்!''

இரு விளக்கின் உதவியாலும் கண்டார் பேயார், நெருக்கடியின் காரணத்தை! களித்தார்! மற்றவர்களும் களித்தார்கள்!

"திருக்கண்டேன்! பொன்மேனி கண்டேன்
அருக்கன் அணிநிறமும் கண்டேன்—செருக்கிளரும்
பொன் ஆழி கண்டேன்! புரி சங்கம் கைக் கண்டேன்!
என் ஆழி வண்ணன் பால் இன்று!"

சுவடி தோன்றாக் காலத்திலிருந்து சொல்லும் இக் கதையில் ஒரு கேள்வி இல்லை; பல கேள்விகள்! இந்தக் காலத்தில் இந்தக் கதையைச் சொல்லலாமா?

சொன்னாலும் நம்பலாமா?

ரயிலில் பிரயாணம் செய்கிற நாம், ரயில் உள்ளே விசாலமாக இடம் இருப்பினும், ஏறினதும், முதலில் கதவைச் சாத்தித் தாழ்ப்பாள் போட்டுவிட்டு மறுகாரியம் பார்க்கிற நாம் நம்பலாமா?

நம்பி அதன்படி நடக்கலாமா?
கதையைக் கேளுங்கள்; இல்லை ஆராயுங்கள்!!

பொய்கைமுனி நிலப்பரப்பை அகலாக்கினாராம்! நீர்ப்பரப்பை அதில் நெய்யாகவே செய்தாராம். (தயவு செய்து நெய்வியாபாரிகளிடம் தெரிவித்து விடாதீர்கள் இதை) இதற்குச் சுடராக அமைத்தாராம் சூரியனை. இரவில், நடு இரவில் ஏற்றினாராம்!

சூரியச் சுடர், கடல் நீரை ஆவியாக்கி வற்றச் செய்கிறது என்கிறது விஞ்ஞானம்! இந்த நீரால் சூரியனைப் பற்றச் செய்தாராம்! பற்றி எரியவும் செய்தாராம். எப்படி சாத்தியம்? அதுவும், சூரிய விளக்கைக் கொண்டு பகல் பன்னிரண்டு மணிக்குப் பார்ப்பதை விட்டு, இரவு பன்னிரண்டு மணிக்குப் பார்ப்பது என்றால் எப்படி நம்புவது?

சூரியன் உதவியால் செங்கண் மாலைக் கண்டாராம் பொய்கையார். தினமும் தான், நாம், சூரியனைக் காண்கிறோம், ஆனால் திருமாலையும் உடனே காணக் கூடுமா என்ன?

பூதத்தார் கதையைப் பார்ப்போம்; பொய்கையார் ஏற்றிய விளக்கையாவது கண்ணால் பார்க்கலாம். எல்லோரும். பூதத்தார் ஏற்றிய விளக்கைக் கண்ணாலேயே பார்க்கமுடியாது. அன்பு தகளியாம்; ஆர்வம் நெய்யாம்; இன்புருகு சிந்தை இடுதிரியாப்; விளக்கே கண்ணுக்குத் தெரியவில்லை. அதன் சுடரைப் பற்றி என்ன சொல்லலாம்.

சூரிய விளக்கு போதவில்லை, என்று வேறு ஒரு விளக்கா? சூரியனை விடப் பிரகாசமான விளக்கும் உண்டே?

பேயாழ்வார், ''திருக்கண்டேன், பொன் மேனி கண்டேன்,'' என்று ஒருமையிலேயே பேசுகிறார். கதை உண்மையானால் 'கண்டோம்' என்றல்லவா இருக்க வேணும்.

ஒருவர் படுக்கக்கூடிய இடத்தில் கண்டிப்பாக மூவர் அமரலாமே.

அவைகளை எல்லாம் நாம் கேட்டு வருந்தக் கூடாது! இளம் தலைமுறையினர், தற்கால மக்கள் உள்ளத்தில் ஏற்படும் கலக்கங்களைத் தவிர்ப்பதே நமது கடமை; மடமையை அகற்றுவதே நமது கடமை. ''நமக்குள்ளே மறைவாக பழங்கதைகள் சொல்வதில் ஓர் பயனும் இல்லை!''

மிக மிகப் பழமையான நமது சமயத்தில் காலப் போக்கில் பலப் பல பிரிவுகள் ஏற்பட்டு விட்டன. உதாரண மாக ஒரு கதையைப் பார்ப்போம்.

பேயாழ்வாருடைய சீடரான பக்திசாரர் அவதரித்த திருமழிசை என்ற திவ்ய தேசத்திற்குப் பெருமை சொல்லும்

ஒரு கதை. பிரமன் ஒரு துலாக் கோலை நாட்டினாராம். திருமழிசையை ஒரு தட்டில் வைத்தாராம்; ஏனைய உலகை எல்லாம் ஒரு தட்டில் வைத்தாராம்! திருமழிசையை வைத்த தட்டுதான் தாழ்ந்ததாம்!

சிறு குழந்தை கூட இதை ஒப்பாது. இதற்கு அடிப்படையாக ஒரு பாடல்:

''உலகும் மழிசையும் உள் உணர்ந்து தம்மில்
புலவர் புகழ்க்கோலால் தூக்க—உலகு தன்னை
வைத்து எடுத்த பக்கத்தும் மாநீர் மழிசையே
வைத்து எடுத்த பக்கம் வலிது!

இப்பாடலில் உலகு தன்னை வைத்து எடுத்த பக்கத்தும் மாநீர் மழிசையே வைத்து எடுத்த பக்கம் வலிது! என்ற அடிகளில் அழுத்தம் வைத்தார்கள்; உலகும் மழிசையும் உள் உணர்ந்து, தம்மில் புலவர் புகழ்க் கோலால் தூக்க என்ற வார்த்தைகளைச் சரியாக மதிப்பிடவில்லை; சரியாக மதிப்பிடாமல் எப்படி அமையும் கதை!

உலகில் தோன்றிய ஞானத்தை எல்லாம் ஒரு தட்டிலும் திருமழிசைப்பிரான் இயற்றிய ஞானப் பாடல்களை ஒரு தட்டிலும் வைத்து, அறிவுத் துலாக்கோல்—அறிவால்வரும் புகழ்த் துலாக் கோலில் நிறுத்தால், திருமழிசையாழ்வாருடைய ஞானம்தான்—பாடல்கள் தான் உயர்வு பெறும்.

இவ்விதமாகவே முதலாழ்வார்கள் வைபவத்திலும் ஒரு கல்முடிச்சு விழுந்து விட்டது?

முதல் இரு ஆழ்வார்களும் விளக்கை ஏற்றினார்கள் என்றால் இரவைக் கொண்டு வர வேணும்! நல்ல இருட்டுக்காக நடு இரவாக்க வேணும். மூவரையும் ஒரு இடத்தில் சேர்ப்பதற்காகக் கொட்டு மழையைக் கொண்டு வர வேணும். மூன்றாவது ஆழ்வார் சேரும் வரை

நெருக்கடியைக் கொண்டு வர இடைகழியில் இவர்களை அடைக்க வேணும். பெருமானும் திருமகளுடன் சேர்ந்து நெருக்கித் தள்ள இந்த நெருக்கடி அஸ்திவாரமாகிறது. இதற்கு ஒரு பாடலும் உதவி செய்கிறது.

''நீயும் திருமகளும் நின்றாயால், குன்று எடுத்துப்
பாயும் பனி மறைத்த பண்பாளா—வாயில்
கடைகழியா உள் புகா காமர் பூங் கோவல்
இடை கழியே பற்றிஇனி!''

தன் பக்தர்களுடன் கலந்து பரிமாற விரும்பிய பெருமாள் ஏனோ இருட்டுக்கும் நெருக்கடிக்கும் காத்துக் கொண்டிருக்க வேணும். விளக்குகள் ஏற்றப்பட்ட பிறகு நெருக்கடி தீர்ந்ததா? பெருமாள் மணந்து கொண்டாரா?

நெருக்கடியை நம்ப வைக்க திருக்கோவலூரில் எழுந்தருளியுள்ள பெருமானின் திருநாமமும் உருவ அளவும் உதவி செய்கிறது இடைகழி ஈசன் (தேஹளீசன்) என்ற பெயரில் உண்மையில் தேசமளந்தவன் திரிவிக்கிரமன் என்னும் கோலத்தில் சேவை சாதிக்கிறார்.

இதை அநுசரித்து மற்றொரு பாடலும் எழுந்தது. திருமாலைக் கண்டபேயாழ்வார் திருவாக்காக இருக்க வேணும். முதல் திருவந்தாதியில் பொய்கையார் திருவாக்காக உள்ளது. பொய்கையார் முதலில் பெருமாளை தரிசித்திருந்தால் 'வையம் தகளியாய்' என்ற பாடலுக்குப் பிறகு இது அமைந்திருக்கவேணும். பெருமாளைப் பொய்கைமுனி சேவித்த பிறகு பூதத்தாருக்கு இரண்டாவதாக ஒரு விளக்கை ஏற்ற வேண்டியதில்லை.

இந்த சங்கடங்களைச் சரி செய்ய முயல்வோம்! ''மொழி விளக்கு'' என்ற வார்த்தைகளை நாம் சரியாகக் கவனிக்க வேணும்.

விளக்கு எது?

இருட்டைப் போக்கி நம் கண்களுக்கு விளக்கிக் காட்டுவது, அல்லது இருட்டில் கிடந்த பொருள்களை விளங்கச் செய்வது, எனவே, மொழி விளக்கு என்றால் மொழியாலே தரும் அறிவு விளக்கு என்றே பொருள்.

அதாவது முதலாழ்வார்களுடைய பாடல்களிலிருந்து கிடைக்கும் அறிவுச் சுடர் என்று பொருள் படும்.

முப்பொருள் காட்டும் தத்துவத்திரய விளக்கம்; திருமாலின் திருவருளினாலே அவதரித்தவர்கள் முதலாழ் வார்கள்.

இவர்களின் திருப்பாடல்களும், திருமால் திருநெறியின் உயர்ந்த கொள்கைகளையும் திருமாலின் கல்யாண குணங் களையும் என்றும் மக்களிடையே பரப்ப ஏற்பட்டவைகள். வைணவ சமயத்தின் தலை சிறந்த கொள்கை விசிஷ்டாத் வைதமே உலகம் மூன்று பிரிவுகளுடன் திகழ்கிறது. ஒன்று அறிவில்லாத அசித் பொருள்கள், இரண்டாவது சித்—உயிர் தத்துவம் ஆத்மா, மூன்றாவது இறைவன்: பரமாத்மா,இம் முப்பிரிவில் சர்வமும் அடங்கும்.

இவை மூன்றும் தனித்தன்மை உடையவையாக இருப்பினும், ஒன்றுக்கொன்று சம்பந்தப்பட்டும் சேர்ந்து ஒன்றின் ஆளுகையில் மற்றையது அடங்கியுாம இருக்கிறது.

அகித் பொருள்களை சித் அல்லது ஆத்மா ஆட்சி செய்கிறது. ஆத்மாக்களை பரமாத்மா ஆளுகிறான். அசித்தை உடலாகக் கொண்டு இயங்குகிறது சித் அசித்துக்களுடன் சித்துக்களையும் உடலாகக் கொண்டு இயங்குகிறான் பரமாத்மா!

ஜீவாத்மா பரமாத்மா பேதத்தை விளக்கியவர் கிருஷ்ண பரமாத்மா.

துவைதம் என்றால் இரண்டு; அத்துவைதம் என்றால் இரண்டு இல்லாத ஒன்று. விசிஷ்ட அத்வைதம் என்றால் ஒரு

தனி விசேஷத்துடன் சிறப்புடன் நிலவும் இரண்டல்லாத ஒன்று எனப் பொருள்படும்.

அசித்தையும் சித்தையும் தனக்குச் சம்பந்தம் இல்லாமல் பிரிக்கும்படி இடங்கொடாமல் அவைகளை உடலாகக் கொண்ட சிறப்புடன் இறைவன் முழுத்தன்மையுடன் நிலவுகிறான். சரீர சரீரி பாவம் இது.

நாரங்கள் : அசித் சித் வகைகள்; அயனம் இவைகளில் பிரவேசித்து உடலாகக் கொண்டவன், நாராயணன். இந்த நாரங்களிலும் வந்து தங்கப் பற்றுக்கோடாக இருப்பவன்.

மூன்று முதலாழ்வார்கள் என்ன செய்கிறார்கள்? அசித், சித், ஈஸ்வரன் என்ற முப்பிரிவுகளை ஒவ்வொருவரும் ஒவ்வொரு பிரிவாகப் பகிர்ந்து கொண்டு விளக்குகிறார்கள். இம் மூவரும், ஆச்சரியமாக விசிஷ்டாத்வைத தத்துவத்தை நிலைநாட்டினார்கள்.

அசித் சொரூபமான பிரபஞ்சத்தைக் காட்டுகிறார் பொய்கை முனி!

உயிர்கள் வாழ உதவும் நிலப்பரப்பாகிய வையத்தைக் காட்டுகிறார்.

உயிர் வகைகளான ஆத்மாக்கள் நிலப்பரப்பில் வாழ உதவி செய்யும் நீர்ப்பரப்பைக் காட்டுகிறார். வார் கடலைக் காட்டுகிறார்.

வார்கடலிலும் உயிர் இனங்கள் உள்ளன. வையகமும், வார்கடலும் மழைத்தத்துவம் முதலியவற்றால் வாழ உதவும் வெய்ய கதிரோனையும் காட்டுகிறார்.

கதிரோனுக்கு வெளிச்சமும் வெப்பமும் தந்தது யாரோ?

கடல் பரந்து வாா கடலாகித் தண்மை பெறச் செய்தது யாரோ? மண்ணகம் உயிர்கள் வாழும் வையகமாகித் திண்மை பெறச் செய்தது யாரோ?

வையகத்தையும், வார் கடலையும் வெய்ய கதிரோனை யும் இயக்குபவனான இறைவனே! இவைகளை உடம்பாகக் கொண்டு இயக்குபவன் அவனே! இவைகளும் தங்கள் இயக்கத்திற்கு அவனையே சார்ந்துள்ளனவாம்!

இப்படி இவைகளை இயக்குவிக்காவிடில் உலகம் முடிவ டைந்து விடும். நாளைக்குச் சூரியன் உதயமாகவில்லை அல்லது குளிர்ந்து விட்டான் என்று வைத்துக் கொண்டால் புரியும். கடல் வற்றி சப்தமற்றுப் போய் விட்டால் தெரியும். வையகம் அதிர்ந்துவிடினும் தெரியும். இடராழிதான் மிச்சம். துன்பக்கடல்தான் நமக்கு!

''சூரியன் வருவதும் யாராலே?
சந்திரன் திரிவதும் எவராலே?
காரிருள் வானில் மின் மினி போல்
கண்ணில் படுவன அவை என்ன?
பேரிடி மின்னல் எதனாலே?
பெருமழை பெய்வதும் எவராலே?
யாரி தற்கெல்லாம் அதிகாரி
அதை நாம் எண்ணிட வேண்டாமா?''

''சூரியன் வருவது யாராலே?''

இப்படி இவைகளை இயக்கியும் நம் இடராழியை நீக்கி யும் எப்படி அவன் அருள்கிறானோ?

ஒரு சக்கரத் தகட்டைச் சுழற்றி விரல் நுனியில் ஏற்றிச் சுற்றினால் அதன் பிறகு அது எப்படி தானாகவே, எளிதா கவே சுழலுகிறதோ அப்படித்தான் அவன் பிரபஞ்சத்தை இயக்கும் திருவிளையாடல்!

அவனும் கையிலே சுடர் விடும் சக்கரம் ஏற்று இதைக் காட்டுகிறான்! சக்கரம் துஷ்ட நிக்ரகம் புரிவது—இடராழி நீக்குவது.

இப்படி நம் இடராழி நீக்கும் சுடராழியானுக்கு நாம் என்ன செய்யவேணும்? அவன் திருவடிகளில் மாலை சூட்டி-புகழ் மாலை சூட்டி வணங்கவேணும்.

அவ்வளவுதான்!

பொய்கைமுனி அசித் சொரூபமான பிரபஞ்சத்தை விளக்கிப் பாடுவதைப் பார்க்கலாம்!

''வையம் தகளியா வார்கடலே நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காக—செய்ய
சுடர் ஆழியான் அடிக்கே சூட்டினேன் சொல்மாலை!
இடர் ஆழி நீங்குகவே என்று,''

இந்த விளக்கம் சரியா எனச் சந்தேகம் வரலாம்.

முதலியாண்டான் அருளிச் செய்த பொய்கைப் பிரானுடைய தனியனைச் சேவிக்கலாம்!

தனியன் : நூலின் முழு சொரூபத்தையும் காட்டும், அசித் சொரூபமான பிரபஞ்சத்தின் அம்சமான பூமியில் உள்ள ஒரு பாகத்தை வைத்தே தனியன் அமைகிறது; இல்லை ஆரம்பமாகிறது.

''கைதை சேர்பூம் பொழில் சூழ் கச்சி நகர் வந்து உதித்த
பொய்கைப் பிரான் கவிஞர் போரேறு—வையத்து
அடியவர்கள் வாழ, அரும் தமிழ் நூற்றந்தாதி
படி விளங்கச் செய்தான் பரிந்து!''

கச்சிப்பதி : அசித்

படி விளங்கச் செய்தான் : உலகத்தின் அசித்தின் தன்மையை விளங்கச் செய்தார்! உலகத்தார் மீதுள்ள அன்பினாலே!

மேலும் கவனிக்கலாம்; பிரபன்னர்களுடைய காயத்திரி யான இராமாநுஜ நூற்றந்தாதியிலே திருவரங்கத்து அமுதனார், பொய்கையார் ஏற்றிய திருவிளக்கைப் பற்றிப் பேசுகிறார்.

பொய்கைமுனி ஏற்றிய திருவிளக்கைத் தன் திருவுள்ளத்தில் எழுந்தருளச் செய்து இன்புருகுகிறாராம் இராமாநுசர்!

அப்படியான விளக்கு மிகச்சிறந்த விளக்காகத்தானே இருக்கவேணும்; அதன் உயர்வைப் பார்க்கலாம்.

அசித் மயமான பிரபஞ்சத்தைச் சரியாகத் தெரிந்து கொள்ளாமல் அஞ்ஞான இருள் நிலவியதாம்

அந்த உலகத்தைப் பற்றிய—அசித்தைப் பற்றிய புற இருளை மாற்றவே எரித்தாராம் பொய்கையாழ்வார் தம் திருவிளக்கை வேதத்தின் சரியான-தலையான-குருத்தான-கொழுந்தான கருத்தைச் செந்தமிழிலே. பாடலைக் கேளுங்கள்.

''வருத்தும் புற இருள் மாற்ற எம் பொய்கைப் பிரான் மறையின்,
குருத்தின் பொருளையும் செந்தமிழ் தன்னையும் கூட்டி ஒன்றத்
திருத்து அன்று எரித்த திருவிளக்கைத் தன் திரு உள்ளத்தே
இருத்தும் பரமன், இராமாநுசன் எம் இறையவனே''

பொய்கைமுனி அசித்தை விளக்கிய பிறகு பூதத்தார் சித்தை விளக்குகிறார். அதனால் தான் இரண்டாவது விளக்கு தேவைப்படுகிறது.

அசித் பொருள்களுக்கும் சித் பொருள்களுக்கும் (உயிரற்றவைகளுக்கும் உயிருள்ளவைகட்கும்) வித்தியாசம் சிறப்பு என்ன?

சித், உயிருள்ளவைகட்கு மனம் இருக்கிறது! இந்த இதயத்திலே உணர்ச்சிகள் எழுகின்றன; உணர்ச்சியில்லா உள்ளம் கல் தான்!

சித்துக்குச் சிறப்பாக அமைந்துள்ள சிந்தை, உருகுகின்ற சிந்தையாக இருக்கவேணும்; இனியவைகட்கு உருகும்

சிந்தையாதல் வேண்டும். இறைவனை விட இனியதும் உண்டோ! கன்னலும் பாலும் அமுதும் ஒத்தவன் அவன். சித்தின் சிந்தை, அன்பும் ஆர்வமும் துணைக் கொண்டு உருகவேண்டுமாம் இறைவனுக்காக.

எனவே அன்பைத் தகளியாக்கி ஆர்வத்தை அதில் நெய்யாக இட்டு உருகும் சிந்தையைத் திரியாக்கி ஞானச் சுடர் விளக்கு ஏற்றி ஆத்ம லட்சணத்தை விளக்கினார், பூதத்தார்-கடல் மல்லைக் காவலர்-பூதவேந்தர் இந்த ஞானத் தமிழிலே!

அவர் ஏற்றிய விளக்கைக் காணலாம்!

''அன்பே தகளியாய்! ஆர்வமே நெய்யாக!
இன்புருகு சிந்தை இடுதிரியாய்—நன்புருகி
ஞானச் சுடர் விளக்கு ஏற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ் புரிந்த நான்!''

நான் என்று ஆத்மாவையே சுட்டிக் காட்டுகிறார்! திருக்குருகைப்பிரான் பிள்ளான் அருளிச் செய்த பூதத் தாழ்வார் தனியனையும் காணலாம்! சித்தின் ஒரு லட்சணம் அதன் கர்மாவிற்கு ஏற்ப பிறவிகள் எடுத்தல்; பக்தியின் பயனால் பிறவிதீரல்! மருத்துவனாய் நின்ற மாமணி வண்ணன் அருளால் மறு பிறவி தவிர்க்க வேணும்.

ஞானத்தமிழிலே சித் இலக்கணம் விளக்கிய பூதத் தாழ்வார்கழல்களை வணங்கினால் மறுபிறவி வராதாம்!

''என் பிறவி தீர இறைஞ்சினேன் இன் அமுதாய்
அன்பே தகளி அளித்தானை-நன்புகழ்சேர்
சீதத்தார் முத்துக்கள் சேரும் கடல்மல்லைப்
பூதத்தார் பொன்னங் கழல்!''

திரு அரங்கத்து அமுதனார் பூதத்தாரைப் போற்றுகிறார்.

சித்துக்குச் சிந்தை உண்டு; அதன் இதயத்துள்ளே ஆத்ம ஞானம் அறியும்வரை இருள் இருக்கிறது. அந்த இதயத்தின்

இருளைப் போக்குவதாம் பூதத்தார் தாள்கள்; இத்தாள் களை வணங்கும் இராமாநுசனை வணங்கும் பெரியோர்கள் தான் உண்மையான வேத அறிவை நிலைநாட்டுபவர்கள்.

''இறைவனைக் காணும் இதயத்து இருள்கெட, ஞானம் என்னும்
நிறை விளக்கு ஏற்றிய பூதத்திருவடித் தாள்கள், நெஞ்சத்து
உறைய வைத்து ஆளும் இராமாநுசன் புகழ் ஓதும் நல்லோர்
மறையினைக் காத்து இம் மண்ணகத்தே மன்னவைப்பவரே?''

அசித்தைப் பற்றிப் பொய்கையார் பேசிய பிறகு சித்தைப் பற்றிப் பூதத்தார் பேசிய பிறகு ஈஸ்வரனைப் பற்றிப் பேசுகிறார் பேயார்.

பொய்கையார் பேசிய சுடராழியானும் பூதத்தார் பேசிய நாரணனும் (நாரம் + அயனன்) தனித்து இல்லையாம்; லட்சுமியோடு கூடி விளங்குகிறான் என்று ஆரம்பிக்கிறார் பேயார்.

''திருக்கண்டேன்''

புருஷகார பூதையான திருமகளின் செல்வாக்கு பூரணமாகப் பரிமளிப்பதால் அவனும் பொன்னிற லட்சுமியைப் போலவே பொன்நிறச் சாயலாகத் திகழ்கிறானாம்;

''பொன்மேனி கண்டேன்''

தன்னுடைய அருணதேஜசுடனும் விளங்குகிறானாம்;
''அருக்கன் அணி நிறமும் கண்டேன்''

யுத்த கோஷம் செய்து துஷ்ட நிக்ரகம் செய்யும் சுடராழியையும் சேவிக்கிறார்.

''செருக்கிளரும் பொன் ஆழி கண்டேன்.''

சிஷ்ட பரிபாலனம் செய்யும் முறையில் அபயம் அளித்து முழங்கும் புரிசங்கத்தையும் சேவிக்கிறாராம்.

''புரிசங்கம் கைக்கண்டேன்.''

மற்றும் ஈஸ்வரனுடைய இரு பெரிய லட்சணங்கள் விளக்கப்பட்டன. இவன் எங்கிருந்து வந்தான்! அர்ச்சையில் வியூக சமாதியைக் கடந்து வந்துள்ளான்.

''திருக் கண்டேன்! பொன்மேனி கண்டேன்! திகழும்
அருக்கன் அணி நிறமும் கண்டேன் - செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன், புரிசங்கம்கைக் கண்டேன்
என் ஆழி வண்ணன் பால் இன்று''

குருகைக் காவலப்பன் அருளிச் செய்த பேயாழ்வார் தனியனில், ஆழ்வார் ஈஸ்வர அம்சத்தை வெளியிட்டதை வெகு வெளிப்படையாகவே இயம்புகிறார்!

''சீர் ஆரும் திருக் கோவல் ஊர் அதனுள்
கார் ஆர் கருமுகிலைக் காணப்புக்கு-ஓராத்
''திருக் கண்டேன்'' என்று உரைத்த சீரான் கழலே
உரைக் கண்டாய் நெஞ்சே! உகந்து!''

மழைக்கு ஒதுங்கவில்லையாம் பேயார். சீர் ஆரும் திருக்கோவல் ஊர் அதனுள் கார் ஆரும் கருமுகிலைக் காணத்தான் புகுந்தாராம்.

அசித்தைப் பற்றிய பொய்கையார் பாடல்களால் சாதாரணமாக உலகைப் பற்றிய இருள் நிலவியது ஒழிந்து மாண்டது.

சித்தைப் பற்றிய பூதத்தார் பாடலால் பேர் இருள் மாண்டதாம். அதாவது சித்தைப் பற்றிய இருள்; இவ்விரண்டைப் பற்றிய இருள்களும் ஒழிந்த பிறகு ஈஸ்வரஞானமும் பேயார் பாடல்களில் தலைப்பட்டதால், பெருந்தலைவனைப் பாடிய இவர் அல்லவா தமிழ்த் தலைவன்!

அமுதனாரின் அமுத வாக்கு இது.

"மன்னிய பேர் இருள் மாண்டபின் கோவலுள்
மாமலராள்
தன்னொடு மாயனைக் கண்டமை காட்டும் தமிழ்த்
தலைவன்!
பொன்னடி போற்றும் இராமாநுசற்கு அன்பு பூண்டவர்
தாள்
சென்னியில் சூடும் திருவுடையார் என்றும் சீரியரே!"

மூவரின் அவதாரத் தலங்கள்:

அசித் லட்சணம் பாடிய பொய்கையார் நகரேஷு காஞ்சியில் பிறந்தவர். சித் லட்சணம் பாடிய பூதவேந்தர் பாகவதப் பெருமை கொண்டாடிய கடல் மல்லையில் பிறந்தவர்.

"கார் வண்ண முது முந்நீர்க் கடன் மல்லைத் தலசயனம் ஆர் எண்ணும் நெஞ்சுடையார் அவர் எம்மைத் ஆள்வாரே" கலங்கள் இயங்கும் மல்லை கடல் மல்லைத் தலசயனம் வணங்கும் மனத்தார் அவரை வணங்கு என்றன் மட நெஞ்சே!

ஈஸ்வர லட்சணம் பாடிய பேயார் அவதாரம் சென்னையிலே.

ஈஸ்வரன் என சங்கு சக்கரத்துடன் அவதரித்தருளிய பிறகு போர்க்களத்தில் விஸ்வரூபம் (அசித் சித் உடலாக உள்ள ஈஸ்வரன் எனக்) காட்டிய பார்த்தசாரதியின் திருப்பதி! ஈஸ்வர லட்சணம் பாடிய பேயாழ்வார் ஒருவரே திருவல்லிக்கேணியில் நந்தவன கைங்கரியம் செய்து சிவனை மதியாது திருமால் அருளே நாடி நின்றார்.

கிருஷ்ண பரமாத்மா-கிருஷ்ண பகவான் கீதை மூலமாக ஜீவாத்மா பரமாத்மா அசித் சம்பந்தத்தை விளக்கியதால் மற்ற அவதாரங்களுக்கு இப்பட்டம் இல்லை.

அசித், சித், ஈஸ்வரனைப் பற்றிய ஞானம் ஏற்படாத போது முழு இருட்டு தான்.

நடு இரவு கிடந்த, இருந்த, நின்ற கோலங்கள்:

அசித் என்ற உயிரற்ற உடல் கீழே கிடந்து நீட்டிக் கொண்டிருக்கும்; பொய்கையார் விவரித்த அசித்தின் நிலை; உடலான அசித்துக்கு சித் அல்லது ஆத்மாசேரின் எழுந்து உட்காரும்; பூத வேந்தர் விவரித்த சித்தின் நிலை.

சித்துக்கு ஈஸ்வர ஞானம் ஏற்பட்டதும் எழுமின்! இயம்புமின்! இறைஞ்சுமின்! என எல்லோரையும் எழச் செய்யும்; இதுபேயார் புரிந்த தலைமை உரை. பூமன்னுமாது பொருந்திய மார்பனைப் பற்றிய இவரது சீடர் திருமழிசையார். 'வாசித்தும், கேட்டும் வணங்கி வழி பட்டும் பூசித்தும் போக்கினேன் போது'' என்று ஈஸ்வர பக்தியில்திளைத்தவர்.

ஸ்ரீவைணவ சமயத்தின் முதன்மையான இந்த விசிஷ்டாத்வைதக் கொள்கையை முதல் முதலாகப் பரப்பிய பெருமையால்தான் இம் முப்பெரியார்களையும் ''முதலாழ்வார்கள்'' எனப் போற்றுகிறோம்.

இம் முதன்மையான ஆழ்வார்கள் மூவராக இருப்பினும் பிரித்துப் பேசாமல், முதலாழ்வார்கள் எனச் சேர்த்தே வைணவ சமயம் பேசி மகிழ்கிறது; அசித் சித் ஈஸ்வரன் எனப் பிரித்துப் பேசாத பெரு நெறியை ஒட்டி!

இதுவே முதல் ஸ்ரீவைணவமா நாடாகும்.

வரவேற்புரை : பொய்கையார்,
தொடக்கவுரை : பூதத்தாழ்வார்,
தலைமையுரை : பேயாழ்வார்.

முப்பொருள் காட்டி மூவுல களந்த சேவடி:

அசித் சித் ஈஸ்வர பாகுபாடு Solid, Liquid, Gas என்னும் பாகுபாட்டை விடச் சிறந்தது.

அசித் சித் ஈஸ்வரன் என்ற சேர்க்கையை எடுத்துக் காட்டும் விசிஷ்டாத்வைதக் கொள்கையை நன்கு விளக்குவது திருவிக்கிரம அவதார வைபவமே!

எப்படி என்று பார்க்கலாம்!

தேவனானாலும் சரி, அசுரனானாலும் சரி, விலங்காயினும் சரி அதனுள்ளிருக்கும் ஆத்மா, சித் சொரூபமே.

அசித் சொரூபமானவை பிரபஞ்சங்கள், சித் சொரூபனான மகாபலி; அசித் சொரூபமான மண்ணுலகம் விண்ணுலகம் யாவையும் தன் ஆட்சியில் கொண்டு வந்து விட்டான். மாவலி ஒரு சக்கரவர்த்தி, இவனைவிட வேறு அரசன் கிடையாது.

இப்படி பெரும் பலத்துடன் கூடிய மகாபலியை, கெட்டவன், அசுரீயம் செய்து எல்லோரையும் துன்புறுத்தினான் என்று கதை கூட இல்லை! அதற்கு மாறாக அவன் யாகம் செய்து எல்லோருக்கும் தானங்கள் செய்ய ஆரம்பித்தான.

தேவர்கள் ஏன் தலை தெறிக்க ஓடித் திருமாலிடம் முறையிட வேண்டும், ஆட்சேபித்து? நல்ல காரியமானால் எல்லோரும் செய்யலாமே, யாகமும், தானமும் நல்லவையானால் அசுரவாகப் பிறந்ததாகச் சொல்லப்படுவான் செய்தலாகாதோ!

''பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பு ஒவ்வா செய்தொழில் வேற்றுமையான்.'' என்பதல்லவா பொய்யாமொழி.

இதை அருளியவர் யார்?

ஆதி பகவன் முதற்றே உலகு! என்று ஆதி அம் பகவன் என்று நம்மாழ்வார் மங்களாசாசனம் புரியும் திருமால்தான் உலகத்திற்குத் தொடக்கம், ஆதாரம் என்ற விசிஷ்டாத்வைதக் கொள்கையையும், அதை விளக்கும் அவதாரமான திருவிக்கிரம அவதாரத்தையும் குறிக்கும் ''அடி அளந்தான்

தாயது எல்லாம் ஒருங்கு'' என்று போற்றியும், ஆத்மாக்கள் அடைகிற பேறு எது என்பதைக் குறிக்க ''தாமரைக் கண்ணான் உலகு'' என்றும் விளக்கும் பொய்யாப் புலவரான செந்நாப் போதரான, திருவள்ளுவர் பெருமான் தான்.

தேவர்கள் மக்களை விட உயர்ந்தவர்களாயிற்றே! அவர்கள் மகாபலி மீது கோள் சொல்லலாமா?

ஏதோ ஒரு கோளாறை, குறையை, மகாபலியிடம் காணத்தான் செய்தார்கள் தேவர்கள்!

அதை அவர்கள் தேவ ரகசியமாகச் சொல்லியிருக்கிறார்கள் தேவாதி தேவனிடம்! அக்குறையை, கோளாறை நீக்குவதற்கு, ஒப்புக்கொண்டான் சூட்சுமமாக, சுருக்கமாக அவனும்!

கம்பநாடரும் அதைக் குறிப்பாகவே வைத்துப் பாடுகிறார்.

ஆய(து) அறிந்தனர், வானவர், அந்நாள்<br>
மாயனை வந்து வணங்கி இரந்தார்<br>
தீயவன் வெந்தொழில் தீர் என நின்றார்<br>
நாயகனும் அது செய்ய நயந்தான்!

சிறிய உருவிலே இறைவன் குறளனாகத் தானும் யாகம் செய்ய மூவடி மண் மகாபலியிடம் வந்து கேட்டான். மகாபலி யோசிக்காமல் ஒப்புக் கொண்டான். வெள்ளி தடுத்தான். சுக்கிரன் கண்ணை இழந்தான்.

இறைவன் தான் கேட்டது,

அசித், சித், ஈசன் என்ற மூன்று என்று விளக்கினான் இம்மூன்றே தான் அநாதி காலமாகத் தான் இயற்றும் ஈஸ்வர நித்திய யாகத்திற்குத் தேவையான அடிப்படைகள் எனவும் விளக்கினான்.

புரிந்து கொண்டான் மகாபலி; அசித், சித் இவையே பிரபஞ்சம் என எண்ணியிருந்தவன் இவைகளுக்குத் தலைவனானவன் இவற்றை மீட்டும் தானமாக வழங்கியவன்.

தன்னிடமுள்ள அசித் சித் இவைகளை முழுவதையும் சமர்ப்பிக்க, இறைவனும் அவைகளை ஈரடியால் (ஆட்சி செய்து கொண்டான்) அளந்து விட்டான். மூன்றாவதான இறைவன் தன் ஆளுகையில் இல்லை என்றும், தானமாக அதைத்தர இயலாதென்றும் தன் தாழ்மையைத் தெரிவித்துத் தலை குனிந்தான்.

"ஈசன் நானே! இறைவன் நான்!" என்று தன்னை மகாபலிக்குக் காட்டினான்; இதுவே முதல் விஸ்வரூபம். இறைவனது திரு உருவை மகாபலி கண்டதும், அசித் சித் எங்கும் ஈசன் வியாபித்திருந்ததைக் கண்டான்.

மலைதூர, அருகில் பார்வை!

சிரஞ்சீவியான உண்மையை அறிந்த அவனும் சிரஞ்சீவியானான். அசல் சடகோபன் தரித்தான் மகாபலி.

இவ்வண்ணமாக மாவலியைக் (அகம்பாவம் அறியாமைக்) குறும்பு அதக்கி (தேவதேவன்) அரசு வாங்கி வெற்றி கொண்ட திருக்கோலமாகத்தான் சேவை சாதிக்கிறான் இறைவன் கோவலூரிலே.

இத் திருவிக்கிரம அவதார கோலமே, முதலாழ்வார்கள் அசித் சித் ஈஸ்வர சேர்க்கையைப் பாடத் தூண்டுகோலாகவும் துணைக் கோலாகவும் அமைகிறது!

திருவிக்கிரமத் திருக்கோலத்தை, பொய்கையார் 8 பாடல்களிலே குறிக்கிறார். பூதத்தார் 4 பாடல்களிலும் பேயார் 10 பாடல்களிலும் குறிக்கின்றார்கள்.

வேறு எந்த அவதாரத்தையும் முதலாழ்வார்கள் இப்படி திருப்பிக் கூறவில்லை. திருவிக்கிரம அவதாரத்தை 8 பாடல்களில் குறிப்பிடும் பொய்கைமுனி அசித் தன்மையையே குறிப்பிட்டுக் பேசுகிறார்.

இவ்விதமே பூதத்தாழ்வார் தன் 4 பாடல்களிலும் சித்தின் தன்மையைக் காட்டிப்பாடுகிறார். பேயாழ்வாரும் தன் 10 பாடல்களிலும் இறைவன் தன்மையை பிரதானப் படுத்திப் பேசுகிறார்!

பொய்கை முனிப் பாடல் 8:

"பார் அளவும் ஓர் அடி வைத்து ஓர் அடியும்
பார் உடுத்த நீர் அளவும் செல்ல நிமிர்ந்ததே!" (1)

"விரிதோட்ட சேவடியை நீட்டித் திசை நடுங்க விண் துளங்க
மாவடிவின் நீ அளந்த மண்!" (2)

"வாய் அவனை அல்லது வாழ்த்தாது! கை உலகம்
தாயவனை அல்லது தாம் தொழா" (3)

"அடியும் படி கிடப்பத் தோள் திசை மேல் செல்ல
முடியும் விசும்பு அளந்தது என்பர்" (4)

"பெற்றோர் தளை சுழலப்பேர்ந்து ஓர் குறள் உருவாய்!
செற்றார் படி கடந்த செங்கண்மால்-நற்றா
மரை மலர்ச் சேவடியை வானவர் கை கூப்பி
நிறை மலர் கொண்டு ஏத்துவரால் நின்று" (5)

"நின்று நில மங்கை நீர் ஏற்று மூவடியால்
சென்று திசை அளந்த செங்கண்மாற்கு" (6)

"அரியபுலன் ஐந்து அடக்கி ஆய்மலர் கொண்டு ஆர்வம்
புரியப் பரிசினால் புல்கில்—பெரியனாய்
மாற்றாது வீற்றிருந்த மாவலிபால் வண்கை நீர்
ஏற்றானைக் காண்பது எளிது" (7)

"கொண்டானை அல்லால் கொடுத்தாரை யார் பழிப்பார்?
மண் தா என இரந்து மாவலியை—ஒண் தாரை
நீர் அங்கை தோய நிமிர்ந்திலையே நீள் விசும்பில்
ஆரங்கை தோய வடுத்து!" (8)

பூதவேந்தர் பாடல் 4 ;—

''அடி மூன்றில் இவ்வுலகம் அன்று அளந்தாய் போலும்
அடி மூன்று இரந்து அவனி கொண்டாய் - படிநின்ற
நீர் ஓத மேனி நெடுமாலே நின் அடியை
யார் ஓத வல்லார் அறிந்து!'' (1)

''கொண்டது உலகம் குறள் உருவாய்!''
-பதவியாய்; (2)
பாணியால் நீர் ஏற்றுப் பண்டு ஒரு கால் மாவலியை
மாணியாய்க் கொண்டிலையே மண்!'' (3)

''இறை எம்பெருமான்! அருள்! என்று இமையோர் !
முறை நின்று மொய்ம் மலர்கள் தூவ---அறை கழல
சேவடியான், செங்கண் நெடியான் குறள் உருவாய்
மாவடியில் கொண்டளந்தான் மால்!'' (4)

பேயாழ்வார் பாடல் 10 :-

''மருந்தும் பொருளும் அமுதமும் தானே!
திருந்திய செங்கண்மால் ஆங்கே—பொருந்தியும்
நின்று உலகம் உண்டு உமிழ்ந்தும் நீர் ஏற்றும்
மூவடியால்
அன்று உலகம் தாயோன் அடி!'' (1

''அடிவண்ணம் தாமரை அன்று உலகம் தாயோன்
படிவண்ணம் பார்க்கடல் நீர் வண்ணம்—முடி வண்ணம்
ஓர் ஆழி வெய்யோன் ஒளியும் அஃதன்றே
ஆர் ஆழி கொண்டார்க்கு அழகு!'' (2)

''அழகன்றே ஆழியாற்கு ஆழி நீர்வண்ணம்
அழகன்றே அண்டம் கடத்தல்— அழகன்றே
அங்கை நீர் ஏற்றார்க்கு அலர்மேலோன் கால் கழுவ
கங்கை நீர் கான்ற கழல்!'' (3)

''வாய்(மை) மொழிந்து வாமனனாய் மாவலிபால்
மூஅடி மண்
நீ அளந்து கொண்ட நெடுமாலே—தாவியநின்
எஞ்சா இணை அடிக்கே ஏழ் பிறப்பும் ஆளாகி
அஞ்சாதிருக்க அருள்!'' (4)

''முன் உலகம் உண்டு உமிழ்ந்தாய்க்கு அவ்வுலகம்
ஈர்அடியால்
பின் அளந்து கோடல் பெரிது ஒன்றே? — என்னே!
திருமாலே! செங்கண் நெடியானே! எங்கள்
பெருமானே! நீ இதனைப் பேசு!'' (5)

''கைய கனல் ஆழி! கார்க்கடல் வாய் வெண் சங்கம்,
வெய்ய கதை ! சார்ங்கம்! வெண்சுடர் வாள்!—செய்ய
படை பரவை பாழி பனி நீர் உலகம்
அடியளந்த மாயர்அவர்க்கு!' (6)

''மன்னு மணி முடி நீண்டு அண்டம் போய் எண்
திசையும்
துன்னு பொழில் அனைத்தும் சூழ் கழலே-மின்னை'' (7)
''நின்ற பெருமானே! நீர் ஏற்று உலகு எல்லாம்
சென்ற பெருமானே! செங்கண்ணா!'' (8)

''நீ அன்றே நீர் ஏற்று உலகம் அடி அளந்தாய் !
நீயன்றே நின்று நிரைமேய்த்தாய்!'' (9)

''சிலம்பும், செறிகழலும், சென்று இசைப்ப, விண்ணாறு
அலம்பிய சேவடி போய் அண்டம்-புலம்பிய தோள்
எண் திசையும் சூழ இடம் போதாது என் கொலோ!
வண் துழாய் மால் அளந்த மண் !'' (10)

திருமங்கை மன்னன்:

''முன்னம் குறள் உருவாய் மூ அடி மண் கொண்டு
அளந்த
மன்னன் சரிதைக்கே மாலாகிப் பொன் பயந்தேன்!''
—சிறிய திருமடல் நேரிசை வெண்பா.

''ஊராது ஒழியேன் உலகு அறிய ஒள் நுதலிர்!
சீரார் முலைத் தடங்கள் சேர் அளவும்-பார் எல்லாம்
அன்று ஓங்கி நின்று அளந்தான் நின்ற திரு நறையூர்
மன்று ஓங்க ஊர்வன் மடல்'' இது கம்பர் பாடியது
என்பர்.

கட்டுவிச்சி கூறிய 15 விருத்தாந்தங்கள்.

''ஆரால் இவ்வையம் அடி அளப்பு உண்டது தான்!''

''அன்றியும் பேர்வாமனன் ஆய காலத்து மூ அடி மண்
தாராய் எனக்கு என்று வேண்டிச் சலத்தினால்
நீர் ஏற்று உலகு எல்லாம் நின்று அளந்தான்
மாவலியை!''

தலைவியின் ஆறு இகழ்ச்சிக்குற்றச் சாட்டுகள்:

''மற்று அன்றியும்
தன் உருவம் ஆரும் அறியாமல், தான் அங்கு ஓர்
மன்னும் குறள் உருவின் மாணியாய், மாவலிதன்
பொன் இயலும் வேள்விக்கண்புக்குஇருந்து போர்
வேந்தன்''
மன்னை, மனம் கொள்ள வஞ்சித்து நெஞ்சு உருக்கி
''என்னுடைய பாதத்தால் யான் அளப்ப, மூ அடி மண்
மன்னா'' தருக என்று வாய் திறப்ப, மற்று அவனும்,
என்னால் தரப்பட்டது என்றலுமே! அத்துணைக்கண்,
மின்னார் மணி முடி போய் விண் தடவ, மேல் எழுந்த
பொன் ஆர் கனை கழங்கால் ஏழ் உலகும் போய்க்
கடந்து அங்கு
ஒன்னா அசுரர் துளங்கச் செல நீட்டி
மன்னு இவ் அகல் இடத்து மாவலியை வஞ்சித்துத்
தன் உலகம் ஆக்குவித்ததாளானை, தாமரைமேல்
மின் இடையாள் நாயகனை விண்ணகருள்
பொன்மலையை''

''ஆனவன் இங்கு உறைகின்ற அந்நாள்வாய்
ஊனம் இல்ஞானம் ஒடுங்கும் எயிற்றின்
ஏனம் எனும் திறல் மாவலி என்பான்
வானமும் வையமும் வவ்வுதல் செய்தான்''

''செய்தவின் வானவரும் செயல் ஆற்றார்
நெய்தவழ் வேள்வியை முற்றிட நின்றான்,
ஐயமில் சிந்தையன் அந்தணர் தம்பால்
வையமும் யாவும் வழங்க வலித்தான்.''

''காலம் நுனித்து உணர் காகிப னுக்கும்
வால் அதிதிக்கும் ஓர் மாமகவாகி
நீல நிலத்து நெடுந்தகை வந்தோர்
ஆல் அமர்வித்தின் அருங்குறள் ஆனான்''

''கயம் தரும் நறும் புனல் கையில் தீண்டலும்,
பயந்தவர்களும் இகழ் குறளன், பாரித்து எதிர்
வியந்தவர் வெருக்கொள விசும்பின் ஓங்கினான்,
உயர்ந்தவர்க்கு உதவிய உதவி ஒப்பவே!''

''மடியிலா மன்னவன் எய்தும்
அடியளந்தான் தாயது எல்லாம் ஒருங்கு!''

பன்னிரு நாமத்தில் இரண்டும் திரிவிக்கிரமன்,

''திரிவிக்கிரமன் செந்தாமரைக் கண் எம்மான் என்
செங்கனிவாய்
உருவில் பொலிந்த வெள்ளைப் பளிங்கு நிறத்தனன்,
என்று என்று உள்ளி,
பரவிப் பணிந்து பல் ஊழி நின்பாதப் பங்கயமே
மருவித் தொழும் மனமே தந்தாய் வல்லை காண்
என் வாமனனே!''

'வாமனன் என் மரகதவண்ணன் தாமரைக் கண்ணன்!
காமனைப் பயந்தாய்! என்று என்று உன் கழல்
பாடியே பணிந்து
தூமனத்தனனாய். பிறவித்துழதி நீங்க, என்னைத்
தீமனம் கெடுத்தாய்! உனக்கென் செய்கேன்
சிரீதரனே!''

A. No. 12591
LIBRARY. KOVILOOR

# 'பாவை விளக்கு'

எம்பெருமானுடைய குணங்கள் அனேகம். அவன் நல்ல குணங்களை எண்ண முடியாது. அவன் கெட்ட குணங்களை யும் எண்ண முடியாது. காரணம் அவனிடம் கெட்ட குணங் களே இல்லையே!

நான்கு பேர் ஒரு பிள்ளையைப் பெற்றனர். வசு தேவன், தேவகி, நந்தகோபாலன், யசோதை கண்ணனைப் பெற்றனர். நான்கு பேர் நான்கு பிள்ளைகளைப் பெற்றனர். தயரதர். கௌசல்யா, கைகேயி, சுமித்திரை, ராமலட்சுமண, பரத, சத்ருக்னர்களைப் பெற்றனர்.

6 பேர் ஆயிரம் பிள்ளைகளைப் பெற்றனர். இறைவன் குணங்கள் ஆறு.

இவைகளிலிருந்து ஆயிரம் ஆயிரம் குணங்கள் பெருகின. இது கூரத்தாழ்வான் அருளியது.

பரமாத்மாவினுடைய பெரிய குணம் கருணை தான்.

இது இல்லையானால் எந்த குணமும் விளங்காது. எம்பெருமான் கருணையை உடையவன். பிராட்டி கருணையே வடிவானவள்! எம்பெருமான் அருளியது வட மொழி கீதை முரட்டு சமஸ்கிருதம். வங்கிபுரத்து நம்பி ஆய்ச்சியர் மத்தியில் சேர்ந்தாலும் முரட்டுவடமொழியை விடவில்லை; எம்பெருமானாரின் கேலி.

கீதை 700 சுலோகங்கள், திருப்பாவை 30 பாசுரங்கள். கீதைக்கு அனேகர் தம் இஷ்டப்படி உரைகள் கண்டனர். திருப்பாவைக்கு ஒரே மிடறாக உள்ளது உரை. எல்லா நாட்களிலும் சந்நிதிகளிலும் ஓதப்படுவது.

கீதை எம்பெருமான் அர்ச்சுனனுக்கு உபதேசித்தது. திருப்பாவையோ, எம்பெருமானைக் கேளாய்! எனப் பணித்தாள்! திருநெடுந்தாண்டகம் 30 பாடல்கள்; பட்டர் போற்றியது. திருப்பாவை 30 பாடல்கள் ராமானுஜருக்கு ஏற்றம். எல்லாம் இவைகளுள் உள்ளது. இருவருக்கும் நஞ்சீயர் பணிந்தது.

பாவம் வேறு, பாதகம் வேறு. பாதகம் ஐந்து; இவைகளையும் தீர்க்கும் திருப்பாவை. பரமன் அடிகாட்டும் வேதம் அனைத்துக்கும் வித்தாகும். கோதை பிறந்த ஊர்— ஸ்ரீவில்லிபுதூர்.

## புதுவை (ம) வ மாநாடு

மணி யவிழ் தாமரை மொட்டலர்த்தும் பேரருளாளர் வரதராசப் பெருமானின் துயர் அறு சுடரடிகளிலும், இங்கு எழுந்தருளியுள்ள பேராளன் பேரோதும் பெரியோர்கள் தம் திருவடிகளிலும் பொய்நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும் அழுக்குடம்பும் இந்நின்ற நீர்மையில் உள்ள அடியேன் வணங்கிச் செய்யும் விண்ணப்பமே!

புதுவை மாநிலத்தில் ஸ்ரீ வைணவப் பணியாற்றும் ஸ்ரீமத் இராமாநுச நாவலர் சபை மன்றத்தில் நடைபெறும் இந்த நான்காம் ஆண்டு ஸ்ரீ வைணவ மாநாட்டின்தொடக்க உரையாற்றப் பணித்தமைக்கு மிக்க நன்றி!

ஸ்ரீ வைணவ பூகோளப் பாகுபாட்டின்படி வடக்கு எல்லையாகத் துஞ்சா நீர் வளம் சுரக்கும் பெண்ணைநதியும் தெற்கு எல்லையாக சேல்கள் பாய் தரு செழுநதி அதாவது கருட நதியும் பாய்ந்து வளம் கொழிக்கும் நிலப்பரப்பிற்கு நடுநாடு என்று பெயர். இந்த நடு நாட்டின் திருமுடித்தானத்

தில் உள்ளது. 'வந்தனை செய்து, இசை ஏழு. ஆறு அங்கம், ஐந்து வளர் வேள்வி, நான்கு மறைகள் மூன்று தீயும் சிந்தனை செய்து இரு பொழுதும் பொருந்தி வாழும் செல்வத் திருக்கோவலூராகும்.

திருக்கோவலூரில் அருள்வளம் மட்டுமா! என்ன வளம் தான் இல்லை! போர் ஏறு ஒன்று உடையானும், அளகைக் கோனும், புரந்தரனும் நான்முகனும் பொருந்தும் ஊர் போல் சீர் ஏறு மறையாளர் நிறைந்த செல்வத் திருக்கோவலூராகும்.

நடு நாட்டின் திருமார்பாகத் திகழ்வது: வையம் ஏழும் உண்டு, ஆலிலை வைகியமாயவன்; அடியவர்க்கு மெய்யனாகிய தெய்வ நாயகனிடம்; அதுவே; (திருமேனியைத் தந்துள்ள) மெய் தகு வரைச் சாரல் மொய்கொள் மாதவி சண்பகம் முயங்கிய முல்லை அம்கொடி ஆடச் செய்ய தாமரைச் செழும்பணைத் திகழ்தரு திருவயிந்திர புரமே!

மலரிலும், மனத்திலும் மட்டுமா வளம்! மணிவரை நீழல் அன்னம் மாமலர் அரவிந்தத்து அமளியில் பெடையொடும் இனிது அமர செந்நெல் ஆர் கவரிக் குலை வீசும் தண் திருவயிந்திரபுரமே!

இந்நடு நாட்டின் திருவடியாகப் பொலிவது: துயரறு சுடரடியுடன் திகழும் அயர்வறும் அமரர்கள் அதிபதியான நம் வரதராசப் பெருமான் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள வடபுதுவையம் பதியாகும். ஏர் பூத்த கடிமலர்க்கா புதுவையாகும்.

ஆங்கு மாவலி வேள்வியில் இரந்து சென்று அகல் இடம் அளந்து ஆயன் தன் திருவடியால் விண் காட்டி வியக்க நின்றது 'திருக்கோவலூரிலே! மூவராகிய ஒருவன் தன் திருமுக மண்டலத்தில் முக்கண் காட்டி முத்தி தருவது திருஅயிந்திரபுரத்திலே! கடல் ஞாலத்தில் பிணங்கு புறப் புன் சமயப் பிழையை வீட்டி நார் பூத்த தொன்மறை வைணவத்தின் மாண்பை நமது விலட்சண கனி இராமானுஜ நாவலர்

சுவாமிகள் தம் பலர்ச்சுளை நிகர்த்த பாடல்களால் பண் காட்டி பக்திமழை பொழிந்தது புதுச்சேரிச் சீமையில்தான்.

''செறியார்ந்த மணி மாடம் திகழ்ந்து தோன்றும் திருக்கோவலூர் அதனை அடைந்த முதலாழ்வார்கள் ''பாவலரும் தமிழால் பேர் பெறு பனுவல் பாவலர் பாதி நாள் இரவில் மூவரும் நெருக்கி மொழி விளக்கு ஏற்றி முகுந்தனைத் தொழுதனர்.

தேவர்தானவர் சென்றிறைஞ்சத் தன் திருவயிந்திர புரத்து மேவு சோதியை வேல்வலவன் கலிகன்றி விரித் துரைத்தபாவு தண் தமிழ் பத்துடன் வானுலாவிய மதி தவழ்மால் வரை மாமதி புடைசூழ தேனுலாவிய செழும் பொழில் தழுவிய திருவயிந்திரபுரம் அடைந்த சிங்கக் கவிச் சீமான் வேதாந்த தேசிகர், ''அந்தமில் சீர் அயிந்தை நகர் அமர்ந்த நாதன் அடியினை மேல் அடியுரையில் ஐம்பது ஏத்திச் சிந்தைகவர் பிராகிருத நூறு கூறிச் செழும்தமிழ் மும்மணிக்கோவை செறியச் சேர்த்துப்பந்து கழல் அம்மானை ஊசல் ஏசல்பரவு நவமணிமாலையையும் சொன் னேன் முந்தை மறை மொழிய வழி மொழி நீ என்று முகுந்தன் தன் அருள் தந்த பயன் பெற்றேன் நானே எனப் பெருமிதமும், பெருங்களிப்பும் அடைகிறார்.

''ஏர்பூத்த மூவளமார் புதுவை நகர் செய்தவத்தால் அங்குச் சேர்ந்த ஞானத்தியலும் இராமாநுஜ நாவலன் என்னும் வைணவ மாதீர சீலர் பார் பூத்த பரசமயக் கோளரி ஒப்பார்'' எனப் போற்றுகிறார் ஒரு சாற்றுக் கவியார்.

இம்மன்றத்தின் நாமகரண நாயகராம் புதுவை இராமாநுச நாவலர் சுவாமிகள் பெருமைகள் பேச்சிலடங் காதவை.

''சென்று வணங்குமினோ சேண் உயர் வேங்கடத்தை
நின்ற வினைகெடுக்கும் நீர்மையால்—என்றும்
கடிக்கமல நான்முகனும், கண்மூன்றத்தானும்
அடிக்கமலம் இட்டேத்தும் அங்கு!''

எனப்பார்த்துக் கொண்டு நமது நாவலர் பெருமான் தேச மாய்த் திகழும் மலைத் திருவேங்கடம் அடைந்தபோது, களைப்பால் நாவறண்டு நினைவிழந்து, பிறகு கண் திறந்த போது அப்பன் அருளாலே அருகில் ஒரு சிறிய குழியில் நல்ல தீர்த்தமும், ஒருதிருத்தழாய்ச் செடியும் தோன்றியிருக்கக் கண்டு விடாய் தீர்ந்து விம்மிப்பாடிய பாடல்களே இவை!

''பண்டையி ராமாநுசற்கு அன்னத்தை ஊட்டினாய்!
பாவி எனக்குப் பருக நீர் காட்டினாய்!
கால் ஒடுங்கி விழி சுழன்று கலங்கும் எனக்கு உன்மலை
மேல் கருது புனல் காட்ட இலையா?''

கடல் சூழ்ந்த மண் உலகம் வாழ என்றும் பெரிய மனது படையாத சிலரின் எதிர்ப்புகளை முறியடித்து நாலாயிரத் திவ்ய பிரபந்தத்தை, முடிச்சூர் அப்பாரிய சுவாமிகள் முதன் முதலில் அச்சுவாகனமேற்றிய போது அவருக்கு உறுதுணை யாக உழைத்தவர் நமது நாவலர் பெருமான்.

இப்பெருங்கருணைத் திருப்பணியால்தான் பாகவதப் பெருமக்கள் நாலாயிரத்திவ்ய அமுதை நாவினால் நவிற்றும் இன்பமெய்துகின்றனர்.

வைணவத்திற்குப் புறமிருந்தும் போர் முரசு கேட்டால், வேங்கை எனப் பாய்ந்து, வென்று வாகை சூடுவார் நமது நாவலர் பெருமான்.

வைதிக சைவ சண்டமாருதம் ஸ்ரீ சூளை சோமசுந்தர நாயகர், தமது சைவசூளாமணி எனும் நூலில் வைணவத் தைப் பழித்து நிந்தை சில எழுதியதை எதிர்த்து நீதிமன் றத்தில் வாது செய்து, அவரிடமிருந்து மன்னிப்புக் கடித மும் நூறு ரூபாய் அபராதமும் பெற்றார்.

பாண்டியன் இருந்திருப்பின் கொண்டாடியிருப்பான்; நாவலர் பிரான் வந்தான் என்று ஈண்டிய சங்கம் ஒலித் திருக்கும்.

அக்குறை தீர நாம் ஸ்ரீ வைணவ சங்கம் அமைத்துச் சங்கநாதம் செய்வோமாக!

புதுவைப் பெருநகரில் அமைந்துள்ள இப்பெருமாள் கோயில் வீதியும் பெருமைமிக்கதாகும்!

இவ்வீதியிலே அமைந்திருந்த தமது திருமாளிகையில், மேல் மாடியில் நமது நாவலர் பெருமான் சுகப் பிரம்மக்கிளி கொந்திய பழமான பாகவதத்தைக் காலட்சேபம் சாதித் தருள்கையில் சுகப் பிரம்மமே என வியக்கும் வண்ணம் ஒரு கிளி அவரது திருத்தொடையில் எழுந்தருளிக் கேட்டு மகிழுமாம்!

நமது நாவலர் பெருமான் தம் 61ம் ஆண்டில் முன்னதாகவே அடியார் குழாங்கட்குத் தெரிவித்தருளிய வண்ணம், தம் திருவாராதனத்து எம்பெருமான் திருமுன்பு, கூப்பிய கையினராய்த் திருநாடலங்கரித்தார்!

> ''மேல் எழுந்ததோர்வாயுக் கிளர்ந்து மேல் மிடற்றினை
> உள் எழ வாங்கி
> காலும் கையும் விதிர் விதிர்த்து ஏறிக் கண்
> உறக்கமாவதன் முன்னம்
> மூலமாகிய ஒற்றை எழுத்தை மூன்று மாத்திரை
> உள்எழவாங்கி
> வேலை வண்ணனை மேவிய வண்ணம் விண்ணகத்தில்
> மேவலுற்றனரே!''

புதுவை பெற்ற புகழன்றோ இது! வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்த இவ் வைணவரை வானுறையும் தெய்வத்துள் வைத்து வணங்குகின்றோம்.

திருச்சி, கோயம்பள்ளி, கருநாடகம். கோலார் தங்க வயல், நடுநாடு, பண்ணுருட்டி, புதுவையில் நமது நாவலர் பெருமானுக்குச் சந்நிதிகளும், சபைகளும் உள்ளன!

நமது நாவலர் பெருமான் புவனகிரி அழகிய மணவாள ஏகாங்கி சுவாமிகளை ''ஆம் முதல்வன்'' என்று ஆள

வந்தார். ஸ்ரீராமானுஜனைக் கடாட்சித்து கடாட்சித்தது போல் 'நாடும் நகரமும் நன்கறிய நமோ நாராயணா" என்று பாடும் மனமுடையராக்கியமைக்கு இவ் விரு மகான் களுக்கும் பல்லாண்டு பாடுவோமாக!

திருமங்கை மன்னரே. துவிபாஷித் திருக்கோலம் பூண்டு சேவை சாதித்தருள்கிறார் எனத் திகைக்கும் வண்ணம் ஸ்ரீ வைணவப் பொலிவுடன் புதுவையில் அக்காலத்தில் ஸ்ரீ வைணவப் புரவலராக எழுந்தருளியிருந்தவர் ஆனந்த ரங்கப்பிள்ளை யவர்கள். இவர் தம் நாட்குறிப்பு—நாட்டுக் குறிப்பு. முத்தமிழில் வித்தகரும் சுற்றும் புதுவைத் தமிழன் அவர்; துய்ப்பிளே துரைமகனாரின் தோள் தீண்டி; துணைவன்.

கம்ப மதயானைக் கழுத்தகத்தின் மேலிருந்து இன்ப மரும் செல்வமும் அவ்வரசும் காட்டி, "விட்டு வா? வைணவத்தை! விரும்புக கிருத்துவத்தை! பெற்ற இப்பதவி நிற்கும்! பெருமைகள் கூடும்" என்றனர்.

அதற்கு எதிர்ப்பாக எட்டி நில் மத மாற்றத்தை ஏற்றிடேன் என்றார் நம் அண்ணல் ஆனந்தரங்கர்! அன்று ஆனந்தரங்கர் மதம் மாறாமைக்குக் காரணம், புதுவையில் இந்நாளில் நமது, பெரியார் அநந்தரங்கக் கிருஷ்ணசாமிப் பிள்ளையவர்களைத் தலைவராகக் கொண்டு ஸ்ரீ வைணவப் பணிகள் சிறக்க வேண்டுமென்பதேயாகும் என விண்ணப்பிக் கின்றேன்.

காலட்சேபத்தில் காலடி எடுத்து வைக்காத நடுத்தெரு நாராயணர்களும் அறிந்து கொள்ளும் விதம், மக்களின் புதிய பாணியில், கவர்ச்சியாக வைணவப் பிரசாரம் செய்து வாழ்ந்தருளியவர் புதுவை சிங்கிரிக் கோவில் சிங்கம் ஸ்ரீ துரை ரங்கராமானுஜ பாகவதர். (ஆண்டாளின்) வேதம் அனைத்திற்கும் வித்தாகிய திருப்பாவையை பிரஞ்சு பாஷையில் உருக்கி வார்த்தவர் புதுவை தேசிகப் பிள்ளை.

கண்ணன் பாட்டையும், பாஞ்சாலி சபதத்தையும் மகாகவி பாரதியார் ஈன்றது புதுவை மாநிலத்திலேதான்.

அரவிந்த மகரிஷி கீதைக்குச் செம்மைப் பொருள் ஆற்றியதும் இவ்வணி புதுவையிலே.

வைணவத்தை வளர்த்த வாழ்வித்த இப் பெரியார்கட்கு வணக்கம்; வணக்கம்.

''தொடக்கம்!'' என்னும் மரபு, பண்பாடு, வழக்கம், பத்ததி; சம்பிரதாயம் ஸ்ரீ வைணவ சமயத்திற்கு தனிச் சிறப்பு தருவதாகும். ஸ்ரீ வைணவசமயத்தால் 'தொடக்கம்" என்னும் மரபும் தனிச் சிறப்புப் பெற்றுள்ளது.

குறிப்பாக ஒரு ஸ்ரீ வைணவ சந்நிதியில் விழாக் காலத்திலும் சரி ஏனைய காலங்களிலும் சரி, திவ்யப் பிரபந்தத்தில் எந்த ஒரு பிரபந்தத்தைச் சேவிக்க வேணுமானாலும் சந்நிதி கைங்கரியத் தலைவர் கூப்பிய கையினராம், பணிவுடன் இயல் கோஷ்டித்தலைவர் அத்யாபக கோஷ்டித் தலைவரை-திருவாய் மொழி விண்ணப்பிப்பார் தலைவரை ''சாதித் தருளா!'' என்று அருளப்பாடு செய்வார். கோஷ்டியின் தலைவரும் கூப்பிய கையினராய் சம்பந்தப் பட்ட கலைத்தனியன், ஆழ்வாரின் தனியனைச் சேவித்துப் பிரபந்த சேவையைத் தொடங்குவார். அப்படித் தொடங்குகையில் பாசுர முதல் வார்த்தையை விட்டிட்டே தொடங்குவார்.

ஸ்ரீ ஆண்டாளின் திருப்பாவையை சேவிப்பதானால் 'மார்கழித் திங்கள்' எனத் தொடங்காமல் 'திங்கள் மதி நிறைந்த நன்னாளால்' என்றே தொடக்கம் செய்வார்.

காரணம் ஸ்ரீ ஆண்டாளே எழுந்தருளிச் சேவிப்பதாகவும் அதற்குச் சூசகமாக முதல்வார்த்தையை ஸ்ரீ ஆண்டாள் உச்சரித்துத் தொடங்கி வைப்பதாகவும் பாவனை. திருமங்கை மன்னனுடைய பெரிய திருமொழியைச் சேவிப்பதானால் 'வாடினேன் வாடி வருந்தினேன்' என்று

தொடங்காமல் 'வாடி வருந்தினேன் மனத்தால்' என்றே தொடக்கம் செய்வார். 'வாடினேன்' என்ற முதல்சொல்லை திருமங்கையாழ்வாரே எழுந்தருளிச் சேவிக்கத் தொடங்குவ தாக ஒரு நம்பிக்கை,

இதனால்தான் இயல் கோஷ்டியினரை அவர்கள் சேவிக்கும் ஆழ்வாராகவே கொண்டு விழுந்து தண்டன் சமர்ப்பித்து வணங்குகின்றனர்.

இறைவன் எதிரில் சமயப் பாசுரங்களை ஓதுவது பாசுரம் இயற்றிய பக்திச் சீலரே, எழுந்தருளிச் சேவிப்ப தாகப் பாவித்து வணங்குவது என்ற இத் தனிச் சிறப்பு வைணவத்திற்கே உண்டு.

இதற்கு இன்னொரு காரணமும் உண்டு. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் வழக்கற்றுப் போய்விடவும், ஸ்ரீமந் நாதமுனிகள், திருக்குருகூர் எழுந்தருளி நம்மாழ்வாரை அடிபணியவும் நம்மாழ்வாரும் ஒவ்வொரு பாசுரத்தையும் தொடங்கிப் பூர்த்திணி பண்ணியருளியதால் நம்மாழ்வாரே ஒவ்வொரு பாசுரத்தையும் தொடங்கி அருள்வதாகவும் நம்பிக்கை.

இதனால் தான் நம்மாழ்வாருக்கு 'நாதனுக்கு நாலாயிரம் உரைத்தான் வாழியே' என்ற வாழித் திருநாமமும் ஸ்ரீமந் நாதமுனிகளுக்கும் 'பராங்குசனார் சொற் பிரபந்தம் பரிந்து கற்றான் வாழியே' என்ற வாழித் திருநாமமும் ஏற்பட்டுள்ளது.

கருத்துக் கோஷ்டியைத் தொடக்கம் செய்ய அழைப்பு.

நாடு என்றால் மக்கள் நாடி வசிக்கும் இடம்; மக்கள் நாடிக் கூடும் இடம் என்றும் பொருள் படும். மாநாடு என்றால் அதிகரித்த நிலப் பரப்பிலாவது மக்கள் தொகையி லாவது, வாழும்; கூடும், ஜன சமூகத்தைக் குறிக்கும்.

பலபாகங்களிலிருந்து பலவகைப்பட்ட மக்கள் ஒருங்கு கூடிக் கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்வது மாநாடு.

உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே எனும் இலக்கணப்படி உயர்ந்தோர்கள் ஒரு சிலராகக் கூடினாலும் அதுவும் மாநாடுதான்.

மாநாடு கூடி ஸ்ரீ வைணவக் கருத்துக்களைப் பரிமாற்றம் செய்து கொள்வது தமிழ்நாட்டில் சுமார் 60 ஆண்டுகளாக நடைபெறுவதாக எண்ணம். வெளி நாட்டு உறவுக் கப்பால் மாநாடுகள் ஏற்பட்டன என்று கருதவும் உண்டு

கணக்கிற்கும், கருத்திற்கும் எட்டாத காலத்திலேயே மாநாடுகள் நடைபெற்றதாக அறியக் கிடக்கின்றது.

அதுவும் ஸ்ரீ வைணவ மாநாடுகளாகவே நடைபெற்ற தாக அறியக் கிடக்கின்றது.

அந்த ஸ்ரீ வைணவ மாநாடும் தமிழ்நாட்டில் நடு நாட்டினில் நிகழ்ந்ததாக அறியக் கிடக்கின்றது.

அந்த ஸ்ரீ வைணவ மாநாடு புலம் பரந்து பொன் விளைக்கும் பொய்கை வேலிப் பூங் கோவலூரில் நடை பெற்றதாக அறியக் கிடக்கிறது. முதலாழ்வார் மூவரும் சேர்ந்து(மாநாடாக் கூடி) முதல் ஸ்ரீ வைணவ மாநாட்டைத் தொடங்கி வைத்து ஆற்றிய பெரும் உரைகளையே அடியேனது இம் மாநாட்டுத் தொடக்க வுரையாகவும் கொள்ள விரும்புகிறேன்.

முதல் ஸ்ரீ வைணவ மாநாடு தொடங்கிய வைபவத் தையே விஷயமாக்கி இம் மாநாட்டைத் தொடங்கி வைக்க நியமனம் வேண்டுகிறேன். திருக்கோவலூர் திவ்ய தேசத்திலே நள்ளிரவிலே அடை மழையிலே இடி இடித்து, மின்னல் மின்னி, இருள் கவிந்தே எங்கணும் இருந்த போதிலே, ஓர்இரா இருந்த விடத்தில் மற்றொரு இரா இராமல் ஓடித் திரியும் யோகி ஒருவர் தங்குவதற்கு இடம் தேடித் தவிக்கையில், மிருகண்டு முனிவரின் ஆசிரமம் கண்டு அதன் இடை கழியில் படுத்துக் கொண்டார். மழைச்

சாரலாகையாலே கதவைத் தாழிட்டு விட்டார். இவரே பொய்கை ஆழ்வார்!

மழை நீடிக்கிறது. கதவு தட்டப்படுகிறது. அதனைத் திறந்த பொய்கை முனி, வெளியே மின்னல் வெள்ளத்திலே ஸ்ரீ வைணஷ்வப் பொலிவுடன் விளங்கிய பூதத்தாழ்வாரைச் சேவித்தார்.

ஒருவர் படுக்கும் இடத்திலே இருவர் அமர்ந்து இருக்கலாமே என உபசரித்து அழைத்துக் கொண்டார்.

இருவரும் அமர்ந்து இருக்கும்போது அடமழை நீடித்துக் கதவு மறுபடியும் தட்டப் படுகிறது.

கதவைத் திறந்தால் மின்னல் வெளிச்சத்திலே பேயாழ்வார் சேவை சாதித்தார்.

இருவர் இருக்கும் இடத்திலே மூவர் நிற்கலாமே என அன்பு பரிமாறிக் கொண்டு நின்ற திருக்கோலமாக எழுந்தருளியிருக்கையில், கதவு தட்டப்பட்டுத் திறக்கப் படாமலேயே நெருக்கடி ஏற்படுகிறது. பொய்கையாரும், பூதத்தாரும் ஏற்றிய இரு விளக்கில் பேயார், நெருக்கு இறவன் நேமி நெடியவன் தான், எனக் கண்டாராம்;

பொய்கை முனி, பூதத்தார், பேயாழ்வார் என்ற மூவரும் நாடிக் கூடியதனால் இதுவே மாநாடு—மகான்கள் நாடு என்றும் போற்றலாம்!

நம் ஸ்ரீ வைணவ சமய சரித்திரத்திலேயே வேறு ஒரு மாநாடு நடைபெற்றதில்லையே!

ஸ்ரீ ஆண்டாளும் பெரியாழ்வாரும் சம காலத்தவர்கள். ஒரே திருமாளிகையில் எழுந்தருளியிருந்தவர்கள். இவர் இருவரும் திருச் செவி சாற்ற மற்றவர் உரை பரிமாறியதாகச் சரிதம் இல்லை.

பேயாழ்வாரும்,திருமழிசைப் பிரானும் சமகாலத்தவர். பேயார், (ஒருவர்) மற்றவர் (மழிசையார்) இருவரும் சேர்ந்து பாடியதாகச் சரிதம் இல்லை.

மதுரகவியாழ்வாரும் நம்மாழ்வாரின் சீடர்; இருவரும் ஒருவரை அடுத்து மற்றவர் சாதித்தருளியதாக வைபவம் இல்லை.

பிற்காலத்தில் திருக்கோவலூரிலே நடந்த இந்த மாநாட்டை அத் திவ்ய தேசத்திற்கு எழுந்தருளிய திருமங்கை மன்னனே புதை பொருளாகக் குறிப்பிட்டருளு கிறார்.

முதலாழ்வார்களான வண்டுகள் பாட திருக்கோவலூர் எம்பெருமான், கரும்பாக வளருகிறானாம்!

"கோங்கு அரும்பு சுரபுன்னை குரவு ஆர் சோலை
குழாம் வரி வண்டு இசை பாடும் பாடல் கேட்டு
தீங்கரும்பு கண் வளரும் கழனி சூழ்ந்த திருக்கோவலூர்
அதனுள் கண்டேன் நானே!"

இவ்விதமாக ஏன் திருக்கோவலூர் தேகளீசப் பெருமான் அமுதாகத் தித்திக்கிறார்?

அத்திவ்யதேசத்திலே அவனைக் கண்ட முதலாழ்வார்கள் ஆனந்தக் கண்ணீர் சொரியச் சொரியஅன்பின் பெருக்காலே பாடப் பாட அவன் அமுதாகத் தித்திக்கத்தான் வேணும்! இதுவல்லவா அவன் தீங்கரும் பாகியதன் இரகசியம்!

ஆங்கு அரும்பிக் கண்ணீர் சோர்ந்து அன்பு கூறும் அடியவர்கட்கு ஆராவமுதன் ஆனான் தன்னை, திருக் கோவலூர் இடைகழியிலே மகாநாடாக கூடிய போது இந்த முதலாழ்வார்கள் ஒவ்வொருவரும் 100 பாடல்களால் தனித் தனியாக சொற்பொழிவு ஆற்றியுள்ளார்கள். இடையில் மற்றவருக்கு இடம் தராமல் அந்தாதியாகப் பாடினர். ஒன்றாகச் சேர்ந்து ஒரே சமயத்தில் கலந்த குரலில் பாடவில்லை.

கைதை சேர், பூம் பொழில் சூழ் கச்சி, நகர் வந்துதித்த பொய்கைப்பிரான் கவிஞர் போரேறு, தம் பாடல் மூலம்: (தமது சொற்பொழிவில்) வையம் தகளியா வார்கடலே நெய்யாக வெய்ய கதிரோன் விளக்காக ஒரு தீபத்தை ஏற்றினாராம். அந்த இருளிலே ஏற்பட்ட நெருக்கடியின் காரணத்தைக் கண்டுபிடிக்க.

இரண்டாவதாக—நன் புகழ் சேர் சீதத்தார் முத்துக்கள் சேரும் கடல் மல்லையில் பூதத்தார்,

தம் பாடல் மூலம்: (தமது சொற்பொழிவில்) அன்பே தகளியா! ஆர்வமே நெய்யாக! இன்புருகுசிந்தை திரியாய்—நன்புருகி ஞானச் சுடர் விளக்கை ஏற்றினாராம்!

இவ்விரண்டு விளக்குகளின் உதவியாலே பேயாழ்வார் சீராரும்மாடத்திருக்கோவிலூரதனுள் காரார் கருமுகிலைக் காணப்புக்குத் தமது சொற்பொழிவுப் பாடலில்: திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன், என்றெல்லாம் இறைவனை நேரே சேவித்துப் பாடினாராம்!

இந்தக் கதையைப் பற்றிக் கொஞ்சம் சிந்திக்க வேண்டியிருக்கிறது.

வையந் தகளியா, வார்கடலே நெய்யாகக் கொண்டு வெய்ய கதிரோனை விளக்காக ஏற்றிய பொய்கையார், அதே பாசுரத்தில், அதே மூச்சிலே ஆழியானைச் சேவித் திருக்கிறார். சுடராழியானைச் சேவித்திருக்கிறார். சுடராழியான் அடியையும் சேவித்திருக்கிறார். அவர் பாசுரமே சாட்சி

ஆகையால் அவருக்கு பூதத்தாருடைய விளக்கு தேவை யில்லை. பேயார் 'திருக்கண்டேன்' எனக் காட்டியபிறகு தான் சேவித்தார் எனல் ஆகாது! பூதத்தார் ஞானச் சுடர் விளக்கை அன்பைக் கொண்டு ஏற்றியதும் நாராயணனை ஆர்வத்தைக் கொண்டும் சேவித்து விட்டார். அதனாலே அந்த நாராயணனுக்குஞானத் தமிழைப் பரிந்தாராம்!

மூன்றாவதான பேயார்; திருக்கண்டேன், பொன்மேனி கண்டேன் என்று எல்லாம் வானொலியில் நேர்முக வர்ணனைப்போல் பாடவில்லை!

இந்த அடையாளங்களை எல்லாம் நான் கண்டது நான் முன்பே சேவித்துள்ளதுதான், என் ஆழி வண்ணன் பால் என்கிறார் வியூக நிலையிலே திருப்பாற்கடலிலே கிடந்த திருக் கோலத்தில் சேவை சாதித்தவனே இப்போது இந்த அடையாளங்களுடன் சேவை சாதிக்கிறான் என்கிறார்.

எனவே இந்த முதல் வைணவ மாநாட்டைப் பற்றி ஆழ்ந்து ஆராய வேண்டியுள்ளது! ஏன் முதலிலே பூதத்தார் பாடவில்லை? ஏன் முதலில் பேயார் பாடவில்லை? ஏன் பொய்கையார் கடைசியாகப் பாடவில்லை? ஏன் பூதத்தார் கடைசியாகப் பாடவில்லை? ஏன் பொய்கையார் நடுவில் பாடவில்லை? ஏன் பேயார் நடுவில் பாடவில்லை?

ஏன் முதலில், பொய்கைதனில் வந்துதித்த புனிதன் பாடவேண்டும்? ஏன் இடையில் கடல்மல்லைக் காவலன் பூதவேந்தன் பாடவேண்டும்? ஏன் கடைசியாகத்தான். மாமயிலைப் பதியதனில், துலா மாதத்தில் வரும் சதயத்து அவதரித்த பேயார் பாடவேண்டும்?

இதன் இரகசியத்தைத் தெரிந்து கொண்டால் உள்ளம் பூரிக்கின்றது. உடல் சிலிர்க்கிறது! எந்த கொள்கை வைணவத்தின் ஆதாரமாக அடிப்படையாக ஆரம்பமாக, உள்ளதோ அதுவே இந்த முதல் வைணவ மாநாட்டின் தொடக்கப் பேச்சாக அமைந்துவிட்டது.

அதுவே தத்துவத்திரய ஞானம், முப்பொருள் உண்மை, பிள்ளை லோகாசாரியார் அருளிய தத்துவத்திரயத்தில் முதல் சூர்ணை ''முமுட்சுவா சேதனனுக்கு மோட்சம் உண்டாம் போது தத்வத்திரய ஞானம் உண்டாகவேணும்'' இரண்டாம், அடுத்த சூர்ணை ''தத்வத்ரயமாவது சித்தும் அசித்தும், ஈஸ்வரனும்,''

எனவே முதலாவதாக நடைபெற்ற இந்த வைணவ மாநாட்டிலே மூவராகிய முதலாழ்வார்களும் ஒவ்வொருவரும் தனித்தனியே ஒவ்வொரு தத்துவத்தைப் பற்றிப் பாடி மகிழ்ந்தார்கள். தேகளீனும் உடன் சேர்ந்து மகிழ்ந்தார்.

முதலில் பாடிய பொய்கை முனி அசித்தை வையம், வார்கடல், வெய்ய கதிரோன் உள்ளிட்ட அசித்தைப் பற்றிப் பேசியிருக்கிறார். இந்த அசித் ஒரு தனித்த தத்துவம் என்றாலும், இறைவனாகிய உயிர் அசித்தை உடலாக்கிக் கொண்டுள்ளான் என்ற சரீர சரீரி பாவத்தையும் வெளியிடுவதற்காக இந்த அசித்தை அவன் திருவடிகளிலே சமர்ப்பித்தருள்கிறார்.

தமது முதல் திருவந்தாதியாகிய 100 பாடல்களாலான சொல் மாலையிலே!

''வையம் தகளியா, வார்கடலே நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காக—செய்ய
சுடராழியான் அடிக்கே சூட்டினேன்சொன் மாலை
இடர் ஆழி நீங்குகவே என்று.''

நம் ஆத்மாவிற்குப் புறம்பாக உள்ள உலகத்தைப் பற்றிய அஞ்ஞானம் புற இருள். வருத்தத்தைத் தரும் இந்த அஞ்ஞானத்தை மாற்றவே வேதக் கருத்தின்படி பொய்கையார் விளக்கம் அருளினார். விளக்கு அருளினார். விளக்கியருளினார். அவர் ஏற்றிய விளக்கு:

வருத்தும் புற இருள் மாற்ற எம் பொய்கைப்பிரான், மறையின் குருத்தின் பொருளையும், செந்தமிழ் தன்னையும் கூட்டி, ஒன்றாகத் திரித்து அன்று எரித்த திருவிளக்கு.

அடுத்துப் பாடிய பூதத்தார், சித் சொரூபத்தை ஆன்மாவைப் பற்றிய ஞானத்தைப் போதிக்கின்றார். தமது இரண்டாம் திருவந்தாதியான முதற்பாட்டிலே, சித்தும் ஈஸ்வரனுக்குச் சரீரமாக அமைந்து அவன் நியமனப்படி இயங்குகின்றதால், சித்தையும் நாரணர்க்கு ஆக்குகின்றார்.

நாரம்-சித், அயனம்-தங்குவது, அசித் சித் நாரங்கள்; அவைகளுக்கு ஆதாரமாக இருப்பவன் ஈஸ்வரன். எனவே பூதத்தார் பாடல் சித் சொரூபப் பாடல்:

''அன்பே தகளியா, ஆர்வமே நெய்யாக!
இன்புருகு சிந்தை இடுதிரியா—நன்புருகி
ஞானச் சுடர் விளக்கு ஏற்றினேன் நாரணர்க்கு
ஞானத் தமிழ் புரிந்த நான்.''

அசித்திற்கும், சித்திற்கும் வேற்றுமை :- சித்திற்கு ஆன்மாவிற்கு அன்பு உண்டு, ஆர்வம் உண்டு, இன்புருகு சிந்தை இதயம் உண்டு. (அசித்தைப் பற்றிய அஞ்ஞானம் புற இருள்) சித்தைப் பற்றிய அஞ்ஞானம் அக இருள்-இதயத்து இருள்.

இந்த இதயத்து இருளை— சித்தைப் பற்றிய அஞ்ஞானத்தைக் கெடும்படி ஞான விளக்கு ஏற்றியவர் பூதத்தாழ்வார்.

இறைவனைக் காணும் இதயத்து இருள் கெட-ஞானம் என்னும் நிறை விளக்கு ஏற்றினார் பூதர், பொய்கையார் அசித்தைப் பற்றிப் பாடியபிறகு, பூதத்தார் சித்தைப்பற்றிப் பாடிய பிறகு, கடைசியாக மூன்றாவதாகப் பாடியருளிய உரையாற்றியருளிய பேயாழ்வாருக்கு விஷயமாக அமைவது ஈஸ்வர லட்சணமாகும்.

சித் அசித் ஈஸ்வரன் என்ற வரிசை ஸ்ரீ ஆளவந்தாருடையது; அசித் சித் ஈசுவரன் என்ற கிரமம் எம்பெருமானாருடையது. திருமந்திரம், துவயம், சரம சுலோகம் என்பது ஒரு வழக்கு; துவயம், திருமந்திரம், சரம சுலோகம் என்றும் ஒரு வழக்குப் போல ஈஸ்வர லட்சணத்தைப் பற்றி முதலில் தெரிந்து கொள்ள வேண்டியது அவன் வெறும் நாராயணன் அல்ல, ஸ்ரீமந் நாராயணன் என்பதாகும்.

இதுவே ''ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே'' என்னும் துவய மந்திரமாகும். பேயாழ்வாரின் ஈசுவரனைப் பற்றித் திருவாக்குத் தொடக்கமாகிறது.

திருக்கண்டேன்! பெரிய பிராட்டியாரைச் சேவித்தேன்; அது மாத்திரமோ, எம்பெருமான் அவள் அழகாலே திருத்தப்படுவதால் அவளுடைய சேர்க்கையினாலே நிறம் பெற்றும் அவன் திருமேனியும் பொன்னாகி இருப்பதைச் சேவித்தேன்.

'நீரிலே நெருப்புக் கிளருமா போலே குளிர்ந்த திருவுள்ளத்திலே அபராதத்தாலே சீற்றம் பறந்தால் பொறுப்பது இவருக்காக; இவள் ஸந்நிதியாலே காகம் தலை பெற்றது; அது இல்லாமையாலே ராவணன் முடிந்தான்'' இதனை வெளியிட்டருள்கிறார் பூதவேந்தர்.

''பொன்மேனி கண்டேன்!'' எம்பெருமான் பிராட்டி யின் புருஷகாரத்திற்குக் கட்டுப்பட்டவனாயினும் திருவுக்கும் திருவாகிய செல்வனாயிற்றே! ''தன்னடியார் திறந்தகத்துத் தாமரையாள் ஆகிலும் சிதகுரைக்கு மேல் என்னடியார் அது செய்யார், செய்தாரேல் நன்கு எய்தார்'' என்பவராயிற்றே; அதனால்தான் திருமகளின் பொன்மேனி யோடு அவனுடைய கோடி சூரியப் பிரகாசமான சுடர்விடும் மேனியும் சேவித்தாராம்.

''அருக்கன் அணிநிறமும்கண்டேன்!''விரியும் கதிரேபோல் வான் அவன்; இறைவனுடையதிருமேனியிலிருந்துவீசும்அந்த கதிரவனுடையசுடரையும் தன்னுயிர்அடக்கக்கொள்ளுமாம் இதோ கம்பநாட்டாழ்வாரின் திருவாக்கு! ''வெய்யோன் ஒளி தன் மேனியின் விரிசோதியின் மறைய பொய்யோ எனும் இடையாளொடும் இளையானொடும் போனான் மையோ மரகதமோ மறி கடலோ மழை முகிலோ ஐய்யோ! இவன் அழகென்பதோர் அழியா அழகு உடையான்.''

இவ்விதமாகப் பெரிய பிராட்டியாரின் அநுக்கிரகம் கிட்டும் சமயங்களிலும் அது கிட்டாத சமயங்களிலும்கூட

எம்பெருமான் நம்மைக் கடாட்சித்தருள்வது எவ்விதம் அறியக் கிடக்கின்றது! இதோ ஈஸ்வரனுடைய திருக்கரங் களிலே துஷ்ட நிக்ரக அடையாளமாகச் 'செருக்கிளரும் பொன்னாழியையும்''

சிஷ்டபரிபாலனத்தின் சின்னமான 'புரி சங்கத்தையும்' கண்டார் பேயாழ்வாராம் ஞானி. இவ்விதமான திவ்ய மங்கள உருவுடன் திருக்கோவலூரில் முதலாழ்வார் களுக்கு சேவை சாதித்தருள்பவன் யார்? எவனிடம் இந்த திவ்ய பொலிவுகளைச் சேவித்தார்கள்?

எனவே பக்தர்களுடைய கூப்பாடுகளை முறையீடு களை குறைகளைக் கேட்டு அவைகளை அகற்றி அபயப் பிரதானம் அருள்வதற்காகவே எம்பெருமான் பரமாநந்த நிலையைவிட்டு வியூக நிலையாகிற திருப்பாற் கடலில் கண் வளர்ந்து அருள்கிறான்.

'என் ஆழிவண்ணன் பால் இன்று'' எனவே மூன்றாவ தான கடைசிப் பேருரை,

''திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்
அருக்கன் அணி நிறமும் கண்டேன்; செருக்கிளரும்
பொன் ஆழி கண்டேன் புரிசங்கம் கைக்கண்டேன்
என் ஆழி வண்ணன் பால் இன்று''

முதல் ஸ்ரீ வைணவ மாநாட்டின் தொடக்கவுரைகளாக முதலாழ்வார்களின் பேருரைகளை அநுபவிக்கலாம்; அல்லது தற்கால முறைப்படியும் அனுபவிக்கலாம். மாநாடு, வரவேற்பு, தொடக்கவுரை செய்கிற கைங்கரியம் யாது, மாநாடு கூடும் இடம், சுற்றுப் புறம், இவைகளை நிச்சயித்து ஏற்படுத்தி, அலங்காரம் செய்து உபசரிப்புக்கு தகுதியாக்கப் பட்டிருக்கிறது.

எனவே வரவேற்புக்குத் தலைவரான பொய்கை முனி வையம் தகளியா வார்கடலே நெய்யாக வெய்ய கதிரோன் விளக்காக இவைகளால் குறிக்கப்படும் பிரபஞ்சத்தையும் இவைகளைச் சரீரமாக உடைய செய்ய சுடராழியான்

அடிக்கே அர்ப்பணித்தார். சுடராழியான் அடிக்கே சொன்மாலை சூட்டுதல் வரவேற்பைக் குறிக்கின்றது.

அடுத்த படி பூதத்தாழ்வார், தொடக்கவுரை நிகழ்த்து கிறார். மாநாடு தொடங்குவதற்கு 'சித், அம்சம் அசித்தில் இயங்கும். அசித்துக்கு ஜீவாத்மாக்கள் தேவை. எனவே ஜீவாத்மாக்களின் சின்னத்தை வைத்து தொடக்கஉரை ஆற்றினார்''அன்பே தகளியா ஆர்வமேநெய்யாக,இன்புருகி சிந்தை இடு திரியா'' இம் மாநாட்டிற்குத் தலை ஏற்கிறார் பேயாழ்வார். தலைமை உரை ஈஸ்வரனைப் பற்றியதாக அல்லாமல் வேறு உயர்ந்த கருத்துடன் இயங்குவதற்கு முடியுமா?

எனவே ''திருக்கண்டேன். பொன்மேனி கண்டேன், திகழும் அருக்கன் அணி நிறமும் கண்டேன், பொன் ஆழி கண்டேன், புரிசங்கம் கைக்கண்டேன், என் ஆழிவண்ணன் பால் இன்று'' இனத் துவயமந்திரத்திலிருந்து ஆரம்பித்து ''பரித்ராணாய சாதூணாம் வினாசாயச துஷ்க்ருதாம்'' எனப் பாற்கடலில் பையத்துயின்ற பரமனின் அடி வரை சாதித்தருளிகிறார்.

இவரல்லவா மாநாட்டுத் தலைவர்—நம் தலைவர். எனவே அமுதனாரின் மங்களாசாசனம் மன்னிய பேர் இருள் மாண்ட பின் கோவலூர் மாமலராள், தன்னொடு மாயனைக் காட்டும் தமிழ்ந் தலைவன் பொன்னடி போற்றும் இராமாநுசர்க்கு அன்பு பூண்டவர்தாள் சென்னியில் சூடும் திருவுடையார் என்னும் சீரியரே.

**இம் முதல் ஸ்ரீ வைணவ மாநாடு வாழ்க!**

இதில் பங்கேற்ற முதலாழ்வார்கள் வாழ்க!
இதில் பிரதிநிதியாக எழுந்தருளிய இறைவன் வாழ்க!
இவர் கூறிய கருத்துக்கள் வாழ்க!
இக்கருத்துக்களைப் பரப்பும் மாநாடுகள் வாழ்க;
வாழியவே.

## "நாம சங்கீர்த்தன நங்கை"

அடியேன், வேணுகோபாலன் என்ற திவ்ய திருநாமத்தைச் சுமந்து கொண்டிருக்கின்றேன். இது நியாயமா? இது நியாயம் என யாராவது கரம் உயர்த்த முடியுமா?

வேணு என்றால் மூங்கில் கோலால் செய்யப்பட்டப் புல்லாங்குழல்.

அடியேனுக்குப் புல்லாங்குழலை வாசிக்கவும் தெரியாது! பிறர் வாசித்தால் ரசிக்கவும் தெரியாது!

கோ : என்றால் பசு

பாலன் : என்றால் அதை வளர்ப்பவன்,

காப்பாற்றுகிறவன் என்று பொருள். அடியேன் பசுவின் பாலைக் குடித்திருக்கிறேன்; அவ்வளவே! பசுவைக் காப்பாற்றியோ, வளர்த்தோ அறியேன். பசு முட்டும் என்றால் சாதுரியமாகப் பதுங்கி விடுவேன்!

எனவே, வேணுகோபாலன் என்ற திவ்ய திருநாமம் அடியேனுக்குப் பொருந்தாது. அது அடியேனுக்கு இடுகுறிப் பெயர்தான்; அதாவது அந்தப் பெயரை இட்டு அடியேனைக் குறிக்கிறார்கள்!

எனவே மானிடர்களுக்கு வைத்துள்ள பெயர்கள் அவர் களுக்குப் பொருந்துவது கடினம்! இவை நம்முடைய குணங்களையும் விளக்காதவை!

வேணுகோபாலன் என்ற திவ்ய திருநாமம் ஸ்ரீமந் நாராயணனான மாயன் வடமதுரை மைந்தனாக, தூயப் பெருநீர் யமுனைத் துறையிலே ஆயர் குலத்திணில்தோன்றும் அணிவிளக்காக, தாயைக்குடல் விளக்கம் செய்த தாமோதர னாக பிறந்தவாறும் வளர்ந்தவாறும் அதிசயங்கள் நடத்திய போது குழலூதும் இனிமையையும் கற்றினம் மேய்த்த கனிவையும் பாராட்டி ஏற்றப்பட்டது.

பாட்டுக்கொரு புலவன் பாரதி தரும் சான்றிதழ்:

"புல்லாங்குழல் கொண்டு வருவான்—அமுது
பொங்கித் ததும்பும் நற்கீதம் படிப்பான்!
கள்ளால் மயங்குவது போலே—அதைக்
கண்மூடி வாய் திறந்தே கேட்டிருப்போம்!"

இதோ விஷ்ணு சித்தரின் சான்றிதழ்!

"மடமயில்களோரு மாண்பினை போலே
மங்கைமார்கள் மலர்க் கூந்தல் அவிழ
உடை நெகிழ்வோர் கையால் துகில் பற்றி
ஒல்கி ஒடரிக்கண் ஒட நின்றனராக
இட அணரை இடத்தோளொடு சாய்த்து!
இருகை கூடப் புருவம் நெரிந்து ஏற!
குடவயிறுபட, வாய்க் கடைகூடக்
கோவிந்தன் குழல் கொடு ஊதினானாம்!

மறுபடியும் மாமனாரின் மகிழ்ச்சி!

"பறவையின் கணங்கள் கூடுதுறந்து!
வந்து சூழ்ந்து படுகாடு கிடப்பக்
கறவையின் கணங்கள் கால் பரப்பிட்டுக்
கவிழ்ந்திரங்கிச் செவி ஆட்டகில்லாமல்,
சிறு விரல்கள் தடவிப் பரிமாறச்
செங்கண் கோடச் செய்யவாய் கொப்பளிப்ப
குறுவெயர்ப் புருவம் கூடலிப்பக்
கோவிந்தன் குழல் கொடு" ஊதினானாம்.

வேயர் தங்கள் குலத்துதித்த விஷ்ணுசித்தர் ஆயர் தங்கள் குலத்துதித்து, ஆயர்களோடு போய் ஆநிரை காத்து அணிவேயின் குழலூதி வித்தகனாய் நின்ற ஆயர்கள் ஏற்றினைப் பாடுகின்றார்; ஆனிரை மேய்த்தானைப் பாடுகின்றார்.

''கன்று மேய்த்து விளையாடும் கோவலன் வரில் கூடிடு கூடலே! மகளின் சாட்சி! சாட்டை கற்றினம் மேய்கிலும் மேய்க்கப் பெற்றான். காடு வாழ் சாதியும் ஆகப்பெற்றான்! இட்டமான பசுக்களை இனிதுமறித்து நீருட்டி விட்டுக் கொண்டு விளையாட விருந்தாவனத்தே கண்டோமே! பரகால நாயகியும்,

''கன்று மேய்ந்து இனிது உகந்த காளாய்'' என்றும் "துன்று குழல் கருநிறத்து என் துணையே'' என்றும் துணைமுலைமேல் (கண்) துளிசோரச் (மனம்) சோர்க்கின்றாளே!

எனவே, 1. குழல் ஊதியும் 2, கூட்டமான பசுக்களை மேய்த்தும் மகிழ்வித்த இரண்டு திருக்குணங்களை வேணுகோபாலன் என்ற திருநாமம் குறிக்கின்றது.

எனவே எம்பெருமானுடைய கல்யாண குணங்களை வெளிப்படுத்துகின்றன அவனுடைய திருநாமங்கள்.

கல்யாண குணங்கள் என்றால் உலகிற்கு மங்கலத்தை நன்மையை, சுபத்தை,சுபிட்சத்தைஉண்டாக்கும் குணங்கள்.

இத்தகைய கல்யாண குணங்களை நாம் ஏன் ஓதுதல் வேண்டும்? நாமம் ஆயிரம் ஏத்த நின்ற நாராயணனின் ரகசியம் என்ன?

**''நாம சங்கீர்த்தன நங்கை''**

நலம் தரும் நாம சங்கீர்த்தனம்!

உயர்வற உயர் நலம் உடையவனாகிய இறைவனுடைய திருவருளைப் பெறுவதற்கு மிக மிகச் சுலபமான வழி நாம

சங்கீர்த்தனமே! அதாவது அவனுடைய திருப்பெயர்களை ஓதுவதுதான்!

அவனுடைய திருப்பெயர்கள் அவனுடைய கல்யாண குணங்களை வெளியிடுகின்றன—விளக்குகின்றன.

பெயரை உடைய இறைவனைக் காட்டிலும் அவனது பெயரே விசேஷமுடையது!

வாச்சியம் : பெயரை உடையவன்

வாசகம் : அவனுடைய திருப்பெயர் திருநாமம்.
''வாச்சியப் பிரபாவம் போலன்று வாசகம் பிரபாவம்''

ஸ்ரீ பிள்ளைலோகாச்சார்யர் அருளிய முமுக்ஷுப்படி (14)
ஏன்? இது அவனுடைய திருநாமம் அல்லவா?

''அவன் தூரஸ்தனானாலும், இது கிட்டி கின்று உதவும்.'' (ஷ 15)

இப்படியும் நடந்தது உண்டா?

''திரௌபதிக்கு ஆபத்திலே புடவை சுரந்தது திருநாமமிறோ! (ஷ 16)

''சங்கசக்ர கதா பானே!
த்வரகா நிலய! அச்சுதா!
கோவிந்தா! புண்டரீகாட்சா!
ரட்சமாம் சரணா கதாம்!''

என்று அஸ்தினாபுரத்திலே திரௌபதி ஆடை குலையுற்று நின்றபோது அவள் ஆவென்றழுது துடித்தபோது, கண்ணன் தூரமான துவாரகையிலிருப்பினும் கிட்டி நின்று உதவியது அவனுடைய திருநாமமே!

ஸ்ரீஜயபிரகாச நாராயணர் அபாய நிலையில் ஜஸ்லோக் மருத்துவ மனைக்குக் கொண்டு போகப்பட்ட போது வினோபாபாவே விடுத்த சேதி,

KOVILOOR VEDANTA MUTT



"ஹரிராம்!" என்று நாம சங்கீர்த்தனம் செய்யும் படியேயாகும்.

நப்பின்னை நங்கை அணி புதுவைப் பைங்கமலத் தண் தெரியல் பட்டர் பிரான் கோதையான ஸ்ரீ ஆண்டாளும் தான் சொன்ன சங்கத் தமிழ் மாலையாம், முப்பது பாடல்களாலான திருப்பாவையைச் சாதித்தருளும் முகத்தாலே இறைவனின் திருநாம சங்கீர்த்தனத்தில் ஈடுபடுகின்றாள், இழிகின்றாள், ஆழங்கால்படுகின்றாள். இதனால்தான் மூன்றாம் பாசுரத்திலே ஓங்கி உலகளந்த உத்தமன் பேர் பாடி பாவை நோன்பிற்குச் சாற்றி நீராடுகின்றாள்!

ஐந்தாவது பாசுரத்திலே மாயனை மன்னுவட மதுரை மைந்தனை, தூயப் பெருநீர் யமுனைத் துறைவனை, ஆயர் குலத்தில் தோன்றும் அணிவிளக்கைத் தாயைக் குடல் விளக்கம் செய்த தாமோதரனை வாயினால் பாடுகின்றாள்- மனத்தினால் சிந்திக்கின்றாள்.

புள்ளும் சிலம்பின காண் பாசுரத்தில், வெள்ளத்தரவில் துயில் அமர்ந்த வித்தினை அரி என்ற பேரரவம் உள்ளம் புகவும் குளிர்கின்றாள் மாவாய் பிளந்தானை மல்லரை மாட்டிய தேவாதி தேவனைப் பாடிப் பறை கொண்டு சென்று சேவிக்கின்றாள்.

மாமாயன் மாதவன் வைகுந்தன் என்று என்று நாமம் பலவும் நவில்கின்றாள்; கற்றுக் கறவை கணங்கள் பாசுரத்தில் முற்றம் தோறும் புகுந்து முகில் வண்ணன் பேர் பாடுகின்றாள்; கனைத்திளங் கற்றெருமையில் நற்செல்வன் தங்கையை, 'சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற மனத்துக்கினியானைப் பாடவும் நீ வாய் திறவாய்! என வேண்டுகிறாள்.

புள்ளின் வாய்க் கீண்டானைப் பொல்லா அரக்கனைக் கிள்ளிக் களைந்தானை சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையானைப் பாடுகின்றாள். வல்லானை, கொன்றானை,

மாற்றாரை, மாற்றழிக்க வல்லானைப் பாடிக் கொண்டே, கண்ணன் எழுந்தருளியுள்ள நந்தகோபன் திருமாளிகையை அடையும் வரை அவனது பெயர்களைப் பாடிக் கொண்டு செல்கிறாள்.

திருநாமங்களில் சிறப்புத் திருநாமங்கள், பகவானுடைய பல திருநாமங்கள், அவனுடைய குணங்களையும் அக்குணங்களைப் பிரகாசப்படுத்தும் அவதாரங்களையும் விளக்கும்.

"பகவத் மந்திரங்கள் தான் அநேகங்கள்" முமு (8) (மந்திரங்கள்—திருநாமங்கள்.)

எல்லாப் பொருள்களிலும் நிறைந்துள்ள பகவானை விளக்கமாகத் தெரிவிப்பவை. வியாபக மந்திரங்கள் எனப் படும். மற்றயவைகள் அவ்வியாபக மந்திரங்கள்.

"அவைதான் வியாபகங்கள் என்றும் அவ்வியாபகங்கள் என்றும் இரண்டு வர்க்கம்" (மு.முபடி)

வியாபக மந்திரங்கள் மூன்று இவை, மூன்றும் வியாபக மந்திரத்தைக் காட்டிலும் சிரேஷ்டங்கள்—உயர்ந்தவை.

"அவ்வியாபகங்களில், வியாபகங்கள் மூன்றும் சிரேஷ்டங்கள்" மு.மு படி (10)

இந்த வியாபக மந்திரங்களே, நாராயண, வாசுதேவ, விஷ்ணு என்பவையாம்.

நமக்கே பறை தரும் நாராயணன், இவை மூன்றிலும் உயர்ந்தது நாராயணபதம்; இதுவே பெரிய திருமந்திரம் எனப்படும்.

"இவை மூன்றிலும் வைத்துக் கொண்டு பெரிய திருமந்திரம் பிரதானம்." மு முபடி (11)

எனவே வேத வாய்த்தொழிலாளர்கள் வாழ் வில்லிபுத்தூர் மன் விட்டுச் சித்தன் தன் கோதையும்,

பாதகங்கள் தீர்க்கும் பரமன் அடிகாட்டும் திருப்பாவையைத் தொடங்கும் போதே அதன் சிகரமான-முதல் பாசுரமான ''மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளாய்'' என்னும் பாடலில் ''நாராயணனே! நமக்கே பறை தருவான்!'' என்று பெரிய திருமந்திர நாம சங்கீர்த்தனம் செய்து கொண்டே பாரோர் புகழப் பாடி ஆரம்பித்தருள்கிறாள்!

நாராயண நாமமும் மும்முறை முழக்கம். முக்கியமான தையும் உயரியதையும் ஒன்றுக்கு மூன்று முறை சொல்வதும், சேவிப்பதும், உச்சரிப்பதும் மரபு.

எனவே, வேதம் அனைத்துக்கும் வித்தாகும். கோதைத் தமிழான திருப்பாவையிலே பெரிய திருமந்திரமான நாராயண நாம சங்கீர்த்தனத்தை மும்முறை ஓதுகிறாள்.

பண்ணுவது நான் மறையோர் புதுவை மன்னன் பட்டர் பிரான் கோதை ஸ்ரீ ஆண்டாளும்! நாராயணன் மூர்த்தி! ''நாராயணனே நமக்கே பறை தருவானா?'' என்ற ஐயத்தைப் போக்க ''நாராயணனே நமக்கேபறைதருவான்'' என்பதை உறுதிப் படுத்துகிறாள்.

''கீசு கீசு என்று ஆனைச் சாத்தன்'' பாசுரத்திலே, முதல்பாசுரமான ''மார்கழித்திங்களில்''குறிப்பிட்ட வெறும் நாராயணனை நாராயணன் மூர்த்தி எனமங்காளாசாசனம் செய்தருள்கிறாள், போகத்தில் வழவாத புதுவையர் கோன் கோதை!

இதனால் நாராயணனுக்குப் பரத்துவம் காட்டியும் அவனே மூர்த்தி என்பதனைச் சுட்டியும் இவள் இப்படிப் பேசின பேச்சரவம் கேட்டிலர்கள், பேய்ப் பெண்களே.

நாராயணனே மூர்த்தி என்பதை ''கீசு கீசு'' என்னும் ஆனைச்சாத்தன் என்னும் மத்தினால் ஓசைப்படுத்தும் தயிரரவம் எழுப்புவதும் உயிர் எதிர் ஒலிக்கும்!

அஃறிணை ஆனைச்சாத்தன்; உயர்திணை ஆயர் மக்கள்; இருவரும் நாராயணனே மூர்த்தி எனக்கூறு கின்றனர்!

பாவமே செய்து பாவியான், ஜீவாத்மாவான நமக்கும் பறை தருவதற்கு நாராயண மூர்த்தியும் இசைந்தருள்வானா? என்னும் ஐயத்தைப் போக்குகிறாள், அடுத்தபடியாக!

நோற்றுச் சுவர்க்கம் புகும் பாசுரத்திலே, ஜீவாத்மா வான பாஞ்சசன்னியத்தைப் பற்ப நாபனோடும், வாய்ந்த பெருஞ் சுற்றமாக்கிய வண் புதுவை ஏய்ந்த புகழ்ப் பட்டர் பிரான் கோதை; நோற்றுச் சுவர்க்கம் பாசுரம் சேவிக்க, மொய் கழற்கு அன்பு செய்யும் அடியாரை உகக்கவே முடியினில் துளபம் வைத்தாய்! என்று விப்ர நாராயணரைப் போல விளக்கியருளும் முகத்தாலே,

மார்கழித் திங்கள் பாசுர நாராயணனை, கீசு கீசு பாசுர நாராயணன் மூர்த்தியை, இந்நோற்றச் சுவர்க்கப் பாசுரத்திலே, நாராயணன் என்றும் முடி நாராயணன் என்றும் துழாய் முடி நாராயணன் என்றும்,நாற்றத் துழாய் முடி நாராயணன் என்றும்அலங்கரித்து மகிழ்ந்தருள்கிறாள், நம் சூடிக்கொடுத்த சுடர்க் கொடி! நாராயண மந்திரத்தை மூன்றாம் முறையாக ஒலிக்கும் பாசுரம்: நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய்! ஸ்ரீ வில்லிப்புத்தூரை ஆய்ப்பாடியாகவும் எண்ணி இடை நடையும், இடை முடியும். இடைப் பேச்சும், முடை நாற்றமும் உடைய நாங்கள் உன்னோடு கூடி இருந்து குளிர அல்லவா விரும்பு கிறோம். அப்படியானால், பரம பதத்திலே பிரகாசிக்கும் பரத்வ குணத்தை வெளியிடுவதான நாராயணநாமத்தாலே உன்னை விளித்ததால் நாங்கள் உன்னுடன் கூடாதவர்கள் ஆவோம்!'

உன்றன்னைப் பாடிக் கூடி மகிழ வேண்டுமானால் "கூடாரை வெல்லும் சீர்க் கோவிந்தா!" என்றல்லவாஏத்த வேண்டும் என்கிறாள்! "நல்ல என் தோழி! அவர் நாகணை

மிசை நம்பரர் செல்வர் பெரியர் ஆயினும் சிறுமானிடர் நாமும் அவருடன் குதூகலத்துடன் கூடி வாழலாம்'', என்பதைக் கொப்பி அடித்துப் பாடி ஆடுகிறாள் ஸ்ரீ ஆண்டாள். தன் பரம எளிமைக் குணத்தைவெளியிடவே மாயன், வட மதுரை மைந்தனாகத் தோன்றி அவதரித்து, தூயப்பெரு நீர் யமுனைத்துறைவனாகத்தளர் நடையிட்டு, ஆயர் குலத்தில் அணிவிளக்காகத் தோன்றி, கண்ணினுள் சிறுத் தாம்பினால் கட்டுண்ணப் பண்ணியவனை, தாயைக் குடல் விளக்கம் செய்த தாமோதரனை எப்படிப் பாட வேண்டும்?

இருள் தருமா ஞாலமான பூமண்டலத்தில் அல்லவா இறைவனுடைய கல்யாண குணங்கள் இருட்டறையில் விளக்குப் போலச் சுடர்விடுகின்றன. அந்த சௌலப்ய குணங்களைக் கொப்பியடித்துப் பாட வேண்டுமே!

| | |
|---|---|
| கூடாரை வெல்லும் சீர்க் | கோவிந்தா! |
| உன் தன்னைப் பாடிப் பறை கொண்டு | கோவிந்தா! |
| யாம் பெறும் சம்மானம் | கோவிந்தா! |
| நாடு புகழும் | கோவிந்தா! |
| பரிசினால் நன்றாக | கோவிந்தா! |
| சூடகமே தோள்வளையே | கோவிந்தா! |
| தோட்டே செவிப்பூவே | கோவிந்தா! |
| பாடகமே என்றனைய | கோவிந்தா! |
| பல்கலனும் யாமணிவோம் | கோவிந்தா! |
| ஆடை உடுப்போம் | கோவிந்தா! |
| அதன் பின்னே பாற்சோறு | கோவிந்தா! |
| மூட நெய் பெய்து | கோவிந்தா! |
| முழங்கை வழிவார | கோவிந்தா! |
| கூடி இருந்து | கோவிந்தா! |
| குளிர்ந்தேலோர் எம்பாவாய் | கோவிந்தா! |

சர்வத்ர கோவிந்த நாம சங்கீர்த்தனம்!

குவலயம் பரவியது கோவிந்த நாமம்!

குறைவு ஒன்றும் இல்லாத கோவிந்தன்! இதோ அந்த இரண்டாம் கோவிந்த கோஷ்டிப் பாடல். பாசுரம் சேவிக்க:

நாராயண நாம சங்கீர்த்தனத்தை மும்முறை முழங்கி யருளியது போலவே கோவிந்த நாம சங்கீர்த்தனத்தையும் மும்முறைச் சேவித் தருள்கிறாள்-

தம்மை உகப்பாரைத் தாம் உகப்பர் என்று காட்டும் வேயர் புகழ் வில்லிபுத்தூர்க் கோன் கோதை! கறவைகள் பின் சென்று கானம் சேர்ந்து உண்ணும் நாங்கள் உன் தன்னைப் பிறவி பெறுந்தனைப்புண்ணியம் யாமுடையோம் என்று உணர்ந்து கொள்ளும் புத்தித் திறம் இல்லாத அறிவொன்றும் இல்லாத ஆய்க்குலத்தவர்களே! இனியும் உன் தன்னை அச் சிறு பேரான நாராயண நாமத்தால் அழையாமல்,'குறைவொன்று மில்லாத கோவிந்தா!' என்று கோவிந்த மகுடாபிஷேகம் சூட்டி உன் தன்னை எங்கள் இறைவனாகவே மன்னனாகவே ஏற்கிறோம். சிறியருளாதே! என்று சிரம் தாழ்த்தி வேண்டுகிறாள்.

வேட்கையுற்று மிக விரும்பும் வில்லைத் தொலைத்த புருவத்தாள் வில்லி புதுவை நகர் நம்பி விட்டு சித்தன் வியன் கோதை!

குற்றேவல்—பறைதரும் கோவிந்தன். 'தொடர்ச்சியாக வும், மூன்றாவது முறையாகவும் கோவிந்த நாமத்தைச் சேவிக்கும் அடுத்த பாசுரம்,

சிற்றஞ் சிறு காலை, வந்து உன்னைச் சேவித்து உன்,<br>
பொற்றாமரை அடியே போற்றும் பொருள் கேளாய்<br>
இவற்றைப் பறை கொள்வான் அன்றுகாண் கோவிந்தா!<br>
எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன் தன்னோடு<br>
உற்றோமே ஆவோம்! உனக்கே நாம் ஆட்செய்வோம்!<br>
மற்றை நங்காமங்கள் மாற்று!

இவ்விதமாக உனது எளிமைக் குண ஞானத்தை அடைந்து எங்களுக்கு மறுமலர்ச்சி வாழ்விலே ஏற்பட்டுள்ளது இது எமது கடமை உனது கடமை என ஒப்பந்தம் செய்து கொண்டு உய்யும் ஆறு காட்டியருள்கிறாள். பரமன் அடி காட்டும் திருப்பாவையிலே உள்ள இச்சரம் சுலோகப் பாசுரத்திலே! தத்துவம், இதம், புருஷார்த்தம் மதத்தின் மூன்று அம்சங்கள்! ஒரு மதம் பூர்ணமாக மிளிர தத்துவம், இதம், புருஷார்த்தம் தேவை என்று உபதேசத்திலே மூன்று அம்சங்கள் வேண்டும்.

தத்துவம் சிறந்த உண்மை; இதுவே அனைத்திற்கும் அடிப்படை.

தத்துவம்—கோவிந்தன். ''கூடாரை வெல்லும் சீர்க் கோவிந்தன்'' கூடாதவர்களாக இருப்பினும் அவர்களை வெல்ல முடியாத கோவிந்தனாக இருப்பினும் தத்துவமாகாது.

அவன் தத்துவத்தைத் தெரிந்தவர்கள் கூடாதவர்களாக இருக்க முடியாது,

தத்துவமே பரதத்துவம், தத்துவம்; அனைத்தையும் ஆளும் தெய்வம்.

'மன்மதா! எனக்கு உதவாவிடில் உன்னைத் தெய்வமென்று வணங்கேன்:-

''தத்துவமிலி என்று நெஞ்செரிந்து வாசகத்து அழித்து உன்னை வைதிடாமே!'' (நாச்சியார் திருமொழி)

**கோவிந்த நாம சங்கீர்த்தனமே இதம்**

இதம் ; தத்துவத்தைத் தெரிந்த பிறகு அதை அடைய வேண்டிய வழி. அடைய வேண்டியதாக இருக்க வேணும். அந்தத் தத்துவம் அடையும் வழியும் சுலப்மாக இருக்க வேணும். நாம சங்கீர்த்தனமே அடையும் வழி; அதிலும் எளிமைக் குணத்தை வெளிப்படுத்தும் சங்கீர்த்தனமே சிறந்தது!

"சிறுபேர் அழைத்தனவும் சீறியருளாதே!
குறைவொன்று மில்லாத கோவிந்தா!"

என்று உன் திருநாமங்களைப் பாடுவதே இதம். நாம சங்கீர்த்தனமே இதம்!

கோவிந்தன் திருவடிகளில் வழுவு இல்லா அடிமை செய்வதே புருஷார்த்தம்!

தத்துவத்தை உணர்ந்து கொண்டு அந்தத் தத்துவத்தை அடையும் வழியையும் கடைப்பிடித்தால் நாம் அடைவது புருஷார்த்தம்.

புருஷார்த்தமே வாழ்க்கையின் லட்சியம்; வேறு ஒன்றும் அதற்கு ஈடாகாது!

நாம் அடைய வேண்டிய லட்சியம்,
"எற்றைக்கும் ஏழ் ஏழ் பிறவிக்கும் உன்தன்னோடு,
உற்றோமே ஆவோம்! உனக்கே நாம்
ஆட்செய்வோம்!"

வேயர் தங்கள் குலத்துத்துதித்த விட்டுச்சித்தர் மெய்ம்மைப் பெரு வார்த்தை! "நமோ நாராயணா என்று, பல்லாண்டும் பரமாத்மனைச் சூழ்ந்து இருந்து ஏத்துவர் பல்லாண்டே!"

இந்நிலை நமக்கு ஏற்படப் பிரார்த்திப்போமாக!

எனவே, கோவிந்த நாம சங்கீர்த்தனத்தை மும்முறை முழக்கித் தத்துவம், இதம், புருஷார்த்தத்தை வெளியிட்டருளினாள்.

### முப்பெரும் உண்மை விளக்கம்!

ஸ்ரீவைணவ சமயத்தின் தலையாய கொள்கை தத்துவத் திரயம், அதாவது : பிரபஞ்சத்திலுள்ள அனைத்தும் மூன்று பிரிவுகளுள் அடங்கியது. அசித் : உயிரற்றவை, சித் : உயிருள்ளவை ஆத்மா, ஈஸ்வரன் : ரட்சிக்கும் இறைவன்

பெரிய திருமந்திரமான நாராயண மந்திரத்தை மும்முறை திருப்பாவையில் ஓதியபோது ஸ்ரீ ஆண்டாள் இந்தத் தத்துவத்திரய ஞானத்தை உபதேசித்தருள்கிறாள்.

ஈஸ்வரனைக் குறிப்பிடுவது, நாற்றத் துழாய் முடி நாராயணன்.

(பிராட்டியினுடைய) புருஷகார பலத்தாலே (பெருமாளுடைய) சுவாதந்தரியம் தலை சாய்ந்தால் தலை எடுக்கும் குணங்களைச் சொல்லுகிறது நாராயண பதம்.

அவையாவன, வாத்சல்யமும், சுவாமித்துவமும் சௌசீல்யமும் சௌலப்யமும்! இவை சேதனன், பகவானைப் பற்றுதற்கு உதவி செய்பவை.

ஞானமும், சக்தியும் : பகவானைப் பற்றிய பிறகு சேதனன் தொழில்பட உதவுபவை.

முதல் நான்கு கல்யாண குணங்களையும் நம்மாழ்வார் ஒரே பாடலில் அமைத்து அருள்கிறார்.

அகல கில்லேன் இறையும் என்று
அலர் மேல் மங்கை உறைமார்பா!
நிகரில் புகழாய்! உலகம் மூன்று
உடையாய்! என்னை ஆள்வானே!
நிகரில் அமரர் முனிக்கணங்கள்
விரும்பும் திருவேங் கடத்தானே!
புகல் ஒன்று இல்லா அடியேன் உன்
அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே!

வாத்சல்யம் : நிகரில் புகழாய் !
சுவாமித்துவம் : உலகம் மூன்றுடையாய் !
சௌசீல்யம் : என்னை ஆள்வானே !
சௌலப்யம் ; திருவேங்கடத்தானே !

நான்கு குணங்களை நன்கு உடையவனே ஈஸ்வரன்,

ஸ்ரீ ஆண்டாளின் அமுத வாக்கு ! நாராயணன் ! வாத்சல்யம் : (பரிவு) அன்புடன் எல்லா நாரங்களிலும் தங்கி அவைகளை ஆட்கொள்ளுபவன், எல்லாப் பொருள் களும் தன்னை வந்து அடையும் படியாக எழுந்தருளி யிருப்பவன்.

முடி நாராயணன்:- சுவாமித்துவம்: எல்லாப் பொருள் களையும் உடையவன் தானே என்பதைத் திருமுடி தரித்து வெளியிட்டருள்கிறான். துழாய் முடி நாராயணன்:- சௌசில்யம் : (சமத்துவம்) சம இனத்தவனாக உயர்ந்தவன் தாழ்ந்தவனோடு கலத்தலாகிய குணம்: திருத்துழாயை எடுத்து பத்தன் உரிமையோடு பகவானின் முடிமுதல் அடிவரை அணியும் படியாகத் தன்னைத் தந்தருள்பவன்.

நாற்ற (வாசனை) த் துழாய் முடி நாராயணன்:-
சௌலப்பியம் : எளிமை.

திருத்துழாயில் கமழும் மணத்தாலே நம்மை அவன் பக்கம் வசீகரிக்கும் எளிமை உடையவன்.

பெரிய திருமந்திரமான நாராயண நாமசங்கீர்த்தனத் தில் ஈடுபட்டு முப்பொருள் விளக்கும் திருப்பாவை, வேதம் அனைத்திற்கும் வித்தே!

ஆத்மா (அகம்) வின் லட்சணம் :
"ஞானம் ஆனந்தம் :" இவை புறத் தோற்றமே!
அடிமைத்தொழில் : இதுவே உண்மை நிலை
தாஸ்யம் ; சேஷத்வம் :

ஸ்ரீ வசண பூஷணத்திலே பிள்ளை லோகாசாரியர் திருவாக்கு. 'அகம்' அர்த்தத்திற்கு ஞாநாநந்தங்கள் தடஸ்தம் என்னும் படி தாஸ்யமிறே அந்தரங்க நிருபகம்!

நாராயண சப்தத்தை வெளியிட்ட இதற்கு நடு பாசுரமான,

"கீசு கீசு பாசுரத்தில்" "நாராயணன் மூர்த்தி"!

சித் : ஆத்மா, நாயகப் பெண் பிள்ளாய்...ஜீவாத்மாவை நோக்கியே இப்பாசுரம் உள்ளது.

ஞானம்—ஞானம் அடைந்த பிறகு மற்றவர்களை விட உயரிய நிலை: ஞான நாயக திருமழிசையார்—தராசு பெண் : ஆனந்தம், பரமாத்மா ஜீவாத்மா— சேர்க்கையிலே உண்டாகும் மகிழ்ச்சி பராங்குச பரகால நாயகி அரங்க நாயகியைப் போலாதல். பிள்ளையாய்! தாஸ்யத்வம்—அடங்கி வாழ்தல் அடிமைத் தொழில்,

நாராயண சப்தத்தை வெளியிட்ட முதல் பாசுரம் : ''மார்கழித் திங்கள்''; அசித் : உயிரற்ற பொருள்கள்; வையகம்;

தூணும் துரும்பும் . அசித்

தூணிலும் இருப்பான், துரும்பிலும் இருப்பான். திருமழிசைப் பிரான், திருச் சந்தவிருத்தம்.

பூ நிலாய ஐந்துமாய்! புனல் கண் நின்ற நான்குமாய்!
தீ நிலாய மூன்றுமாய்! சிறந்த கால் இரண்டுமாய்!
மீ நிலாயது ஒன்றுமாகி வேறு வேறு தன்மையாய்!
நீ நிலாய வண்ணம் நின்னை யார் நினைக்க வல்லரே!
உயிரற்ற அசித் தத்துவம்.

''மார்கழித் திங்கள்'' பாடலிலே விவரிக்கப்படுகிறது.

அசித் : பஞ்ச பூதங்கள்!

மண்ணாய் நீர் எரிகால் மஞ்சு உலாவும் ஆகாசமுமாம்!
கோள்கள்! நாள்கள்! நீர்! நிலம்!

சூரியனும் சந்திரனும் கோள்கள், கோள்களால் ஏற்படுவன நாள்கள்.

மதி : கோள் (1) தீ

நிறைந்த நன்னாள் : நாள்

மார்கழித் திங்கள் ; மாதம்: கால அளவு,

நீராட : (2) நீர் என்பதால் அது பரவும் (3) நிலம், அதன் மேல் உள்ள (4) ஆகாயம், அதனில் வீசும் (5) காற்று ஆகிய பஞ்ச பூதங்கள் மிளிரும், சீர் மல்கும் ஆய்ப்பாடி!

எனவே, நாராயண நாம சங்கீர்த்தனத்தாலே தத்துவத் திரய ஞானத்தை அருளினாள் ஸ்ரீ ஆண்டாள்!

**ஆண்டாளும், ஐம்பொருளும்;** (திருப்பாவையில் அர்த்த பஞ்சகம் : ஐம்பொருள் உண்மை அருளும் ஆண்டாள்)

1. மிக்க இறை நிலை 2. மெய்யாம் உயிர்நிலை 3. தக்க நெறி 4. தடையாகித் தொக்கியலும் ஊழ்வினை 5. வாழ் வினையும் ஓதும்

மிக்க இறை நிலை - இறை நிலை, மிக்க இறை நிலை

ஸ்ரீ வைணவம் ஏற்றுள்ள இறையை விட மிக்க இறை கிடையாது. விஷ்ணுவே மிக்க இறை; அவனுடைய நிலை பரத்வம்.

அஃறிணை விலங்கு, மரம் முதலியன, உயர்திணை மக்கள், தேவர். மக்களை விட தேவர் உயர்ந்தவர்; தேவரை விட தேவாதி தேவன் உயர்ந்தவன் அவனையே நாம் சேவிக்க வேண்டும். அவனே நம்குறை களை ஆராய்ந்து அருள்வான்.

இறைவன் நிலை யாது?

ரட்சகத் தன்மையே! அதாவது காப்பாற்றியருளலே இக்கருத்துக்களை மிக்க இறையின் நிலையைத் தெளிவாகத் தெரிவித்தருள்கிறாள் ஆண்டாள்.

தேவாதி தேவனைச் சென்று நாம் சேவித்தால்,
ஆ! ஆ! என்று ஆராய்ந்து அருள்வான்—
அருளாளனே!

அர்ச்சையிலே வரதனே தன்னைக் கடவுள் என்றான். இனியும் சந்தேகமா? வரதன் வார்த்தை "அஹம் மேவ

பரம் தத்வம்'' வடிவழகிய நம்மி நாதர் வார்த்தை ''செப்பு கின்ற பரத்வம்யானே எனச் செப்புதி! வேறு ஒப்பினைதாய் முடிபின்வாய்ந்த இருக்கிறது.

**மெய்யாம் உயிர் நிலை.**

உயிர் நிலைமை மிக்க உயிர் நிலை எனலாகாது. உயிர்த்தத்துவத்தை விட மிக்கது இறை நிலை. தரிசனமும் பேதம் என்றே உரைத்திடுக! ஆயினும் உயிர் நிலை, மெய்யாம் உயிர்நிலை, அதாவது இறைவன் எங்ஙனம் நித்தியமோ, சத்தியமோ அவ்விதமே (அங்ஙனமே) உயிரும் நித்தியம், சத்தியம், அழியாதது, இறையும், உயிரும். சேர்ந்தே வாழும், தொழுதே வாழும் அவ்விதம் வாழும் உயிர்த் தத்துவத்தைக் குறிப்பது. நந்த கோபாலனும், யசோதையுமே ஆகும். உயிர்த்தத்துவம் எப்படி யிருக்க வேணும் அடியவரை ஆதரித்து அவர்கட்கு அறஞ் செய்து வாழ வேணும்.

அடுத்தபடி இறைவனே கதி! என்று அபலையாக இருக்க வேணும்.

இந்த அபலை நிலையை அநுஷ்டிக்கும் ஆத்மாக்களுக்கு எல்லாம் கொழுந்தாகவும், குல விளக்காகவும் விளங்க வேணும். இந்தப் பெருமைகளை குணமாகக் கொண்டு திகழ வேண்டும்!

அம்பரமே! தண்ணீரே! சோறே! அறம் செய்யும்
எம்பெருமான் நந்தகோபாலன்!
கொம்பனார்க்கு எல்லாம் கொழுந்தே! குல விளக்கே
எம்பெருமாட்டி! யசோதாய்!

தக்க நெறி:—தக்க நெறி அதாவது அடையத் தக்க நெறி அதாவது இறைவனை அடையத் தகுந்த நெறி. ஒப்பிலாத உபாயமதுவும் பிரபத்தி என்றே சாற்றிடுக!

சரணாகதி மார்க்கமே சிறந்தது! சரணாகதியையும் பிராட்டியை முன்னிட்டுச் செய்தல் வேண்டும். பெருமாளும்

பிராட்டியுமான சேர்த்தியிலே சரணாகதி செய்வதே சாலச் சிறந்தது.

சேர்த்தியிலே நம்மாழ்வாரின் சரணாகதி:—

அகல கில்லேன் இறையும் என்று
அலர்மேல் மங்கை உறை மார்பா!
நிகரில் புகழாய்! உலகம் மூன்று
உடையாய்! என்னை ஆள்வானே!
நிகரில் அமரர் முனிக் கணங்கள்
விரும்பும் திருவேங்கடத்தானே!
புகல் ஒன்று இல்லா அடியேன் உன்
அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேன்!

சேர்த்தியில் ஆண்டாள் செய்யும் சரணாகதி பெருமாளிடம்:-

முப்பத்து மூவர் அமரர்க்கும்
முன் சென்று கப்பம் தவிர்க்கும் கலியே
செப்பம் உடையாய்! திறலுடையாய்
செற்றார்க்கு வெப்பம்கொடுக்கும் விமலா!

பிராட்டியிடம்:- செப்பன்ன மென்முலை செவ்வாய் சிறு மருங்குல் நப்பின்னை! நங்காய்! திருவே! பிராட்டிமூலம் பெருமாளிடம் பிரார்த்தனை—வேண்டுகோள்! இப்போதே எம்மை நீராட்டேல், இந்தக் கணத்திலேயே சேரத்துடிக்கும் விரகத்தால் வேதனைப்படும் எங்களைப் பெருமாளுடன் சேர்ப்பாயாக!

**தடையாகித் தொக்கியலும் ஊழ்வினையும்:**

இறைவனை அடைவதற்குத் தடையாகி முன் செய்த தீவினையாலே திரண்டுள்ளதும், இப்பிறவியிலே (நம்மை வருத்தும் விதிவசமும்) நாம் புரியும் தீவினைகளும், இவைகள் மாற்றார் வடிவிலே உருபு கொண்டு செயல்படுகின்றன. இவர்கள் வலி தொலையும் படியும் இவர்கள் உன் அடிபணியும் படியும் இறைவன் அருள வேண்டுமெனத்

துதிக்கும் ஸ்ரீ ஆண்டாள் தடையாகித் தொக்கியலும் ஊழ்வினையைக் குறிக்கின்றாள்.

பாசுரத்தைச் சேவிப்போம்!

''மாற்றார் உனக்கு வலி தொலைந்து உன் வாசற்கண்
ஆற்றாது வந்து உன் அடிபணியுமாபோலே''

**வாழ்வினை வைணவர் தம்பேறு:** தொக்கியலும் ஊழ்வினையின் நடை அகலும்: அற்றது பற்று எனில் உற்றது வீடு! நீர் நுமது என்றிவை வேர் முதல் மாய்த்து இறை சேர்மின் உயிர்க்கு அதன் நேர்நிறை இல்லை. இந்த நிலையில் ஏற்படும் வாழ்வு, பேறு—புருஷார்த்தத்தின் சிகரம்;

ஸ்ரீ ஆண்டாள் இந்த வாழ்வினையை விவரிக்கின்றார்.

**திருத்தக்க செல்வம்:** லட்சுமி கடாட்சமும், சேவகமும் பெருமாளுக்கும் குற்றேவலும் இதனால் ஏற்படுவது; அவன் கல்யாண குணங்களைப் பாடித் திருநாம சங்கீர்த்தனம் செய்து, அதனால் எல்லா வருத்தமும் தீர்ந்து மகிழ்கிறோம்!

''திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம் பாடி
வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்தேலோர் எம்பாவாய்.'
''பாதகங்கள் தீர்க்கும் பரமன் அடிகாட்டும்
வேதம் அனைத்துக்கும் வித்தாகும் கோதை தமிழ்''
வாழ்க!

### அர்ச்சையும் ஆண்டாளும்—அருளாளனும் ஆண்டாளும்

இறைவனை வழிபடுவதற்குச் சிறந்த வழி திரு நாம சங்கீர்த்தனம் இறைவனிடம் சரணாகதி செய்வதற்குச் சுலபமான வழி திருநாம சங்கீர்த்தனம். நாம சங்கீர்த்தனம், கனிபோல, பழம் போல, பழுத்த கனிபோல, இந்த பழுத்த கனி நழுவிப் பாலில் விழுந்தால், அது நாம் அடைந்த பாக்கியம் தான்!

திருநாம சங்கீர்த்தனம் பழம் என்றால் அர்ச்சாவதார வழிபாடு பால் தான்!

அர்ச்சை : உருவத்தில் வழிபடும் நிலை.

அர்ச்சை நிலையிலே திருக்கோயில்கொண்டு எழுந்தருளியுள்ள இறைவனின் நாம சங்கீர்த்தனம் செய்வது பழம் நழுவிப் பாலில் விழுந்த பாக்கியம் தான்.

திருப்பாவையிலே நாம சங்கீர்த்தனத்தில் ஈடுபட்ட ஸ்ரீ ஆண்டாள் அர்ச்சையிலே உள்ள எம்பெருமானின் நாம சங்கீர்த்தனத்தில், ஈடுபட ஆழங்கால்பட ஆரம்பித்தாள்.

அர்ச்சாவதார வழிபாட்டின் உயர்வைக் காட்டியருளியவர்கள், ஆழ்வார்கள்.

பிள்ளை லோகாச்சாரியார் ஸ்ரீ வைணவ பூஷணத்திலே அருள்வது:

''ஆழ்வார்கள் பலவிடங்களிலும் பிரபத்திபண்ணிற்றும் அர்ச்சாவதாரத்திலே'', மற்றைய நிலைகளில் பிரபத்தி செய்தது ஒவ்வோர் இடங்களில் இதனையே மற்றையநிலைகளிலே என்றது பரத்துவம், வியூகம், விபவம், அந்தர்யாமித்வம் என்னும் நிலைகளிலே என்றபடி காரணம்.

''பூகதஜலம் போலே அந்தர்யாமித்வம்
(பூமிக்குள் இருக்கும் தண்ணீரைப் போலே)!
ஆவரண ஜலம் போலே பரத்வம்
(அண்டத்திற்குப் புறம்பே கிடக்கும் நீர்)
பாற்கடல் போலே வியூகம்
(சென்று அடையாதபடி உள்ளது.)
பெருக்காறு போலே விபவம்
(அந்தக் காலத்தவர்களே பருகலாம்)

அதிலே (பெருகாற்றிலே) தேங்கின மடுக்கள் போலே அர்ச்சாவதாரம்.

''மார்கழி நீராடும் முகத்தாலே தேங்கின மடுக்களாம் அர்ச்சாவதாரத்திலே நீராடுகிறாள் ஆண்டாள்!

ஸ்ரீ ஆண்டாள்; நாச்சியார் திருமொழியிலே வேங்கடத்துக் கோவிந்தன் மீதுள்ள தன் தாபத்தை— விரக தாபத்தைத் தெரிவிக்கின்றாள்.

''ஒளி (1) வண்ணம் (2) வளை (3) சிந்தை (4)
உறக்கத்தோடு (5)—இவை எல்லாம்
எளிமையால் இட்டென்னை
ஈடழியப் போயினவால்
குளிர் அருவி வேங்கடத்து என்
கோவிந்தன் குணம் பாடி
அளியத்த மேகங்காள்!
ஆவி காத்து இருப்பேனே!

1, 2, 3, 4, 5 எல்லாம் போய்விட்டன! உயிர் மாத்திரம் போகவில்லை; காரணம், குளிர் அருவி வேங்கடத்து என் கோவிந்தன் குணம் பாடிக் கொண்டிருக்கிறதில் தான்! மூன்று வியாபக மந்திரங்களில் ஒன்றானதும் குளிர் அருவி வேங்கடத்தில் அர்ச்சை நிலையிலே

''சென்னியோங்கு தன் திருவேங்கடத்தில் உலகு தன்னை வாழ நின்ற நம்பியாக எழுந்தருளியுள்ள கோவிந்தனது திருநாமத்தை பாலும் பழமுமாக அனுபவிக்கிறாள். மூன்றுமுறை அனுபவித்தாள். இடையில் வேறு நாமத்தை உச்சரியாமல்!

கூடாரை வெல்லும் சீர்க் கோவிந்தா!(27)
குறைவு ஒன்றும் இல்லாத கோவிந்தா!(28)
கோவிந்தா (29)
எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு
உற்றோமே ஆவோம்!
உனக்கே நாம் ஆட்செய்வோம்!

(எண்கள்—திருப்பாவை வரிசை)

ஸ்ரீ ஆண்டாள் திருவவதாரம் ஸ்ரீ வில்லிப்புத்தூரிலே! ஸ்ரீவில்லிப்புத்தூரில் திருக்கோயில் கொண்டு அர்ச்சை நிலையில் சேவை சாதிக்கின்றவன் வட பத்ர சாமி!

(வடம்– ஆலமரம்; பத்ரம்—இலை;
சாயி—பள்ளி கொண்டிருப்பவன்.)

இந்த ஆலின் இலையானுக்கு மங்களாசாசனம்:-

'மாலே மணிவண்ணா! மார்கழி நீராடுவான்
மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்
ஞாலத்தை எல்லாம் நடுங்க முரல்வன
பாலன்ன வண்ணத்துன் பாஞ்ச சன்னியமே
போல்வன சங்கங்கள் போய்ப்பாடு உடையனவே
சாலப் பெரும் பறையே! பல்லாண்டு இசைப்பாரே
கோலவிளக்கே! கொடியே! விதானமே!
ஆலின் இலையாய்! அருளேலோர்எம்பாவாய்!''

ஸ்ரீ ஆண்டாளுக்கு, பிறந்த ஊர் : ஸ்ரீ வில்லிப்புத்தூர்
புகுந்த ஊர் : திருவரங்கம்தான்.

புகுந்த ஊர்ப் பெருமாளின், நம்பெருமாளின் புறப்பாடே ஒரு தனி அழகு! மலைக்குகையிலிருந்து புறப்பாடாகும் சிங்கத்தின் சேவை தான் திருவரங்கம் கோயில் நின்று புறப்படுவதும்!

"மாரி மலை முழைஞ்சில் மன்னிக் கிடந்து உறங்கும்,
சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீ விழித்து
வேர் மயிர் பொங்க எப்பாடும் பேர்ந்து உதறி
மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப்
போதருமாபோலே நீ பூவைப் பூவண்ணா உன்
கோயில் நின்று இங்ஙனே போந்தருளிகோப்புடைய
சீரிய சிங்காசனத்திருந்து, யாம் வந்த
காரியம் ஆராய்ந்தருளேலோர் எம்பாவாய்!''

மூவாயிரம் படியில் ஸ்ரீ பெரிய வாச்சான் பிள்ளை வியாக்கியானம் இதுவே "நமக்கு இவையெல்லாம் நம் பெருமாள் நடையழகிலே காணலாம்''

"திருவரங்கன் செல்வம் முற்றும் திருத்தி
வைத்தான் வாழியே''

என்று போற்றப்படுகிற நம் பெரும்பூதூர் மாமுனிதிருநாரா யணபுரத்துச் செல்வதையே தில்லியிலிருந்து தேடிக் கொணர்ந்தவர். 700 சீயர்களும் 12,000 ஸ்ரீ வைணவர் களும் புடைசூழ பரத நாடெங்கும் புறப்பாடு கண்டருளி யவர், இதனாலேயே, ''பல்கலையோர் தாம் மண்வந்த இராமாநுசன்!'' என்று பாடப் பெற்றவர். திருவரங்கத்து அமுதனாரால் முதல் பாசுரத்திலேயே இராமாநுசர் நூற் றந்தாதியிலே இவர்,

''வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளல் பெரும் பசு! கணைத்து இளம் கற்றெருமை கன்றுக்கு இரங்கி நினைத்து முலைவழியே நின்று பால்சோர நனைத்து இல்லம் சேறாக் கும், நற்செல்வன்.'' என்று பேசப்படுவார். இவ்விதப் புகழ் படைத்த எதிராசரின் செல்வப் பிள்ளைக்கு மங்களா சாசனம்:-

''ஏற்ற கலங்கள் எதிர் பொங்கி மீதளிப்ப
மாற்றாதே பால் சொரியும் வள்ளல் பெரும் பசுக்கள்
ஆற்றப்படைத்தான் (எதிராசர்)
மகனே (செல்வப்பிள்ளை)''!

இது சுத்த சத்வம் தொட்டையாச்சாரியரின் சுபாவ தேச வியாக்கியானம் இப்பாட்டிற்கு!

''உபதேச பாத்ர பூதரான சிஷ்யர்கள் ஆச்சாரியோப தேசத்தாலே,ஞானமானது பொங்கி வழியும்படியாக மாறா மல் பால் போலே, போக்கியமான ஞானத்தை உபதேசியா நிற்குமவர்களாய் பகவத் குணானு பவத்தாலே பரிபுஷ்ட ரான சிஷ்யர்களை அசங்க்யாதமான ஆர்ஜித்துப் படைத்த ஆச்சாரியனுக்குப் புத்திர வ்தேயன் ஆனவனே!''

திருப்பாவையிலே திருநாராயணபுரம் செல்வப்பிள்ளை அடைந்த செல்வம் இது! ஆழ்வார்களுடன் ஆச்சாரிய சம்பந்தத்தாலே சிறப்படைந்தவை நான்கு ஸ்ரீவைணவ திவ்ய தேசங்கள்.

ஸ்ரீவைணவர்களுடைய தினசரி வழிபாட்டிற்கு உகப்பானவை இவையே:

கோயில் என்னும் திருவரங்கம், திருமலை என்னும் திருவேங்கடம், பெருமாள் கோயில் என்னும் காஞ்சி நகர் திருநாராயணபுரம் என்னும் யதுகிரி

''ஸ்ரீரங்க மங்கள நிதிம் கருணா நிவாசம்
ஸ்ரீவேங்கடாத்ரி சிகராலய காளமேகம்
ஸ்ரீஹஸ்தி சைல சிகரோஜ்வல பாரிஜாதம்
ஸ்ரீசம்நமாமி சிரசா யதுசைலதீபம்.''

என்று சுலோகம் துதிக்கின்றது!

பாரதம் பாடிய பெருந்தேவனாரும் இந்த நான்கு திவ்ய தேசப்பணிகளின் உயர்வைப் பாடுகிறார்.

''தேன் ஓங்கு சோலைத் திருவேங்கடம் என்றும்

வான் ஓங்கு சோலை மலை என்றும்—தான்ஓங்கு
தென் அரங்கம் என்றும் திருஅத்தி ஊர் என்றும்
சொன்னவர்க்கும் உண்டோ துயர்!
(சோலை என்பது யதுகிரியையும் குறிக்கும்)

ஆக திருப்பாவையில் ஸ்ரீ ஆண்டாள், கோயில், திருமலை, திருநாராயணபுரம் எம்பெருமான்களை மங்களாசாசனம் செய்தருளியதைச் சேவித்தோம்.

இனிபெருமாள் கோயில் என்றும் அத்தியூர் என்றும் கல் உயர்ந்த நெடுமதிள் சூழ் கச்சி என்றும் பிரசித்தமான திவ்ய தேசத்தில் எழுந்தருளியுள்ள எம்பெருமானை ஸ்ரீ ஆண்டாள் மங்களாசாசனம் செய்தருளியதைச் சேவிக்கலாம்.

திருமலைக் கோவிந்தனை மூன்று பாசுரங்களாலும், மற்ற திவ்ய தேசப் பெருமாள்களை ஒரு பாசுரத்தாலும் துதித்தாள்.

பெருமாள் கோவிலிலே திருக்கோயில் கொண்டு எழுந்தருளியுள்ளவன் அருளாளன்.

ஐந்து எழுத்துக்களைக் கொண்ட திருநாமம் உடைய அருளாளனை ஐந்து பாசுரங்களால் ஓதி மகிழ்விக்கிறாள். இந்த ஐந்து பாசுரங்களிலும் திருப்பாவையில் அமைய வேண்டிய ஐந்து முக்கியமான கருத்துக்களை வெளியிடு கிறாள் ஸ்ரீ ஆண்டாள்.

மார்கழிநீராட்டம் எதற்காக? தோழிகளை எழுப்பிப் போய் கண்ணனைக் கோபியருடன் சென்று சேவிக்கவே. கண்ணனை எதற்காகச் சேவிக்க வேண்டும்? நாம் அவனைச் சேவிப்பதே தாமதம், உடனே கண்ணன் நம் குறைகளைக் கேட்டு அப்படியா! இவ்வளவு குறைகளா! என்று பதறி அவைகளை ஆராய்ந்து நீக்கியருள்வான். இதுவே மார்கழி நீராட்டத்தின் நோக்கம்.

காஞ்சியில் எழுந்தருளியுள்ள வரதனுக்குத் தேவராசன் என்றும், தேவாதி தேவன் என்றும், தேவ தேவன் என்றும் ஆதி தேவன் என்றும் அருளாளன் என்றும் திரு நாமங்கள். இவனைக் கண்ணனாகப்பாவித்துப் பாடுகிறாள்.

''தேவாதி தேவனைச் சென்று நாம் சேவித்தால்
ஆ ஆவென்று ஆராய்ந்து அருளேலோர் எம்பாவாய்!''

இந்த இரு திருநாமங்களையும் ஒரே பாசுரத்தில் தேவாதி தேவன் என்ற ஒன்றைப் பெயர்ச் சொல்லாகவும் மற்ற அருளாளன் என்பதை வினைச் சொல்லாகவும் வைத்துப் பாடுகிறாள். 'கீழ்வானம்' பாசுரத்திலே,

திருப்பாவையில் மார்கழி நீராட்டமே காஞ்சி தேவாதி தேவனை அத்தியூர் அருளாளனைக் குறித்தே என ஏற்படுகிறது!

தேவாதி தேவன் கண்ணன் தானா?

ஆம்! என்று சாதிக்கின்றார் நம்மாழ்வார். திருவாய் மொழிமுதற்பத்து கடைசி பாசுரம் வானவர்களும்இவனைக் கண்ணனாகத் தொழுகிறார்கள்.

''மணியை வானவர் கண்ணனைத் தன்னதோர்
அணியை, தென்குருகூர்ச் சடகோபன் சொல்,
பணி செய் ஆயிரத்துள் இவை பத்துடன்
தணிவிலர் கற்பரேல் கல்வி வாயுமே!''

திருவாய்மொழித் தொடக்கப் பாசுரத்தில்,

''உயர்வற உயர் நலம் உடையவன் யவனவன்
மயர்வற மதிநலம் அருளினன் யவனவன்
அயர்வறு மமரர்கள் அதிபதியவனவன்
துயரறு சுடரடி தொழு தெழு என்மனனே''

என்று தேவாதி தேவனை 'அயர்வறும் அமரர்கள் அதிபதி எனக் குறிப்பிட்டு, முதல் பத்தின் சரம பாசுரத்தில் 'மணியை வானவர் கண்ணனை' என்றும் மறுபடியும் தேவாதி தேவனைக் குறிப்பதால் முதல் பத்துக்கு பிரதானமானவன் வரதன்.

'பிரதம சதகுக 'வீக்ஷ்ய வரதம்' என்று வேதாந்த ஆசிரியர் தமது திரமிடோபநிஷத் சாரத்தில் அருளிச் செய்து ஸ்ரீஹஸ்தி சைல சிகரோஜ்வல பாரிஜாதமான பேரருளாளப் பெருமானுடைய அநுபவம் ஆழ்வாருக்கு முதற்பத்திலேயே நிகழ்ந்ததாய்த் திருவுள்ளம் பற்றுவதாக முழுதுணர் நீர்மையினோராய பெரியோர் பணிக்கும்படி.

மாறன் பணித்த தமிழ் மறைக்கு ஆறங்கம் கூற அவதரித்த ஆலிநாடராம் திருமங்கை மன்னன் அருள்வது:

(பெரிய திருமொழி—2-9-2)

''கார் மன்னு நீள் விசும்பும் கடலும் சுடரும்
நிலனும் மலையும் தன் உந்தித்
தார் மன்னு தாமரைக் கண்ணனிடம்
தடமாமதிள் சூழ்ந்தழகாய கச்சி
தேர்மன்னு தென்னவனைமுனையில்
செருவில் திறல் வாட்டிய திண்சிலையோன்
பார் மன்னு பல்லவன் கோன் பணிந்த
பரமேச்சுர விண்ணகர மதுவே?''

நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதி அருளிய பிள்ளைப் பெருமாள் அய்யங்காரும், அத்தியூரில் எழுந்தருளியுள்ள அருளாளன், கண்ணன்தான் என்று சாதிக்கின்றார்.

''பொருளாசை மண்ணாசை பூங்குழலார் போகத்து
இருள் ஆசை! சிந்தித்து இராதே –அருளாளன்
கச்சித் திருப்பதியாம் அத்தியூர்க் கண்ணன்தான்
இச்சித்து இருப்பது யாம் என்று!''

ஒருவரை ஒருவர் துயில் எழுப்பிக் கொண்டு கோஷ்டி யாகச் சேர்ந்த கோபிகைகள் செய்யவேண்டியது என்ன?

கண்ணன் எழுந்தருளியுள்ள நந்தகோபன் திரு மாளிகைக்குச் சென்று நந்தகோபர் தொடக்கமாக அனைவரையும் துயில் எழுப்ப வேண்டியதே! இந்த முக்கிய மான நிகழ்ச்சியை-கருத்தை ஸ்ரீ ஆண்டாள் திருப்பாவையில் அருளாளனை வைத்தே அமைக்கின்றாள்.

தேவர்கட்குத் தேவன்; தேவாதி தேவன், உம்பர் என்றாலும் தேவர்களே-உம்பர்கட்குக் கோமான் என்றா லும் தேவாதி தேவனையே குறிக்கும்.

''அம்பரமே, தண்ணீரே, சோறே, அறம் செய்யும்
எம்பெருமான் நந்த கோபாலா! எழுந்திராய்!
கொம்பனார்க்கு எல்லாம் கொழுந்தே! குல விளக்கே!
எம்பெருமாட்டி யசோதாய்! அறிவுறாய்!
அம்பரம் ஊடறுத்து ஓங்கி உலகளந்த
உம்பர் கோமானே! உறங்காது எழுந்திராய்!
செம்பொன் கழலடிச் செல்வா! பலதேவா!
உம்பியும் நீயும் உறங்கேலோர் எம்பாவாய்?''

கண்ணன் திருத்தகப்பனாரான நந்தகோபனைத் துயில் எழுப்பினார்கள்.

திருத் தாயாரான யசோதைப் பிராட்டியைத் துயில் எழுப்பினார்கள்.

கண்ணனைத் துயில் எழுப்புகையில் தேவாதி தேவனாகி மதித்து 'உம்பர் கோமானே' என்று எழுப்புகிறார்கள்.

கடைசியாக முத்தண்ணா பலராமரையும் எழுப்பியா யிற்று. ஆனால் துயில் எழுப்பும் காரியம் முடியவில்லை! பாக்கியுள்ளது.

காரணம், பிராட்டிசம்பந்தம் இல்லாமல் பெருமாளைத் துயில் எழுப்பலாமா? அதனால்தான் பெருமாளையும் பிராட்டியையும் எழுப்பும் பாசுரம் அமைகிறது. இதுவே திருப்பாவையில் உள்ள துவயாநுசந்தானப் பாசுரம் எனலாம்.

இந்த முக்கியமான துவயாநுசந்தானப் பாசுரத்திலே பேசப்படுபவனும் தேவாதி தேவனே.

அமரர் என்றாலும் தேவர்களே முப்பத்து முக்கோடி யான தேவர்கள் இவர்களுக்கும் துயர் தீர்ப்பவன். கலி தீர்ப்பவன் தேவாதி தேவனே.

அயர்வறும் அமரர்கள் அதிபதியான தேவாதி தேவனின் சிறப்பென்ன? அவன், துயர் அறு சுடர் அடிகளை உடையவ னாக இருப்பதுவே!

தேவாதிதேவன் முப்பத்து மூவரான அமரர்க்குத் துன்பம் வரும் வரையில் காத்திருக்க மாட்டானாம். அதற்கும் முன்பே சென்று அவர்களுடைய கப்பத்தை — நடுக்கத்தைத் தீர்ப்பானாம்!

"முப்பத்து மூவர் அமர்க்கும் முன்சென்று
கப்பம் தவிர்க்கும் கலியே துயில் எழாய்!"

கப்பம் தவிர்க்கும் கலி துயர் அறுசுடர் அடிகளை உடைய அயர்வறும் அமரர்கள் அதிபதிதான்!

துயர் அறு சுடரடிகளை உடையவன் அமரர்கள் துயரை மாத்திரமா துடைக்கிறான்?

விண்ணவர்களுடன் மண்ணவர்கள் துயரினையும் தான் துடைக்கிறான். அடியவர்களைக் காப்பதில் செப்பம் உடையவன். 'செப்பம் உடையாய்'

அடியவர்களின் எதிரிகளை, பயங்கொண்டு அந்த ஜுரவேகத்திலே முடியும்படி முடித்து விடுவானாம். 'செற்றார்க்கு வெப்பம் கொடுக்கும்விமலா துயில் எழாய்!'' அஸ்தியலே சுரம்!

இனிபிராட்டியையும் துயில் எழுப்புதல்.

''செப்பன்ன மென்முலை, செவ்வாய்ச் சிறு மருங்குல்
நப்பின்னை நங்காய்! திருவே! துயில் எழாய்!
உக்கமும், தட்டொளியும் தந்து உன் மணாளனை
இப்போதே எம்மை நீராட்டேலோர் எம்பாவாய்!''

பிராட்டியையும் பெருமாளையும் துயில் எழுப்பியாயிற்று.

அடுத்தபடி செய்வதென்ன?

பெருமாளும் பிராட்டியுமான இந்த சேர்த்தியிலே, நம்முடைய சக்தியற்ற நிலைமையை விண்ணப்பித்து, சரணாகதி செய்ய வேண்டுவதே! சேர்த்தியில்தான் சரணாகதி சிறக்கும்!

''இவள் சந்நிதியாலே காகம் தலை பெற்றது, அது இல்லாமையாலே ராவணன் முடிந்தான்!''

''இளைய பெருமாளைப் போலே இருவருமான சேர்த்திலே அடிமை செய்கை முறை.''

''அடிமைதான் சித்திப்பதும் ரசிப்பதும் அச் சேர்த்தியிலே?''

இவ்விதமான சேர்த்தியிலே அடிமை செய்யும் போதும், அடிபணியும் போதும் தேவாதி தேவனை முன்னிட்டே செய்யப்படுகிறது.

புராணம் கூறுவது: பிரம்மா அத்திகிரியை உத்திர வேதியை யாக குண்டமாக்கி யாகம் செய்கையிலே உலகமே கண்டு வியக்கும் படியான தேஜோ ரூபமாக அவதரித் தருளியவன் தேவாதி தேவனே!

''உலகினில் தோற்றமாய் நின்ற சுடர்''

சாட்சாத் அருளாளனே. பிரமனுடைய யாகத்தை ஒரு வியாஜமாகக் கொண்டு உலகை ரட்சிக்கத்தானே தோன்றினான் பேரருளாளன்.

''ஏற்ற கலங்கள் எதிர்பொங்கி மீதளிப்ப
மாற்றாதே பால் சொரியும் வள்ளல் பெரும்
பசுக்கள்,
ஆற்றப் படைத்தான் மகனே! அறிவுறாய்!
ஊற்றம் உடையாய் பெரியாய் உலகினில்
தோற்றமாய் நின்ற சுடரே துயில் எழாய்!
மாற்றாருனக்கு வலிதொலைந்துன் வாசற்கண்
ஆற்றாது வந்து உன் அடிபணியுமாபோலே
போற்றி யாம் வந்தோம் புகழ்ந்தேலோர்
எம்பாவாய்''

சரணாகதியின் பலன் என்ன (திருப்பாவையின்) திருப்பாவை நோன்பின் (புகுந்த சரணாகதியின்) பலன் என்ன? (முடிவு என்ன?)

புருஷார்த்த சித்திதான், அதாவது ஸ்ரீவைணவர்கள் பெற வேண்டிய பேறுதான்! பிராட்டியும் மெச்சும்படியான செல்வத்தையும், அச்செல்வத்தைக் கொண்டு உனது திருவடிகளிலே கைங்கரியத்தையும் பெற்றதாலேவருத்தமும் தீர்ந்து மகிழ்ச்சியும் பெருகவேணும்.

அதனால் தான் உன்னை அருத்தித்து வந்தோம்; அதாவது உன்னிடத்திலே புருஷார்த்தத்தை யாசித்து வந்தோம்; பறை தருதியாகில் புருஷார்த்தமாகிற பறையை தந்தருள்வாயாகில்;

இப்படியாகத் திருப்பாவை நோன்பைத் தலைக்கட்டித் திருத்தக்க செல்வத்தையும் சேவகத்தையும் பெற்று மகிழும் பாசுரத்திலும் அருளாளன் அநுபவமே ஆண்டாளுக்கு உண்டாயிற்று.

பிரம்மனின் யாக குண்டத்திலே நெருப்பென்ன நின்ற நெடுமால் தேவாதி தேவனே, கஞ்சன் வயிற்றில் நெருப் பென்ன நின்ற நெடுமாலும் அவனே!

''ஒருத்தி மகனாய்ப் பிறந்து, ஓர் இரவில்
ஒருத்தி மகனாய் ஒளித்து வளர,
தரிக்கிலான் ஆகித்தான் தீங்கு நினைந்த
கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில்
நெருப்பென்ன நின்ற நெடுமாலே! உன்னை
அருத்தித்து வந்தோம்! பறை தருதி யாகில்
திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம் பாடி
வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்தேலோர் எம்பாவாய்!''

பறை: ஆ! ஆ!! என்று ஆராய்ந்தருள். அர்ச்சையில் கல் உயர்ந்த நெடுமதிள் சூழ் கச்சிமேயகளிறான, ஐந்து எழுத்துக்களால் ஆன அருளாளனை ஸ்ரீ ஆண்டாள் திருப்பாவையில் ஐந்து பாசுரங்களால் மங்களாசாசனம் செய்தருளினாள்.

இந்த ஐந்து பாடல்களால் ஐந்து முக்கிய கருத்துக் களையும் வெளியிட்டருளினாள். கீழ்வானம் பாசுரத்திலே திருப்பாவை நோன்பின் நோக்கத்தை தேவாதி தேவனைச் சென்று நாம் சேவித்தால் ஆ! ஆ! ! என்று ஆராய்ந்து அருள்வான் என்று சாதித்தருளினாள்.

அடுத்த 'அம்பரமே தண்ணீரே' பாசுரத்தில் உம்பர் கோமானைக் குடும்பத்துடன் துயில் எழுப்பினாள். ''நந்த கோபாலா! யசோதாய்! உம்பர் கோமானே! பலதேவா! உறங்கேல்'' என்று பிரார்த்தித்தாள்.

மூன்றாவது,'முப்பத்து மூவர்' பாசுரத்திலே அமரர்க்கும் முன் சென்று கப்பம் தவிர்க்கும் கலியையும் நப்பின்னை நங்கை திருவையும் துவயாநுசந்தானமாகத் துயில் எழுப்பினாள்.

நான்காவது, 'ஏற்றகலங்கள்' பாசுரத்திலே தோற்ற மாய் நின்ற சுடராய், பிரம்ம யாககுண்டத்தில் திருவவதரித்த தேவாதி தேவனைச் சரணாகதி செய்தாள்; ஆற்றாது வந்து உன் அடிபணியுமாபோல் போற்றினாள்! புகழ்ந்தாள்.

ஐந்தாவது,'ஒருத்தி மகனாய்' பாசுரத்தில் திருப்பாவை நோன்பின் பலனை அருளினாள், உன்னை அருத்தித்து வந்தோம் பறை தருதியாகில் திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம் பாடி என்று,

# ஓங்கி உலகளந்த உத்தமன்

கோதை தமிழ், பாதகங்கள் தீர்க்கும்;மேலும்,பரமனடி காட்டும். இது பெரியோர் வாக்கு பாதகங்களைத் தீர்க்கின்ற பரமன் அடி காட்டும் என்றும் கொள்ளலாம்.

ஆண்டாள் அருளிச் செய்துள்ள பாக்களில் உள்ள ஞானம், இறைவனுடைய திருவடித் தாமரைகளை பக்தர் களுக்குக் காட்டித் தரும் என்பது பொதுவான பொருள். சூடிக் கொடுத்த சுடர்க்கொடி தன் பாசுரங்களில், எம்பெருமானுடைய திருவடிகளையும் சுட்டிக் காட்டிப் பேசுவதையும் பார்க்கலாம், இங்ஙனம் ''பரமனடி காட்டும்'' பாவையின் பாக்களில் ஒன்றை, திருப்பாவையில் ஒரு பாசுரத்தைத்தான்—இந்தக் கட்டுரையின் விஷயமாக அமைத்துக் கொள்ளலாம்!

மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளில், வையத்து வாழ்வோர்களை ஆண்டாள் அழைப்பது எதற்காக? 'நாங்கள் நம்பாவைக்குச் சாற்றி நீரா'ட என்பதே ஆண்டாள் தெரிவிக்கும் காரணம் இந்நீராட்டத்தால் நீங்காத செல்வம் நிறையுமாம்! ஆனால் ஒரு நிபந்தனை! நீராடும்போது 'ஓங்கி உலகளந்த உத்தமன்' பேர் பாடி ஆடவேண்டுமாம்! இல்லையானால் அந்த செல்வம் நிறையாதாம்! நீங்காததாகவும் இருக்காதாம்!

நிறைந்த செல்வம் வேண்டுமென்றால், மிக நிறைந்த செல்வரிடம் போய்க் கேட்கவேணும். ஆனால், ஓங்கி

உலகளந்தவரிடம் சென்றால், அவர் "வாமனனார், பச்சைப் பசுந்தேவர். தாய் பண்டு நீரேற்ற பிச்சை" யல்லவா நமக்குப் பச்சையாகத் தெரிகிறது! இப்பொல்லாக் குறளுருவாய்ப் பொற்கையில் நீரேற்'றவரிடம் போய் நாம் கையேந்துவதா? நீங்காத செல்வம் நமக்கு நிறைவதற்கு!

இவரைப் 'பாடிக் கேட்பது இருக்கட்டும் இவரிடம் உள்ள செல்வம். அல்லது இவர் அளந்துகொண்ட 'எல்லா உலகும்' எப்படிக் கிடைத்தது? 'மின் கொள்சேர் புரிநூல் குறளா'ய் வேஷம் தரித்துக்கொண்டு, 'அகல் ஞாலம் கொண்ட வன் கள்வன்' என்பதுதானே குருகூர்ச் சட கோபருடைய கூற்று! இவ் 'வன்கள்வ'னிடம் நீங்காத செல்வம் பெறவா நாம் மார்கழி நீர் 'ஆட' வேண்டும்!

இப்படி 'ஆடி'யும் 'பாடி'யும் கேட்கிறோம். நமக்கு என்ன கிடைக்கும்? இவனுக்குக் கொடுத்தவர்களே என்ன கதியானார்கள் என்பதைப் பார்த்தால் நன்றாக விளங்கி விடும்! 'கொடுத்த "மாவலியைச் சிறையில் வைத்த தாடாளன்" இந்த தாராளன்!' என்று மங்கை மன்னன் சங்கையில்லாமல் கூறுகிறார்!

எப்படி இருக்கிறது விஷயம்? இவரைப்பற்றி என்ன நினைக்கலாம்? இப்படிப்பட்டவரை ஆண்டாள் அறிமுகப் படுத்துகிறாள் "ஓங்கி உலகு அளந்த உத்தமன் என்று! இது சரியா? பார்க்கலாம்.

விஷ்ணுவின் அடியைப் பற்றிய இக்கதை,வைணவத்தின் அடிப்படியான கொள்கையை விளக்குகிறது. வேதங்களில் இறைவனுடைய ஸ்வரூப ரூப குணங்களைக் கூறும் பாகத்திற்கு பிரம்ம காண்டம் அல்லது உப நிஷத் என்று பெயர். உபநிஷத்துக்களை சந்தேகமில்லாமல் அறிந்து கொள்ள வியாச முனிவர் சூத்திரங்கள் இயற்றி னார். இச் சூத்திரங்களுக்கும் பிற்காலத்தில் உரை எழுத வேண்டியதாயிற்று. சங்கரரும் மத்வரும் இயற்றிய உரை யைவிட ஸ்ரீராமாநுசர் அருளிய உரையே சிறந்திருந்ததால்,

அவருக்கு ஸ்ரீபாஷ்யகாரர் என்ற திருநாமமும் ஏற்பட்டது, வைணவ தரிசனத்தின் அடிப்படையில் வேதங்களை விளக்கி யருளியதால், நம்பெருமாளும், ஸ்ரீவைணவ தரிசனத்திற்கு எம்பெருமானார் (ஸ்ரீராமாநுசர்) தரிசனம் என்றே பெய ரிட்டு நாட்டிவைத்தார்.

ஸ்ரீவைணவ மதம் ஸ்ரீராமாநுசரால் சிறப்பு அடைந்த தற்குக் காரணம், அசித்,சித் என்ற இருவகையால் அமைந்த உலகிற்கு, ஈச்வரனே தலைவன் என்றும், உலகம் சரீரமாக வும், இறைவனான விஷ்ணு சரீரியாகவும் இருக்கின்றான் என்றும் விளக்கப்பட்டதுதான். எனவே அசித்,சித் சம்பந்த மான உலகின் நிர்வாஹகனாக இருக்கிற விசேஷத்துடன் எழுந்தருளியிருக்கிறவன், இறைவன் ஒருவனே என்பதால், இம்மதம் விசிஷ்டாத்வைதம் என்றும் பெயரிடப்பட்டது. இறைவனும் அழியாதவன்; அவன் உடலான அசித்,சித் தத்துவங்களும் அழிவில்லாதன. இவை கால விசேஷங்களில் சுருங்கலாம்; ஆனால் அழியா.

சித், அசித், ஈச்வரன் என்னும் மூவகைப் பிரிவின் மேன்மையையும் காண்போம். உலகை விஞ்ஞான அறிவால் பிரித்தனர் மேலை நாட்டினர். அவர்களும் முப்பிரிவே கண்டனர். ஆயினும், அவர்கள் கண்ட முப்பிரிவு Solid (கடினப்பொருள்), liquid (திரவப்பொருள்), gas (காற்றுப் பொருள்) என்பவை. இப்பிரிவில், பனிக்கட்டியை நீர்ப் பொருள் பிரிவில் வைப்பதா அல்லதுகடினப் பொருள்பிரிவில் வைப்பதாஎனச்சங்கடம் ஏற்படுகிறதுஇவையல்லாமல்,காற் றும் அற்றநான்காவது வகையானபாழ்வெளி (Vacuum)யும் உளது. கடினப்பொருள், நீர்ப்பொருளாக உருக்கப்பெற்று, அதுவும் ஆவியாக்கப்பட்டு, அந்த ஆவியும் வெளியேற்றப் பட்டு பாழ்வெளி (Vacuum) ஏற்படும். ஆனால், சித்தும், அசித்தும் ஈச்வரனிடம் புகுந்து ஐக்கியம் ஆனாலும், தனித்தே சிறு அளவுகளிலாவது இயங்கும். இறைவனும் வேறு பொருளாக மாறுவதும் இல்லை,மறைவதும் இல்லை, காற்று மறைந்து நான்காவதான பாழ்வெளி ஏற்படுவது

போல. எனவே, வைணவ மதத்தின் அடிப்படையாக விளங்கும் மெய்ஞ்ஞானப் பிரிவின் மேன்மை விளங்குகிற தல்லவா?

முன்னம் குறள் உருவாய் மூவடி மண் கொண்டளந்த மன்னன் சரிதையை எல்லோரும் அறிவார்கள்; திருப்பிச் சொல்ல வேண்டியதில்லை. ஆனால் ஆராய்வோம். இது தத்துவார்த்தக் கதை அல்லவா? உலகில் அசித்என்னும் எல்லா உயிரற்ற அசையாப் பொருள்களுக்கும், சித் என்னும் உயிருள்ள அசையும் பொருள்களுக்கும் தலைவனாகி விட்ட படியால், மகாபலி, சக்ரவர்த்தி எனப்பெயர் பெறுகிறான். இரணியனுக்கும், இராவணனுக்கும் இப்பட்டம் கிடை யாதே! மகாபலியின் குலம் தான்அசுரகுலம். குணம் அசுர குணம் அல்ல. அவன் செய்தொழில் வேற்றுமையால் சிறப் படைகிறான். அதாவது, தன்னிடம் உள்ள உலகப்பொருள் களையும். உலகப் பொறுப்புகளையும் உயர்ந்தோருக்கு வழங்கி விடவே யாகம் ஆரம்பிக்கிறான். இந்த யாகம் தியாகம் தானே!

தேவர்கள் உயர்ந்த ஞானம் படைத்தவர்கள்; இவர் களுக்குத் தெரிந்துவிட்டது, மகாபலிச்சக்ரவர்த்திக்கு ஒரு விஷயம் தெரிய வில்லை என்று! உலகில் அசித், சித் என்று இரண்டு வகுப்புகளே இருப்பதாயும், அவைகளை ஆட்சி செய்யவும், வழங்கவும் அதிகாரமுள்ளவன்தானே என்றும் தவறாக மகாபலி நினைத்து யாகதானம் செய்வதை, செயல் நன்றாகத் திருத்திப் பணி கொள்ள வேணுமென்று திருமாலிடம் முறையிட்டனர். மூன்றாவது பிரிவான ஈச்வரன் உண்டு என்பதையும் அந்த உயர்வு அற உயர் நலம் உடையவனே சர்வாதிகாரியும் சர்வரட்சகனும் என்னும் மயர்வறும் மதி நலத்தை அருளவே, அயர்வு அறும் அமரர்கள் அதிபதியான இறைவனும் தன் துயர் அறு சுடர் அடிகளால் நடந்து, கண்டவர் தம் மனமகிழ மாவலி தன் வேள்விக் களவில் தன் மனத்தால் தொழுது எழுவதற்காக மிகு சிறு குறளாய் எழுந்தருளினன்.

மாமாயன், மாதவன், வைகுந்தன், அண்டத்து அமரர்கள் சூழ, அத்தாணியுள் அங்கிருந்து, தொண்டர்கள் நெஞ்சு உறைவதற்காக, உண்டியே உடையே உகந்து ஓடும், இம்மண்டலந் தன்னில் வருவதே அவதாரம் எனப்படும். வானிளவரசு, வைகுந்தக் குட்டன், மண்ணில் நடந்து மாவலி வேள்வியில் மாண் உருவாய்ச் சென்று மண்ணுலக பாஷையிலேயே பேசி, 'மூ அடி தா!' என்று இரக்கின்றான். மாவலி இசைகிறான் தன் அறிவின் அடிப்படையிலே! ஒரு குறளாய் இரு நிலத்தில், மூ அடி வேண்டிய இறைவனோ, உலகனைத்தையும் தன் ஈரடியால் ஒடுக்க ஆரம்பிக்கிறான். அதாவது, தன்னுருவாய் நின்று தன் தளிர்புரையும் திருவடிகளைத் தொழிற்படச் செய்து, முதலில், அசைவு அற்ற அசித் மயமான சங்கமப் பொருள் களையும், பிறகு இரண்டாவது அடியால் அசைகின்ற ஞான சம்பந்தம் ஏற்படக்கூடிய சித் மயமான தாவரப் பொருள் களையும் உள்ளடக்கிக்கொண்டு, மூன்றாவது அடிக்குப் பொருளாக 'மற்றும் ஒன்றும் தருக!' எனக்கேட்கிறான்! ஸ்ரீவைணவ ஞானத்தின் அடிப்படையாக விளங்கும் முப்பிரிவுகளில் மாவலி உணர்ந்துள்ள அசித், சித் என்பவை தான் என்றும், மூன்றாவதான இறைவனை இன்னும் உணரவில்லையே, அடையவில்லையே, அதைத் தர முடியுமா என்றான். இந்த நிலையில், ஒண்மிதியில் புனல் உருவி ஒருகால் நிற்கிறது; மற்ற ஒரு காலும் எண்மதியும் கடந்து அண்டமீது போகி, இரு விசும்பின் ஊடு போய், எழுந்து, மேலைத் தண்மதியும் கதிரவனும் தவிர ஓடித் தாரகையின் புறம்தடவி, அப்பால் மிக்கு மண் முழுதும் அகப்படுத்துகின்றது. (பக்தர்களால் விரும்பப் படும் சீர்மையை உடைய) காமரு சீர் அரசர் குலத்தவனான மாவலியினுடைய அவுணன் உள்ளமும், இதை உணர்ந்ததும் இவை எந்தை, தந்தை தந்தையின் மலர்புரையும்திருவடியே என வணங்குகின்றன!

தானே சர்வாதிகாரி என்றும், தானே ரட்சகன் என்றும் வஞ்ச முக்குறும்பாம் குழியில் கிடந்த மாவலியின் குறும்பதக்

கிய குறட்பிரமசாரியை, முதலில் ஊனக் கண்ணால் கண்ட போது மாணிக்கக் குறளனாகக் காணப் பட்டான்; அசித்-சித் சொரூபமான வையம் அளந்தானாக (தன் நிர்வாகத்தில் அடக்கிக் கொண்டவனாக)ச் சேவை சாதித்ததை ஞானக்கண்ணால் கண்டபோது, அம்பரம் ஊடறுத்து ஓங்கி உலகளந்த உம்பர் கோனாகக் காணப்பட்டான். தொழுநீர் வடிவில் குறள் உருவாய் வந்து தோன்றியவனின் உண்மை சொரூபத்தை உணர்ந்தபோது, (பெருமை பொருந்திய) மாண்பமை கோலமும் மாயமும் தானே வந்து ஆட்கொள்ளும் (ஆச்சரியமான குணமும்) வெளிப்பட்டது. சாமானிய மனிதக் காலால், வெறும் மண்ணை அளந்து கொள்ள வந்த யாசக பிரம்மசாரி அல்ல இவன். சித்; அசித் மயமான இரு பிரிவுகளையுமே தன்னுள் அடக்கிக் கொண்டு மூன்றாவது பிரிவான ஈச்வரனைத் தர முடியுமா எனக் கேட்டான். மாவலி ஈச்வரத் தன்மையை உணராமலும், அந்த ஈச்வரனே ரட்சகன், அவனே சர்வாதிகாரச் சக்ரவர்த்தி (சக்கரக்கை ஐயன்) என்பதை அறியாமலும் வாழ்ந்த தன் வாழ்வுக்கு மிக வருந்தி, பழுதே பலகாலும் போயின என்று அஞ்சி அழுது, இறைவனைக் காண வேணுமென்று துடித்தான். இறைவனும் இதோ நான் அப்பன் என்று ஊழ் யெழ உலகம் (ஆட்) கொண்ட வாறாக, ஆழி எழச் சங்கும் வில்லும் எழத், திசை வாழி எழத், தண்டும் வாளும் எழ, அண்டம் மோழை எழ சேவை சாதித்தான்; சந்தர்ப்பத்தை நழுவவிடாமலும், இரணிய-இராவணர்போல் எதிர்க்காமலும், தன்னையும் ஆட்கொள்ள மாவலி பிரார்த்திக்கவும், அவன் முடியின் மேலும் பாதம் எழுந்தருளியது!

விண்ணவர்கோன் வெந்திறல் வாணன் (மாவலி) வேள்வி இடம் எய்தி அங்கோர் குறளாகி வந்ததின் மெய்மையை மாவலி உணரவும், அச் செங்கண்மால் செந்தொழில் வேத நாவில் முனியாகி வையம் அடிமூன்று இரந்து பெறினும், அவனது அந்தரம் மீது போகி மதி நின்று இறைஞ்ச, மலரோன் வணங்க வளர் சேர், அந்தரம்

ஏழினூடு செல உய்த்த பாதத்தைச் சேவித்து 'அது நம்மை ஆளும் அரசே!'' என்று பணிந்தான். தானவன் வேள்வி தன்னில் தனியே குறளாய் நிமிர்ந்து வானமும் (சித்தும்) மண்ணும் (அசித்தும்) அளந்த திரிவிக்கிரமனின் தாள்களில் மாவலியும் ''எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன் தன்னோடு உற்றோமே யாவோம் உனக்கே நாம் ஆட் செய்வோம்'' என்றுபணிந்தான். அவனுக்கே முதலாவது (ஸ்ரீ சடகோபன்) திருவடி மரியாதை சாதிக்கப்பட்டது. மாயோனை வாள் வலியால் மந்திரங்கொண்டார் மங்கையர்கோன். தாள் வலியால் தந்திரத்தால் தாடாளன். இங்ஙனம், மாவலியை வலியச் சென்று ஆட்கொள்ள இறைவன் கொண்டது தூயவரி உருவமான குறள்கோலம்தான் என்று காண்கிறார். ரட்சித்தும் ஈச்வர ஞானச்சுடர் கொளுத்தியும் ''வசை அறு குறளாய் மாவலி வேள்வியில் மண்ணளவிட்டவன் தன்னை அசைவறும் அமரரும் அடியினை வணங்கினார்''களாம். வேறுவிதமாக குற்றச் சாட்டாவது!பேச்சு மூச்சாவது இனி! பரமபத இருப்பையும், தன் சுவாமித்வப் பெருமையையும் விட்டு விபவமான அவதாரத்தை ஏற்று, தன் வாச்சல்ய, சௌசீல்ய, சௌலப்ய குணங்கள் பிரகாசிக்கும்படி கிடைத்தற்கரிய திருவடியை இறைவன் தன் சிரசில் வைத்தருளவும். மகாபலி மிகவும் நீர்ப் பண்டமாக உருகி மிகமிகத் தாழ்ந்து அடிமையானான். இதனையே அவன் பாதாளத்திலிருப்பதாகக் குறிப்பிடுவதாகும்!

மகனான பிரகலாதனுக்கு இறைஞானம் ஏற்பட்ட போது தந்தையான இரணியனுக்கு அது ஏற்படவில்லை. இங்கே தந்தையான மாவலிக்கு ஏற்பட்ட இறைஞானம் மகனான நமுசிக்கு ஏற்படாமல் போயிற்று. எண் கடந்த யோகினோடு இரந்து சென்று மாணியாய் மண் கடந்த வண்ணனை மதிப்பிடத் தவறினான் நமுசி. ஆட்கொள்ள வந்த அடிகளை, அளந்து கொள்ள வந்தவைகளாகவே மதித் தான் எனவே, ''என்னிது மாயம்! என் அப்பன் அறிந்திலன்; முன்னைய வண்ணமே கொண்டு அளவாய்'' என்றான். மாலும், தேடி வந்த இடத்தில் தன் பெருமையைக் காணத் தவறியதால், தன் சொந்த இடமாவது சென்று

நிரந்தரமாகக் காண்பான் என்று ''மன்னு நமுசியை வானில் சுழற்றித்தன் மின்னும் முடியளவு'' செலுத்தினான்.

இறைவனது திருவடித் தாமரையை ''என் தலையல் லால் கைம்மாறு இல்லேன்'' என்று சென்னியின் மேற் பொறித்துக் கொண்ட மாவலி, சிரஞ்சீவிகளில் ஒருவ னாகத் திகழ்கின்றான், பிரகலாத-விபீஷண ஆழ்வான் களைப் போலே! மாவலிக்காக அன்று தூக்கிய திருவடியின் சம்பந்தம் வசிஷ்ட-சண்டாள வித்யாசம் இல்லாமல் அனைவரையும் ஆட்கொண்டது. இதனால் உலகம் என் றென்றும் மகாபலிக்கும் கடமைப்பட்டுள்ளது. எம் பெருமானின் தேனே மலரும் திருவடித் தாமரைகளை சென் னிக் கணிந்து கொள்ளும் புனித-புண்ய வழக்கம் மாவலி யால்தான் முதன் முதலில் ஆரம்பிக்கப் பட்டதாகப் புராண இதிகாசங்களிலிருந்து அறியக் கிடக்கிறது. உடன் பிறந்தோனாகிய பரதாழ்வானுக்குக் கிடைத்த பாதுகா பட்டாபிஷேகத்தைவிட மாவலியின் பாதுகா பட்டா பிஷேகமே சிறந்ததெனலாம்.

தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்ய வும், கயல் மீன்கள் உகளும்படியும், பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுக்கும் படியும், பெருஞ் செந்நெல் ஓங்கவும், தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலை பற்றி வாங்க, வள்ளல் பெரும்பசுக்கள் குடம் நிறைக்க வும், நீங்காத செல்வம் நிறையவும், ஸ்ரீ ஆண்டாள் ஓங்கி உலகளந்தவன் பேர்பாட வேண்டும், பாவை நீர் ஆடவேண்டும் என்கிறார். திங்கள் தோறும் பெய்யும் மும்மாரி, அசித் வகைப்பட்டது. பெருஞ் செந்நெல்லும், அதன் வளப்பத்தைக் குறிக்கும் கயலும், பொறி வண் டும், வள்ளல் பெரும் பசுக்களும் அசித், சித் சேர்க்கை பாலானவை பாவை நீராடுவோரும் அசித், சித் சம் பந்தமானவர்களே. எனவே, அசித் வளமும், சித் வளமும் உண்டாக வேண்டுமானால், அவைகளில் சரீரி யாகவும், அந்தர்யாமியாகவும் உள் நின்று ஆட்சி செய்யவும், ஆளும் ஈச்வரனான எம்பெருமானைத்தானே பாடவேண்டும். ஓங்கி உலகை ஈரடியால் அளந்து,

சித், அசித் என்பவை யாவும் தன் வசப்பட்டதே என்று காட்டி விட்டான் அல்லவா வாமன—திருவிக்கிரமனாக. ஈச்வரனும், ஈச்வர கைங்கர்யமுமே நீங்காத செல்வமும் நிறைந்த செல்வமும். இந்த ஈச்வர சம்பந்தத்தையும், உனக்கே நாம் ஆட்செய்வோம் என்னும் கைங்கரியத்தையும் விரும்பியே ஓங்கி உலகளந்தவன் பேர் பாடுகிறார்கள். பாடிப் பாவை நீர் ஆடுகிறார்கள். மாவலி மறந்திருந்தும் வந்து ஆட்கொண்டவன் உத்தமன்தானே! நாம் அவன் பேர் பாடியதும், ஆடியதும் வியாஜ்ஜியமாக நாடெங்கும் நீங்காத செல்வம் நிறைப்பவன் ஓங்கிய உத்தமன்தானே! நம்மிடம் உள்ள பக்தியும், நாம் இயற்றும் கைங்கரியமும் மிக அற்பமாக இருப்பினும் நம்மிடம் நீங்காத செல்வமாக நிறைபவன் ஓங்கி உலகு அளந்த உத்தமனே! எனவே, அன்று இவ்வுலகம் அளந்தான் அடிபோற்றி!!

வையம் அளந்த மணாளனின் கதையை எப்படி அறிய வேண்டும். அறிந்து என்ன செய்ய வேண்டும்? அறிந்தறிந்து வாமனன் அடியினை வணங்க வேண்டுமாம். வணங்கினால் செறிந்து எழுந்த ஞானமோடு செல்வமும் சிறந்திடுமாம்! ஆண்டாள் திருவுள்ளத்தை இப்படி ஆமோதிக்கின்றார் பக்திசாரர்!

முப்பொருள் உண்மையைக் கூறும் இப்பாசுரம் சித், அசித், ஈச்வரன் என்ற அம்முப்பொருளையும் விவரிப்பதுடன், திருப்பாவையில் மூன்றாவது பாடலாகவும் அமைந்துள்ளது. முதல் பாசுரம் அசித் சொரூபமான மார்கழித் திங்களையும் நீரையும் பற்றிப் பேசுகிறது. இரண்டாம் பாட்டு சித் சொரூபமான வையத்து வாழ்வோர்களை அழைக்கிறது. மூன்றாவது பாட்டான இது, சிகரம் வைத்தாற் போல் 'ஓங்கி உலகு அளந்த உத்தமன் என்று ஈச்வரனைப் போற்றித் தொடங்குகிறது! அசித், சித் வளங்கள் பெருகுவதும், குறுகுவதும் அவன் திருவடிகள் இட்ட வழக்கே என்றும் காட்டுகிறது.

ஆண்டாளுடைய பக்தி உள்ளத்தில் ஓங்கிய இப்பாடல் வைணவ உலகத்தையே அளந்து விட்டது! ஆம்! ஆட்சி செய்கிறது!

# ஊழி முதல்வன்

''வேதம் அனைத்திற்கும் வித்தாகும்'' என்ற சிறப்பு டையது திருப்பாவை; வேதம் என்றால் அறிவுக் களஞ்சியம் என்று பொருள் கொள்ளலாம். வேதம் இரண்டு பாகங் களாக அமைந்துள்ளது. ஒரு பாகம் கடவுளைப் பற்றியும், கடவுள் தத்துவத்தைப் பற்றியும், கடவுள் 'உடல் மிசை உயிர்' எனக் கரந்து எங்கும் பரந்துள்ள தன்மையைப் பற்றி யும் கூறும். இதற்குப் பிரம்ம காண்டம் எனப் பெயர். மற்றய கர்ம காண்டம், மனிதன் கடவுளை அடைவதற்காக மேற் கொள்ள வேண்டிய தொழில்களைப் பற்றிக் கூறும்.

வேதத்தின் அடிப்படைட்யில் அமைந்துள்ள ஸ்ரீ வைணவ தரிசனக் கொள்கைப்படி, இறைவன் தன்னை வெளிப் படுத்திக் கொள்ளும் வகை அழகாக அமைந்துள்ளது. பகுத் தறிவுக் கண்கொண்டு பார்ப்பவர்கட்கும், இந்நிலைகள் ஏற்கத்தக்கவைகளே இறைவனது நிலைகளை விவரிக்கும் இம்மெய்ஞானம், விஞ்ஞானமும் வெறுக்காமலும், விலக்கா மலும், வேண்டி ஏற்றுக் கொள்ளும் இயல்புடையதாகும்.

எல்லா உயிரினங்களும், உயிரினங்கள் வாழ்வதற்கான சாதனங்களான மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் முதலான பஞ்சபூதங்கள் தோன்றுவதற்கு முன் இருந்த வனையே முதல்வன் எனலாம். இவைகள் எல்லாம் தோன்றுவதற்குக் காரணமானவனையும் முதல்வன் எனலாம். எனவே, முதல்வன் என்றால் எல்லாம் தோன்றுவதற்கு முன்பும், அவை தோன்றுவதற்குக்

காரணமாகவும் இருந்தவனைக் குறிக்கும். இத்தகைய முதல்வன் காலவரையறைக்கு உட்படாதவன். அவனுக்கு ஆதியில்லை. அவனுக்குப் பின்னால் ஏற்பட்ட எந்த உயிரினமும் தம் தம் நிலையில் மாறி வாழ்க்கையை முடித்துக் கொள்ளும். ஆனால், அவனுக்கு அந்தம் இல்லை. ஆதியும் அந்தமும் இல்லாத ஒரு நிலையில் உள்ளவனே ஊழி முதல்வன்.

நிமிடங்கள் மணிகளாகும். மணிகள் நாட்களாகும். நாட்கள் மாதங்களாகும். மாதங்கள் வருடங்களாகும். வருடங்கள் யுகங்களாகும். யுகங்கள் ஊழியின் சில அணுக்களே! இப்படியான ஊழியின் காலத் தொடர்ச்சிக்கும் முன்பே விளங்குபவனையும், அவ் ஊழியின் தொடக்கத்திற்குமே காரணமாக இருப்பவனையுமே ஊழி முதல்வன் எனலாம்.

'ஆழி மழைக்கண்ணா!' என்ற நான்காவது பாசுரத்திலே இறைவனை 'ஊழி முதல்வன்' என்று மங்களா சாசனம் செய்துள்ளதின் நுண்மையையும், அருமையையும், பெருமையையும் அநுபவிக்கலாம்.

நடுத் தெருவில் போகும் ஒருவனை அடியுங்கள்! ஆமாம் அடியுங்கள்! அவன் 'ஏன் என்னை அடிக்கின்றீர்கள்?' என்று கேட்பான். பதில் சொல்லாதீர்கள். மேலும், அடியுங்கள்! அவன் தன் பலத்தை நம்பி எதிர்த்துத் தாக்குவான். மேலும் அடியுங்கள்! தன் பலத்தில் நம்பிக்கை குறையவும், பக்கத்தில் செல்பவர்களைக் கூவி; அவர்கள் மீது நம்பிக்கை வைத்து அவர்களிடம் முறையிடுவான். அவர்களும் அவனை அடிக்க வேண்டும்! ஆமாம்! காரியமாகத்தான்! இப்படி எல்லோரும் தன்னை அடிப்பதைக் கண்ட அவன், எல்லோர் மீதும் நம்பிக்கையைக் கைவிட்டு ஆகாயத்தைப் பார்த்து இருகைகளையும் விரித்து "ஐயோ! கடவுளே! அடிக்கிறார்களே! உனக்குக் கண்ணில்லையா?" எனக் கதறுவான்.

நடுத் தெருவில் போன இவனுக்கு ஆகாயத்தில் கடவுள் இருக்கிறார் என்று எப்படித் தெரியும்? சகல ஜீவாத் மாக்களிடத்தும் பரவியுள்ள பரமாத்மாவின் தொடர்பால் ஏற்பட்டுள்ள உள் உணர்ச்சியே (Intuition) திக்கற்ற நிலைமையில் இருந்தவனை ஆகாயத்தை அண்ணாந்து நோக்கி அழுது முறையிடச் செய்தது!

கடவுளை இவன் கண்டவனா? என்றாலும், கடவுளை நேரில் கண்டவன் போல, ''கடவுளே! உனக்குக் கண் இல்லையா?'' என்று கதறினானே! கடவுளுக்குக் கண்ணும், ஏனைய புலன்களும் அமைந்த திருமேனியும் இருப்பதாக நம்பவில்லையானால், இப்படி நம்பிக்கை யில்லாத ஒரு எண்ணத்தை அடிப்படையாகக்கொண்டு கதறியிருப்பானா? சாகும் தறுவாயில் ஒருவன் அளிக்கும் மரண வாக்கு மூலம் தற்காலச் சத்தியமானதென்று மதிக்க வேண்டும் என்று சட்டமும் கூறுகின்றது. கடவுளுக்குக் கண் உண்டு; அவர் எல்லா இடங்களிலும் நிகழும் எல்லா நிகழ்ச்சிகளை யும் அறியவல்லவர். அறிந்தும், ஆபத்தில் வந்து உதவும் தன்மையும், சக்தியும் உடையவர் என்று எவ்வளவு ஆழமான நம்பிக்கைகள் இந்த அலறலிலிருந்து வெளிப் பட்டன! இந்த நம்பிக்கைகள் எல்லாம் எழுந்தமைக்குக் காரணமும் என்ன? பரமாத்மா, ஜீவாத்மாக்களில் பரவி எழுப்பும் உள் உணர்ச்சியே காரணமாகும்!

ஆகாயம் என்பது பூமிக்குமேலுள்ள, அண்ணாந்து பார்த்தாலும் 'இங்கே முடிகிறது.' என்று அளவிட்டுச் சொல்லிவிட முடியாத வெளிப்பரப்பாகும். சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் உலவும் வெளிப்பரப்புகளுக்கும்

அப்பால் நீண்டு கிடப்பது என்று மன அமைதி அடைய வேண்டும். இம்மண்டலம் காற்றும் உலவாத பாழ் வெளி யாகும்.

இந்தப் பாழ் வெளிக்கும் அப்பால் உள்ள மண்டலத்தில் தான், தன்னைக் காப்பாற்றக் கூடிய கடவுள் இருப்பதாக,

உள் உணர்ச்சியின் உதவி கொண்டு கதறினான், 'தெய்வமே துணை', என்று நம்பிய அத்திக்கற்ற மனிதன்! இப்படி இச் சாதாரண மனிதனும் உருவகப் படுத்திய மண்டலத்தையே 'பரம்' என்றும், 'பரம பதம்' என்றும் ஸ்ரீ வைணவ தரிசனம் குறிப்பிடுகிறது.

ஆகவே, ஊழி முதல்வனான இறைவன், தன்னை முதலில் வெளிப்படுத்திக் கொண்டிருக்கும் நிலை பரம் அல்லது பரம பதம். இந்த இறைவன் எல்லா உயிர்த் தத்துவங்களிலும், பொருள்களிலும் வியாபித்து, உட்பரவி, 'மலரினில் மணமும் போல' நிற்கிறான். உயிர்த் தத்துவங் களும் ஏனைய உயிரில்லாப் பொருள்களும் யாவும் அழிந்து விடும். பிரளய ஊழிக் காலங்களில், 'மூலப் பிரகிருதி' என்னும் நுண்ணிய அளவில், தன்னிடம் வந்து அடைக்கலம் ஆகி, மறுபடியும் முன்னைய வடிவில் வியாபிக்கத் தொடங்கும் வரை, தன் திருமேனியிலேயே அடக்கிக் கொண்டு காத்தருளுகிறான். இப்பெருங்குணங்களினால் தான் இறைவன், 'நாராயணன்' என்ற சிறப்புப் பெயரைப் பெறுகின்றான். அதாவது அசித்,சித் என்ற நாரங்களுக்கு அயனமாக விளங்குகிறான்.

இறைவனை அறிமுகப்படுத்தி அநுபவிக்க ஆரம்பிக்கும் கோதை தமிழ், முதல் பாசுரத்தில் அவனை நாராயணன் என்று குறிக்கின்றது. பரம் என்னும் முதல் நிலையில் எழுந்தருளியுள்ள இறைவன் நாராயணன். சகல பேறு அளிக்க வல்லவன் இவனே. பேறுகளிலும் உயர்ந்ததான 'எற்றைக்கும், ஏழேழ் பிறவிக்கும் (இறைவன்) அவன் தன்னோடு உற்றோமாய் ஆகி, அவனுக்கே நாம்ஆட்செய்ய, மற்றய நம்காமங்களை மாற்றி', சர்வ கால, சர்வ அவன் ஸ்தைகளிலும் அமைய வேண்டியதான கைங்கரிய புருஷார்த் தத்தையும், நாராயணனே அளிக்கவல்லவன்.

வில்லிபுத்தூர் விளக்கான ஸ்ரீ ஆண்டாள், இந்த அறிவுச் சுடரைக் கொளுத்துகின்றாள். திருப்பாவையின் முதப்

பாசுரத்தில், ''நாராயணனே நமக்கே பறை தருவான்!'' என்று அருளிச் செய்வதன் மூலம்!

பரமபதத் திரு நாட்டிலே தோன்றி, வளர்ந்து. மறையும் உடலுடன் வாழ முடியாது! இருளகற்றும், எரி கதிரோன் மண்டலத்திற்கு இப்பாலும் அப்பாலும் ஒருவாறு சிந்தனை செய்து ஊகித்துக் கொள்ளக்கூடிய வெளிப் பரப்பில் காற்று உலவுகிறது. பல் ஊழிக்கால அளவில் இக்காற்று குளிர்ச்சியடையும். குளிர்ச்சி அடைந்த நிலையில் மேகமாக மாறுகிறது; மேகம் மழைக்குக்காரணம். மழை பரந்த கடலாக உருவம் எடுக்கிறது. உயிர் இனத்தின் முதல் உணவு பால். உயிரினங்களுக்கு முதன் முதலில் உடலுக்கும், உயிரான ஆத்மாவிற்கும் உணவுத் தத்துவத்தை அளிப்பது பாற்கடலே! இவ்விதமான திருப்பாற் கடலில் இறைவன் இரண்டாவதாக எழுந்தருளி யுள்ளானாம். திருப்பாற் கடலிலே இறைவன் எழுந்தருளி இருக்கிறான் என்று சொல்லலாமா? சம மட்டமான திருப்பாற் கடலிலே, ஒய்யாரமாகச் சாய்ந்து படுத்துக் கொண்டானாம்! படுக்கையா? ஜல மண்டல உதவியால் உயிரினங்கள் தோன்றி சஞ்சரிக்க முடிவதால், மலைப் பாம்பை விடப் பெரியதான கடல் பாம்பின் உருவில் 'ஆதிசேஷன்' முதல் முதலில் அடிமைத் (கைங்கரியத்) தொழில் ஏற்று படுக்கையாகி விட்டானாம்!

இறைவன் திருவிளையாடல்களை, வளர்ந்து நம் வாழ்நாளிலேயே மங்கிப் போகும், சாதாரணக் கண்களால் பார்க்காதீர்கள்! சித்தம் கலங்கினால் சிதைந்து போகும் சிற்றறிவும ஊன்று கோலாகலாம்! ஆனால் உடல் கோ(கா)லாகாது! தூண்டு கோலாகலாம்! ஆனால் தூய சுடர் விளக்காகாது! மூன்றாம் பிறைச் சந்திரன் உள்ள திசையைச் சுட்டிக் காட்ட உதவும் சாதனமாகலாம்! ஆனால் சந்திரன் உள்ள தூரத்தை அறிந்து கூறும் அளவு கோலாக முடியாது!

திருப்பாற் கடலில் இறைவன் திருக்கண் வளர்ந்தருளு கிற இந்நிலைக்கு 'வியூகம்' எனப் பெயர்,

தோன்றி மறையும் உடலில் சேர்க்கை யில்லாமல் பரமபதத்தில் திகழும் நித்ய சூரிகட்குக் கவலைகள் இல்லை; குறைகள் இல்லை. ஆனால் உடல் சேர்க்கையுடன் கடலில் வாழ்கின்ற உயிரினங்களுக்குக் கவலைகள் உண்டு! குறைகள் உண்டு! ஒரு கஷ்டம், ஆபத்து என்றால் திருப்பாற் கடலில் கண் வளர்ந்தருளும் பரமனிடம்தான் கூப்பாடு போடலாம். பரமபதம் அடைந்து விட்டால், உடலும் அங்கே வராது. அதனால் ஏற்பட்ட துயரமும், தேவையும் அங்கே நம்மைத் தொடரா! எனவே பரமபதம் கும்பிடு போடும் இடம்! ஆனால் திருப்பாற்கடலோ கூப்பாடு போடும் இடம்!

பாவை நோன்பு என்பது, இறைவனுக்குத் தொண்டு செய்யும் பேற்றை விரும்பி, அடைந்து அவ்விதமே வாழ்வதாகும். இப்பாவை நோன்பு இயற்ற பல தேவை கள் ஏற்படுகின்றன. அதைவிட பல தேவைகளை அகற்றிக் கொள்ளவேணும், நாட்காலே நீராட மழைத் தேவனின் கருணையும், (ஐயமும், பிச்சையும் ஆம் தனையும் செய்து, உய்யும் வகையை எண்ணி இருக்க வேண்டும்.) தன் உடல் சுகங்களுக்காக நெய்யுண்ணாமலும் பாலுண்ணாமலும், (கண்களுக்கு) மையிட்டு எழுதாமலும், மலர் இட்டு முடியாமலும், செய்யாதன செய்யாமலும், தீய குறளை (கோள் சொல்லுவதை) (இறைவனுடைய கல்யாண குணங்களை அல்லாமல் இவைகளை விரும்பிக் கேட்கும் பிறரைத் தேடி, கூடுமானால் கழுத்தில் தமுக்கை யும் மாட்டிக் கொண்டு!) சென்று ஓதாமலும் இருக்க வேண்டும். சாமான்யகாரியங்களா இவைகள்! கோள் சொல்லாமல் கொஞ்ச நாள் இருந்து பார்த்தால் தெரியுமே!

இப்படி எல்லாம் நமக்கு வேண்டிய தேவைகளையும் ஏற்படுத்திக்கொண்டு காப்பாற்ற வேண்டிய நியமனங்களை யும் நமக்கு அருளும்படி எங்கே போய்க் கூப்பாடு போடலாம்?

பட்டர்பிரான் கோதை இரண்டாவது பாசுரத்தில் விடையளிக்கின்றாள். இத்தேவைகளைத் தரவும், (இதற்குக் குறைகளை அகற்றவும், பாவை நோன்பை நிறைவேற்றித் தரவும்)

இதோ, புதுவையர் கோன் விட்டு சித்தன் கோதை புகல்வதைக் கேளுங்கள்! வியூக நிலையில், "பாற்கடலுள் பையத்துயின்ற பரமன் அடிபாடி!" யார் காலில் விழ வேண்டும்? யார் காலைத் தொழவேண்டும்? அவன் எங்கு உள்ளான்? கேளிரோ! வையத்து வாழ்வீர்காள்! என்று பணிக்கின்றார். வையத்துள் (இங்ஙனம்) வாழ்வாங்கு வாழ்ந்தால், வானுறையும் தெய்வத்துள் (பரமபதத்தி லுள்ள ஸ்ரீமந் நாராயணனுடன் நித்ய சூரிகளாக எழுந்தருளி இருக்கும்படி) வைக்கப்படுவீர்கள்! இது பொய்யா மறை! தேவர் வாக்கு!

நாம் ஒன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைக்கிறது. சில சமயம் தெய்வம் ஒன்று நினைக்க, நாமும் ஒன்று நினைக்கிறோம்! நீர்ப்பரப்பில் திட்டைகள் ஏற்பட்டு நிலப்பரப்பாகி, நீரிலும், நிலத்திலும் ஜீவராசிகள் உருவெடுத்தபின், அசித் சம்பந்தத்தாலே அஞ்ஞானமும், அதன் அடியாக பாபமும், மலியலாயின. பொய் நின்ற ஞானமும், பொல்லா ஒழுக்கும், அழுக்குடம்புமான இந்நின்ற நீர்மை ஏற்பட்டபிறகு, தன் படைப்பின் பயன் வீணாவதைக் கண்ட இமையோர் (இறை ஞானத்தில் தலை சிறந்தவர்கள், அசுரர்கட்கு எதிர்த்தட்டில் வைக்கப் பட வேண்டியவர்கள்) தலைவனும் எந்நின்ற (எல்லாவித) யோனியுமாய்ப் பிறக்க வேண்டியதாயிற்று;

உலகை உய்விக்க இறைவனும் பத்து அவதாரங்கள் எடுத்தான். இப்படி இறைவன் அவதாரங்கள் எடுத்துத் திகழ்ந்த நிலைக்கு விபவம் என்று பெயர்.

மற்றய அவதாரங்களை விட, இறைவனுடைய திருவிக்ரம அவதாரத்திற்குப் பல தனிச் சிறப்புகள் உண்டு.

மேலும் ஒரு தனிச் சிறப்பும் கூறலாம்.

ஆகாயம், நிலம், கடல் பரப்பு இவைகளை எல்லாம் உள்ளடக்கி பரவிய அவதாரம் திருவிக்கிரம அவதாரமே! 'உன்னுடைய விக்கிரமம் ஒன்று ஒழியாமல் எல்லாம் என்னுடைய நாவகம்பால் மாற்றின்றி உரைத்துக் கொண்டேன்' என்று தன் தந்தையான வேயர் தங்கள் குலத்து உதித்த விட்டுசித்தர் பேசுவதைக் கேட்ட ஸ்ரீ ஆண்டாளும், இறைவனது விபவ நிலையை மூன்றாவதாகப் பாடும் போது, 'ஓங்கி உலகளந்த உத்தமன்' என்று மங்களாசாசனம் செய்தருள்கிறாள்!

இறைவனது வேறு ஒரு நிலை அந்தர்யாமித்வம். அதாவது 'எங்குமுளன் ஈசன்'. நம் கண்களுக்கும் ஏனைய புலன்களுக்கும் புலப்படாவிட்டாலும் அவன் இருக்கத்தான் செய்கிறான்! இரவில் சூரியனைப் பார்க்காவிட்டால், சூரியன் இல்லை என்று கூறுவதா? விஷ்ணு என்ற சிறப்புப் பெயர் ஸ்ரீமந் நாராயணனுக்கே உண்டு. விஷ்ணு என்றால் எங்கும் நிறைந்தவன் என்று பொருள்.

புலன்களுக்குப் புலப்படாத இறைவனின் இந்த அந்தர்யாமித்வநிலையை நமக்குத் தெளிய வைக்கவேணும். விட்டு சித்தன் தன் கோதை, வேதவாய்த் தொழிலாளர்கள் வாழும் வில்லிபுத்தூரில் அவதரித்தவள் அல்லவா? ஒரு உதாரணத்தைக் காட்டி, அறிவிப்பதற்காக. அருமையாக இறைவனின் அந்தர்யாமித்வ நிலையை விளக்குகின்றாள்.

மழை பெய்கிறது பார்க்கிறோம். ஆனால் அது எங்கிருந்து வந்தது? மழை ஆகாயத்தின் உயரத்தில் உலவும் மேகத்தில் இருந்து கொட்டுவதாகக் கொள்ளலாம். இந்த மேகம் எப்படி உருவெடுத்தது? உலகம் முழுவதும் பரவியுள்ள நீர்ப் பரப்பிலிருந்து கண்ணுக்குப் புலனாகாத நீராவிகள் எழுந்து, உயரக் கிளம்பி வானில் மேகங்களாக உலவுகின்றன! அவதாரம் எடுத்து, அவ்வப்போது மக்கள்

காணும்படி எழுந்தருளிய இறைவனும், மக்கள் காண முடியா அந்தர்யாமித்வ நிலையில், அவதாரங்களுக்கு முன்னும், பின்னும் எங்கும் எழுந்தருளிப் பரவியுள்ளான்!

இறைவனின் அந்தர்யாமித்வ நிலையை 'ஆழி மழைக் கண்ணா' என்று தொடங்கும் நான்காவது மழைப் பாசுரத்தில், உள்ளுறை பொருளாக வைத்துக் காட்டி, 'தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்து நீங்காத செல்வம்' நிறைய வேண்டுமென வாழ்த்துகிறாள், போகத்தில், வழுவாத புதுவையர் கோன் கோதை!

ஆற்றில் வெள்ளம்போகிறது. அனைவருக்கும் மகிழ்ச்சி. இப்படித்தான் மக்கள் கண்டு களித்தார்கள். இறைவன் விபவ நிலையில் பத்து அவதாரமெடுத்துக் கூராழி வெண் சங்கேந்தி விண்ணும் மண்ணும் உய்ய வந்தபோது அவதார காலங்களுக்குப் பிறகு, மக்களைத் தவிக்கவிட விரும்பாதவன் இறைவன். 'நாட்டினான் தெய்வமெங்கும்நல்லதோர் அருள் தன்னாலே!' இதனால், பலபல திவ்ய தேசங்களில் விக்கிரக உருவ வடிவில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியுள்ளானாம்! இத்திவ்ய தேசங்கள் ஆற்றில் வெள்ளம் அற்றுவிட்ட நிலையில் தேங்கின மடுக்கள் போல, மக்களுக்கு 'ஆற்றுப் பெருக்கற்று அடிசுடும் அந்நாளும், தம் ஊற்றுப் பெருக்கால் உலகு ஊட்டுகின்றனவாம்' பத்தி உணவளித்து! எனவே, நாம் கிளர் ஒளி இளமை கெடுவதன் முன்னம், வளரொளி மாயோன் மருவிய கோயில் சேவிக்க வேண்டுமென்று நியமிக்கின்றார் நம்மாழ்வார். மாறன் பணித்த தமிழ் மறைக்கு ஆறங்கம் கூற அவதரித்த அருள் மாரியாம் திருமங்கை மன்னனும், 'முற்ற மூத்துக் கோல் துணையா முன்னடி நோக்கி வளைந்து, இற்ற கால்போல் தள்ளி மெள்ள இருந்தங்கிளையாமுன்' வடக்கே வதரியிலிருந்து தென்கோடி குலுங்குடி வரை வணங்க வேண்டுமென்று பணிக்கின்றார்.

திவ்ய தேசங்களில் திருக்கோயில் கொண்டு இறைவன் எழுந்தருளியுள்ள நிலைக்கு 'அர்ச்சை' என்று பெயர்

பிறக்கும்போதே மணத்துடன் பிறப்பது திருத்துழாய். அங்ஙனமே, இறைவன் எடுத்த பத்து அவதாரங்களிலும், தேவகி—வசுதேவ தம்பதிகளுக்கு மகனாக, திருவாழி திருச் சங்கு முதலான திவ்விய ஆயுதங்களுடனே, ''தான் இறைவன்'' என்று வெளிப்படுத்திக் கொண்டே அவதரித்த பெருமை, வடமதுரையானுக்கே உரியது; ஆற்று வெள்ளத் தைப் பின்பு, அது தேங்கின மடுவில் காண்பது போல, விபவத்தில் அவதாரங்கள் மூலமாக எழுந்தருளிய இறைவனே, அர்ச்சை நிலையில் பின்புள்ளாரும் காணும்படி யாக எழுந்தருளியுள்ளான் என்பதைக் காட்டவே விபவமும் அர்ச்சையும் (மன்னு) சேர்ந்து மிளிரும் மாயனுடைய வடமதுரையையும், அதனைச் சார்ந்த தூய பெருநீர் யமுனைத் துறையையும், மங்களாசாசனம் செய்தருள் கிறாள் ஐந்தாவது பாசுரத்தில், ஐந்து குடிக்கு ஒரு சந்ததி யாய், ஆழ்வார்கள் தஞ்செயலை விஞ்சி நிற்கும் தன்மை யளாய், பிஞ்சாய்ப் பக்தியில் பழுத்த ஸ்ரீ ஆண்டாள்!

இங்ஙனமாக ஊழி முதல்வனான இறைவனது பரம், வியூகம், விபவம், அந்தர்யாமித்வம், அர்ச்சை என்ற ஐந்து நிலைகளையும், திருப்பாவையின் முதல் ஐந்து பாசுரங்களில் ஒழுங்கு முறையுடன் திருவாய் மலர்ந்து அருளியுள்ளாள் ஸ்ரீஆண்டாள். நம் பாதகங்கள் தீர்க்கவும், நமக்கு ஊழி முதல்வனான பரமன் அடி காட்டவும்! இதற்காக குன்றாத வாழ்வான வைகுந்தவான் போகம் தன்னை இகழ்ந்து ஆழ்வார் திருமகளாராய் அவதரித்த ஸ்ரீஆண்டாளுடைய 'தூய மலர்ப்பாதம் துணை நமக்கே!' என்று வாழ்த்துவோ மாக!

# “மடல் ஊர்தல்”

ஆத்ம உணவுக்காக ஹரி எனத்திருமாலையும், ஸ்ரீ எனத் திருமகளையும் கொள்கிறோம். தேக உணவுக்காக அரிசியைத் தினமும் உண்கிறோம்.

அப்படி உண்பதாக நினைக்க வேணும், அது ஒரு சமயம் சோறு அல்லது சாதமாக இருக்கும். ஒரு சமயம் இட்லியாக உருவெடுக்கும். ஒரு சமயம் தோசையாக உருவெடுக்கும். ஒரு சமயம் உப்புமாவாக உருவெடுக்கும். ஒரு சமயம் நொய்க் கஞ்சியாகவும் உருவெடுக்கும். இப்படிப் பல உருவங்கள் எடுப்பதன் மூலம் நமக்கு விருப்பத்தை ஊட்டுகிறது. இல்லையானால் ஒரே உருவத்தில் விடாது வரின் சுவை குறையலாம்.

சர்க்கரையைப் பல உருவத்தில் உண்டு, உவகை அடைகிறோம். பக்தி உணர்ச்சியும் உள்ளத்தின் தன்மைக்கு ஏற்ப உருவம் எடுக்கும். ஒரு சமயம் பக்தர்கள் ஞானத்தாலே பக்தர்களாகவே பாடுவார்கள். ஒரு சமயம் காதலியாக மாறிப் பிரேமத்தாலே பாடுவார்கள். இதைத் தலைவி பாசுரம் என்பார்கள்.

தலைவியின் தாயாக மாறிப் பாடுவார்கள். இதைத் தாய்ப் பாசுரம் என்பார்கள். தோழியாக மாறியும் பாடுவார்கள். இதைத் தோழிப் பாசுரம் என்பது உண்டு. பொதுவாகத் தலைவி பாசுரம் இருவகைப்படும்.

காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கிப் பாடுவதுஒருவகை. கோபித்து, பிணங்கி, ஊடிப் பாடுவது மற்றொரு வகை. இது இயற்கையா?

நம் புத்திர பாக்கியங்கள், நம் அன்பைப் பெற்ற குழந்தை கெஞ்சியும், கோபித்தும் பெறும், தெருவில் உட்கார்ந்து புரண்டு மடல் ஊரும், பிறர்புத்தி சொல்வார் கள். இப்படிக் கோபித்தும், ஊடியும் பாடும் வகையைச் சார்ந்தது ''மடல் ஊர்தல்''.

இதுவே சுவையான முறை!

தான் விரும்பிய பெண்ணை எளிதில் அடைய முடி யாமற் போனால், தன்திடமான தீர்மானத்தை வெளியிடும் வகையில் நாற்சந்தியில், பனை மடல்களால், ஆன குதிரை மீது ஏறிக் கொண்டு, தலைவியின் படத்தை ஏந்திக் கொண்டு ''சத்தியாக்கிரகம்'' செய்வான் தலைவன்.

இப்படி விஷயம் சந்தி சிரிக்கவும், வேண்டியவர்கள் விஷயம் அறிந்து தூது போய்த் திருமணம் முடிப்பார்கள். ஆழ்வார்களுள் மடல் ஊர்தலைப் பற்றிப் பேசியவர்கள் நம்மாழ்வாரான பராங்குசரும் கலியரான பரகாலருமே! தமிழ் இலக்கணப்படி ஆண்கள்தான், பெண்களை விரும்பி மடல் ஊர்வார்கள். இவ்விருவரும் எதிரிடையாக முயன் றார்கள். கலியுகத்தின் முதற்பாகத்தில் பிறவாமல் தற்காலத்தில் பிறந்திருந்தார்களெனில் இவர்களைப் புரட்சிக் கவிகள் எனப் போற்றிப் பாடலாம்! இந்தப் பேறு இவர்களுக்குக் கிடைக்கவில்லை! குழந்தைகள், கர்ப்பிணி கள், கிழவர்கள், சந்நியாசிகள் இவர்களிடம் போனால் கையுணவு கொண்டு போக வேணும். இவர்கள் விரும்பு வதையும் நிறைவேற்ற வேணும்.

படுத்த படுக்கையாக இருப்பவர்களுடைய விருப்பத் தையும் நிறைவேற்ற வேணும். பெருங்கிழவராகப் பெரிய

பெருமாள் என்னும் திருநாமத்துடன் படுத்தபடுக்கையாக உள்ள திருவரங்கன் தனக்கு ''மடல்'' கேட்டான்!

தாழை மடல் அல்ல! மடல் பாசுரம் கேட்டான். அதனைத் திரு மங்கை மன்னன் திருநறையூர் நம்பிக்கே தந்தார்! பரகால நாயகி ஏன் இப்படிச் செய்தாள்?

அரங்கனுக்கு மதிள்தான் கிடைத்தது!

திருவரங்கன்: ஐந்து குழி மூன்று வாசலுக்குள் படி தாண்டாப்பத்தினி, தனிப்புறப்பாடு உண்டு. Judicial Separation, Right to seperate maintenance, உற்சவரிடம் இரு தாயார்கள்! பங்குனி உத்தரத்தில் ஸ்ரீரங்க நாச்சியாருடன் இருத்தல், ஒரு நாள் உறையூர் நாச்சியாருடனிருத்தல் (தீப் பற்றியதும் இதனாலோ!) உள் ஆண்டாள் சந்நிதி! இதுதான் திருவரங்கனின் நிலை.

திருநறையூர் நம்பி: மருங்கே நிற்கும் மடந்தை. யாகம் நடத்துகிறார். தனிச்சந்நிதி கிடையாது. நாச்சியார் கோயில் எனப் பெயர். நாயகியைப் பின் தொடர்வான். நாயகியுடன் புறப்பாடு. மூலவர், உத்ஸவர் ஒரே தாயாருடன்தான். அதிலும் தாயார் ஓரடி முன்னாடி புறப்பாடு. Hen pecked husband.

போக மண்டபமான திருவரங்கம் கூடலுக்கு உகந்தது. ''சேவலொடு பெடை அன்னம் செங்கமல மலர் ஏறி ஊசல் ஆடி, பூ அணைமேல் துதைந்து எழு செம்பொடி ஆடி விளையாடும் புனல் அரங்கமே.''

திருநறையூர் ஊடலுக்கு உகந்த இடம்! ''பள்ளிக் கமலத்து இடைப்பட்ட பகுவாய் அலவன் முகம் நோக்கி நள்ளி ஊடும் வயல் சூழ்ந்த நறையூர் நின்ற நம்பியே''

பட்டர்: ஐய்யகோ! பெண்ணரசு நாடாயிற்றே! என் செய்கோம்.

"ஒரு மகள் தன்னை உடையேன், உலகம் நிறைந்த புகழால், திருமகள் போல வளர்த்தேன், செங்கண்மால் தான் கொண்டு போனான்''

எனவே, பாரெல்லாம் அன்றோங்கி நின்றளந்தான். நின்ற திருநறையூர் மன்று ஓங்க ஊர்வன் மடல்!

ஓர் அங்க நாடகம் : One act play

**சிறுகதைப் பகுதி : Short story**

**பாத்திரங்கள் : நடிகர்கள்**

1. எம்பெருமான்
   கூத்தாடிக் கண்ணன்
   அயன் ராஜ பார்ட்
2. தெரு மகா சனங்கள்
3. திருமங்கை மன்னன் தலைவி வேடம்
   அயன் ஸ்திரீ பார்ட்
4. திருத்தாயார்
5. கிழப் பாட்டிகள் 1 டஜன்
6. குறி சொல்லும் குறத்தி
   (ஆசாரியன்)
7. திருமங்கை மன்னன் மடநெஞ்சம்
8. 26 திவ்ய தேச எம்பெருமான்கள்
9. பனைமட்டைக் குதிரை!

**காட்சிகள்.**

1. தலைவி வீடு
2. நடுத்தெரு
3. வீட்டு முற்றம்
4. திருநறையூர் மணிமாடம்
5. 26 திவ்ய தேசங்கள்
6. நெடுந்தெரு.

இடம் ; தலைவி வீடு களம் 1

தலைவி : என் தனக்கு உற்றது தான்!
ஆர் ஆர் அயில்வேல்கண் அஞ்சனத்தின்நீறு அணிந்து,
சீர் ஆர் செழும் பந்து கொண்டு அடியாநின்றேன் நான்.

இடம்: நடுத்தெரு களம் 2

தலைவன் : நீர் ஆர் கமலம் போல் செம்கண்மால் என்று
ஒருவன்
பாரோர்கள் எல்லாம் மகிழப் பறை கறங்க.

இடம் : தலைவி வீடு களம் 3

நடிகர்கள் : வெறும் பரகாலரா?

அம் கமலத் தடவயல் சூழ் ஆலி நாடன்,
அருள்மாரி, அரட்டமுக்கி, அடையார் சீயம்,
கொங்குமலர்க் குழலியர் வேள்! மங்கை வேந்தன்,
கொற்றவேல்! பரகாலன்! கலியன்! பராக்.

வேடம் : திருமங்கை மன்னனாகி வருகிறார்!

தன் பெருமை கூறுகிறாள் தலைவி! இல்லை தன் ''கண்'' பெருமை கூறுகிறாள். இதற்குத் தப்ப முடியுமா பந்து! இந்தக் கண்ணிக்கு ஒரு போட்டிக் கண்ணன் தம்பட்ட மடித்து ஊர் ஒன்று கூட்ட வருகிறான்!

''சீர் ஆர் குடம் இரண்டு ஏந்திச் (a)
செழும் தெருவே (b)
ஆர் ஆர் எனச் சொல்லி
ஆடும் அது கண்டு (c)

இடம் : நடுத்தெரு களம் : 4

வாராயோ என்றார்க்குச்
சென்றேன் (d) என் வல் வினையால்'' (e)

கன்னப் பறை கறங்கக் கண்டவர் கண்களிப்ப; மன்றில் மரக்கால் கூத்து ஆடினான் காணேடி!

காரார் மணி நிறமும் கைவளையும் காணேன் நான்! (f)
ஆரானும் சொல்லிற்றும் கொள்ளேன்! (g)

(a) இவன் அழகுக்கு இரண்டு குடம் வேறு!

(b) செழிப்பாக இருந்த தெருவில் அல்லவா அமர்க்களம் செய்துவிட்டான்!

(c) தானாக ஆடிப் போயிருக்கலாம், யார் எனக்கு நிகர் எனச் சொல்லிக் கத்தி அழைத்தான்!

(d) நான் பந்து ஆடித்தான் இருந்தேன், சட்டை செய்ய வில்லை. வ லுக்கட்டாயமாகக் கூப்பிட்டார்கள்,

(e) போனது, என் தலைவிதி தான்! வேறு என்ன?

(f) என்ன நடந்தது என்றே தெரியாது! துணிப்பையும் பணப்பையும் போயின! மிச்சம்! என் உடல் உடலாக இல்லை. (உடைமைகள் உடைமைகளாக இல்லை.)

(g) யார் சொல்லி எப்படித் தேற முடியும்; சூர் வந்து குன்று எடுத்து ஆநிறை காத்த பிரான் கோவலனாய்க் கன்றுகள் மேய்த்துத் தன் தோழரோடு குழல் ஊதி ஊதிக் கலந்து உடன் வருவானைத் தெருவில் கண்டு 'என்றும் இவனை ஒப்பாரை நங்காய்' கண்டு அறியேன் ஏடீ வந்து காணாய், ஒன்று நில்லாவகை, கழன்று, துகில் ஏந்து முலையும் என் வசம் அல்லவே!

இடம் : வீடு களம் : 5

தாய் : அறிவு அழிந்து தீரா உடம்பொடு பேது உறுவேன் கண்டு இரங்கி, ஏர் ஆர் கிளிக்கிளவி எம் அனைதான் வந்து என்னைச்சீர் ஆர் செழும்புழுதிக்காப்பிட்டுச் செம்குறிஞ்சித் தார் ஆர் நறுமாலைச் சாத்தற்குத் தான் பின்னும்.

(கிளியிடம் கிளி மொழியிலே கொஞ்சும் அன்னை தமரடி நீறு கொண்டு அணிந்தாள்; தணியவில்லை— பயத்தால் பிரம்மாத்திரத்துடன்— தாம்புக்கயிற்றால் அநுமனைக் கட்டியது போல்)

'நேராதன ஒன்று நேர்ந்தாள்; அதனாலும்
தீராது என் சிந்தை நோய்! தீராது என் பேதுறவு!
வாராது மாமை அது கண்டு மற்று ஆங்கே!
ஆரானும் மூது அறியும் அம்மனை மார் சொல்லுவார்!

(கிழப்பாட்டிகள்)

(அன்னை தன் பரிவாலே செய்தாள், மசூதியில் வரிசையில் குழந்தைகளுடன் நிற்கும் தாயாரைப் போல; உடல் நோய் என வைத்தியம் செய்தாள்! பலன்; பெருமாள், பெத்த பெருமாள் ஆனகதை.)

''பாரோர் சொல்லப்படும்
கட்டுப் படுத்திரேல்
ஆரானும் மெய்ப்படுவன் என்றார்!''

(Public opinion, popular opinion)

(எவன் ஆனாலும் சரி, அகப்பட்டு விடுவான்! செய்தவன் மீது எவ்வளவு கோபம்!)

இடம் : முற்றம்

களம்-6

(கட்டுவிச்சி) ''அது கேட்டுக்

கார்ஆர் குழல் கொண்டைக்கட்டு விச்சி கட்டேறிச்
சீர் ஆர் சுளகில் சிலநெல் பிடித்து எறியா
வேராவிதிர் விதிரா மெய் சிலிராக் கை மோவாப்
பேர் ஆயிரம் உடையான் என்றாள். பேர்த்தேயும்!
கார் ஆர் திருமேனி காட்டினாள் கையதுவும்!
சிலருக்கு சில அவயவம் எடுப்பாக இருக்கும்.

(ஆதிவாசிகள் ; அறிவு மேன்மை இது தவறு நிறைந்த தானால் கைவிடப்பட்டிருக்கும்! காரணமானவன் உயர்வை அறிய உடம்பு சிலிர்த்தே விட்டது! என்ன பெயரைச் சொல்லுவேன்! எத்தனை பேரைச் சொல்லுவேன்!)

(பேரும் ஊரும் அநுபவிக்கிறதே நோக்கு; புடவையில் இருந்த கறுப்புப்பாகம் காட்டிக் குறித்தாள்.)

(பதினெட்டாம் படிக் கறுப்பனை நினையாதே அசாதாரணமான சக்ரபாணி என்னும் கோலம்குறிக்கிறாள். அவன் துஷ்ட நிக்ரகன். இவளுக்கு எந்த நோய் இருப்பினும் ஓட்டுவான்)

'சீர் ஆர் வலம்புரியே என்றாள் திருத் துழாய்த்
தார் ஆர் நறுமாலை கட்டுரைத்தாள் கட்டுரையா:
நீர் ஏதும் அஞ்சேல் மின்! நும் மகளை நோய் செய்தான்
ஆரானும் அல்லன், அறிந்தேன் அவனை நான்!
கூர் ஆர்வேல் கண்ணீர்! உமக்கறியக் கூறுகெனோ!

(ஒரு சுற்று வளர்ந்தாள் நாயகி, அவன் சிஷ்ட பரிபாலனனும் கூட! உலகைக் காப்பாற்றுகிறேன் என துளசி மாலை அணிந்தவன்-இவளையும் காப்பான் எனவே அஞ்சல் அஞ்சல்! அஞ்சல் என்று அருள்வான் அய்யன்.)

(எங்கோ இருக்கிற அவனா, இங்கே இருக்கிற இவளை இப்படிச் செய்வான் என்று வியக்கிறீர்களா?)

''ஆரால் இவ்வையம் அடி அளப்பு உண்டது தான்! (1)
ஆரால் இலங்கை பொடி பொடியா வீழ்ந்தது! (2)
மற்று ஆராலே கண்மாரி காத்ததுதான் (3) ஆழி நீர்
ஆரால் கடைந்திடப்பட்டது (4) அவன் காண்மின்!''

(15 வைபவங்களை Logical தொடர்பாகக் கூறுகிறாள்.)

1. அவன் காலடிபடாத இடமே இல்லை உலகில், எங்கும் அவன் ஆளுகை இருக்கும்!

தேவர்களுக்கு அபாயம் நேர்ந்தாலும் காப்பான்.

2. பூவுலகில் வருந்துவோரையும் காப்பான்! தன் நயந்தவரைக் காப்பான் இம் மனத்துக் கினியான்!

3. ஒருவருக்கு அல்ல, ஒரு கூட்டத்திற்கே வரும் இடரையும் காப்பான்.

4. கூட்டமாயிருந்தால் நல்லதும் கெட்டதும் கூடி விடுமே! இவன் பாத்திரம் அறிந்து உதவுவானா!

(கடல் கடைந்தாலும் கொடுப்பவர்க்குத்தான் கொடுப்பான்)

ஊர் ஆ நிரை மேய்த்து (5) உலகு எல்லாம் உண்டு
உமிழ்ந்தும்! (6)
ஆராத தன்மையன் ஆய் ஆங்கு ஒருநாள்ஆய்ப்பாடிச்(7)
சீர் ஆர் கலை அல்குல் சீர் அடிச் செம் துவர் வாய்
வாரார் வன முலையாள்! மத்தாரப் பற்றிக் கொண்டு
ஏர் ஆர் இடை நோவ எத்தனையோர் போதுமாய்

5. தேவர்க்கல்லால் ரொம்பவும் அடைதற்கரிய வனாக்கும். இவன் சௌலப்யனா!

"தந்தை தளை கழலத் தோன்றிப்போய் ஆய்ப்பாடி
நந்தன் குலமதலையாய் வளர்ந்தான் காணேடி!"

6. ஒன்றும் தெரியாத பச்சைக் குழந்தை போலும் உலகம் உண்ட பெருவாயன்; (நாயகி உடல் பெருக்கிறது!)

7. திருமங்கை மன்னன் Mass appeal Poet மக்கள்புலவர்! ஏதோ சொல்லுகிறாள் குறத்தி. முன் கற்ற கதைகளை ஒப்புவிக்கிறாள் என நினைந்த பெண்கள் குறிப்பறிந்து தினம் நடக்கிற குழந்தைச் சேஷ்டையைக் கூறுகிறாள். புகழேந்தி பெண்களுக்கு அல்லி அரசாணி மாலை பாடியது போல!

"சீரார் தயிர் கடைந்து வெண்ணெய் திரண்டதனை
வேர் ஆர் நுதல் மடவாள் வேறோர் கலத்திட்டு
நார் ஆர் உறியேற்றி நன்கு அமைய வைத்ததனை!

(சொல்லாமல், ரகசியமாக!)

விலக்கி எடுக்க முடியாத உறியை!

''போர் ஆர் வேல் கண்மடவாள் போம் தனையும்
பொய் உறக்கம்
ஒராதவன் போல் உறங்கி அறிவு உற்றுத்
தார் ஆர் தடந்தோள்கள் உள்ளளவும் கைநீட்டி
ஆராத வெண்ணெய் விழுங்கி அருகு இருந்த
மோர்ஆர் குடம் உருட்டி முன்கிடந்த தானத்தே!''

(ஆழ்வார்கள் பாசுரம் வெண்ணெய், வேதம் மோர்)

''ஒராதவன் போல் கிடந்தானைக் கண்டுஅவளும்
வாராத் தான் வைத்தது காணாள்!வயிறுஅடித்துஇங்கு
ஆர் ஆர் புகுதுவார்! ஐயர் இவர் அல்லால்!
நீர் ஆம்! இது செய்தீர் என்று ஓர் நெடுங்கயிற்றால்!
ஊரார்கள் எல்லோரும் காண உரலோடே''

(அறியாதார்க்கு ஆனாயனாகிப்போய் ஆய்ப்பாடித் தாழ்குழலார் வைத்த தயிர் உண்டான் காணேடி! 'இவளையும் இப்படித் திருடியும் போவான் அவன்!)

''தீரா வெகுளியள் ஆய் சிக்கெனஆர்த்து அடிப்ப
ஆரா வயிற்றினோடு ஆற்றாதான்!

(வண்ணக் கருங்குழல் ஆய்ச்சியால் மொத்துண்டு கண்ணிக்குறும் கயிற்றால் கட்டுண்டான்! காணேடி!)

''பத்துடை அடியவர்க்கு எளியவன் பிறர்களுக்கரிய
வித்தகன் மலர்மகள் விரும்பும்நம் அரும்பெறல்அடிகள்
மத்துறு கடைவெண்ணெய் களவினில்உரவிடை
ஆப்புண்டு
எத்திறம் உரலினோடு இணைந்து இருந்து ஏங்கிய
எளிவே

(8) அன்றியும்

''நீர் ஆர் நெடும் கயத்தைச் சென்று அலைக்க நின்று உரப்பி
ஓர் ஆயிரம் பணம் வெங்கோ இயல் நாகத்தை
வாராய்! எனக்கென்று மற்றதன் மத்தகத்துச்
சீர் ஆர் திருவடியால் பாய்ந்தான்''

(எந்தக் கொடிய விஷ நோயாக இருப்பினும் அவன் பாதம் பட்டாலே போதும்!

'பாம்பின் தலைமேலே—நடம் இடும் பாதத்தினைப் பணிவோம்!'—பாரதியார்)

(9)"தன் சீதைக்கு

நேர் ஆவன் என்றுஓர் நிசாசரி தான் வந்தாளைக்
கூர் ஆர்ந்த வாளால் கொடிமூக்கும் காது இரண்டும்
ஈரா விடுத்து; (10)அவட்கு மூத்தோனை வெந்நரகம்
சேரா வகையே சிலை குனித்தான்!(11)செம்துவர் வாய்
வார்ஆர் வனமுலையாள் வைதேகி காரணமா "

(மானமரும் மென்நோக்கி வைதேவி இன்துணையாக்
கான் அமருங் கல் அதர்போய்க் காடு உறைந்தான்
காணேடி!
வகை தெரியாமல், சிக்குண்டு கிடக்கமாட்டான்;
சிதை என்றும் சூர்ப்பணைகைஎன்றும் வித்யாசம் தெரிந்தவன்
இந்த வேதனைக்கு நரகமே தேவலை!")

தன் காதலியைக் காப்பாற்ற;

"ஏர் ஆர் தடந்தோள் இராவணனை ஈர் ஐந்து
சீர் ஆர் சிரம் அறுத்துச் செற்று உகந்த செம்கண்மால்
(எத்தனை தலை, தோள் இருப்பினும் சரி)
கேட்கக் கேட்க இனிக்கிறது நாயகிக்கு!)
(12)போரார் நெடுவேலோன் பொன்பெயரோன்
ஆகத்தைக்
கூர் ஆர்ந்த வள் உகிரால் கீண்டு குடல் மாலை!
சீர் ஆர் திரு மார்பின் மேல் கட்டி, செங்குருதி
சோராக்கிடந்தானைக் குங்குமத் தோள் கொட்டி
ஆரா எழுந்தான்!"

(க்ஷணத்திலே வந்து காப்பவன். வருவானோ! எவ்வளவு நேரம் ஆகுமோ! என்று கவலை கொள்ள வேண்டாம்!)

(13)''அன்றியும்
பேர் வாமனன் ஆய காலத்து மூ அடிமண்
தாராய்! எனக்கு என்று வேண்டிச் சலத்தினால்
நீர் ஏற்று உலகு எல்லாம்நின்றுஅளந்தான்மாவலியை''

(எந்தஜாலமும்செய்து அடியவரைக் காப்பாற்றுவான்)

(''கண்டார் இரங்கக் கழியக்குறள் உருவாய்
வண்தாரான் வேள்வியில் மண் இரந்தான் காணேடி'')

(14)''ஆராத போரில் அசுரர்களும் தானுமாய்க்
கார் ஆர் வரை நட்டு நாகம் கயிறு ஆகப்
பேராமல் தாங்கிக் கடைந்தான் திருத்துழாய்த்
தார் ஆர்ந்த மார்வன்''

(மண்ணால் கயிறு கொண்டு வானத்தை வில்லாக்கிக் காரியம் செய்வது போல இவள் கஷ்டத்தை என்னசெய்தும் காப்பாற்றுவான். தேன் வந்து பாயுது காதிலே, நாயகிக்கு)

(15)''தடம் மால் வரை போலும்
போர் ஆனை, பொய்கை வாய்க் கோள் பட்டு நின்று அலறி
நீர் ஆர் மலர்க் கமலம் கொண்டு ஓர் நெடுங் கையால்
நாராயணா! ஓ! மணிவண்ணா! நாகணையாய்!
வாராய்! என் ஆர் இடரை நீக்காய் என வெகுண்டு
தீராத சீற்றத்தால் சென்று இரண்டு கூறாக''

(எவ்வளவு நாள் நோயானாலும் தீர்த்து விடுவான்; பல காலம் துன்பப்பட்ட கஜேந்திரன் கதைபோல.)

''ஈரா அதனை இடர் கடிந்தான் எம் பெருமான்!
பேர் ஆயிரம் உடையான்! பேய்ப் பெண்டீர் நும் மகளைத்
தீரா நோய் செய்தான் என உரைத்தாள்''

(எத்தனை பேரைச் சொல்கிறது; ஆயிரம் ஆயிரமாகச் சொல்ல வேணும். அவனால் தவிர தீரா நோய் தந்தான்.

அவன் தான் நோய் செய்தான், அவன் தான் மருந்து, அவன்தான் வைத்தியன்; அவன்தான் குணமடைந்த பிறகு ஏற்படும் சுகம்.)

''சிக்கென மற்று

ஆரானும் அல்லாமை கேட்டு எங்கள் அம்மனையும்
போர் ஆர் வேற்கண்ணீர்! அவனாகில் பூந்துழாய்
தாராது ஒழியுமே! தன் அடிச்சி அல்லளே, மற்று!''

''ஆரானும் அல்லனே! என்று ஒழிந்தாள்!''

(தாய்க்கு விஷயம் தெரிந்து விட்டது; ஆனால் தீர்க்க முடியாதே அவளால், அவன் தான் தீர்க்க வேணும் அதை. சாத்தனா! அவன். அவனைப் போய் வேண்ட வேண்டுமா?)

''மட்டுவிக்கிமணி வண்டு முரலும் கூந்தல்
மடமானை இது செய்தார் தம்மை மெய்யே
கட்டுவிச்சி சொல் என்னச் சொன்னாள், நங்காய்
கடல்வண்ணர் இது செய்தால் காப்பார் ஆரே!''

''நான்; அவனைக்

கார் ஆர் திருமேனிக் கண்டதுவே காரணமாப்
பேராப் பிதற்றாத் திரிதருவன் பின்னையும்
ஈராப் புகுதலும், இவ்வுடலைத் தண்வாடை
சோரா மறுக்கும் வகை அறியேன் சூழ் குழலார்''

தலைவி: இடம்:பின்னால் பூங்கா.களம் 7

(அவள் பட்டபாட்டை நாம் பட வேண்டாம் அதிகமாக!)

''ஆரானும் ஏசுவார் என்னும் அதன் பழியை
வாராமல் காப்பதற்கு வாளா இருந்து ஒழிந்தேன்!''

(அடக்கினேன்! அடக்க முடிய வில்லை)

''வாராய் மட நெஞ்சே வந்து, மணிவண்ணன்
சீரார் திருத் துழாய் மாலை நமக்கு அருளித்

தாரான் தரும் என்ற இரண்டத்தில் ஒன்றதனை
ஆரானும் ஒன்னாதார் கேளாமே சொன்னக்கால்!''

(வேறு யாரும் துணை நிற்கவில்லை! அருமையான கட்டம்; நெஞ்சு விடு தூது என்பது அருமையான துறை!)

''ஆராயுமேலும் பணி கேட்டு, அது அன்று எனினும்,
போராது ஒழியாதே! போந்திடு நீ என்றேற்குக்
கார்ஆர் கடல் வண்ணன் பின் போன நெஞ்சமும்
வாராதே என்னை மறந்ததுதான்! வல்வினையேன்
ஊரார் உகப்பதே, ஆயினேன்!''

(நேரம் முழுவதிலும் அப்பாவி தன்னையே—உள்ளம்.)

''நீர் இருக்க மடமங்கைமீர்!கிளிகள் தாமிருக்க மது
கரம் எலாம்
நிறைந்திருக்கமட அன்னம் முன்னம் நிரையாய் இருக்க
உரையாமல் யான்
ஆர் இருக்கிலும் என் நெஞ்சம் அல்லது ஒரு வஞ்சம் அற்ற
துணை இல்லை என்று
ஆதரரத்தினொடு தூது விட்ட பிழை யார்இடத்து உரை
செய்து ஆறுவேன்
சீர் இருக்கும் மறை முடிவுதேடரியதிருவரங்கரை வணங்கியே
திருத்துழாய் தரில் விரும்பியே கொடு திரும்பியே வருதல்
இன்றியே
வார் இருக்கும் முலைமடந்தை உறை மார்பிலே பெரிய
தோளிலே
மயங்கி இன்புறமுயங்கி என்னை மறந்து தன்னையும்
மறந்ததே!''

(திருவரங்கக் கலம்பகம் பிள்ளைப் பெருமாள் அய்யங்கார்.)

''மற்று எனக்கு இங்கு
ஆராய்வார் இல்லை; அழல் வாய்மெழுகுபோல்
நீராய் உருகும் என் ஆவிநெடுங் கண்கள்

ஊரார் உறங்கிலும்தாம் உறங்கா; உத்தமன்தன்
பேர் ஆயினவே பிதற்றுவன்!
காரார் கடல் போலும் காமத்தர் ஆயினார்
ஆரே பொல்லாமை அறிவார்....''

நான் அவனைக் காரார் திருமேனி காணும் அளவும் (ஊர் ஊராக) போய்ச் (26 திவ்ய தேசங்கள் போகிறாள்)

(1) ''சீர் ஆர் திருவேங்கடமே! (2) திருக்கோவல்
ஊரே (3) மதிள் கச்சி ஊரகமே! (4) பேரகமே!
(5) பேரா மருது இறுத்தான் வெள்ளறையே! (6)வெஃகாவே
(7) பேராலி! (8) தண்கால்! (9) நறையூர் (10) திருப்புலியூர்
(11) ஆராமஞ் சூழ்ந்த அரங்கம்! (12) கணமங்கை
(13) கார் ஆர் மணி நிறக் கண்ணன் (மங்கை) ஊர்!
(14) விண்ணகரம்!
(15) சீர் ஆர் கணபுரம். (16) சேறை (17) திருவழுந்தூர்
(18) கார் ஆர் குடந்தை! (19) கடிகை (20) கடன் மல்லை!
(21) ஏர் ஆர் பொழில் சூழ் இடவெந்தை! (22) நீர் மலை!
(23) சீர் ஆரும் மால் இரும் சோலை! (24) திருமோகூர்!
(25) பாரோர் புகழும் வதரி! (26) வடமதுரை!
ஊராய எல்லாம் ஒழியாமே நான் அவனை
ஓர் ஆனைக்கொம்பு ஒசித்து, ஓர் ஆனை கோள்விடுத்த
சீரானை செம்கண் நெடியானைத் தேன்துழாய்த்
தாரானைத் தாமரை போல் கண்ணானை எண்ணரும் சீர்ப்
பேர் ஆயிரமும் பிதற்றிப் பெரும் தெருவே!
ஊரார் இகழிலும்; ஊராது ஒழியேன், நான்!
வார் ஆர் பூம் பெண்ணை மடல்!''

''நாணும் நிறையும் கவர்ந்து என்னை நல்நெஞ்சம்
கூவிக் கொண்டு
சேணுயர் வானத்திருக்கும் தேவபிரான் தன்னை
ஆணை என் தோழி! உலகுதோறு அலர் தூற்றி ஆம்
கோணைகள் செய்து குதிரியாய் மடல் ஊர்துமே!''
(திருவாய். 5-3-9)

KOVILOOR VEDANTA MUTT



(ஆற்றங்கரை அதனில் முன்னம் ஒரு நாள்
எனை அழைத்துத் தனி இடத்தில் பேசியதெல்லாம்
தூற்றி நகர் முரசு சாற்றுவேன் என்றே சொல்லி
வருவேனடி தங்கமே தங்கம்!)

### கண்ணன்—என் காதலன்

1. ஆசைமுக மறந்து போச்சே—இதை
ஆரிடம் சொல்வேனடி தோழி?
நேச மறக்கவில்லை நெஞ்சம்—எனில்
நினைவு முகமறக்க லாமோ?

2. கண்ணில் தெரியு தொரு தோற்றம்—அதில்
கண்ண னழகு முழுதில்லை;
நண்ணு முக வடிவு காணில்—அந்த
நல்ல மலர்ச் சிரிப்பைக் காணோம்.

3. ஒய்வு மொழிதலு மில்லாமல்—அவன்
உறவை நினைத்திருக்கு முள்ளம்;
வாயு முரைப்பதுண்டு கண்டாய்—அந்த
மாயன் புகழினை யெப்போதும்.

4. கண்கள் புரிந்து விட்ட பாவம்—உயிர்க்
கண்ணன் உரு மறக்க லாச்சு;
பெண்க ளினத்திலிது போலே - ஒரு
பேதையை முன்பு கண்ட துண்டோ?

5. தேனை மறந்திருக்கும் வண்டும்—ஒளிச்
சிறப்பை மறந்துவிட்ட பூவும்
வானை மறந்திருக்கும் பயிரும்—இந்த
வைய முழுது மில்லை தோழி.

6. கண்ணன் முக மறந்து போனால்—இந்தக்
கண்க ளிலிருந்து பயனுண்டோ?
வண்ணப் படமுமில்லை கண்டாய்—இனி
வாழும் வழி யென்னடி தோழி.

பெரிய திருமடல் :

''பாவியேற்கு
என் உறுநோய் யான் உரைப்பக் கேண்மின்! இரும்
பொழில் சூழ்
மன்னு மறையோர் திருநறையூர் மாமலை போல்
பொன் இயலும் மாடக் கவாடம் கடந்து புக்கு,
என்னுடைய கண்களிப்ப நோக்கினேன்—நோக்குதலும்
மன்னன் திருமார்பும் வாயும் அடியிணையும்
பன்னு கரதலமும், கண்களும், பங்கயத்தின்
பொன் இயல் காடு, ஓர் மணி வரை மேல் பூத்தது போல்
மின்னி ஒளி படைப்ப, வீழ்நாணும் தோள் வளையும்
மன்னிய குண்டலமும், ஆரமும் நீண்முடியும்,
துன்னுவெயில் விரித்த சூளாமணி இமைப்ப
மன்னும் மரகதக் குன்றின் மருங்கே—ஓர்
இன் இளவஞ்சிக் கொடி ஒன்று நின்றது தான்—
அன்னமாய், மானாய், அணிமயிலாய், ஆங்கிடையே,
மின்னாய், இளவேய் இரண்டாய் இணைச் செப்பாய்!
முன் ஆய தொண்டையாய்! கெண்டைக் குலம் இரண்டாய்
அன்ன திரு உருவம் நின்றது அறியாதே!
என்னுடைய நெஞ்சம், அறிவும், இனவளையும்
பொன் இயலும் மேகலையும் ஆங்கொழியப் போந்தேற்கு
மன்னும் மறி கடலும் ஆர்க்கும்; மதி உகுத்த
இன் நிலாவின் கதிரும் என் தனக்கே வெய்து ஆகும்
தன்னுடைய தன்மை தவிரத் தான் என் கொலோ''

''இது விளைத்த
மன்னன் நறும் துழாய் வாழ் மார்பன், மா மதிகோள்
முன்னம் விடுத்த முகில் வண்ணன்''

''வண்ணம் போல்
அன்ன கடலை மலையிட்டு அணை கட்டி
மன்னன் இராவணனை (சதுரங்க பலத்துடன்) மாமண்டு
வெம் சமத்து''

(சரித்திரங்களைப் பேசுகின்றாள்! தலைவி.)

“பொன் முடிகள் பத்தும் புரளச் சரம் துரந்து
தென் உலகம் ஏற்றுவித்த சேவகனை! ஆயிரக்கண்
மன்னவன் வானமும் வானவர் தம் பொன் உலகும்
தன்னுடைய தோள் வலியால் கைக் கொண்ட தானவனைப்
பின் ஓர் அரி உருவம் ஆகி எரி விழித்துக்
கொல் நவிலும் வெம்சமத்துக் கொல்லாதே; வல்லாளன்
மன்னும் மணிக்குஞ்சி பற்றி வர ஈர்த்து
தன்னுடைய தாள் மேல் கிடாத்தி, அவனுடைய
பொன் அகலம் வள் உகிரால் போழ்ந்து புகழ் படைத்த
மின் இலங்கும் ஆழிப் படைத்தடக்கை வீரனை;
மன் இவ் அகல் இடத்தை மாமுது நீர் தான் விழுங்கப்
பின்னும் ஓர் ஏனமாய்ப்புக்கு, வளை மருப்பின்
கொல் நவிலும் கூர் நுதிமேல் வைத்து எடுத்த கூத்தனை!
மன்னும் வடமலையை மத்தாக மாசுணத்தால்
மின்னும் இரு சுடரும் விண்ணும் பிறங்கு ஒளியும்
தன்னினுடனே சுழல மலை திரித்து ஆங்கு
இன் அமுதம் வானவரை ஊட்டி அவருடைய
மன்னும் துயர் கடிந்த வள்ளலை, மற்று அன்றியும்
தன் உருவம் ஆரும் அறியாமல் தான் அங்கு ஓர்
மன்னும் குறள் உருவின் மாணியாய் மாவலிதன்
பொன் இயலும் கேள்விக்கண் புக்கிருந்து போர் வேந்தர்
மன்னை, மனங்கொள்ள வஞ்சித்து
(நடை அழகு, சொல் அழகால்) நெஞ்சு உருக்கி
‘என்னுடைய பாதத்தால் யான் அளப்ப, மூ அடி மண்
மன்னா! தருக’ என்று வாய் திறப்ப மற்று அவனும்,
‘என்னால் தரப்பட்டது’ என்றலுமே அத்துணைக்கண்
மின் ஆர் மணிமுடி போய் விண் தடவ, மேல் எடுத்த
பொன்னார்கனை கழல் கால், ஏழ் உலகும் போய்க் கடந்து
அங்கு”

(கப்பலிலே பாதிபாக்கு போட்ட கதைபோல)
“ஒன்னா அசுரர் துளங்கச் செல நீட்டி,

மன்னு இவ் அகல் இடத்தை மாவலியை வஞ்சித்துத்
தன் உலகம் ஆக்குவித்ததாளானை
(நன்னெறி காட்டும் தாள்!
"முன்னம் குறள் உருவாய் மூவடி மண் கொண்டளந்த
மன்னன் சரிதைக்கே மாலாகிப் பொன் பயந்தேன்!")
"தாமரை மேல்
மின் இடையாள் நாயகனை, விண்ணகருள் பொன்மலையைப்
பொன்னி மணி கொழிக்கும் பூங்குடந்தைப் போர்விடையை
தென்னன் குறுங்குடியுள் செம்பவளக் குன்றினை
மன்னிய, தண்சேறை வள்ளலை மாமலர் மேல்
அன்னம் துயிலும் அணி நீர்வயல் ஆலி
என்னுடைய இன் அமுதை எவ்வுள் பெருமலையைக்
கன்னி மதிள் சூழ் கணமங்கைக் கற்பகத்தை
மின்னை இருசுடரை வெள்ளறையுள் கல்லறை மேல்
பொன்னை மரகதத்தைப் புட்குழி எம் போர் ஏற்றை
மன்னும் அரங்கத்து எம்மா மணியை வல்லவாழ்ப்
பின்னை மணாளனைப் பேரில் பிறப்பு இலியைத்
தொல் நீர் கடல் கிடந்த தோளா மணிச்சுடரை
(35 திவ்ய தேசங்கள் செல்கிறாள் தலைவனை நாடி)
என் மனத்து மாலை, இட எந்தை ஈசனை
மன்னும் கடல் மல்லை மாயவனை வானவர் தம்
சென்னி மணிச் சுடரைத் தண்கால் திறல் வலியைத்
தன்னைப் பிறர் அறியாத் தத்துவத்தை, முத்தினை
அன்னத்தை மீனை அரியை, அருமறையை
முன் இவ் உலகு உண்ட மூர்த்தியைக் கோவலூர்
மன்னும் இடைகழி எம் மாயவனைப் பேய் அலறப்
பின்னும் முலையுண்ட பிள்ளையை அள்ளல் வாய்
அன்னம் இரைதேர் அழுந்தூர் எழும் சுடரைத்
தென்தில்லைச் சித்திர கூடத்து என் செல்வனை
மின்னி மழை தவழும் வேங்கடத்து எம் வித்தகனை
மன்னனை மால் இருஞ்சோலை மணாளனைக்
கொல் நவிலும் ஆழிப் படையானைக் கோட்டியூர்

அன்ன உருவின் அரியைத் திருமெய்யத்து
இன் அமுத வெள்ளத்தை, இந்தளூர் அந்தணனை
மன்னும் மதிள் கச்சி வேளுக்கை ஆளரியை,
மன்னிய பாடகத்து எம்மைந்தனை வெஃகாவில்
உன்னிய யோகத்து உறக்கத்தை ஊரகத்துள்
அன்னவனை, அட்டபுயகரத்து எம்மான் ஏற்றை
என்னை மனம் கவர்ந்த ஈசனை, வானவர்தம்
முன்னவனை, மூழிக்களத்து விளக்கினை
அன்னவனை, ஆதனூர் ஆண்டு அளக்கும் ஐயனை
நென்னலை, இன்றினை, நாளையை நீர்மலைமேல்
மன்னுமறை நான்கும் ஆனானைப் புல்லாணித்
தென்னன் தமிழை, வடமொழியை, நாங்கூரில்
மன்னுமணிமாடக் கோயில் மணாளனை
நல் நீர்த் தலைச் சங்கம் நாண்மதியை, நான் வணங்கும்
கண்ணனைக் கண்ணபுரத்தானைத்; தென் நறையூர்
மன்னு மணிமாடக் கோயில் மணாளனைக்
கல் நவில் தோள் காளையைக் கண்டு ஆங்குக் கை தொழுது
என் நிலைமை எல்லாம் அறிவித்தால் எம்பெருமான்
தன்அருளும் ஆகமும் தாரானேல்—தன்னை நான்
மின் இடையார் சேரியிலும் வேதியர்கள் வாழ்வு இடத்தும்
தன் அடியார் முன்பும் தரணி முழுது ஆளும்
கொல் நவிலும் வேல் வேந்தர் கூட்டத்தும், நாட்டகத்தும்
தன் நிலைமை எல்லாம் அறிவிப்பன்; தான் முன் நாள்
மின்னிடை ஆய்ச்சியர் தம் சேரிக் களவின் கண்
துன்னுபடல் திறந்து புக்குத் தயிர் வெண்ணெய்
தன் வயிறு ஆர விழுங்கக் கொழும் கயல் கண்
மன்னும் மடவோர்கள் பற்றி ஓர் வான் கயிற்றால்
பின்னும் உரலோடு கட்டு உண்ட பெற்றிமையும்!
அன்னது ஓர் பூதம் ஆய் ஆயர் (இந்திர) விழவின் கண்
துன்னு சகடத்தால் புக்க பெருஞ்சோற்றை
முன் இருந்து முற்றத்தான் (வெட்கக்கேடென்ன) துற்றிய
தெற்றெனவும்;
மன்னர் பெரும் சபையுள் வாழ்வேந்தர் தூதனாய்

தன்னை இகழ்ந்து உரைப்பத் தான் முனநாள் சென்றதுவும்
மன்னு பறை கறங்க மங்கையர் தம் கண் களிப்பக்
கொல் நவிலும் கூத்தன் ஆய்ப் பேர்த்தும் குடம் ஆடி
என் இவன்? என்னப் படுகின்ற ஈடறவும் (சீர்கேடென்ன)
தென் இலங்கை யாட்டி; அரக்கர் குலப்பாவை
மன்னன் இராவணன் தன் நல் தங்கை, வாள் எயிற்றுத்
துன்னு சுடு சினத்துச் சூர்ப்பணகா, சோர்வு எய்திப்
பொன் நிறம் கொண்டு புலர்ந்து எழுந்த காமத்தால்
தன்னை நயந்தாளைத் தான் முனிந்து மூக்கு அரிந்து
மன்னிய திண்ணனவும், வாய்ந்த மலை போலும்,
(இதையும் ஒரு ஆண்பிள்ளைத்தனம்)
தன் நிகர் ஒன்று இல்லாத தாடகையை மாமுனிக்காத்
தென் உலசம் ஏற்றுவித்ததிண் திறலும்—மற்றிவை தான்
(நினைத்து முடியமாட்டாத)
உன்னி உலவா; உலகறிய ஊர்வன் நான்!
முன்னி முளைத்தெழுந்து, ஓங்கி ஒளி பரந்த
மன்னிய பூம் பெண்ணை மடல்!

சிறிய-பெரிய திருமடல், ஒப்பீடு

சிறிய திருமடல் I. பல பாத்திரங்கள்

1. கூத்தாடிக்கண்ணன்,
2. தெரு மகாசனங்கள்,
3. தலைவி,
4, திருத்தாயார்,
5. கிழப் பாட்டிகள்,
6. குறத்தி.

II. இடங்கள்—களங்கள்

1. தலைவி வீடு,
2. நடுத் தெரு,
3. வீட்டு முற்றம்,
4. திருநறையூர் மணி மாடம்,
5. 26 திவ்ய தேசங்கள்,

6. நெடுந் தெரு,

III. கண்ணன் தேடி வருகிறான்.
IV. கட்டுவிச்சி 15 நிகழ்ச்சிகளைக் கூறுகிறாள்.
V. திருத்தாயார், கட்டுவிச்சி, மனம்.
VI. குறை கூறல் இல்லை.
VII. தலைவி இகழ்ச்சிகளை அடுக்க வில்லை,

பெரிய திருமடல் I. பாத்திரங்கள்

1. நறையூர் நம்பி,
2. மஞ்சுள வல்லி,
3. நாயகி,
4. 35 திவ்ய தேச எம்பெருமான்கள்,
5. மின் இடையர் சேரி,
6, வேதியர் வாழ்விடம்,
7. தன் அடியார்,
8. வேல் வேந்தர் கூட்டம்.

II. களங்கள்

1. திருநறையூர் மணி மாடம்,
2. தலைவி வீடு,
3. 35 திவ்ய தேசங்கள்,
4. இடையர் சேரி,
5. வேதியர் வாழ்விடம்,
6. தன்னடியார் முன்,
7. தரணி முழுது

III. தலைவி தேடிப் போகிறாள்.

IV. தலைவி ஆறு நிகழ்ச்சிகளைக் கூறுகிறாள்,
V. இவைகள் கிடையாது.
VI. நான்கு இடங்களில் குறை கூறல்.
VII. ஆறு நிகழ்ச்சிகளைத் தலைவி கூறுகிறாள், சூர்ப்ப ணகை' தாடகை, தூது நடந்தமையும் பழித்தல்!

# "அவளும் இவளும்"

அவளும் இவளும் என்பது தலைப்பு! ஏதோ வண்டி தடம் புரளுமோ! என்ற அச்சம்! அவளும் இவளும் என்பதைப் படிக்கும் உங்கள் உள்ளங்கள் ''எவளும்—எவளும்'' என்பதை அறிய துடிக்கின்றன! திவளும்—திவளும்! என்ற தலைப்புடைய திருமங்கை மன்னன் பாசுரத்தைச் சேவிப்பின், இந்த ''அவளும்—இவளும்'' யார் என்பதை அறியலாம்!

திருமங்கை மன்னன் பாசுரத்தைச் சேவிப்போம்!

''திவளும் வெண் மதிபோல் திரு முகத்து அரிவை,
செழுங்கடல் அமுதினில் பிறந்த
அவளும் நின் ஆகத்து இருப்பதும் அறிந்தும், ஆகிலும்
ஆசைவிடாளால்
குவளை அம் கண்ணி கொல்லி அம்பாவை சொல்லு
நின் தாள் நயந்து இருந்த
இவளை உன் மனத்தால் என் நினைந்து இருந்தாய்,
இடவெந்தை எந்தை பிரானே!''

அவளும் இவளும் எனச் சுட்டி இரு பெண்மணிகளைப் பேசுகிறார் இப்பாசுரத்தில் மங்கை மன்னன்; மங்கைகளைப் போற்றிப் பேசுவதற்கு வல்ல மன்னன். ஐந்து அடைமொழிகள் தருகிறார் இருவருக்கும்!

1) திவளும் வெண் மதி போல் திருமுகத்தாள்—குவளை அம் கண்ணி!

2) அரிவை—கொல்லிஅம் பாவை!

3) செழுங்கடல் அமுதினில் பிறந்தவள்—நின் தாள் நயந்திருந்தவள்!

4) அவள்—இவள்

5) நின் ஆகத்து இருப்பவள்—அறிந்தும், ஆகிலும் ஆசைவிடாள்!

திருவிடவெந்தை திவ்ய தேசம் எழுந்தருளினார் திருமங்கை மன்னன். சுவாமி திரு நாமம் என்ன என விசாரித்தார். ''நித்திய கல்யாணர்'' என்றார்கள்!

அப்படியானால் பெருமாளுக்கு உகப்பாக 'இன்று ஒரு பெண்ணை சமர்ப்பிக்கலாமே' எனத் திருவுள்ளம் பற்றினார் ஆழ்வார்!

பெண்ணை அழைத்துக் கொண்டு போனால் பெருமாளுடைய திருக்கோலம் தூக்கி வாரிப் போட்டது. பெருமாள் ஏற்கனவே ஒரு பெண்ணைத் துடைமேலே வைத்துக் கொஞ்சிக் கொண்டிருக்கிறார்; தலைமேலே தூக்கி வைத்துக் கொண்டதாகவே தென்பட்டது.

திருமங்கை மன்னன் திருவிடவெந்தைப் பெருமாளுடன் பேசலுற்றார். ''என் மகளை அழைத்து வந்துள்ளேன்! இவள் ரூபலாவண்யத்தைக் கடாட்சம் செய்யுங்கள்''

''நான் இதோ அடைந்துள்ள பெண்ணை விடவா? இவள் முகத்தைப் பார்த்தாலே போதுமே!'' என்று பெருமான் மேலும் கூறுவார்'

''முகத்தள்''

சாமான்யமான முகமா? திரு சொட்டுகிற முகமல்லவா?

''திருமுகத்தள்''

திரு சொட்டுகிறது மட்டுமல்லவே! என்ன குளிர்ந்த முகம் மதி போல் திரு முகத்தள். சந்திர பிம்பமான முகம்

மட்டுமல்ல! சந்திரனில் களங்கமுண்டு; இவள் முகத்தில் ஒரே பிரகாசம் தான்! களங்கமே இல்லை பாரும்!

**''வெண் மதிபோல் திருமுகத்தள்''**

எவ்வளவு ஸ்னோ! எவ்வளவு பவுடர் போட்டால் இந்த களை வருமோ! வெறும் வெண்மதி முகமா இவளுக்கு!

''ஒளி விடா நின்றுள்ள—

திவளும் வெண் மதிபோல் திரு முகத்தாள்!''

ஆழ்வார் விட்டுக் கொடுக்கிறதாக இல்லை! ''பெருமானே! நீர் போற்றுகிற பெண்ணின் திருமுக மண்டலம் முழுவதையும் சேவிக்க வேண்டும்!—அவள் அழகை உணர!''

''என் மகளுடைய கண்ணை மட்டும் சேவித்து விட்டால் போதுமே! முகம் முழுவதையும் ஏற இறங்கப் பார்க்க வேண்டியதில்லையே!''

**''கண்ணி''**

அடடா! வெறும் கண்களா! அவைகள்! வடித்து விட்ட அழகு சொட்டுகிற கண்களல்லவா அவைகள்!

**''அம் கண்ணி''**

தயவு செய்து அக்கண்களை மலர்களென்று எண்ணி ஏமாற வேண்டாம் சுவாமி!

குவளைப் பூக்களின் கவர்ச்சியையும், மென்மையையும் குளிர்ச்சியையும் ஈர்த்துக் கொண்டு விட்டன! அவ்வளவே! அவைகள் குவளைகள் அல்ல!

**''குவளை அம் கண்ணி!''**

உடனே பெருமாள், தான் அடைந்துள்ள பெண்ணின் பெருமையைப் பேசினார்!

''இவளைப்பாரும்! இவள் அணங்கு தான், தெய்வப் பெண்!''— ''அரிவை''

நாலு கவிப் பெருமாள் மடக்குகிறார்!

"பெருமாளே, நீர் திருநாட்டை விட்டு மானிடவர் நாட்டிலல்லவோ வந்துள்ளீர்; உமக்கும் இங்கே பூவுலகப் பெண்ணல்லவா பொருத்தம்! என் மகளைப் பாரும்! பூவுலகில், தான் கண்ட எத்தனையோ அழகிகளை லட்சிய மாக மனதில் வைத்துச் சிற்பி செதுக்குகிறான், ஒரு பாவை யாக— அந்தப் பாவைக்கு ஈடு கட்டக்கூடிய அழகி என் மகளே!"—

"பாவை"

உலகில் உயர்ந்தது மலை! மலையில் ஐயிக்க முடியாதது கொல்லி மலை! இந்தக் கொல்லிமலையிலே மயக்குவதிலே முதன்மையாக விளங்குவது ஒரு பாவை! அந்தக் கொல்லிப் பாவைக்கும் ஈடு என்மகள் தான்!

"கொல்லிப் பாவை"

அடடா! கொல்லிப் பாவைக்கு ஈடு என்றா சொல்லி விட்டேன்! தவறு! தவறு! அந்தக் கொல்லிப் பாவையை விட அழகானவள் என் மகள்.

"கொல்லி அம் பாவை"

நான் காட்டும் இந்தப் "பாவை" எங்கே! இதற்கு எதிராக மோகிப்பதற்கு நீர் காட்டும் அந்த "அரிவை" எங்கே!

பெருமாள் மறுபடியும் பகடி ஆடுகிறார்! பெருமாள், ஆழ்வீர்! நாம் தூக்கிப் போற்றும் இப்பெண்ணை அப்படிச் சாமானியம் என்றா நினைக்கிறீர்? இவள் பூர்வோத்திரம் தெரியவில்லையா? இவள் அமுதுடன் பிறந்தவளாக்கும்—

"அமுதினில் பிறந்தவள்"

நீர் தினம் ஆயிரம் பாகவதர்கட்கு ஓராண்டுக் காலம் ததியாராதனம் செய்தவர். அதனால் அமுது என்றதும்

அமுது படியையும் சாற்றமுதையும் திருக்கண்ணமுதையும் நினைத்துக் கொண்டு அவையுடன் பிறந்தவள் என்று எண்ணி விடாதேயும்! அந்த அமுதுகள் ஒரு நாளைக்கு உயிரைக் காப்பாற்றலாம். 'ஒரு நாளைக்கு ஏல் என்றால் ஏலாய்!,' என்பதையும் பொய்யாக்கிச் சாமர்த்தியத்தை நிருபித்து உண்டால் ஒரு மாதத்துக்குமேல் உயிரைக் காவாது!''

இந்த அமுது சாகாத அமுதாக்கும்! ஏன்? மந்தர மலையை நாட்டிக் கடைந்த சமயம் கடலில் பிறந்த தாக்கும்! **''கடல் அமுதினில் பிறந்தவள்''**

வெறும் கடலா என்ன! சாட்சாத் திருப்பாற்கடலே தான்! **''செழும் கடல் அமுதினில் பிறந்தவள்!''**

ஆழ்வாருக்குச் சிரிப்பு வந்து விட்டது! ''பூ! இது ஒரு பீத்தலா? இவள் எங்கு பிறந்தால் என்ன? கடலில் அமுதம் அல்ல; விஷம் கூடத்தான் பிறந்தது! இவள் எப்படிப் பட்டவள் ஐயா! அதைச் சாதித்தருளும்!''

நான் கௌரவமான குடும்பத்தைச் சேர்ந்தவன்! என்பது மனுவில் ஒரு யோக்யதாம்சம்! (I belong to a respectable family)

''உன்னால் அக்குடும்பம் கௌரவம் அடைந்ததா?
அக்குடும்பத்தின் கௌரவத்திற்கு நீ செய்தது என்ன?''

என்பதுதான் கேள்வி! Have you made the family respectable. What is your contribution to the respectability of the family?

''சரி; நான் பெரிய இடத்துப் பெண்! இவ்வளவு கொண்டு வந்தேன்! இதுவா ஒரு பெருமை! அவள் குண நலன்கள் என்ன என்பதல்லவா கேள்வி! கனத்த நேச முண்டா என்பதும் கேள்வி! பெருமாளே என் மகளைக் கடாட்சியும்!''

"நான், 'கள்வனேன் ஆனேன்!
படிறு செய்து இருப்பேன்!
கண்டவா திரி தந்தேன் ஏலும்!'

என் மகளின், காதன்மை பெரிது; கையறவுடையள்!' மேலும், இவள்,

'உளங்களித்திருக்கும், உன்னையே பிதற்றும், உனக்கு அன்றி எனக்கு அன்பொன்று இலளாள்!' அலங் கெழு தடக்கை ஆயன்வாய் ஆம்பற்கு அழியும் என் உள்ளம் என்றும் "நயந்திருந்தவள்"

"இல்லை! இல்லை! பாதாதிகேசமான அடிமுதல் முடிவரைதான் உன்திருமேனி முழுவதும் நோக்க முடியாமல், உன் திருவடித்தாமரைகளையே நினைந்து நினைந்து நேசிக்கின்றாள்! உலகத்தை எங்கு நோக்கினும் அது உன் திருவடியால் அளக்கப் பட்டது என்று உணர்ந்து உன்மீது மோகமாக இருக்கின்றாள்: 'வளம்படு முந்நீர் வையம் முன் அளந்த மால் என்றும், மாலினம் ஒழியாள்; நின் தாள் நயந்திருந்தவள்"

பெருமாளுடைய இன்னுமொரு முயற்சி: "ஆழ்வார், நான் உகக்கும் பெண்ணின் பிறந்த இடத்தை ஒரு மேம்பாடாக் கொள்ளவில்லை நீர்! இவள் புகுந்த இடம் தெரியுமோ உமக்கு? வடிவாய் என் மார்பினில் வாழும் மங்கை காணும் அவள்!"

"என் ஆகத்து இருப்பவளே"

பெருமாளோடு தர்க்கப் பயிற்சியில் இறங்கித் தேர்ந்த ஆழ்வாரும் சளைக்கவில்லை.

ஆழ்வார் "பெருமாளே! "என் ஆகத்திருப்பவள்" என்று ஜம்பமாகப் பேசுகிறீர்! எத்தனை முறை தேவரீருக்கும் அவருக்கும் "லடாய்" நடக்கிறது! சமாதானப்படுத்தி வரும் நம்மாழ்வாரைக் கேட்டால் தெரிகிறது."

உங்களுடைய சச்சரவுகளை ஒட்டுக் கேட்டுப் பெரியாழ்வாரும்சாதித்துள்ளது உலகப் பிரசித்தியாயிறறே;

''தாமரையாளாகிலும் தன்னடியார் திறத்த கத்துச்
சிதகு உரைக்கும்!''

அப்போது தேவரீர்:

''என் அடியார் அது செய்யார்! செய்தாரேல் நன்று
செய்தார்!''

என்று சப்பைக் கட்டுச் சமாதானம் செய்வீர்!

இது மாத்திரமா? மற்ற இடங்களில் அல்லாமல் உமக்கு நடத்தியிருக்கிற மரியாதைகளும் தெரிந்த சமாச்சாரம் தானே!

சேர குலவல்லி நாயகியின் திருத்தகப்பனாரான குலசேகரர் பச்சை பச்சையாகச் சாதித்திருப்பதையும் கேளுங்களேன்!

''என்னுக்கு அவளை விட்டு இங்கு வந்தாய்?
இன்னம் அங்கே நட நம்பி! நீயே!
எற்றுக்கு நீ என் மருங்கில் வந்தாய்!
எம்பெருமான் நீ! எழுந்தருளே!''

இன்னுமொருவள் மங்களாசாசனம்:
அலங்காரத்தைப் பார்! மூஞ்சியைப்பார்!

''செய்ய உடையும், திரு முகமும், செங் கனி வாயும்
குழலும் கண்டு,
பொய் ஒரு நாள் பட்டதே அமையும் புள்ளுவம்
பேசாதே போகு நம்பீ!''

வா, வா; அடுத்தமுறை பார்க்கலாம்;

''இன்னம் என் கையத்து, ஈங் கொரு நாள்
வருதியேல் என் சினம் தீர்வன் நானே!''

பெருமாளே! என் மகள் தன்மை தெரியுமா? ''உம்மீது எப்போதும் ஆசை விடாள்''

'ஆம் உமக்குச் சந்தேகமாயிருக்கிறது!'

''உம் மீது ஆசைப்படுகிற என் பெண்;''

''திவளும் வெண் மதிபோல் திரு முகத்து அரிவை, செழுங்கடல் அமுதினிற் பிறந்த அவளும்;'' நின் திருப்பதத்தை நோக்கவில்லை, கவனிக்கவில்லை போலும் எனச் சந்தேகம் உமக்கு. இல்லை! இப்படிப் பூமிப் பிராட்டியார் உம் மீது எழுந்தருளியிருப்பதை நன்கு உணர்ந்தும், அவள் உம் மீது வைத்துள்ள ஆசையை விட வில்லை. **'ஆகிலும் ஆசை விடாளால்'!**

இன்னும் விண்ணப்பிக்கிறேன் கேளுங்கள்! பூமிப் பிராட்டியார் தங்களுடன் எழுந்தருளியிருப்பதுவே தான் காரணம் என் மகள் உம்மீது ஆசைவிடாமலிருப்பதற்கு.

பூமிப் பிராட்டி பெருமாள் பக்கலில் எழுந்தருளி யிருந்துமா நான் பெருமாளை இழக்க வேண்டும் என்று என் மகள் நினைக்கிறாள்!

பூமிப் பிராட்டி எழுந்தருளியிருப்பது தான் இவள் ஆசைப்படுவதற்குக் காரணம்! பூமிப் பிராட்டி உமது பக்கலில் எழுந்தருளியிருப்பதை அறிந்து; அவளை சாட்சி யாக உபயோகித்தே என் மகள் ஆசைவிடாமல் இருக்கும்.

**''அறிந்தும்; ஆகிலும் ஆசை விடாளால்''**

பெருமாளுக்குத் திகைப்பாகி விட்டது! என்ன நம்மோடு ஒரு பெண் சேர்ந்திருப்பதை அறிந்தும் என் மீது ஆசை விடாமல் இருக்கிறாளாமே ஆழ்வாரின் திருமகள். இவ்வளவு வேடிக்கையான விவாதங்களையும் இது வரை கவனித்து வந்த பூமிப் பிராட்டியாரே ஏசலானார்!

''ஆமாம் சுவாமி! அடியேனைச் சாட்சியாக வைப்பது நியாயம் தானே, பிரளயத்தில் அழுந்தி விட்ட என்னை மீட்டு எடுத்து, என் பக்கமாகத் தேவரீரது திருமுகத்தை நீட்டி, வார்த்தையாடிய திருக்கோலமாகத்தானே இன்னும்

இங்கும் இப்பொழுதும் எழுந்தருளியிருக்கிறீர்கள்! அதுதான் வராக சரம சுலோகம் என்று உலகமெல்லாம் பரவி விட்டதே!''

''அப்போது இப்படிச் சாதித்தருள வில்லையா?''

''யார் ஒருவர் என் திருவடிகளில் நல்ல தசையிலே ஒரு தரம் சரணாகதி செய்கிறார்களோ, அவர்கள் தம்முடைய அந்திம தசையிலே என்னை மறுபடியும் நினைக்க வேண்டாம். அப்படி நினைக்காவிட்டால் நானே அவர்களை அங்கீகரித்துப் பரமபதம் அழைத்துப் போவேன்; அப்பரமபதத்துக்கு அழைத்து வரும் அதிகாரிகளிடமும் காட்டித்தரேன்!''

''அதனால் தான் ஆழ்வாரின் மகள் ''உம் தாள்நயந்து'' என்னை சாட்சியாக வைத்து'' ''அறிந்தும் ஆகிலும் ஆசை விடாளாள் என்று இருக்கிறாள்!'' —இப்படி ஏச்சை முடித்தாள் பிராட்டி.

பெருமாள் தன் திருமுக மண்டலத்தையும் திருக் கண்களையும் ஆழ்வார் திருமகள் பக்கம் திருப்பிக் குளிரக் கடாட்சித்தார்; புன்னகையும் உண்டாயிற்று இரு தரப்பிலும்!

அவளும் இவளை அங்கீகரிக்கச் சொல்லுகிறாளே என்று பெருமாளுக்குச் சந்தோஷம்!

சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு நாலு கவிப்பெருமாளான ஆழ்வாரும், தூர இருப்பவரைச் சுட்டும் புறச்சுட்டாக பூமிப் பிராட்டியை ''அவள்'' என்றும் தன் மகளை அண்மையில் உள்ளவர்களைச்சுட்டும், அகச் சுட்டாக ''இவள்'' என்றும் பிரித்துத் தன் மகளை பூமிப் பிராட்டியை விட நெருக்கமாகப் பெருமாளிடம் சேர்க்கிறார் ''அவளும்; இவளும்:'' என்று! வராக சரமசுலோகத்தில் பெருமாளுடைய திருவுள்ளம் இருக்கிற படியை அநுபவித்த ஆழ்வார் மேலும் வாதிக்கிறார் சமத்காரமாக!

''நின் தாள் நயந்திருந்த என் மகளாகிய இவளை''

ஒரு முறையே சரணாகதி செய்தவர்களை எப்போதும் ரட்சிக்கக் காத்துள்ள உன்னுடைய பெரிய மனத்தாலே, கனிந்தமனத்தாலே, கருணை நிறைந்த மனத்தாலே எங்ஙனம் காரியம் கொள்ளலாம் என நினைத்திருந்தார்! சுவாமி!

''உன் மனத்தால் என் நினைத்து இருந்தாய்!''

நினைத்தது மாத்திரம் போதாது! பிராட்டி அறிய யாவரும் அறிய தேவரீர் திருவாக்கலே சா தித்தருள வேணும்.!

''சொல்லு!'' 'உன் மனத்தால் என் நினைந்து இருந்தாய், சொல்லு!''

பெருமாள் : என்ன ஆழ்வீர்! நாம் நினைத்தால் போதாதோ! வெளியிட்டுச் சொல்லவும் வேணுமோ!

ஆழ்வார்: நினைக்கிறதாக மட்டுமானால் தேவரீர் கலங்காப் பெருநகராய பரமபதத்திலேயே இருந்தருள லாமே!

''அங்கே வரமுடியாதவர்களும், உய்வதற்காகத்தானே தேவரீர் திருவிட வெந்தையிலே வந்து சந்நிதி பண்ணி யிருப்பது! காட்டாற்று வெள்ளம் போலன்றோ வராக அவதாரம் முதலான விபவங்கள்! அக்காலங்களுக்குப் பின் தோன்றினாரும் தேவரீர் திருவுள்ளமறிந்து உய்வதற்காகத் தானே, எக்காலத்தும் திருவிடவெந்தையிலே பூமிப் பிராட்டிக்குச் சரம சுலோகத்தை சாதித்தருளும் திருக் கோலத்துடன் வராக நயினாராகத் திருவிட வெந்தையிலே எழுந்தருளியிருப்பது!''

''இடவெந்தை எந்தை!''

இட வெந்தையில் எழுந்தருளி சந்நிதி பண்ணியிருப்பதால். என் மகளை அங்கீகரித்தருளும்—"பிரானே!"

"இடவெந்தை எந்தை! பிரானே!"

ஏதோ நல்ல விஷயங்களைக் கேட்கலாம் என்று இவ்விடம் வந்தோம்! சினிமாவில் இருப்பது போலல்லவா உணர்ச்சிவருகிறது, இந்தப் பிரசங்கத்தைக் கேட்கும் போது! பிரசார பாணியிலே மக்களைக் கவருவதற்காக என்பது ஒன்று— மிகச் சிறந்தது.

ஜனங்களுக்குச் சொல்லுவதை அவர்களுக்கு ரசிக்கும் படிச் சொல்ல வேணும். ஆரோக்கியத்திற்கு வேப்பிலை உருண்டையைத் தரவேணும்! முடிகிற காரியமா, சுலபமாக! மேலே வெல்லப் பூச்சு செய்து அதையே உள்ளே தள்ளி விடலாம்! அது போலத்தான் ஆழ்வார்கள் காதல் கலந்து பாடுவதும்! இன்னொரு காரணமும்!

ஞான தசை: ஒரு சமயம் பக்தர்கள் ஞானத்தாலே பக்தர்களாகவே பாடுவார்கள்!

பிரேம தசை : ஒரு சமயம் காதலியாக மாறிப் பிரேமத் தாலே பாடுவார்கள்;இதைத் தலைவி பாசுரம் என்பார்கள்.

தோழியாகவும் மாறிப் பாடுவார்கள்! இதைத் தோழிப் பாசுரம் என்பார்கள்.

தலைவியின் தாயாகவும் மாறிப் பாடுவார்கள். இதைத் தாய்ப்பாசுரம் என்பார்கள். காக்கை வாயிலும் கட்டுரை கொள்ளும் இப் பெரியார்கள், தங்கள் வாயிலிருந்து வரும் பாடல்களில் மிக உயரிய தத்துவங்களை வைத்தே பாடு வார்கள்.

அறு வகைப் பிரபந்தங்களாகவும், ஆயிரத்துக்கும் மற்பட்ட பாக்களாகவும் அருளிச் செய்துள்ள திருமங்கை மன்னனின் பிரசாரத்தை எல்லாம் சுருக்கி அவரே தருவது இதுதான்!

“எனக்கு என்றும் தேனும் பாலும் அமுதுமாயத் திருமால் திருநாமம் நானும் சொன்னேன், நமரும் உரைமின் நமோ நாராயணமே!”

“நாயகன் திருமால்” ’அவன்நாயகிகள் நாம் என்பதை உறுதிப்படுத்துவது எட்டிழையாய்—மூன்று சரடாய் இருக்கும் பெரியதிருமந்திரமே-“ஓம் நமோ நாராயணா”என்பது.

தலைவி தலைவனை அடைய முயல்கிறாள்! ஆத்மா பரமாத்மாவான நாராயணனை அடைய முயல்கிறது. எனவே தலைவி பாசுரமெல்லாம் நாராயண சப்தமாக இருக்கும்.

நாயகியையும் நாயகனையும் சேர்த்து வைக்கிறவள் தோழி; இவ்விருவரின் உறவை தெரிவிக்கிறவள். எனவே தோழிப் பாசுரங்கள் சம்பந்த ஞானத்தை வெளிப்படுத்தும், பிரணவமான “ஓம்” என்னும் பதத்தின் விரிவுரையாக இருக்கும்.

நாயகனைச் சேரத் துடிக்கும் நாயகியின் நிலையை அறிந்து தன் மகள் கட்டுமீறிப் போகக் கூடாது என்றும், நாயகனே வந்து அங்கீகரித்தலே முறைமை என்பதையும் கூறுபவள் தாய்.

எம்பெருமானே தஞ்சம் என்று நாம் இருக்க வேணும். நமக்கு நாம் உரியோம் அல்லோம் என்று உணர்ந்து அவன் அங்கீகரித்தலை எதிர்நோக்கி இருக்கவேணும் என்பது தான் நமப்பதத்தின் பொருள்.

எனவே தாய்ப்பாசுரம் நமப்பதத்தின் பொருள். திருவிடவெந்தையில் திருமங்கை மன்னன் அருளிய பாசுரங்கள் தாய்ப்பாசுரங்கள். நாயகனைச் சேரத்துடிக்கும் தன் மகளின் நிலைமையை வர்ணிக்கும் மங்கை மன்னன் பாடல்கள் இலக்கியத்தின் சிகரம் தான்,

தன் மகள் நிலைமையைத் திருநெடுந்தாண்டகத்தில், மடலில் பல பாசுரங்களால் விவரிக்கிறார். இங்குப் பத்துப் பாசுரங்கள் ''இவளா''கிற வியாஜியத்தாலே கொள்ளை கொள்ளையாகப் பாசுரங்கள் உள. ''அவளா''கிற பிராட்டியைப் பற்றிப் பாக்களைத் தேடிப் பிடிக்க வேண்டும்,

தன் மகள் நிலையைக் கூறுகிறார், மங்கை மன்னன்.

''போந்த வெண் திங்கள் கதிர் சுடமெலியும்;
பொருகடல் புலம்பிலும் புலம்பும்,
மாந்தளிர் மேனி வண்ணமும் பொன்னாம்,
வளைகளும் இறை நில்லா;''

ஏன் இப்படியிருக்கிறாள்?''

''ஓதிலும் உன் பேர் அன்றி மற்று ஓதாள்,
உருகும் நின் திரு உரு நினைந்து,
காதன்மை பெரிதுகையற வுடையள்!''

இதனால் கட்டுமீறிப் போகிறாளாம் தன் மகள்!

''தன் குடிக்கு ஏதும் தக்கவா நினையாள்!
வளங்கனி பொழில் சூழ் மாலிரும் சோலை மாயனே!
என்று வாய் வெருவும்!
அலங்கெழுதடக்கை ஆயன் வாய் ஆம்பற்கு அழியுமால்
என் உள்ளம் என்னும்
புலங்கெழு பொரு நீர் புட் குழிபாடும் போதுமே நீர்
மலைக்கு என்னும்!''

தன் மகள் அக்கம் பக்கம் பாராமலும் சமய, சந்தர்ப்பம் தேராமலும் துடிப்பதைத் தெரிவித்துப் பெருமானின் திருவுள்ளத்தைத் தெரிவிக்கிற—வேண்டுகிற பாடலே இது!

''திவளும் வெண்மதி போல் திருமுகத்து அரிவை
செழுங்கடல் அமுதினில் பிறந்த
அவளும் நின் ஆகத்து இருப்பதும் அறிந்தும் ஆசை
விடாளால்

குவளையங் கண்ணி கொல்லியம் பாவை நின்தாள்
நயந்திருந்த
இவளை உன் மனத்தால் என் நினைந்திருந்தாய்!
(சொல்லு)
இடவெந்தை எந்தை பிரானே!''

முற்று ஆராவனம் முலையாள் பாவை மாயன் மொய்
அகலத்துள் இருப்பாள் அஃதும் கண்டும்
அற்றாள்; தன் நிறைவு அழிந்தாள் ஆவிக்கின்றாள்; அணி
அரங்கம் ஆடுதுமோ! தோழீ! என்னும்
பெற்றேன் வாய்ச் சொல் குறையும் பேசக் கேளாள், பேர்
பாடித் தண் குடந்தை நகரும் பாடி
பொன் தாமரைக் கயம் நீர் ஆடப் போனாள் பொருவு
அற்றாள் (என் மகள்) உம், பொன்னும் அஃதே?''

திரு விடவெந்தைக்கு எழுந்தருளி— எம்பெருமானைச் சேவித்ததும் திருமங்கை மன்னனுக்குப் பளிச்சென்று ஒரு ஞாபகம் உண்டாகிறது. பொதுவாக பிராட்டியின் ஸ்தானம் வலப்பக்கமாயிருக்கச் செய்தேயும், இங்கு இடப்பக்கத்தில் எழுந்தருளச் செய்திருப்பது எதற்காக?

முக்கியமான விஷயம் சாதித்தருள்வதற்காக பிராட்டியை (சங்கு-ஞானம்) இடப்பாகத்தில் எழுந்தருள் வித்து அவளுடைய வலது திருச் செவியில் பெருமாள் வார்த்தையாடுகிறார்,

இப்படித் தம்முடைய வலது திருச் செவியில் கூட பெருமாள் முன்பு திருமணம் செய்கையிலே வார்த்தை யாடியது ஞாபகம் வந்து விட்டது.

அப்போதும் பிராட்டி சமேதராக எழுந்தருளினார் பெருமாள்! இங்கு நித்ய கல்யாணராகத் திகழ்கிறார். அங்கும் திருமணக் கோலத்துடன் தான் சேவை சாதித்தார்.

தம் வலது திருச் செவியைத் தாழ்த்தச் சொல்லி ஓதியது பெரிய திருமந்திரம். இதுவரையில் கண்டதே

காட்சி, கொண்டதே கோலம் என்றிருந்தார் மங்கை மன்னன், தன் உடம்பைக் கருவியாக்கி தன் முயற்சியாலே எல்லா புருஷார்த்தத்தையும் அடையலாம் என்றிருந்தார் ஆழ்வார். தன் தேகத்தாலே புருஷார்த்த லாபம் கிட்டா தென்று உபதேசம் பெற்றதும் அறிந்து,

''சேமமே வேண்டித் தீவினை பெருக்கித் தெரிவையர்
உருவமே மருவி
ஊமனார் க்ண்ட கனவிலும்பழுதாய் ஒழிந்தன கழிந்த
அந்நாள்கள்!''

என்று, தான் இன்றுவரை இருந்த சுயசரிதையை முடிக்கிறார்.

தன் தேகத்தால் செய்யும் முயற்சிகளை விட்டு, பரமாத்மாவுக்கு ஆட்பட்டது ஆத்மா என்று ஆத்ம சமர்ப்பணம் செய்து உகந்தார் பெரிய திருமந்திர உபதேசத்தாலே!

''தெள்ளியேன் ஆனேன்! செல்கதிக்கு அமைந்தேன்,
சிக்கெனத் திருவருள் பெற்றேன்!
உள்எலாம் உருகிக் குரல் தழுத்து ஒழிந்தேன்! உடம்புஎலாம்
கண்ணநீர் சோர!
நள் இருள் அளவும் பகலும் நான் அழைப்பன்! நாராயணா!
என்னும் நாமம்!''

திருமந்திர பலத்தால் இறைவனை அடைய வேண்டு வதற்கு ஆத்ம சமர்ப்பணம் செய்யவேணும்.

இதற்கு ஆத்மாவைத் தக்க பரிபக்குவமான நிலையிலே வைத்திருக்க வேணும். இது அவ்வளவு எளிதல்ல! எப்போதும் சுலபமு மல்ல! திருமந்திர பலத்தால் எம்பெருமானை அடைவதை விட சுலபமானவழிதுவயத்தால் அடைவதாகும்.

துவயம் என்பது:

எம்பெருமானும் பிராட்டியும் சேர்த்தியிலே எழுந்தருளியிருக்கும் நிலையில் பிராட்டி மூலமாக, பிராட்டி புருஷ காரத்துடன், எம்பெருமானைச் சரணடைவதாகும். இதைத் தான் இங்கு கூறுகிறார், திருமங்கை மன்னன்!

பூமிப் பிராட்டியை இடப்பாகத்தில் அணைத்த வண்ணம் எழுந்தருளியுள்ள எம்பெருமானே! உலகில் எல்லாவற்றுக்கும் தஞ்சம் நீரே எனக் காட்டும்;

''இடவெந்தை எந்தை பிரானே!''

மகள் என்பது வேறு யாரும் இல்லை; திருமங்கை மன்னனே (ஆத்மாவே) தான்:

''குவளையங் கண்ணி! கொல்லியம் பாவை!''

திருமங்கை மன்னனாகிய மகள் (ஆத்மா) என்ன சொல்லுகிறாள்!

பிராட்டி மூலமாகப் பெருமாள் மீது தன் பத்தியை, சரணாகதியை வெளியிடுகிறாள்!

''திவளும் வெண்மதி போல் திருமுகத்து அரிவை
செழுங் கடல் அமுதினில் பிறந்த
அவளும் நின் ஆகத்து இருப்பதும் அறிந்தும்
ஆகிலும், ஆசை விடாளால்!''

பிராட்டியும் ஒரு சமயம் அநுகூலமாக இராமற் போகலாம். ''தன்னடியார் திறத்து அகத்துத் தாமரையாள் ஆகிலும் சிதகு உரைக்கும்!''

எல்லா தர்மங்களையும், எல்லா நல்வழிகளையும் விட்டு விட்டு என்னையே சாதனமாகவும், சாதனையாகவும் பற்றவேண்டும் என்று இறைவன் சரமசுலோகத்தில் அருளிச் செய்கிறான்.

''ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய மாம் ஏகம் சரணம்வ்ரஜ!''

சரம சுலோகத்தால் ஈஸ்வரனாலே பேறு என்று நிர்ணயம் !

தன்னையே உபாயமாகக் காட்டியருளினான் அர்ச்சுனனுக்குக் குருக்ஷேத்திரத்திலே !

''கையும் உழவு கோலும்,
பிடித்த சிறு வாய்க் கயிறும்
சேனா தூளி தூசரிதமான திருக்குழலும்
தேருக்குக் கீழே நாற்றின திருவடிகளுமாய்
நிற்கிற சாரத்ய வேஷத்தை
'மாம்' என்று காட்டுகிறான் !''

குருக்ஷேத்திர தரிசனம் பெறாதவர்கள் உய்யும்படி.

திருவரங்கம் திருவிடவெந்தை முதலான சகல திவ்ய தேசங்களிலும்;

''நாட்டினான் தெய்வம் எங்கும் நல்லது ஓர் அருள் தன்னாலே!''

திருவிடவெந்தை முதலான இங்கே அர்ச்சாவதாரத்தில், நமக்குச் சரணடைய உபகாரமாக இருக்கின்றான்.

''திருக்கையிலே பிடித்த திவ்ய ஆயுதங்களும் வைத்து அஞ்சல் என்ற கையும், கவித்த முடியும், முகமும் முறுவலும் ஆசன பத்மத்திலே அழுந்தின திருவடிகளுமாய் நிற்கிற நிலையே நமக்குத் தஞ்சம் !''

எனவே திருமங்கை மன்னன் சரம சுலோகத்தை அநுசந்தானம் செய்யும் வகையில் திருவிடவெந்தை எம்பெருமான் திருவடிகளில் சரணாகதி செய்கிறார் !

''நின் தாள் நயந்து இருந்த இவளை''

மார்பிலே, மனத்தகத்ததே கைவைத்து 'மாம்' என்று காட்டிய எம் பெருமானைப் கேட்கிறார் !

"உன் மனத்தால் என் நினைந்திருந்தாய் !
சாதித்தருள வேணும் சுவாமி ! "சொல்லு"

எனவே இப்பாசுரம் தாய்ப்பாசுரமாக நமப் பதத்தின் பொருளையும், பிராட்டியைக் குறித்து முதலில் பேசுவதால் துவயத்தின் பொருளையும் எம்பெருமானின் திருவடிகளைப் பற்றி சரணாகதி செய்வதால் சரம 'சுலோகத்தின் பொரு ளையும்' குறிப்பதாகக் கொள்ளலாம் !

.........

## மார்கழி நீராட மகிழ்ந்து!

திருமணநாள்: பொழுதும் விடிந்து மங்கள வாத்யங்கள் முழங்குகின்றன. பிள்ளையின் தகப்பனார் முன் ஜாக்ரதை யாக ஏற்பாடு செய்யாத தன் தவறை உணர்ந்தார். திருமாங்கல்யம் வாங்கிவர நகைக் கடைக்கு ஓடினார். கடைக்காரர் சரியான நேரத்தில் திறக்கவில்லை இது வியாபாரத்திற்கு அழகல்ல என்று 'ரகளை' கிளப்பினார். கடைக்காரர் சேதி தெரிந்து ஓடி வந்தார். செய்து வைத்து விற்கும் திருமாங்கல்யத்தை விற்க; தகப்பனாரும் வாங்கிக் கொண்டு ஓடிவந்தார்.

கல்யாணப் பந்தலில் காலடி வைத்ததும் மனைவி பார்த்துச் சிரித்தாள்! இவர் விஷயம் தெரியும் அவளுக்கு; திருமணம் நிச்சயம் ஆனது அறிந்த தெருக் கோடியிலிருந்த பொற்கொல்லர் ஓடிவந்து மனைவியைக் கண்டார். நல்ல நேரத்தில், வீட்டுப் புராதனப் பொன்னைக் கொடுத்து, சுப நாளில் திருமாங்கல்யத்தை செய்யச் செய்து, கோயில் மஞ்சட்காப்பு அணிவித்து, பூசித்து வைத்திருந்தாள். குடும்பம் வாழவேணுமென்று இவ்வளவு ஆர்வம், ஏற்பாடு அவளுக்கு! ஏலத்தில் எடுத்த பொன்னாகவும், திங்கான நேரத்தில் செய்து வைத்த திருமாங்கல்யமாகவும் இருக்கக் கூடாதல்லவா?

விஷயம் இப்படியேதான் இருக்கிறது 'பெரிய' இடத்திலும்! சீதை இலங்கையில் இருக்கிற விஷயத்தைக் கிஷ்கிந்தையிலேயே வந்து தெரிவிக்கிறார் அநுமன். கடல்

மீது பாலம் கட்டும் விஷயத்தில் சமுத்திர ராஜன் மீது அங்கேயே, அப்போதே கவனம் போகவில்லை ராமருக்கு. பாலம் கட்டப் பாறைகளையும், குரங்குப் படைகளையும், கடற்கரைக்குக் கொண்டு வந்து குவித்த பிறகுதான் கடலரசனுடைய நினைவு வருகிறது. கடலரசன் நினைத்த உடன் வராமற் போகவே, உண்ணாவிரதமும், தர்ப்ப சயனமும் மேற்கொண்டு 'ரகளை' செய்தார். பிறகே கடலரசனும் ஓடி வந்து உதவிபுரிந்தான்.

ஆண்டாள் அன்னையின் முன்னெச்சரிக்கையைப் பார்க்கலாம். 'மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளி லிருந்து பாவை நோன்பு புரிய வேண்டும். பாவைநோன்பு புரியும் 'பிள்ளைகளெல்லாரும் பாவைக் களம் புகு' முன் செய்யும் நோன்பின் முதல் செய்கை மார்கழி நீராட மகிழ்வது! அங்ஙனம் மார்கழி நீராடி மகிழ்வதற்கு முன்ன தாகவே 'தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்து' இருக்கவேண்டும். மாரி பெய்திருப்பின் தான், 'குள்ளக் குளிரக் குடைந்து நீராட'முடியும். 'புழக்கடை தோட்டத்து வாவியுள் செங்கழுநீர் வாய் நெகிழ்ந்து ஆம்பல் வாய்க் கூம்பிக்' காணும், 'புள்ளும் சிலம்பும் பொழுதிலே!'

எனவேதான் ஆண்டாள் அன்னையார், முதற் பாசுரத்தில் நீராடப் போதுபவரை அழைத்து இரண்டாவது பாசுரத்தில், நோன்பிற்காக எதைச் செய்தும் செய்யாமலும் இருக்கவேண்டும் என்பதை உலகத்தாருக்கு அறிவித்துவிட்டு மூன்றாவது பாசுரத்தில் நோன்பின் பயனாக நீங்காத செல்வம் நிறையும் என்பதைத் தெரிவித்து, அடுத்த நான்காவது பாசுரத்தில் நோன்பிற்காக உதவவேண்டு மென்று மழைத்தேவதைக்கு உபதேசம் செய்கிறாள்.

ஓங்கி உலகளந்த உத்தமன் பேர் பாடுவதில்தான் நோக்கு, நோன்புபுரியும் பாவையருக்கு. மற்றவர்களிடம்

போய் வேண்டிக் கொண்டிருக்கமாட்டார்கள். பாவை நோன்பு நோற்க உத்தேசம் ஆனதும் மழைக் கடவுளும் தன்னாலான உதவியைச் செய்ய முன்கூட்டியே ஓடிவந்தானாம்! அவனுக்கு உபதேசம் செய்கிறதாக அமைந்ததே 'ஆழிமழைக் கண்ணா' என்று தொடங்கும் பாசுரம்.

'கோதை தமிழ் வேதம் அனைத்துக்கும் வித்தாகும்.' மிக ஆழ்ந்த விஷயங்கள் திருப்பாவையுள் அடங்கியுள்ளன. இதற்கு உதாரணமாக இந்தப் பாசுரத்தை எடுத்து அநுபவிக்கலாம் இங்கு.

விஞ்ஞான வகுப்பு, ஆசிரியர் பிள்ளைகளுக்குக் கற்பிக்கிறார்: "உலகத்துக்கு மழை அவசியம். அந்த மழை எப்படிப் பெய்கிறது!சூரிய வெப்பத்தினால், கடலிலும் மற்ற நீர்த்தேக்கங்களிலும் உள்ள நீர், ஆவியாக மாறி வானத்தில் சஞ்சரிக்கிறது. குளிர்ந்த காற்றுத் தாக்குதலினால் மழையாக மாறிப் பெய்கிறது."

இதை நிருபித்தும் காட்டுகிறார். உருண்டை வடிவமான இரண்டி கண்ணாடிக் கூடுகள்-இரண்டையும் மத்தியில் ஒரு நீண்ட கண்ணாடிக் குழாய் இணைக்கிறது. முதல் உருண்டையில் தண்ணீர் ஊற்றி, அடியில் தீயிட்டால், நீர் ஆவியாக மாறி, மத்திய குழாய் வழியாக, இரண்டாவது உருண்டையை அடைந்து அதன் மேல் குளிர்ந்த காற்று வீசி, நீர்த்துளியாக மாறுகிறது. இது நாம் பாடசாலையில் கற்கும் விஞ்ஞானம்.

ஆண்டாள் அன்னையார், மழைக் கடவுளை நோக்கிப் பேசும் முகத்தால், இந்த விஞ்ஞான உண்மையை மிகத் தெளிவாகக் கூறுவதைக் கேளுங்கள்!

"ஆழி மழைக்கண்ணா!
ஆழியுள் புக்கு, முகந்துகொடு, ஆர்த்து ஏறி
மெய்கறுத்து, மின்னி, பெய்திடாய்!"

அன்னையார் விஞ்ஞானத்தோடு மெய்ஞ்ஞானத்தையும் கலந்து கலந்து மேலும் பேசுவதைக் காணலாம்.

'மழை இயற்கையின் காரணமே! இதற்கு ஒரு தெய்வம் என்பது எதற்காக?' என்று சிலர் கேட்கலாம். சூரியக் கிரணத்தினால் நீர் ஆவியாகிறது. கிரணத்திற்கு வெப்பம் சூரியன் தந்தது. சூரியனுக்கு வெப்பத்தை யார் தந்தது? அந்த சக்தியே, சூரியனிடம் உள்ளபோது அக்னிக் கடவுளாகவும், நீர் ஆவியாக இயங்கும்போது மழைக் கடவுளாகவும் திகழ்கிறது.

மழைக்கடவுள் எப்படிப் பெய்யவேண்டும் என்பதை அன்னையார் தெரிவிக்கிறார். கையில் உள்ளதை ஒன்றும் ஒளிக்காமல், வாரி வழங்க வேண்டுமாம் வள்ளல்களைப் போல!'

'ஒன்றும் நீ கைகரவேல்!'

என்று அறிவுறுத்துகிறார்.

இப்படி மழை சோனை மாரியாகப் பொழிவதைத்தான் கம்பரும்:

'உள்ளி உள்ள தெலாம் உவந்து ஈயும் அவ்
வள்ளியோரின் வழங்கின மேகமே!'

என்று சித்தரிக்கின்றார்.

வெள்ளை நிற மேகத்தால் உலகிற்குப் பயன் இல்லை. சூல் கொண்டு கறுத்த மேகமே மழை பொழியும். முகில் மேகம் சூல் கொண்டு எப்படிக் கறுக்க வேண்டுமென்பதை அன்னையார் தெரிவிக்கின்றார். உருவத்திலும் சரி' நிறத்திலும் சரி,

'ஊழி முதல்வன் உருவம் போல் மெய் கறுத்துத்'

தோன்ற வேண்டுமாம்!

கறுத்த மேகம் கன மழை பெய்யுமுன் மின்னுமல்லவா? இந்த மின்னலும் சாதாரணப் பொருள்களின் மின்னல்போல் இருக்கக் கூடாதாம் அன்னைக்கு! வலிமையும், அழகும்

ஒருங்கே அமைந்த பத்மநாபன் கையில் உள்ள சக்ராயுதம் போல மின்னல் ஒளி வீசிச் சுழல வேண்டுமாம்! மின்னலைப் போல இதுவும் பக்தர்கட்கு உதவும்; எனவே மேகம்;

'பாழிஅந் தோள் உடைப்
பற்பநா பன்கையில்
ஆழிபோல் மின்னி'த்தோன்ற வேண்டுமாம்.

மேகத்தின் கறுத்த நிறத்தையும், உருவத்தையும் அது ஆழிபோல் மின்னுவதையும் பார்த்துப் பெருமிதம் அடைகிறோம். அது போதுமா? மின்னிய மேகம் அதிரவும் வேண்டும் நாம் கேட்டுக் களிப்பதற்காக! நாம் கேட்டுக் களிக்க வேண்டுமானால் மழைக் கடவுள் எப்படி அதிர வேண்டும் என்பதையும் தெரிவிக்கின்றார் அன்னை. பத்மநாபனின் பாஞ்ச சன்னியம் பக்தர்கட்கு அபயச் சேதியை அறிவிக்கின்றது. அந்தப் பாஞ்ச சன்னியத்தைப் போலவே மழைக்கடவுளும் தன்பெருங் கொடைகளோடு பொழிந்து உலகிற்கு அபயமளிக்கப் போவதை முழங்க வேண்டுவாம்! எனவே அன்னையார் மழைத் தேவதையை 'வலம்புரி போல் நின்றதிர்ந்து' பொழியச் சொல்கிறார்.

ஒளியும், ஒலியும் ஒரே சமயத்தில் உண்டாயின், நாம் முதலில் ஒளியை அறிகிறோம்; பிறகு தான் ஒலியை அறிகிறோம். காரணம் ஒளி அல்லது வெளிச்சம் நேர்க் கோட்டில் பாய்கிறது. ஒலி வட்டங்களில் பரவுகிறது, குளத்தின் நடுவே ஒரு கல்லைப் போட்டால் அதன் அதிர்ச்சி வட்ட வட்டமாகப் பெருகி கரைகளை அடை கிறது போல. ஒளிநேர்க்கோட்டில் வீசுவதால் அது உடனே தூரத்தைக் கடக்கிறது. ஆனால் ஒலி வட்ட வட்டமாகப் பரவுவதால் ஒளிக்குப் பிறகுதான் பரவ முடிகிறது இதை Light and Sound Theory என்றும் கூறுவார்கள் விஞ்ஞானிகள்.

அன்னையார் இந்த நுண்ணிய விஞ்ஞான உண்மையை எவ்வளவு லேசாக வெளியிடுகிறார் பாருங்கள்! மேகம்

அதிர்ந்து ஒலி முழக்கம் செய்வதை அவர் முதலில் கூற வில்லை. ஒளிவிட்டு மின்னுவதையே முதலில் தெரிவிக் கின்றார்!

'ஆழிபோல் மின்னி
வலம்புரிபோல் நின்றதிர்ந்து' என்று கூறுவதால்.

மின்னி, ஆர்க்கும் மழைக் கடவுள், பொழியும்போதும் திருமாலையே நிகர்த்தும், நினைவூட்டியும் பொழிய வேணும் என்கிறார் அன்னையார். கண்ணனைப் போல் கறுத்த மேகம், அவன் கையில் உள்ள ஆழியைப்போல் மின்னி, வலம்புரிபோல அதிர்ந்தால், அவனுடைய சார்ங்க மென்னும் வில் அம்பைப் பொழிவது போலத்தானே, மழைச் சரங்களைப் பொழிய வேணும்! சார்ங்க வில் அம்புகள் பகைவர்களை ஒழித்து பக்தர்களைக்காப்பாற்றும்; அதைப் போலவே மழைத் தாரைகளும் பஞ்சம், பட்டினி, நோய் முதலிய பகைவர்களை விரட்டி உலகை ரட்சிக்க வேண்டுமாம்!

ஸ்ரீ சார்ங்கவில் பகைவர்களை ஒழிப்பதிலும் பக்தர்களைக் காப்பதிலும் கொஞ்சங்கூடத் தாமதம் செய்யாதாம்! அதுபோலவே மழைக் கடவுளும் விரைந்து காலந்தாழ்த்தாமல் பொழிய வேண்டுமென்று,

''தாழாதே சார்ங்கம் உதைத்த சரமழைபோல்''

என்று சேர்க்கிறார் அன்னையார். (Justice delayed is Justice denied)—தாமதித்த நியாயம் தடுக்கப்பட்ட நியாயமே அல்லவா?

மழை உபயோக மில்லாத சமயம் பொழியக் கூடாது. உபயோகமில்லாத அளவுக்கும் பொழியக் கூடாதாம். 'ஆவின மழை பொழிய, இல்லம் வீழ.' உலகம் வெள்ளக் காடாகப் பொழியும் மழையாக இருப்பின் உலகம் அழிந்தே போகும்; வாழாது. அதனால் தான்,

'வாழ உலகினில் பெய்திடாய்!'

என்று மழைக் கடவுளுக்கும் உபதேசிக்கின்றார் அன்னையார்.

உலகம் அழியப்பொழியும் மழை தந்த நீர்த்தேக்கத்தில் நீராடினால் ஆனந்தம் உண்டாகுமா? எனவே, 'உலகம் வாழப்பொழியும் மழையால் ஏற்படும் வெள்ளப் பெருக்கிலும், நீர் வளத்திலும் தான் நாங்கள் மார்கழி நீராடி மகிழ்வோம்' என்கிறார் அன்னையார். ஆகவே,

'மார்கழி நீராட மகிழ்ந்தேலோர் எம்பாவாய்'

என்று மழைக்கடவுளிடம் ஏற்பாடு செய்கிறார் முன்னதாகவே!

இப்பாசுரத்தில் அன்னையார் வேறு ஒரு முன்னெச்சரிக்கையான உபதேசத்தையும் செய்வதைக் காணலாம்.

ஆண்டாள், மதுரகவிகளுடன் ஆழ்வார்கள் பரம்பரை முடிவடைகிறது. இதை அடுத்து நாதமுனிகள் தொடங்கி ஆசார்ய பரம்பரை ஆரம்பமாக விருக்கிறது. மேற்கொண்டு வரப்போகும் ஆசார்ய சிரேஷ்டர்கட்கு லட்சணங்கூறி மங்களாசாசனம் செய்தருள்கிறாராம் அன்னையார்!

ஆசார்யனாகிற மழைக் கடவுள் சம்ஸ்கிருத, தமிழ் மறைகளாகிற ஆழியுள் புகுந்து, அவைகளிலுள்ள அரும்பெரும் விஷயங்களைத்தன்னறிவாலே முகந்து, அப்படி ஏற்பட்ட ஞானத்தினால் தங்களது உருவமும் நிறமும் ஈஸ்வரத்தன்மையை அடைந்து, பக்தர்களுடைய ஞானப்பஞ்சத்தையும் (அஞ்ஞானம்), பிறவிப் பிணியையும் ஒட்டவேணும் என்கிற சந்தோஷத்தினால் சக்கரத் தாழ்வானின் தேஜஸையும் பாஞ்சசன்யத்தின்சங்கநாதத்தையும் வெளியிட்டு. சார்ங்கமென்னும் வில்லம்புகளுக்கு நிகராகத்தங்கள் சொல்லம்புகளை யாவரும் வாழஉலகினில்

பொழிவார்களாம்! கருணை மேலீட்டினால், இங்ஙனம் ஆசார்யர்கள் பொழிந்த உபதேச மழையினால் ஏற்பட்ட கருத்துத் தடாகங்களிலே நாம் ஆத்ம நீராடிப் புனிதமடைந்து ஸ்ரீவைணவ தர்சனத்தைக் கடைப் பிடித்தலாகிய பாவை நோன்பை நோற்கவேண்டுமாம்.

'பெண்ணே! ஆணாகிய என் எதிரில் வராதே!' என்றார் குரு. ஜகன் மோகன வேணுகோபாலனைத் தவிர வேறு ஆணும் உண்டோ?' என்று கேட்டாள் வட நாட்டு ஆண்டாளான மீராபாய். குரு ஞானம் பெற்றார்! 'தாயே! நானும் அவனுடைய கோபிகையே!' என்று பணிந்தார்.

எனவே புருஷோத்தமனான பரமாத்மாவே புருஷன். ஜீவாத்மாக்களான நாம் எல்லோரும் அவனுடைய கோபி கைகளான பாவைகளே! அவன் அருளையே நாடி நாம் வாழும் வாழ்க்கையே பாவை நோன்புதான். அஞ்ஞானம் விலகி ஞானம் பிறக்கிற காலமே மார்கழித் திங்களாகிற 'மதி நிறைந்த நன்னாள்.'

எனவே நாம் மார்கழி தோறும் நீராடி மகிழ நம் அன்னையாரின் ஆணைப்படி மழையும், மறையும் பொழிவ தாக என்று பிரார்த்திப்போமாக!

# "அப்பனும் ஆச்சாரியரும்"

''உடல் மிசை உயிர் கரந்து
எங்கும் பரந்துள்ளது!''

(கரந்து : கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து.)

உடல் முழுவதும் உயிர் பரவி உள்ளது போல, உயர்வற உயர் நலம் உடையவனான எம்பெருமானும், பிரபஞ்சம் முழுவதும் பரவியுள்ள பஞ்சபூதங்களான ஆகாயம், தீ, காற்று, நீர், நிலம் முதலியவற்றுள் ஊனக் கண்ணுக்குப் புலப்படாமல் பரவியுள்ளான். இதுவே இறைவனுடைய ''அந்தர்யாமித்வ'' நிலை.

நம்மாழ்வார் இதைச் சுருக்கமாக அருளுகிறார்.

''திடவிசும்பு, எரி, வளி, நீர், நிலம், இவை மிசை,
படர் பொருள் முழுவதுமாய் அவை அவை தொறும்
உடல் மிசை உயிர் எனக் கரந்து எங்கும் பரந்துளன்
சுடர்மிகு சுருதியுள் இவை உண்ட சுரனே!''

அந்தர்யாமியாக உள்ள எம் பெருமான் நித்தியர்களும், முக்தர்களும் சேவிப்பதற்காகப் பரம பதத்தில் எழுந்தருளியுள்ளான். இதுவே இறைவனுடைய ''பரமபத'' நிலையாகும்.

மூன்றாவதாக, முனிவர்களும், தேவர்களும் தொழுவதற்கும், வரம் வேண்டற்கும் பாற்கடலில் பள்ளி கோளில்

(திரு அனந்தாழ்வான் மீது) பள்ளி கொண்டுள்ளான். இது ''வியூக நிலை'' எனப்படும்.

நான்காவதாக பூவுலக மக்களையும் ரட்சிப்பதற்காக அவ்வப்போது ராமகிருஷ்ணாதி அவதாரங்களை எடுக்கிறான். இது ''விபவம்'' எனப்படும்.

கடைசியாக, ஐந்தாவதாக, பூவுலகில் எல்லாக் காலத்திலும் பயன்படுவதற்காக ஆங்காங்கே திருக்கோயில் கொண்டு எழுந்தருளியுள்ளான். இது ''அர்ச்சை'' நிலை எனப்படும்.

ஒரு சமயத்தில் பெருக்கெடுத்து ஓடி அற்று விடும் ஆறுகள் போன்றவை அவதாரங்கள்.

எக்காலத்தும் உதவும் ஏரி குளம் முதலிய நீர்த்தேக்கங்கள் போன்றவை திருக்கோயில்கள்—அதாவது அர்ச்சை நிலை.

இவ்விதமாக இறைவன் ஆங்காங்கே எழுந்தருளியுள்ள திருக்கோயில்கள் அமைந்த பதிகள்— 'திவ்ய தேசங்கள்' என்று சிறப்பிக்கப்படுபவை 108 ஆகும்.

இதற்குக் காரணம் மயர்வற மதிநலம் அருளப்பட்ட நம் ஆழ்வார்கள் எம்பெருமான் எழுந்தருளியுள்ள 108 பதிகளை மங்களாசாசனம் செய்தருளியதுதான்.

இவ்விதமாகப் பாடல் பெற்ற 108 பதிகள் ''திவ்ய தேசங்கள்'' என்றும், இப்பாடல்களை அருளிய ஆழ்வார்களை ''திவ்ய சூரிகள்'' என்றும், அவர் தம் பாடல்களை ''திவ்யப் பிரபந்தம்'' என்றும் போற்றுகின்றோம்.

திவ்ய் சூரிகளான ஆழ்வார்கள் தம் திவ்யப் பிரபந்தங்களான பாடல்களால் 108 பதிகளைப் பாடியதால் அவைகள் திவ்ய தேசங்கள் என்று கொண்டாடப்பட்டாலும் இவைகளிலும் தனிச் சிறப்பு அடைந்துள்ளவை நான்கே!

இவைகளை : 'கோயில்', 'திருமலை' 'பெருமாள் கோயில்', 'திருநாராயணபுரம்' எனப் போற்றுகிறோம்.

கோயில் என்பது திருவரங்கம்;
திருமலை என்பது வடவேங்கடம்;
பெருமாள்கோயில் என்பது காஞ்சி அத்திகிரி;
திருநாராயணபுரம் என்பது மேலக்கோட்டை.

திவ்ய தேசங்கள் 108 என்று பரவியிருப்பினும், இவைகளுள், கோயில், திருமலை, பெருமாள்கோயில் திருநாராயணபுரம், 'ஸ்ரீரங்கமங்கள நிதிம், கருணா நிவாசம் ஸ்ரீ வேங்கடாத்திரி சிகராலய காளமேகம்! ஸ்ரீ ஹஸ்தி சைல சிகரோஜ்வல பாரிஜாதம்! ஸ்ரீசம் நமாமி சிரசா யது சைல தீபம்' என்ற நான்கே தனிச் சிறப்புடன் திகழ்வதற்குக் காரணம், இந்த நான்கு திவ்ய தேசங்களில் தான். ஆழ்வார்களுக்கு அடுத்தபடியாக அவதரித்தருளிய ஆசாரியர்களும் பெரிதும் ஈடுபட்டுச் சேவை புரிந்து வாழ்ந்தனர்,

ஸ்ரீ வைணவ உலகின் தலைநகரமாக விளங்குவது திருவரங்கம்.

நாதமுனிகள் தொடக்கமாக மணவாள மாமுனிகள், தேசிகன் வரை எழுந்தருளியிருந்த ஸ்ரீ வைணவ ஆசாரியர்கள் அனைவரும் திருவரங்கத்தில் எழுந்தருளியிருந்தனர்.

திருவரங்கத்தில் மடங்களை ஏற்படுத்தி ஸ்ரீ வைணவ மதத்தின் தலைவர்களாகத் திகழ்ந்தனர்.

திசை விளக்காய் நிற்கின்ற திருவரங்கமே எனப் புகழ் பெற்றது திருவரங்கம்.

திருமலை எனப்படுவது வட திருவேங்கடம்: பிறகு விரிவாக இதைக் கவனிக்கலாம்

பெருமாள் கோயில் எனப்படுவது பெருந்தேவித் தாயார் சமேத பேரருளாளர் எழுந்தருளியுள்ள அத்திகிரியான காஞ்சிபுரமாகும்.

பேரருளாளர் திருஅடிவாரத்தில் திருக்கச்சி நம்பிகள், உடையவர், கூரத்தாழ்வான், பெரியநம்பி, மணவாள மாமுனிகள், தேசிகன் முதலான நம் ஆசார்யர்கள் சேவை புரிந்து சிறந்தனர்.

திரு நாராயணபுரம் எனப்படும் மேலக்கோட்டையில் அனந்தாழ்வான், உடையவர், திரு நாராயணபுரம் ஆய் முதலான ஆச்சார்ய புருஷர்கள் எழுந்தருளியிருந்தனர்.

ஆச்சார்ய புருஷர்களால் சிறப்பிக்கப் பெற்ற கோயில், திருமலை, பெருமாள் கோயில் திருநாராயணபுரம் என்னும் நான்கு திவ்யதேசங்களிலும், திருமலையான திருவேங்கடத் திற்கே மிக உயர்ந்த சிறப்பு உள்ளது.

''எப்பாவம் பலவும் இவையே செய்து இளைத்
தொழிந்தேன்
துப்பா! நின்ன படியே தொடர்ந்தேத்தவும் கிற்
கின்றிலேன்
செப்பார் திண்வரைசூழ் திருவேங்கட மாமலை, என்
அப்பா! வந்தடைந்தேன் அடியேனை ஆட்
கொண்டருளே''

''அப்பனுக்கு சங்காழி அளித்த பெருமாள்''

இதைத்தெளிவாக விண்ணப்பிக்கின்றேன்.

ஆழ்வார்களால் உயர்வு பெற்ற திவ்ய தேசங்கள் இப்போது விஷயமல்ல.

ஆசாரியர்களால் சிறப்புற்ற நான்கு திவ்ய தேசங்களி லும் திருமலையே—சென்னி ஓங்குதண் திருவேங்கடமே சிறந்ததாகும்.

எனவேதான் இம்மகுடம் : ''அப்பனும் ஆசாரியரும்'' உலகுக்கு எது திலதமாக இருக்கும்!

''திலதம் உலகுக்காய் நிற்பவன் திருவேங்கடத் தெம் பெருமானே'' இது நம்மாழ்வார் திருவாக்கு.

கோயில், பெருமாள் கோயில், திருநாராயணபுரம் சென்று சேவித்தால் ஆசாரியர்களுடைய நினைவு பளிச் சென்று வருவது கடினம்

ஒரு ஸ்ரீ வைணவ பக்தன் திருமலைக்குப் போய் சேவித்தால் ஆசாரியர்களை நினைந்து நினைந்து உருகாமல் சேவிக்க இயலாது இன்றைக்கும்.

திருமலையில் திருவேங்கடமுடையான் திருவீதி எழுந்தருளுகிறார்; தென்னண்டை மாடவீதியில் குறித்த இடத்திற்கு எழுந்தருளியதும் நின்று விடுகிறார்! ஏன்?

அங்கிருந்துதான் ஆழ்வார்களின் பாடல்களான திவ்யப் பிரபந்த சேவை தொடக்கமாகிறது.

ஏன் அங்கிருந்து தொடங்க வேண்டும்?

அந்தத் திருவீதியில், அதே இடத்தில்தான் பெரிய திருமலை நம்பிகளுடைய திருமாளிகை அமைந்துள்ளது. இன்றைக்கும் சேவிக்கலாம்.

பெரிய திருமலை நம்பிகளுடைய திருப்பெயர்தான் திருமலையோடு முதன் முதலாகப் பேசப்படுவது! பெரிய திருமலை நம்பிகள் தான் திருவேங்கடமுடையான் திருவீதி உலா எழுந்தருளுகையில் ஆழ்வார்களின் திவ்யப் பிரபந்த (அத்யாபக) சேவையை ஆரம்பித்து வைத்தார்; நடத்தி வைத்தார் என்றும் கொள்ளலாம்.

பெரிய திருமலை நம்பிகள் ஸ்ரீ ராமானுசரின் தாய் மாமன்.

ஸ்ரீபெரும்பூதூரில் தனது தங்கைக்கு ஆண்மகவு பிறந்த சேதியைக் கேட்டருளிய பெரிய திருமலை நம்பிகள், ஸ்ரீ பெரும்பூதூருக்கு எழுந்தருளி ஆதிசேடனின் அவதாரமாகப்

பிறந்துள்ள குழந்தையைக் குளிரக் கடாட்சித்து அக் குழந்தைக்கு ''இளையாழ்வார், ஸ்ரீராமாநுஜர்'' என்னும் திருப்பெயர் சூட்டி மகிழ்ந்தார் திருவேங்கடவர் தூதராக!

ஆதிசேடன், ராமனுக்கு அடுத்த இளையபெருமாளான இலட்சுமணனாக அவதரித்தபிறகு, இராமாநுசராக அவதரித்தார் என்பதை சூசகமாக வெளிப்படுத்தவேஇந்தத் திருப்பெயர் சூட்டப்பட்டது

பரம பதத்தில் இருக்கையாகப் பணிபுரிந்த ஆதிசேஷன், வியூகமான பாற்கடலில் படுக்கையாகப் பணிபுரிந்து, விபவத்தில் லட்சுமணனாகப் பணிபுரிந்து, அர்ச்சையில் பணி புரிய இராமாநுசராக அவதரித்துள்ளதை அறிந்தார்.

(இயற்பா—முதல் திருவாய்மொழி)

''சென்றால் குடையாம், இருந்தால் சிங்காசனமாம்
நின்றால் மரவடியாம், நீள்கடலுள்—என்றும்
புணையாம், மணிவிளக்காம், பூம்பட்டாம், புல்கும்
அணையாம், திருமாற்கு அரவு!''

ஆசாரியர்களுக்குள் சூரியச் சுடராக விளங்குபவர் நமது இராமாநுஜர். திருமலையைச் சேவித்தால் ராமாநுஜரது புகழ் நம்மைப் பிரவாகமாகச் சூழ்ந்து கொள்ளும்.

இராமாநுஜருடைய ஐந்து ஆசாரியர்களுள் ஒருவர் பெரிய திருமலை நம்பி.

ஒவ்வொரு ஆசாரியரிடத்தும் தனியாக ஒவ்வொரு அரிய விஷயத்தைக் காலட்சேபமாகச் சேவித்தவர் நம் இராமானுஜர்.

திருமலையின் அடிவாரத்தில் ஒரு சமயம் பெரிய திருமலை நம்பிகள்எழுந்தருளியிருந்தார். ஸ்ரீ இராமாநுஜர், அது சமயம் பெரிய திருமலை நம்பிகள் திருவடிகளில் ஓராண்டு காலம் வால்மீகி முனிவர் அருளிய

ஸ்ரீ ராமாயணத்தின் உயரிய கருத்துக்களைக் காலட்சேப மாகச் சேவித்தார்.

இப்படி ஸ்ரீ ர ா ம ா ய ண க் காலட்சேபத்தை ஸ்ரீராமானுஜர் பெரிய திருமலை நம்பிகளிடம் சேவித்துக் கொண்டிருக்கையில், தெற்கிலிருந்து பெரிய பெருமாளான இராமன், இளைய பெருமாளான இலக்குமணன், பிராட்டி யான சீதையின் மூர்த்தங்கள் எழுந்தருளியதாகவும், அம்மூன்று மூர்த்திகளையும் திருவேங்கடவர் கர்ப்பக்கிருகத் தில் இடது பக்கம் எழுந்தருள்வித்ததாகவும், கர்ண பரம்பரை கூறுகிறது.

இம்மூன்று மூர்த்தங்களையும், இன்றும் ஸ்ரீனிவாசன் கருவறையில் சேவித்து மகிழலாம்.

இந்த இராமனுக்கே ''வேங்கடராமன்'' எனத் திருப்பெயர் ஏற்பட்டு, உலகம் எங்கும் பரவியுள்ளது.

திருவேங் கடவரே ''வேங்கட கிருஷ்ணன்.'' 'செடியாய வல் வினைகள் தீர்க்கும் திருமாலே, நெடியானே! வேங்கடவா! நின் கோயிலின் வாசல் அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்து இயங்கும் படியாய்க் கிடந்து உன் பவள வாய்காண்பேனே!'' எனத் திருவேங் கடவர் சந்நிதியில் ஸ்ரீ குலசேகர ஆழ்வார் வேண்டியதால் கருவறையில் பெருமாளுக்கு முன்பு உள்ள படிக்குக் 'குலசேகரன்படி' என்று பெயர்.

இந்தக் குலசேகரன் படியின் முன்பிருந்து கொண்டு ஸ்ரீனிவாசனைச் சேவிக்க வேணும்.

எம்பெருமான், ''வெய்யதோர் தழல் உமிழ் சக்கரக்கை வேங்கடவனாகவும்; கூன் ஏறு சங்கம் இடத்தானாகவும்'' சேவை சாதிக்கிறான்.

மற்ற சந்நிதிகளில், இதில் விசேடமொன்றுமில்லை. இவ்விதமாகத் திருவேங்கடவர், திருவாழி, திருச்சங்கத் துடன் சேவை சாதிக்கும் காரணம் மிக்க சுவையானது.

முதலாழ்வார்களில் தலைவரான பேயாழ்வார், திருமலை யில் திருவேங்கடமுடையானைச் சேவித்த போது அவர் கண்ட திருமேனி அழகைப் பாடுகிறார்.

''தாழ் சடையும் நீண்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்
சூழ் அரவும் பொன் னாணும் தோன்றுமால்—சூழும்
திரண்டருவிபாயும் திருமலைமேல் எந்தைக்கு
இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து!''

திருக்கைகளிலே பேயாழ்வார் திருவாழியான சக்கரத்தைச் சேவித்திருக்கிறார். ஆனால் சங்கத்தைச் சேவிக்கவில்லை

சிவ பெருமானுடைய மழுவை ஏந்திக் கொண்டிருக் கிறார்! அது மட்டுமா; சிவச் சின்னங்களான தாழ்சடை, சூழ் அரவு முதலியவைகளும் திகழ்கின்றன. பேயாழ்வாரு டைய திருக் கண்களுக்குத் திருவேங்கடவர் திருமேனியில் இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து காணப்பட்டன.

அதாவது சிவனுடைய திருமேனிச் சின்னங்கள் திருவேங்கடமுடையானுடைய திருமேனியில் ஒன்றி அமைந்து காணப்பட்டன.

ஆனால் சாதாரண மக்களின் கண்களுக்குத் திருமலை யில் சேவை சாதிப்பவர் திருவேங்கடமுடையானா? சிவன் தானா? என்னும் ஐயம் ஏற்பட்டு விட்டது.

ராமானுஜர் காலத்தில் இது உச்ச நிலைக்கு வந்து விட்டது. திருமலை சிவத்தலம் தான் என்ற வாதம் மேலோங்கி பக்தி விளைவிக்க வேண்டிய தலம் சச்சரவை விளைவித்து விட்டது!

இந்தச் சந்நிதி ஸ்ரீ வைஷ்ணவ சந்நிதிதான் என்பதை நிலை நாட்ட வேண்டிய பொறுப்பு ராமாநுசருடையதாகி விட்டது!

தமக்கு ஏற்பட்ட பொறுப்பை ஸ்ரீ ராமாநுஜர் திருவேங்கடவருக்கே சமர்ப்பித்து விட்டார்.

எல்லோருடைய சம்மதத்துடனும் ஒரு நாள் இரவு சிவச் சின்னங்களான திரிசூலம், உடுக்கை, மழு முதலியவை களையும் திருமாலின் சின்னங்களான திருவாழி, திருச்சங்கு முதலிவைகளையும் வைத்துச் சந்நிதியைத் திருக்காப்பிடுவது; காலை, திருக்காப்பை நீக்கிச் சேவிக்கை யில் எந்தச் சின்னங்களோடு மூர்த்தி விளங்குகிறார் எனப் பார்த்து அந்தத் தீர்ப்பின்படி நிரந்தரமாக நடந்து கொள்வது என சமரசம் ஏற்பாடுசெய்தார்.

அவ்விதமே இரண்டு சின்னங்களையும் வைத்து இரவு திருக்காப்பிட்டுக் காலையில் திருக்காப்பை நீக்கவும், எம்பெருமான் திருவாழி, திருச்சங்கை தரித்துக் கொண்டு ஸ்ரீனிவாசனாகச் சேவை சாதித்தார். இராமானுஜர் எம்பெருமானின் இடமார்பிலும் இலக்குமியை எழுந் தருள்வித்தார்.

ராமாநுஜருடைய இந்த மகத்தான சேவையை மதிப்பிட முடியாது.

இச்சேவையால் தான் திருமலை இன்றும் ஸ்ரீ வைணவப் பொலிவுடன் விளங்குகிறது.

திருவேங்கடமுடையானுக்கு 'அப்பன்' என்றும் திருநாமம். ராமானுஜர் திருவேங்கடமுடையானாகிற அப்பனுக்குச் சங்கும் சக்கரமும் அணிவித்ததால் ''அப்பனுக்குச் சங்காழி அளித்தருளும் பெருமாள்!'' என்ற புகழும் இராமாநுஜருக்கு ஏற்பட்டது.

ஒரு ஸ்ரீ வைணவனுக்கு சங்கு சக்ர முத்திரைகளைத் தரிப்பிக்கின்றவர் ஆசாரியன்; திருவேங்கடமுடையானுக்கு சங்கு சக்ர முத்திரைகளை ராமாநுஜர் தரிப்பித்ததால் அவர், திருவேங்கடமுடையானுக்கும் ஆசாரியரானார்.

திருமலையை ஸ்ரீ வைணவத் தலமாகவும், திருவேங்கட முடையானைத் திருமாலாகவும், திகழ வைத்த அசாதாரண சேவையால் ஸ்ரீராமாநுஜருக்குத் திருமலையில் திருவேங்கட முடையான் சந்நிதிக்கு அருகில் முதல் பிராகாரத்தின் வடக்கு பாகத்தில் தனி சந்நிதி ஏற்பட்டுள்ளது.

ராமாநுஜருக்குத் தவிர திருமலையில், ஆழ்வார்களுக்காவது, மற்ற ஆசாரியர்களுக்காவது சந்நிதிகள் கிடையாது!

இத் தனிப் பெருமை ஸ்ரீ ராமாநுஜருக்கே உரியது. மற்ற தலங்களில் கைகளைக் கூப்பிய வண்ணம் சேவை சாதிப்பார் ஸ்ரீ ராமாநுஜர். திருமலையில் ஸ்ரீராமாநுஜர் ஆச்சார்ய புருஷனாக உபதேச முத்திரையுடன் சேவை தருகிறார்!

காரணம்: திருவேங்கடமுடையானுக்குத் திருவாழி அணிவித்து ஸ்ரீ வைணவப் பொலிவை ஏற்படுத்திய மகா சாதனைக்கும், சேவைக்குமாகும்.

இன்னொரு விசேடம்: திருவேங்கடவர் (உற்சவ மூர்த்தி) புறப்பாடு கண்டருளினால் முதலில் தம் ஆசாரியரான ராமாநுஜருக்கு சேவை சாதித்த பிறகுதான் படி தாண்டி வெளியே சேவை சாதிப்பார்; ஆசாரிய நியமனம் பெற்றுதான் படி தாண்டுவார்.

திரு நாராயணபுரத்தை ஞான மண்டபம் என்றும் திருவரங்கத்தைப் போக மண்டபம் என்றும் பெருமாள் கோயிலான காஞ்சிபுரத்தை யாக மண்டபம் என்றும் திருமலையான திருவேங்கடத்தைப் புஷ்ப மண்டபம் என்றும் பெரியோர்கள் சிறப்பிக்கின்றனர்.

அதாவது திருமலையில் புட்பக் கைங்கரியம் மிகவும் சிறந்தது. வியாழன் இரவு புட்ப அங்கி சேவை இங்கு விசேஷம்.

திருவரங்கத்தில் ஸ்ரீ ராமாநுஜர் திருவாய்மொழிக் காலட்சேபம் சாதித்தருளுகிறார்.

'ஒழிவு இல் காலம் எல்லாம்' பதிகத்தில் ''வானவர் வானவர் கோனொடும் சிந்து பூ மகிழும் திருவேங்கடம்'' என்ற இரண்டாவது பாசுரம்வந்தது. அதாவது திருவேங்கடவருக்குப் புட்பக் கைங்கரியம் மிகச் சிறந்ததாகையாலே, தேவர்களும், தேவேந்திரனுடன் ஆகாய மார்க்கமாக வந்து புட்பங்களைத் திருவேங்கட முடையான் மீது சிந்தி மகிழ்கின்றார்களாம்.

இந்த இடத்தில் ஒரு கருத்துத் தோன்றுகிறது ஸ்ரீ ராமாநுஜருக்கு. ''திருவேங்கடமுடையானுக்குப் புட்ப கைங்கரியம் சிறந்ததாயிற்றே; இந்தக் காலட்சேப கோஷ்டியில் உள்ளவர்களில் யாரேனும் திருவேங்கடம் சென்று ஒரு நந்தவனம் வளர்த்து இப் புட்பக் கைங்கரியத்தை ஏற்றுக் கொள்ளுவீர்களா?'' எனக் கேட்டார்.

ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர். திருமலையில் அக்காலத்தில் குளிர் ஜ்ஜுரம், விஷ ஜ்ஜுரம், வன விலங்கு முதலிய ஆபத்துக்கள் நிறைந்திருந்தன.

பரவியிருந்த மௌனத்தைக் கலைத்து அனந்தாழ்வான் என்பவர் எழுந்து நின்று தனக்கு அப்பணியை நியமிக்க வேண்டினார். இவருடைய தைரியத்திற்கு மெச்சி இராமாநுஜர் இந்த கோஷ்டியில் 'நீரே ஆண்பிள்ளை' என்றார். இதனால் அனந்தாழ்வானுக்கு 'அனந்தாண் பிள்ளை'' என்ற சிறப்புப் பெயர் வழங்கலாயிற்று.

அனந்தாழ்வான் திருமலைக்கு எழுந்தருளி நந்தவனம் அமைத்து அதற்கு 'ராமாநுஜன்' எனத் திருப்பெயர் சூட்டினார்.

திருவேங்கட முடையானுக்குப் புட்பக் கைங்கரியம் புரிந்து வந்தார்.

நந்தவனத்திற்கு நீர் வசதியைப் பெருக்குவதற்கு, அருகில் இருந்த ஏரியை ஆழப்படுத்த முயன்றார்.

ஏரியில் இருந்த மண்ணை வெட்டி, பூரண கர்ப்பிணியான தன் மனைவியின் தலையில் கூடை மூலம் வெளியே அனுப்பிக் கொண்டிருந்தார்.

கொஞ்ச நேரத்தில், மனைவியார் பாதி அளவு நேரத்தில் மண்ணைக் கரையில் கொட்டிவிட்டு வர ஆரம்பித்தார்.

அனந்தாழ்வான் சந்தேகப்பட்டு இப்படிச் சுருக்கமாக வருவதின் காரணத்தைக் கேட்டார்.

இடைவழியில் ஒரு சிறுவன் வந்து மண் கூடையை வாங்கிக் கொண்டு, வேறு வெற்றுக் கூடையைத் தருவதாகவும் இப்படியே அவன் பாதியும், தான் பாதியுமாக தூரத்தைக் கடப்பதால் சீக்கிரத்தில் வருவதாக மனைவியார் கூறினார்.

அனந்தாழ்வானுக்கு மிகுந்த கோபம் வந்து விட்டது! தமக்கு உடையவர் ஸ்ரீ ராமானுஜர் நியமித்த கைங்கரியத்தைக் களவு செய்யும் அச்சிறுவனை நோக்கி ஓடினார்! அச்சிறுவன் முகவாய்க் கட்டையில் மண் வெட்டியால் ஓங்கி அடித்துவிட்டார். ரத்தம் பெருக அச்சிறுவன் ஓடி மறைந்தான்.

அன்றைய மலர்களைத் திருத்திக் கொண்டு அனந்தாழ்வான் திருவேங்கடவர் சந்நிதிக்குச் சென்றார்.

என்ன வியப்பு! என்ன வியப்பு! திருவேங்கடவரின் முகவாய்க் கட்டையில் ரத்தம் பெருகிக் கொண்டிருந்தது.

சிறுவனாக வந்து தன் மனைவிக்கு உதவியவர் திருவேங்கடவரே என அறிந்த அனந்தாழ்வான் திகைத்து விட்டார்.

திருவேங்கடவரின் முகவாய்க் கட்டையில் பச்சைக் கற்பூரம் வைத்து வைத்யம் செய்யவும் ரத்தம் நின்றது!

அனந்தாழ்வானின் மலர்த் தொண்டை இப்படி வெளிப்படுத்தினார் வேங்கடவர்!

இதை நினைவூட்டும் வகையில் இன்றும் திருவேங்கடவரின் முகவாய்க் கட்டையில் பச்சைக் கற்பூரம் ஒத்தடம் வைத்திருப்பதைச் சேவித்து மகிழலாம்.

திருஅனந்தாழ்வான் கைங்கரியம் இயற்றிய மலர்க் கூடையும் கருவறையின் சேவையில் உள்ளது.

இன்னொரு விசேடம்!

இப்படியாகத் திருவேங்கடவருக்கு மலர்த்தொண்டை ஏற்படுத்திய ஸ்ரீராமானுஜருக்கும் சிறப்புச் செய்ய வேண்டுமல்லவா?

திருமலையில் புட்பம் அணிவது அபசாரம். திருவேங்கடவர் தான் திருமலையில் புட்பம் அணியலாம். அவர் அணிந்த மலர்களை யாருக்கும் வினியோகிக்க மாட்டார்கள். திருவேங்கடவர் அணிந்த மாலைகளை அப்படியே கொணர்ந்து அருகில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீராமாநுசருக்கு அணிவிப்பார்கள்.

பிறகு அம் மாலைகளை எடுத்துப் போய் வெளிப் பிராகாரத்தில் ஒரு கிணற்றில் போட்டுவிடுவார்கள்.

ஸ்ரீநிவாசன் என்ற வடமொழித் திருநாமத்தைத் தமிழ்ப்பாவில் மொழிபெயர்க்கின்றார் நம்மாழ்வார்.

"அகலகில்லேன் இறையும் என்று அலர்மேல் மங்கை உறைமார்பா!"

இலக்குமியின் வாசம் எப்போதும் பொருந்தியிருப்பவன் என்பது ஸ்ரீநிவாசன் என்பதின் பொருள்.

மற்ற சந்நிதிகளில் தாயார் சந்நிதி தனியாக உண்டு. திருமலையில் தனியாகத் தாயார் சந்நிதி கிடையாது.

இலக்குமிதான் பெருமாளுடைய திருமார்பில் எழுந்தருளியுள்ளாளே! மற்ற சந்நிதிகளில் வடிவாய் வலமார்பினில் வாழும் மங்கையாக வலப்புற மார்பில் மட்டும் எழுந்தருளியிருப்பாள். ஸ்ரீநிவாசன் என்ற திருப் பெயருடன் திருமலையில் எழுந்தருளியுள்ளதால் ஸ்ரீராமாநுசர் திருமகளை இடமார்பிலும் எழுந்தருளு வித்தார் !

இன்றும் திருவேங்கடத்தில் ஸ்ரீனிவாசன் வலது, இடது இரு திருமார்பிலும் இலட்சுமி எழுந்தருளியிருப்பதைச் சேவித்து மகிழலாம்!

108 பாடல்கள் அமைந்த ராமாநுசநூற்றந்தாதியை இயற்றிய திருவரங்கத்து அமுதனார், முதல் பாட்டிலேயே ராமாநுசருக்கு அணிவிக்கும் அடைமொழி "மாறன் அடிபணிந்து உய்ந்தவன்." அதாவது நம்மாழ்வாருடைய திருவடிகளைப் பணிந்து சிறந்தவர்; நம்மாழ்வார் திருவேங்கட மலையில் செய்ய வேண்டுவதை நியமிக் கின்றார்.

"ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி, வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம் தெழிகுரலருவித் திருவேங் கடத்து எழில் கொள் சோதி எந்தை தந்தை தந்தைக்கே!"

ஒழிவில் காலம் எல்லாம் உடனாய் மன்னி வழுவுஇலா அடிமை செய்வதற்காக ராமாநுசர் திருமலையில் ஒரு மடத்தை நிறுவி அதன் தலைவராக ஒரு ஜீயரை நியமித்தார்.

அந்த பெரிய ஜீயர் திருப்பரம்பரை இன்றும் பிரகாசித்து வருகிறது.

புரட்டாசி மாதம் திருஓண நட்சத்திரம் மிகவும் புனிதமானது. திருவேங்கட முடையான் திரு நட்சத்திரம்.

ஆண்டு விழாக் கண்டருளி தீர்த்தவாரி கொண்டாடும் நாள். இப்புனித புரட்டாசித் திருவோண நன்னாளில் தான் வேதாந்ததேசிகர் அவதரித்தார்.

இவருடைய திருத்தாயார் தம் திரு வயிற்றில் திருமலை திருவேங்கடவரின் திருமணி புகுவதாகக் கனாக்கண்டு, பிறகு கர்ப்பமுற்று இவர் திருவவதரித்தமையால் திருமலையில் திருமணியின் அம்சமாக அவதரித்தார் எனக் கொண்டாடப்படுகிறார். திருவேங்கடமுடையானின் திருமணி எப்படிக் கம்பீரமாக ''கோவிந்தா''! ''கோவிந்தா'' என ஒலிக்கின்றதோ அப்படியே வேதாந்த தேசிகனும் நாடும் நகரமும் நன்கறிய ஸ்ரீராமானுச தரிசனத்தைப் பல வடமொழி தென்மொழி நூல்கள் மூலம் பிரகாசித்தார்.

எனவே திருமலையில் திருமணி ஓசையைக் கேட்டாலும் திருமணியை சேவித்தாலும், வேதாந்த தேசிகரின் புனித ஞாபகம் வருகிறது. வேதாந்த தேசிகன், மணவாள மாமுனிகளுடன், புகழ்பெற்ற ஆசாரிய பரம்பரை முடிவு பெறுகிறது.

மணவாள மாமுனிகள் திருமலைக்கு எழுந்தருளும் முன்பே அவருடைய பரிமணம், திருவேங்கடமுடையானுக்கு எட்டி விட்டது.

திருமலையில் பிரதிவாதி பயங்கரம் அண்ணன் என்னும் மகான் காஞ்சியிலிருந்து திருமலைக்கு எழுந்தருளி, திருவேங் கடவருக்கு நாடோறும் ஆகாச கங்கையிலிருந்து திருவாராதனத்துக்கும், திருமஞ்சனத்துக்கும் தீர்த்தம் கொணர்ந்து அளித்துக் கொண்டிருந்தார்.

திருவரங்கத்திலிருந்து, திருமலைக்கு மணவாளமா முனிகளின் சீடர் ஒருவர் எழுந்தருளினார். அவர் பிரதிவாதி பயங்கரம் அண்ணனிடம் மணவாள மாமுனிகளின் பெருமை களை எடுத்துரைக்கலானார்.

பிரதிவாதி பயங்கரம் அண்ணனுக்கு மணவாள மாமுனிகள் மீது அதிக பக்தி ஏற்பட்டு விட்டது.

மறுநாள் ஆகாசகங்கைக்குத் தீர்த்தம் கொணரப் போகும்போது மணவாளமாமுனிகள் பெருமைகளையே நினைத்தவண்ணம் எழுந்தருளினார்.

தீர்த்தத்தை இல்லம் கொணர்ந்து மறுபடியும்மணவாள மாமுனிகளின் பெருமைகளையே கேட்டு ஆனந்தப்படலா னார்.

தீர்த்தத்தில் வழக்கப்படி சேர்க்க வேண்டிய பரிமளத் திரவியங்களைச் சேர்க்காமலேயே ஸ்ரீமணவாள மாமுனி களின் பெருமைகளைப் பேசிக் கொண்டும் கேட்டுக் கொண்டும் காலம் செலுத்தினார்.

திருவேங்கடவருக்குத் திருவாராதனை சமயம் நெருங்கி விட்டது. பிரதிவாதி பயங்கரம் அண்ணன் தீர்த்தத்தில் பரிமளப் பொருள்களைச் சேர்த்துக் கொண்டு போகவும் இல்லை. திருவேங்கடமுடையான் சந்நிதியிலிருந்து ஒரு அர்ச்சகர் ஓடி வந்து நேரமாகி விட்டதற்கு மிகவும் கோபித்துக் கொண்டு, பரிமளம் சேர்க்காமல் இருந்த ஆகாச கங்கைத் தீர்த்தத்தையே கொண்டு போய் விட்டார்!

பிரதிவாதி பயங்கரம் அண்ணன் ''அபசாரம் நேர்ந்து விட்டதே, ஒழிவில் காலம் எல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்ய வேண்டிய திருப்பணியில் வழு நேர்ந்து விட்டதே'' என மிகவும் மனம் புழுங்கி சந்நிதி அடைந்தார்.

திருவேங்கடமுடையான் பரிமளம் சேர்க்காமலேயே, மணவாளமாமுனிகளின் நினைவாகவே திரட்டிய தீர்த்தத்தைப் பரம மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டார்.

அர்ச்சகர் மூலமாகத் திருவுள்ளம் பற்றினார்.

''இத்தனை நாளாகக் கொணர்ந்த தீர்த்தத்திலும் ருசியும், பரிமளமும் இன்று மிக அதிகமாக இருக்கிறதே; உம்முடைய பக்திக்கு நாம் உகந்தோம்; ஒருவித மனக் கசப்பும் வேண்டாம்'' என்றார்.

பிரதிவாதி பயங்கரம் அண்ணனின் மகிழ்ச்சி அளவு கடந்துவிட்டது

மணவாளமாமுனிகளின் வைபவங்களைச் செவி ஏற்றுக் கொண்டே இன்று தீர்த்தம் பூரித்ததனால், இதுவே இன்றைய அதிக பரிமளத்திற்கும் ருசிக்கும், திருவேங்கட முடையானின் உகப்பிற்கும் காரணம் எனத் தெளிந்து கொண்டார்.

எனவே திருவேங்கடமுடையானுக்குத் தீர்த்தக் குடம் எழுந்தருளினாலும், திருமஞ்சனம் திருவேங்கடவர் கண்டருளினாலும்,திருமலையில் தீர்த்தம் பிரசாதித்தாலும் மணவாள மாமுனிகளின் சிறந்த நினைவு வருகிறது.

மணவாள மாமுனிகள் திருமலைக்கு எழுந்தருளினார். பிரதிவாதி பயங்கரம் அண்ணனும் மாமுனிகளுடன் எழுந்தருளினார்.

மணவாள மாமுனிகள் மிகவும் சத்வ குணமுடையவர்; சாது; அடக்கமானவர்.

தாம் அவதரித்த ஆழ்வார் திருநகரியில் ஸ்ரீராமா நுசருக்கு சந்நிதி ஏற்படுத்தினார். தமக்கும் ஒரு சந்நிதி ஏற்படுத்த வேஃணுமென்று சிடர்கள் வேண்ட, ஒரு ராமாநுச பாத்திரத்தை அளித்து, அந்த பாத்திரம் செய்யப்பட்ட சிறிய அளவு செம்பில், சிறிய வடிவம் அமைத்துக் கொள்ள இசைந்தார்.

திருவரங்கத்தில் காலட்சேப மண்டபம் அமைத்தபோது அதற்குத் தம் ஆசாரியன் பெயரால் ''திருமலையாழ்வார் திருமண்டபம்'' எனத் திருப்பெயர் சூட்டினார்.

அப்படி அமைந்த திருமண்டபத்திலே பிள்ளை லோகாசாரியர் திருமாளிகையில் நின்றும், 'ரகஸ்யம் விளைந்தமண்' என்று திருமண்ணைக் கொண்டு வந்து காலட்சேபக் கூடத்திற்குக் காப்பிடுவித்தார்.

திருவரங்கத்தில் தமக்கு ஒரு சந்நிதி அமைத்தாலும், பெரிய பெருமாள் ஆழ்வார் ஆசாரியர்களுக்கு எதிராக தமக்கு ஒருவிதத் திருவீதி புறப்பாடு விழாவும் கூடாதென்று நியமித்து விட்டார்!

இத்தகைய அடக்கமே .உருவான மணவாளமாமுனிகளுக்கு, திருவேங்கடமுடையானுக்கு சுப்ரபாத கீதமும், தோத்திரமும் இயற்றிச் சமர்பிக்க வேண்டுமென்று, திருவேங்கடமுடையானைச் சேவிக்க எழுந்தருளியபோது தோன்றியது. மணவாளமாமுனிகள் தாமே சுப்ரபாத கீதத்தையும், தோத்திரத்தையும் அருளாமல் அருகில் இருந்த பிரதிவாதி பயங்கரம் அண்ணனுக்கு இப்பாடல்களை அருளும்படிபணித்தார்.

பிரதிவாதி பயங்கரம் அண்ணனும் மணவாள மாமுனிகளின் நியமனத்தைச் சிரமேற்கொண்டு திருவேங்கடவர் திருமுன்பே வடமொழியில் ஸ்ரீவேங்கடேஸ்வர சுப்ரபாதத்தையும், ஸ்ரீவேங்கடேஸ்வர தோத்திரத்தையும், மிகவும் இனிமையான சந்தத்திலும், கம்பீரமான நடையிலும் அருளிச் செய்தார்.

எனவே திருமலையில் ஸ்ரீவேங்கடேச சுப்ரபாதத்தையும் ஸ்ரீவேங்கடேஸ்வர தோத்திரத்தையும் சேவிக்கும்போது ஆசார்யர்களான ஸ்ரீமணவாள மாமுனிகள், ஸ்ரீ பிரதிவாதி பயங்கரம் அண்ணன் நினைவுகள் நம்மை பக்திப் பரவசம் அடையச் செய்யும்.

திருமலையில் என்ன! ஸ்ரீவேங்கடேச சுப்ரபாதமும் ஸ்ரீவேங்கடேச தோத்திரமும் தற்காலத்தில் கேட்காத இடமே இல்லை.

எனவே இத்திருப்பாடல்களைச் சேவிக்கும் போதெல்லாம் திருவேங்கடமுடையான், மணவாளமாமுனிகள், பிரதிவாதி பயங்கரம் அண்ணன் மூவருடைய ஆசியும் நமக்கு ஒருசேரக் கிடைக்கின்றன.

ஸ்ரீராமாநுசர், திருமலையில் ஜீயர்மடம் ஏற்படுத்தியதை முன்பு அறிந்தோம். ஒரு சில சமயங்களில் ஜீயர் திருமேனிப்பாங்காக இல்லாத போதும், பரமபதித்து விட நேர்ந்தபோதும், வேறு ஜீயர் திருப்பணியை ஏற்கக் காலம் தாழ்த்தியது.

ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்ய வேண்டும் என்று நம்மாழ்வார் நியமனம் அதற்காக மணவாள மாமுனிகள் திருமலையில் சின்ன ஜீயர் மடத்தையும் ஏற்படுத்தினார். எந்தக் காரணத்தினாலாவது பெரிய ஜீயர் கைங்கர்யம் புரிய இயலாமற்போனால், ஒரு விதத் தாமதமும் இன்றி அதை ஏற்றுக் கொள்ள சின்ன ஜீயர் ஸ்தானம் திருமலையில்தான் உள்ளது.

திருவரங்கத்தை மிகவும் அபிமானித்திருந்தார் ஸ்ரீ ராமாநுசருக்குப்பின் வந்த ஆசாரியரான பட்டர் என்பவர்; இவர் கூரத்தாழ்வானின் திருக்குமாரர்.

திருவரங்கத்தில் பட்டர் காலட்சேபம் சாதித்துக் கொண்டிருக்கிறார். அதுசமயம் திருமலையிலிருந்தும் ஒரு ஸ்ரீவைணவர் எழுந்தருளினார். பட்டருக்கும், காலட்சேப கோஷ்டிக்கும் தண்டன் சமர்ப்பித்து அமருகையில் ''திருவேங்கடம், திருவேங்கடம்'' என்று கூறிக் கொண்டே அமர்ந்தார்.

''திருவரங்கம் காலட்சேப கோஷ்டியில் 'திருவேங்கடம்' என்பதா?'' என்று பட்டர் வினவினார். திருமலையிலிருந்து வந்த பக்தர் திருமலைக்குச் சென்று அவ்விடம் தம் ஆசாரியனிடம் இந்த விஷயத்தை விண்ணப்பித்து, மறுபடியும் திருவரங்கம் எழுந்தருளி, முன்போலவே

பட்டருடைய காலட்சேப கோஷ்டியில், 'திருவேங்கடம் திருவேங்கடம்' என்று உச்சரித்துக் கொண்டே அமர்ந்தார்.

பட்டர் மறுபடியும் ''என்ன இப்படி திருவரங்கத்திலும், திருவேங்கடத்தை உச்சரிப்பதா?'' எனக் கேட்டார்.

திருமலையிலிருந்து வந்த ஸ்ரீவைணவர் திருமங்கை மன்னனுடைய பெரிய திருமொழியில் திருவரங்கப் பதிகம் தாய்ப்பாசுரமான,

''சேலுகளும் வயல்புடைசூழ் திருவரங்கத்தம்மானைச்
சிந்தை செய்த
நீலமலர்க் கண்மடவாள் நிறையழிவைத்தாய்மொழிந்த
அதனை, நேரார்
காலவேல் பரகாலன் கலிகன்றி ஒலிமாலை
கற்று வல்லார்
மாலை சேர் வெண்குடைக்கீழ் மன்னவராய்ப்
பொன்னுலகில் வாழ்வர் தாமே'',

திருவரங்கப் பாசுரம் (5-5-10) இதில் அமைந்துள்ள பதிகத்தின் முதற் பாடலை எடுத்தோதினார்.

திருவரங்கத்தை நினைத்துப் பிதற்றும் தலைவியின் பாடல் இது:

அரங்கன் படுத்திய பாட்டில், ''வேங்கடமே வேங்கடமே'' என்று தலைவி அலறினாள்.

வெருவாதாள்வாய்வெருவி வேங்கடமே! வேங்கடமே!
என்கின்றாளால்
மருவாளால் என் குடங்கால் வாள் நெடுங்கண் துயில்
மறந்தாள் வண்டார் கொண்டல்
உருவாளன் வானவர்தம் உயிராளன் ஒலி திரைநீர்ப்
பௌவம் கொண்ட
திருவாளன் என் மகளைச் செய்தனகள் எங்ஙனம்
நான் சிந்திக்கேனே!

அணியரங்கமும், அப்பன் வேங்கடமும் ஒன்று தான் என்று சமாதானம் அடைந்தாராம் பட்டர்.

திவ்யப்பிரபந்தத்தை அருளியவர்கள் திவ்யசூரிகளான ஆழ்வார்கள்.

திருவரங்கத்தில் பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் என்னும் பெரும் புலவர் 'திவ்யகவி' என்று பெயர் பெற்றார். ஆழ்வார்களுடைய பாடல்களுக்கு ஈடாக இவர் பாடல்கள் அமைந்தன.

பிள்ளைப் பெருமாள் அய்யங்காருக்குத் திருவரங்கர்மீது மிக மிக ஈடுபாடு. இவர் பாடல்களின் சிறப்பால் சொக்கினார் திருவேங்கடவர். பிள்ளைப் பெருமாள் அய்யங்காருடைய கனவில் தோன்றித் திருவேங்கடவர், தம்மீதும் பாடல்கள் இயற்றும் படி வேண்டினாராம்.

பிள்ளைப் பெருமாள் அய்யங்கார், "அரங்கனைப் பாடிய வாயினால் குரங்கனைப் பாடிடேன்" என்றாராம்.

திருவேங்கடவர் சினந்து விட்டார். பிள்ளைப் பெருமாள் அய்யங்காருக்குக் கண்டமாலை ஏற்பட்டு விட்டது

விண்ணவர் கோன் விரையார் பொழில் வேங்கடவன் தான் நீள்மதிள் அரங்கத் தம்மான்—என்றும், மந்திபாய் வடவேங்கட மாமலை, வானவர்கள் சந்தி செய்ய நின்றான், அரங்கத்து அரவின் அணையான் என்றும்திருப்பாணாழ்வார் பணித்தது கொண்டு மனந்தேறி, பிள்ளைப்பெருமாள் அய்யங்காரும் திருவரங்கனுக்கு அளித்தது போலவே திருவேங்கடமுடையானுக்கும் "திருவேங்கடக்கலம்பகம்" "திருவேங்கடத்து அந்தாதி" "திருவேங்கட மாலை" "உலா" முதலிய நூல்களை அருளவும், திருவேங்கடமுடையான் மிகவும் உவந்தருளி கண்டமாலையை நீக்கினார்.

திருவேங்கடமுடையான் மீது ஈடுபாடு கொண்டதின் சின்னமாகப் பிள்ளைப் பெருமாள் அய்யங்காரும், திருவரங்கம் நம்பிள்ளை கோஷ்டிப் பிராகாரத்தில், சுதை

சுண்ணாம்பு அமைப்பு வடிவில் பெரிய அளவில் திருவேங்கட வரை எழுந்தருள்வித்தார்.

இன்றும் இதைத் திருவரங்கத்தில் சேவிக்கலாம்.

மூன்று கைங்கரியங்களைப் பெரியோர்கள் சிறப்பித் துள்ளனர்.

வீணையும் கையுமாகத் திருப்பாணாழ்வார்திருவரங்கத் திலும், ஆலவட்டமும் கையுமாகத் திருக்கச்சி நம்பிகள் அருளாளன்திருமுன்பும், பணிப்பூவும் கையுமாகத் திருமலை யில் குறும்பறுத்த நம்பியும் புரிந்த கைங்கரியங்கள் மிகச் சிறந்தன.

இவற்றுள் குறும்பறுத்த நம்பியின் திருப்பணிக்கு மிக்க ஏற்றமுண்டு!

திருப்பாணர் திருவரங்கன் திருமுன்பு சென்று வீணை யும் கையுமாக அமலன் ஆதிப்பிரான் என்னும் பதிகம் அருளினார். திருக்கச்சி நம்பிகளும், காஞ்சியில் பேரருளாளன் திருமுன்பு ஆலவட்டக் கைங்கரியம் புரிந்தார்.

குறும்பறுத்த நம்பியோ திருமலை மேல் ஏறவே இல்லை.

திருமலை அடிவாரத்திலேயே வாழ்ந்து, திருப்பணி செய்தார். மட்கலங்களைச் சுட்டு விற்றார். திருப்பாணாழ் வாரைப்போல் தென்மொழியிலோ, திருக்கச்சி நம்பிகளைப் போல் வடமொழியிலோ பாடல் இயற்றவும் இல்லை.

திருமலையில் திருக்கோயிலை ஏற்படுத்தின தொண்டமான் சக்ரவர்த்தி, ஒரு சமயம் திருவேங்கட முடையானுக்குப் புட்ப கைங்கர்யம் சிறந்ததாயிற்றே என மிக விலை உயர்ந்த புட்பங்களைத் திரட்டி அணிவித்தார்.

தொண்டமான் சக்ரவர்த்தியின் கனவிலே திருவேங்கடவர் எழுந்தருளினார்; தொண்டமானும்

தாம் சமர்ப்பித்த விலை உயர்ந்த புட்பங்கள் மணம் நிறைந்தனவாக இருந்தனவா? எனத் திருவேங்கடவரைக் கேட்டார்!

திருவேங்கடவர் புன்னகைபுரிந்தார், 'அந்தக் குயவன் சமர்ப்பித்த புட்பங்களின் மணம் மிக மிக அதிகமாக இருந்தது,' என்றார்.

தொண்டமான் சக்ரவர்த்தி திடுக்கிட்டு எழுந்து மறு நாள், யார் அந்தக் குயவர் எனத் தேட ஏற்பாடுகள் செய்தார்.

திருமலை அடிவாரத்தில் ஒரு குயவர் தினமும் காலையில் மண்பாண்டங்கள் செய்யும் முன்பு, கொஞ்சம் களி மண்ணால் சிறு புட்பங்கள் செய்து அவைகளைத்தான் எதிரில் உள்ள திருவேங்கடவரின் திருவடியில் அர்ச்சித்து விட்டு வேலை தொடங்குவாராம்.

(கையால் செய்வது பணி; இப்படிக் கையால் செய்யப் பட்ட களிமண் மலர் பணிப்பூ எனப்பட்டது!) நம்பியின் திருக்கைகளால்.

அந்தக் களிமண்ணால் செய்யப்பட்ட மலர்கள் திருமலையில் திருவேங்கடவர் திருவடிகளில் பரிமளத்துடன் காணப்பட்டன. தொண்டமான் சக்ர வர்த்தி தம் கர்வத்திற்கு வெட்கப்பட்டார். சக்ரவர்த்தியினுடைய குறும்பை அறுந்தபடியால் இந்த பக்தருக்குக் குறும்பறுத்த நம்பி எனப்பெயர் ஏற்பட்டு விட்டது.

திருவேங்கடவர், ஏழுமலைகளைவிடப் பெரியவர், உயர்ந்தவர்.

அவன் ஈசன் வானவர்க்கு! ஆனால் அது தேசமில்லை திருவேங்கடத் தானுக்கு!

நாம் நீசர்கள், நின்ற ஒன்றும் இல்லாதவர்கள் என்று பணிவுடன் குற்றேவல் புரிந்தால் அந்தப் பரஞ்சுடர்ச்

சோதி நம் கண் பாசம் வைப்பார். இதுவே நம்மாழ்வாரின் உபதேசம்!

''ஈசன் வானவர்க்கு என்பன் என்றால்; அது தேசமோ திருவேங்கடத்தானுக்கு ! நீசனேன் நிறைவு ஒன்றும் இலேன் என்கண் பாசம் வைத்த பரம்சுடர்ச்சோதிக்கே''

பெரியாழ்வார் பணித்தபடி ''சென்னியோங்கு'' என்கிற மன அடக்கத்துடன் விண்ணும் மண்ணும் தொழும் படியும், உலகுதன்னை வாழ நிற்கும்படியும் எழுந்தருளி யுள்ள திருவேங்கடத்தானைப் பணிவோமாக.

# திருமலை........

## திருமலை தொடங்கும் வைணவர் பேறு.

1. ''செடியாய வல்வினைகள் தீர்க்கும் நெடியான், வேங்கடவன்!''

இவனுக்கும் ஒரு வினை ஏற்பட்டது! அதாவது, சென்னி ஓங்கு தண் திருவேங்கடமுடையான், ''திருமால் தானா!'' என்ற ஐயம் ஏற்பட்டு விட்டது!

முதலுக்கே மோசம் வந்தது! இராமாநுசரே இந்த வினையிலிருந்து திருவேங்கடவரைக் காப்பாற்றினார்! அவனைச் சங்கும் ஆழியும் சூட வைத்தார். இதனால் இவருக்கு ''அப்பனுக்குச் சங்காழி அளித்தருளும் பெருமாள்!'' என்ற விருதும் ஏற்பட்டது!

இப்பேருபகாரத்திற்காகவே, திரு வேங்கடத்தையே விட்டு விட்டு, எம்பெருமானாருடையத் திருவுள்ளத்தையே இருப்பிடமாகக் கொண்டு விட்டான் திருவேங்கடவன்!

அந்த இராமாநுசரே அடியேனது மனதையும் இருப்பிட மாக்கிக் கொண்டாரே எனக்களிக்கின்றார் அமுதனார்.

''நாறுநறும் பொழில் மாலிரும் சோலை நம்பிக்கு, நான்
நூறுதடாவில் வெண்ணெய் வாய் நேர்ந்து பராவி
வைத்தேன்;
நூறு தடா நிறைந்த அக்கார அடிசில் சொன்னேன்!

ஏறு திருவுடையான் இன்று வந்து இவை கொள்ளும் கொலோ!''

என்று வாய்ப்பந்தல் போட்டு விட்டாள் பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானவளான ஸ்ரீ ஆண்டாள்.

ஸ்ரீ ஆண்டாள் நிறைவேற்றாத இந்த ஆசையை இராமாநுசர் அபகீர்த்தி ஏற்படாவண்ணம் நிறைவேற்றி வைத்தார்.

இதனால் மாலிருஞ்சோலைப் பெருமாளுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியில் அவரும் உடையவரின் உள்ளத்தையே வசமாக்கிக் கொண்டு விட்டார். இத்தகைய உடையவரும் அமுதனாரின் உள்ளத்தில் வந்து உகந்தருளினார்.

இதனால் மாலிருஞ்சோலைப் பெருமாளுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியில் அவரும் உடையாரின் உள்ளத்தையே வசமாக்கிக் கொண்டு விட்டார். இத்தகைய உடையவரும் அமுதனாரின் உள்ளத்தில் வந்து உகந்தருளினார்!

பழம் நழுவிப் பாலில் விழவும், அதுவும் நழுவி வாயில் விழுந்த அதிர்ஷ்டம் தான்!

11. நூற்றெட்டு திவ்விய தேசங்களுள் தலையாயது திருவரங்கம். போக மண்டபமாம் திசை விளக்காய் நிற்கின்ற திருவரங்கம்! இது பூலோக வைகுண்டமல்லவா. ஸ்ரீ வைணவப் பரிபாஷையிலே, ''கோயில்'' என்றாலே திருவரங்கம் பெரிய கோயில் தானே! எண்ணல் அளவில் கணக்கிட்டாலும் திருவரங்கம் என்றால் ''ஒன்று'', பெரிய கோயில் என்றால் ''இரண்டு'' என்று தானே எண்ணிக்கை! இத்திருவரங்கனின் செல்வம் சிதைவுற்றிருந்த காலத்தில், இராமாநுசரல்லவா ஸ்ரீ வைணவ உலகின் ஆசாரிய பீடத்தைஅலங்கரித்துப்பன்னெடும் ஆண்டுகள் ''திருவரங்கம் திருப்பதியே இருப்பாகப் பெற்றோம்!'' என்று உவந்து நித்யவாசம் புரிந்து தென்னரங்கன் செல்வம் முற்றிலும் திருத்தி வைத்தருளினார்!

இராமாநுசர் பரமபதத்திற்கு எழுந்தருளிய பிறகும் அவரது திருமேனியைத் திருவரங்கனின் பிரிவு ஏற்படா

வண்ணம். அவனுடைய பெரிய கோயிலின் கண சந்நிதி படுத்தப்பட்டுள்ளது.

இராமாநுசர் திருச் செவிகளில் 'பொன்னரங்கம்' எனப் புகன்றாலே போதுமே! மயலே பெருகி, மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கி விடுவாரே!

III. ஆழ்வார்கள் அடிசூடும் ஆசாரியார்!

ஸ்ரீ வைணவ ஆழ்வார்கள்பன்னிருவரையும் இணைக்கும் சக்தி எது?

அர்ச்சையில் (வணங்கப்படும் திரு உருவ நிலை) மண்டிக் கிடந்தவர்கள் ஆழ்வார்களே! இதுவே அவர் களுடைய பெருமை! ஒற்றுமை! ஒரே நோக்கு.

ஆழ்வார்கள் திவ்விய சூரிகள் ! அவர்களுடைய பாடல் களோ திவ்வியப் பிரபந்தங்கள்! அவர்களால் பாடல் பெற்ற திருத்தலங்களோ திவ்விய தேசங்கள்! எல்லாம் திவ்விய மான ஆழ்வார்களின் திருவாக்காம் அருளிச் செயல்களால்!

ஆழ்வார்கள்:- உலகம் ஏத்தும் கண்டியூர், அரங்கம், மெய்யம், கச்சி, பேர்,மல்லை என்று மண்டிக் கிடந்து உய்ந்தவர்கள்- உய்ய வழிகாட்டினவர்கள்!

ஆழ்வார்கள் பலவிடங்களிலும் (நிலைகளிலும்) பிரபத்தி (சரணாகதி) பண்ணினதும் அர்ச்சாவதாரத்திலே!

வடமொழியில் அமைந்துள்ள வேதக் கருத்துக்களில் தெளியாத மறை நிலைகள் உள்ளன. அவைகளைத் தெளிய வைப்பது ஆழ்வார்கள் தம் அருளிச் செயல்களே! இது (திருவாய் மொழியின் துணையைக்) கொண்டு சூத்திர வாக்கியங்களை வேத வியாசரின் பிரம்ம சூத்திரங் களுக்கு, இராமாநுசர் முரண்பாடுகளை அகற்றி விளக்கம் தந்தார்.

முரண்பாடுகளை அகற்றி ' ஒருங்க விடுவர்!'' என்று பெரும் புகழும் உண்டே!!

இத்தகைய ஆழ்வார்களின் அருளிச் செயல்களை ஸ்ரீ வைணவதிவ்ய தேசங்கள், திருவிழாக் காலங்கள்!

ஏனைய வழிபாடுகள் நிகழும் போதும் ஓதும்படி ஏற்பாடு செய்தவர் இராமானுசரே!

IV. ஆழ்வார்கள் பதின்மருடைய கீர்த்திகளையும் இணைத்து, இராமானுசரின் புகழைப் பாடுகின்றார் திருவரங்கத்து அமுதனார்!

திருச் செவி சாற்றி உகந்தருளினார் ஸ்ரீ உடையவரும்!!

ஒவ்வொரு ஆழ்வார்தம் பெருமைகளையும், அவர் களில் ஒவ்வொரு ஆழ்வார்களுடைய தனித் தன்மையையும் சிறப்பையும் வெளியிடுகிறார் அமுதனார்!

ஆழ்வார்களுடைய அவதார காரணங்களையும் பகுத் தறிவின் அடிப்படையில் நிலைக்க ரீதியாக விளக்கு கின்றார் அமுதனார். பன்னிருவருடன் ஆழ்வார்களின் சங்கிலித் தொடர் அமைவதையும். முற்றுப் பெறுவதையும்! ஆழமாகவும்அழகாகவும் அமுதனார் விளக்கியருள்கின்றார்,

V. **புறவிருள் அகலப் பொய்கைமுனி ஏற்றும் விளக்கு!**

முதலாழ்வார்கள் மூவர்—பொய்கையார், பூதத்தார், பேயார். இவர்கள் முதன்மையானவர்கள்; இவர்கள் ஸ்ரீவைணவச் சமயத்தின் முதன்மையான முப்பொருள் விளக்கம் அல்லது தத்துவத்திரயத்தை வெளியிட்டருளி னார்கள் தங்கள் திருவந்தாதிகளிலே.

உலகில்பரவியுள்ள ‘அசித்’ சொரூபத்தைத் தம் அறிவுத் திருவிளக்கால் விளக்கினார் பொய்கை ஆழ்வார்.

“அசித்” தருவது புற இருள்.

ஆன்மாவிற்குப் புறத்தே உள்ள இருள் சூழ்ந்த உலகையே விளக்காக அமைத்துக் காட்டினார்.

அசித்தாலான உலகம் சுடராழி ஏந்திய ஸ்ரீமந் நாராயணனுக்குள் அடக்கம் என விளக்கினார். முதல் திருவந்தாதியில், முதற்பாட்டில், பொய்கை ஆழ்வார்!

“வையம் தகளியா (1)வார் கடலே நெய்யா(2)
வெய்ய கதிரோன் விளக்காக—செய்ய
சுடராழியான் அடிக்கே சூட்டினேன் சொன்மாலை
இடராழி நீங்குகவே! என்று!”

பொய்கையார் ஏற்றிய இத்திருவிளக்கைத் தம் திருவுள்ளத்தில் ஏற்றார் இராமாநுசரும்!

புற இருள்—புறத்தைப் பற்றிய இருள்.

மறையின் குருத்து—வடமொழிக் கருத்துக்கள்.

**2. பொய்ந் நின்ற ஞானம் அகற்றும் பூதத்தார் விளக்கு!**

''சித்து'' தத்துவத்தை விளக்க ஞான மென்னும் நிறை விளக்கை ஏற்றியவர் பூதத்தாழ்வார்! அரை குறை விளக்கு அல்ல.

இறை ஞானம் ஏற்படாமல் இருந்த போது நம் இதயத்தில் அல்லது சித்தினிடம் இருள் இருந்தது. பூதத்தாரின் இரண்டாவது திருவந்தாதியே, சித் சொரூபத்தை விளக்கும் ஞானத் திருவிளக்கு!

அன்பே தகளியா! ஆர்வமே நெய்யாக!
இன்புருகுசிந்தை இடு திரியா! நன்புருகி
ஞானச் சுடர் விளக்கு ஏற்றினேன்! நாரணற்கு
ஞானத் தமிழ் புரிந்த நான்!

பூதத்தாரின் ஞானமென்னும் நிறை விளக்கை நெஞ்சத்தில் கொண்டார் உடையார்!

ஆத்ம சொரூபம் : ஞானம், ஆனந்தம். ஞானம் ஏற்பட்டால் ஆனந்தம் ஏற்படும். இவை அடியாக 'தாஸ்யம்', கைங்கரியம் ஏற்படும்.

**V. 3. ஸ்ரீமத் வேத மார்க்கப் பிரதிஷ்டாபநாசாரியர்! ஆழி வண்ணனைக் காணும் பேயார்!**

முப்பொருள் உண்மையான தத்துவத்திரயத்தில் மூன்றாவது அம்சமான ஈஸ்வர தத்துவத்தை விளக்குபவர் பேயாழ்வார்!

''மன்னிய இருள்'' அசித்தைப் பற்றியது;
''மன்னிய பேர் இருள்'' சித்துவைப் பற்றியது!

இவை இரண்டைப் பற்றிய அஞ்ஞானம் ஒழிந்த போது ஈஸ்வரனைக் காண முடிகிறது.

ஓங்கி உலகளந்த உத்தமனை! திருவிக்கிரமனை. ஈஸ்வரனைக் காட்டியவரே தமிழ்த் தலைவர்!

'திருக்கண்டேன்! பொன்மேனி கண்டேன்! திகழும்
அருக்கன் அணிநிறமும் கண்டேன்!— செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன்! புரிசங்கம் கைக்கண்டேன்!
என் ஆழி வண்ணன் பால் இன்று!''

ஈஸ்வரனைப் பற்றிய ஞானத்தை அருளிய இத்தமிழ்த் தலைவர்களின் பொன்னடிகளைப் போற்றுகின்றார் இராமாநுசர்! ஸ்ரீவைணவ சமயத்தின் முதன்மையான கருத்தை அருளியதால் இவர்களே முதலாழ்வார்கள்!

**VI பழமறையின் பொருள் அருளும் பாணர்!**

முதலாழ்வார்களான மூவரால் தத்துவத்திரய ஞானம் ஏற்பட்டதும் வேத சாரமே கிட்டி விட்டது எனலாம்!

இந்த வேத சாரத்தைப் பிழிந்து அருளியவர், திருப்பாணாழ்வார்! வேதாந்த தேசிகரின் திருவாக்கு!

காண்பனவும், உரைப்பனவும் மற்றொன்றின்றிக்
கண்ணனையே கண்டு உரைத்த கடிய காதல்
பாண் பெருமாள் அருள் செய்த பாடல் பத்தும்
பழமறையின் பொருள் என்று பரவுகின்றோம்
(அதனால்)

வேண் பெரிய விரிதிரை நீர் வையத்துள்ளே
வேதாந்த ஆரியன் என்று இயம்பநின்றோம்!
நாண் பெரியோம் அல்லோம் நாம்! நன்றும், தீதும்
நமக்கு உரைப்பார் (திருப்பாணர்) உளரென்று
நாடுவோமே!

அரங்கனைச்சேவித்து ''மற்றொன்றினைக் காணாவே,'' எனக் கண்களை நாட்டியவர்! இப் பாண்-பெருமாளின் சரண மலர்களையே இராமாநுசர் தம் சென்னியில் சூடுவது!

**VII இடம் கொண்ட கீர்த்தி மழிசைக்கு இறைவர்!**

''மற்றொன்றினைக் காணாவே!'' என்ற மனத்திடம் ஏற்பட்ட பிறகு, அடுத்த பக்திசாரர், உருவிய வாளை உறையிலிடாதவராகிறார்!

மழிசைக்கு இறைவர் மார்தட்டுகின்றார்!

''காணிலும் உருப் பொலார், செவிக்கினாத கீர்த்தியார்,
பேணிலும் வரம்தர மிடுக்கிலாத தேவரை!
ஆணம் என்று அடைந்து வாழும் ஆதர்காள்! எம்
ஆதிபால்
பேணி, நும் பிறப்பு எனும் பிணக்கு அறுக்க கிற்றிரே!''

பேறு தப்பாது என்று மார்பிலே கை வைத்து ஊக்கம் ஊட்டுகின்றார்!

''அத்தனாகி! அன்னையாகி! ஆளும் எம்பிரானுமாய்
ஒத்து ஒவ்வாத பல் பிறப்பு ஒழித்து நம்மை
ஆட்கொள்வான்;
முத்தனார்! முகுந்தனார்! புகுந்து நம்முள்மேவினார்
எத்தினால் இடர்க் கடல் கிடத்தி ஏழை நெஞ்சமே!''

இந்த ஞானத்தை அருளிய திருமழிசையாரின் கீர்த்தி உலகமெங்கும் பரவியது! இராமாநுசரும் இவரது இணை அடிகளில் அடங்கினார்!

## VIII துளபத் தொண்டர் அடிப்பொடியார் :

தொண்டர் அடிப் பொடியாரின் நிலை இன்னும் ஒருபடி அதிகம்!

மழிசையாரைப் போல் இவர் மறந்தும் புறந்தொழா தவர் மட்டுமல்ல. மறந்தும் மதிளரங்கனைத் தவிரப் புறம் தொழாதவர். இதனால், ''பத்தினி ஆழ்வார்!'' என்றே விருது பெற்றவர். திருவரங்கத்து ஐயன் கழற்கு மலர் மாலையும் அணிவார். மேலும் செந்தமிழ் மாலையும் அணிவார்.

இவரது தேர்ந்த நிலை;

''புலை அறம் ஆகி நின்ற புத்தொடு சமணம் எல்லாம்
கலை அறக்கற்ற மாந்தர் காண்பரோ! கேட்பரோ தாம்
தலை அறுப்புண்டும் சாகேன் சத்தியம் காண்மின்
ஐயா!
சிலையினால் இலங்கை செற்ற தேவனே தேவன்
ஆவான்''

அதனால், இராமாநுசர் தொண்டர் அடிப் பொடி ஆழ்வாரின் திருவடிகளை விரும்புகின்றவர்!

**ix. குலசேகரரின் குரை கழலே கூறுவோம்!**

திரு அரங்கனின் கீர்த்தியைத் திருச் செவி ஏற்ற குலசேகரர், தினே தினே ரங்கயாத்திரையை மேற்கொண டார். அரங்கனின் மெய்யடியார்களுடன் கூடி ஆடுவதே அவரது பாரிப்பு.

தூராத மனக் காதல் தொண்டர் தங்கள்
குழாம் குழுமித் திருப்புகழ்கள் பலவும் பாடி
ஆராத மனக் களிப்போடு அழுத கண்ணீர்
மழைசோர நினைந்து உருகி ஏத்தி நாளும்
சீரார்ந்த முழவோசை பரவை காட்டும்
திருவரங்கத் தரவணையில் பள்ளி கொள்ளும்
போராழி அம்மானைக் கண்டு துள்ளிப்
பூதலத்தில் என்று கொலோ! புரளும் நாளே!

கொல்லி காவலன்! கூடல் நாயகன்! கோழிக் கோன் குலசேகரரின் கவிகளைப் பாடும் பெரியவர்களுடைய பாதம் துதிப்பவர் எம்பெருமானார்.

இப்படியான இராமாநுசரை அடைபவர்க்கு வேறு தவமும் வேண்டாம்!

தம் (அரண்) மனையில் இருந்து கொண்டே அரங்கனிடம் ஈடுபடலாம்.

**x. பதறிப் பல்லாண்டு பாடும் பெரியாழ்வார்;**

இராமபிரான், கர தூடணர்களை வதைக்கச் சீதையின் காவலுக்காக இலக்குமணனை விட்டு விட்டு, தன்னந்தனி யாக ஆயிரக் கணக்கான இராட்சதர்களை வதைக்கப் புறப்பட்டதை அறிந்ததும், குலசேகராழ்வார் தன்படை களுடன் புறப்பட்டு விட்டார், உதவி செய்ய!

இராவணன் சீதையைச் சிறை எடுத்துப் போனது அறிந்ததும், மறுபடியும் படைகளுடன் புறப்பட்டார் குலசேகரர்;

இந்தச் சமயம் இராமரே, சீதா இலட்சுமணருடன் எதிர் வந்து சேவை சாதித்தார். குலசேகரரும் அமைதியும் ஆனந்தமும் அடைந்தார்.

இதே நிலையை அடைந்தவர் பெரியாழ்வாரும். தம்மைக் காப்பவராவுகம், பெருமாளைக் காக்கப் படுபவ ராகவும் நினைத்துக் கொண்டு, கூடல் (மதுரைப்) பதியின் வானவீதியிலே பறவை ஏறும் பரம புருடனாகக் காட்சி அளித்தபோது பெருமாளுக்குப் பல்லாண்டு பாடிய பெரியவர்!

ஏழு பிரகாரங்களால் பாதுகாக்கப்பட்ட திருவரங்கக் கருவறையில் கண்வளரும் கருமணியைக் காக்க வேண்டு மென்று யாவருக்கும் எச்சரிப்பவர்.

> ''உறகல்! உறகல்! உறகல்! ஒண் சுடர் ஆழியே சங்கே!
> அறவெறி நாந்தக வாளே! அழகிய சார்ங்கமே!
> தண்டே!
> இறவு படாமல் இருந்த எண்மர் உலோக பாலீர்காள்!
> பரவை யரையா உறகல் பள்ளியறைக் குறிக்
> கொண்மின்''

இவரது திருவடிகளைத் திருவுள்ளத்தில் எப்போதும் உடையவர், உடையவர்.

**xi. பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள்!**

தம் தந்தையான பெரியாழ்வார் மணமுடைய மாலையைச் சாற்றிய பெருமாளுடைய திருத்தோள்களுக்கு, மணமாலையும் சாற்றியவள் ஸ்ரீ ஆண்டாள்.

வேதத்தின் உயர்வு குறைந்து உலக முழுவதும் கலிபுருஷ னின் காலம் ஓங்கி இருந்த சமயம், 'வேதம் அனைத்துக்கும் வித்தான திருப்பாவையால் உலகை மீண்டும் பக்தி மார்க்கத்தில், திருத்திக் கொணர்ந்தவள் ஸ்ரீ ஆண்டாள்.

ஆண்டாளுடைய அருள் நிரம்பியவர் இராமாநுசர்.

திருவரங்கம் திருவீதிகளில் பிட்சைக்கு எழுந்தருளிய போதும் திருப்பாவை அநுசந்தானம் தான்! இதனால் ''திருப்பாவை ஜீயர்'' என்றே போற்றப்படுவர்.

பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானவள் தானே ஆண்டாள்,

இதனால்தான், திருவரங்கம் திருப்பதியிலே நடைபெறும் திருவாய்மொழித் திருவிழாவிலே, எம்பெருமானார், தமது தங்கையான ஆண்டாளின் சார்பிலே, திருப்பாவை நாச்சியார் திருமொழி சேவா கால மரியாதைகளைப் பெற்றுக் கொள்ளுகிறார்!

**XII பொங்கு புகழ் மங்கையர் கோன் :**

திருப்பாவையானாலும், நாச்சியார் திருமொழியானாலும் ஸ்ரீ ஆண்டாள் உடனிருந்த பக்த கோபியர்களை அழைத்துக் கொண்டு நோன்பு நோற்றாள். எம்பெருமானை அநுபவித்தாள்.

திருமங்கை மன்னனும், தமது சகாக்களான நீர் மேல் நடப்பான், நிழலில் ஒதுங்குவான், உயரத் தொங்குவான், தோலா வழக்கன் கோஷ்டியாகவே திவ்ய தேசங்கள் தோறும் சென்று வணங்கினார்! அநுபவித்தார்!

பொருள் இருந்த போதும், பொருள் அற்றபோதும் ஸ்ரீவைணவத் ததீயாராதனையைக் கைவிடவில்லை

இறைவனை எண்ணாதே இருப்பாரை இறைப் பொழுதும் எண்ணார்.

கள்ளார் பொழில் தென்னரங்கன் கமலப் பதங்கள் நெஞ்சில் கொள்ளும், குறையல் பிரானடிக் கீழ் விள்ளாத அன்பர் இராமாநுசர்!

**XIII மதுர கவியின் மாண்பு :**

பரகால நாயகியும், பராங்குச நாயகியும் ஒரே மனம் உடையவர்கள்.

நம்மாழ்வார் நல்கிய நான்மறைக்கு ஆறங்கம் கூற அவதரித்தவர், ஆலி நாடராம் மங்கை மன்னன். இருவரும் ஆயிரம் பாசுரங்களுக்கு மேல் அருளியவர்கள். வேதத்தின் சாரமே இவைகள்.

வேதம் தமிழ் செய்த மாறனையும் அவரது சீடராம் மதுரகவிகளையும் தம் சிந்தையுள்ளே கொண்டவர் எம்பெருமானார்!

XIV **நம்மாழ்வாரே நாதன் :**

நம்மாழ்வாரைப் பற்றி நினைக்க ஆரம்பித்ததுவே தாமதம்! இராமாநுசருக்கு நம்மாழ்வாரிடமும், திருவாய் மொழியினிடமும் இருந்த அபார ஈடுபாட்டை வெளியிட்டருள்கின்றார் அமுதனார்

ஆம்! இராமாநுசருக்குத் திருவாய்மொழிதான் மகா நிதி. தாய் தந்தை. குரு. ஏன்? எம்பெருமான் கூடத்தான்.

திருவாய்மொழி ஏற்படவில்லையானால் உலகம் வெறும் பாழ்தான்.

பகவத் விஷயம், அதாவது பகவானுடைய திருக் கல்யாண குணங்களை விளக்கும் திருவாய்மொழிதான் எல்லாமும் நமக்கு!

ஆழ்வார்களுடைய தென்மொழி திவ்வியப் பிரபந்தங் களை உடையவர், திவ்விய தேசங்களில் வேதமாகவே ஓதும் முறையை ஏற்படுத்தவில்லையானால், உலகம் இவை களை இழந்திருக்கும்.

நம்மாழ்வார் இராமாநுசரைப் பவிஷ்யத் (வருங்கால— எதிர்கால) ஆசாரியராகக் காட்டியருளிய பாசுரம் :

''பொலிக! பொலிக! பொலிக! போயிற்று வல் உயிர்ச் சாபம்
நலியும் நரகமும் நைந்த! நமனுக்கு இங்கு யாதொன்றும் இல்லை
கலியும் கெடும்! கண்டு கொண்மின்! கடல் வண்ணன் பூதங்கள் மண்மேல்
மலியப் புகுந்து இசைபாடி ஆடி உழிதரக் கண்டோம்''

நம்மாழ்வாரின் திருவாய் மொழி எப்படி எப்படி எல்லாம் விளங்குகின்றது நமது இராமாநுசருக்கு!

''உறுபெறும் செல்வமும், தந்தையும், தாயும், உயர் குருவும்,
வெறுதரு பூமகள் நாதனும் மாறன் விளங்கிய சீர்

நெறிதரும் செந்தமிழ் ஆரணமே என்று இந்நீண்
நிலத்தோர்
அறிதர நின்ற, இராமாநுசன் எனக்கு ஆர் அமுதே!''

## XV ஆழ்வார் அளிக்கும் அமுது அர்த்த பஞ்சகமே!

ஆழ்வார் என்றாலே நம்மாழ்வார்தான். இவரே உடல்; ஏனைய ஆழ்வார்கள் இவரது உடலின் உறுப்புகள்; அதாவது திருவாய் மொழியில் உள்ள திரண்ட கருத்துக் களை ஒவ்வொரு ஆழ்வாரும் பங்கிட்டுப் பாடியிருக் கின்றார்கள்.

நம்மாழ்வார் அருளிய திருவாய் மொழியின் ஏற்றம் என்ன? அர்த்த பஞ்சக ஞானம் அளிப்பதே!

பட்டர் அருள்வது :

''மிக்க இறை நிலையும்(1) மெய்யாம் உயிர் நிலையும்(2)
தக்க நெறியும் (3) தடையாகித் தொக்கியலும்
ஊழ்வினையும்(4) வாழ்வினையும்(5) ஓதும்
குருகையர்கோன்
யாழினிசை வேதத்து இயல்''

திருவரங்கத்து அமுதனார், தமது நூற்றந்தாதி மூலமாக, இராமாநுசரது புகழாகிய அமுதத்தையும், ஸ்ரீவைணவ தரிசனத்தின் அடிப்படைக் கொள்கையான அர்த்த பஞ்சக அமுதத்தையும் குழைத்து அருளுகின்றார்! அளவுக்கு மீறினாலும், இந்த அமுதம், அமுதமே!

### 1. மிக்க இறை நிலை :

நமக்கு மோட்சம் கிடைக்குமென்றால் மகிழ்ச்சி அடைகின்றோம்! ''நரகம் தான் முடிவு'' என்று ஏற்பட்டு விட்டால் வருந்துகிறோம்.

இந்த நிலை ஏற்படுத்துவது எப்படி? நம் முயற்சியால் தான் நாம் வாழ்கின்றோம், பலன்களை அடைகின்றோம் என்று எண்ணினால், ''ஆசாரிய கடாட்சத்தினால் நாம் வாழ்கின்றோம்'' என்ற நம்பிக்கையும் பணிவும் ஏற்பட்டு விட்டால், மோட்சமும் நரகமும் கூட நம் உணர்ச்சிகளை பாதிக்காது.

ஆசாரியரான இராமாநுசர் இதை எப்படிச் செய்கின்றார்?

அசித்தால் ஆன, அனாதிகாலமாக உள்ள இந்த உலகத்தில், பொருந்தி வாழ்கின்ற எல்லா ஆன்மாக்களுக்கும் ரட்சகனானவன், ஆச்சரியமான குணங்களை உடைய திருமால்தான் என்று மிக்க இறை நிலையை போதித்தருள்கின்றார்.

''சுய அபிமானத்தாலே ஈசுவர அபிமானத்தைக் குலைத்துக் கொண்ட இவனுக்கு (ஆன்மாவுக்கு) ஆசாரிய அபிமானம் ஒழியக் கதி இல்லை'' என்று (வடக்கு) திருவீதிப் பிள்ளை பலகாலும் அருளிச் செய்யக் கேட்டிருக்கையால் இருக்கும். (ஸ்ரீ வசன பூஷணம்—446)

''இன்பம் தரும் பெரு வீடு வந்து எய்தில் என் எண்ணிறந்த
துன்பம் தரும் நிரயம் பல சூழில் என்! தொல் உலகில்
மன் பல் உயிர்கட்கு இறையவன் மாயன் என மொழிந்த
அன்பன் அனகன் இராமாநுசன் என்னை ஆண்டனனே''

மிக்க இறைநிலை—ரட்சகத் தன்மையே! ஏன் இந்த ஆன்மாக்களை இறைவன் ரட்சிக்க வேணும்?

இது அவனுடைய கடமையா? உயிர் வேறு உடல் வேறானாலும் உடலில் பொருந்தியுள்ளது உயிர். உயிரை ஒட்டி உள்ளது உடல்!

உயிர் உடலை ரட்சிப்பது போல!

உடலுக்கு உற்ற துன்பத்தை உயிர்விலக்குவது போல!

ஆன்மாக்கள் இறைவனுக்கு உடலைப் போல அமைந்துள்ளன. எனவே இந்த உடலை ரட்சிப்பது உயிராகிய இறைவனே! சித், அசித்தாலான உலகத்தை உடலாகக் கொண்டவன் ஈஸ்வரனாகிய ஸ்ரீமந் நாராயணன்.

இந்த சரீர-சரீரி சம்பந்தத்தைத் தெளிவாகவும் சிறப்பித்தும் காட்டியருளியவர் ராமாநுசரே!

''பரமாத்மா ஒருவனே உண்மை!'' எனும் அத்துவைதத்தையும்,

''பரமாத்மாவும், ஜீவாத்மாவும் இரண்டும்தான் உண்மை'' எனும் துவைதத்தையும் இணைத்து,

''அசித், சித் ஈஸ்வரன் இவை மூன்றும் உண்மையே! ஈஸ்வரன், அசித்தையும் சித்தையும் உடலாகக் கொண்டு அவைகளைக் காக்கும் உயிராக உள்ளான்,'' என்று விசிஷ்டாத்துவைத (ஸ்ரீ வைணவ சமய) மேன்மையை, வடமொழி—தமிழ்மொழி மறைகளால் வெளியிட்டவர் இராமானுசரே!

இது ஒரு அற்புதம் தானே! ஞானக் கலக்கத்தை விலக்கிச் செம்மைப்படுத்துவது தானே அற்புதம். இந்த ஞானத்தால் நம்மை ஆட்கொண்டார் இராமானுசர்!

**2. மெய்யாம் உயிர் நிலை:**

இறைவனின் குணம் ரட்சகத்துவம் - காப்பாற்றல்.

ஆன்மாவின் குணம் சேஷத்துவம்-இறைவனுக்கு அடிமைப்பட்டு இருத்தல்.

'அகம்' (ஆன்மா) அர்த்தத்திற்கு ஞான ஆனந்தங்கள் தடஸ்தம் (புறத் தோற்றங்கள்) என்னும்படி: தாஸ்யமிறே (அடிமைப்பட்டிருத்தல்) (உண்மை-உள்-நிலை) அந்தரங்க நிருபகம். (—ஸ்ரீ வசன பூஷணம்- 74)

அதாவது அரங்கனாகிய இறைவனது மலரடிக்கு, ஆள் உற்றவராக இருந்து வாழ்தல்.

இப்படி வாழ்பவர்களே, மதிக்கத்தக்கவர்கள்! நாம் விரும்பி அடையத்தக்கவர்கள்!

இப்படியாக வாழ்ந்தருளிய பெரியோர்களை, ஆத்ம உறவினர்களாகத் துணை கொண்டு வாழ்ந்து காட்டியவர் இராமானுசர்!

இறைவனுக்கு அடிமைப் பட்டிருத்தலாகிய சேஷத்துவ ஞானத்தைப் பெற்ற பிறகு வேறு ஒரு அஞ்ஞானம் நம் மதிப்பிற்கு இலக்காகுமா?

''மற்றொரு பேறு மதியாது, அரங்கன் மலர்
அடிக்கு ஆள்
உற்றவரே தமக்கு உற்றவராக் கொள்ளும் உத்தமனை

நற்றவர் போற்றும் இராமாநுசனை இந் நானிலத்தே
பெற்றவன்; பெற்றபின் மற்று அறியேன் ஒரு
பேதமையே!''

மிக்க இறைநிலை தனிப்பட்டது. மெய்யாம் உயிர் நிலையும் தனிப்பட்டது. காப்பாற்றுகிற இறைவன் வேறு! காப்பாற்றப் படுகிற ஆன்மா வேறு! ஆட்சி செய்கின்ற இறைவன் வேறு; அடிமை செய்கின்ற ஆன்மா வேறு!

எனவே, இவை இரண்டும் தனித்த தன்மை உடையவை; ஒன்றில் ஒன்று கலந்து விடாது.

இதற்கு மாறாக, ''ஆன்மா இறைவனிடம் இரண்டறக் கலந்து விடுகிறது!'' என்று வேதப் பொருளைத் தவறாகச் சொல்லுவது எல்லாம் பேதமை தான்.

இந்த வினைகளை எல்லாம் தமது தர்க்க ஞானத்தாலே வென்றவர் இராமாநுசர்.

சித், அசித், ஈஸ்வரன் என்ற மூலப் பொருள்கள் மூன்று; இவை மூன்றுமே, சத்தியமும், நித்தியமும்.

சித், அசித் என்பவை ஈஸ்வரனுக்குச் சரீரங்கள்.

எம்பெருமானுடைய திருவருளாலே கரும வினைகள் ஒழிந்து, பரமபதத்தில் இறைவனுக்குக் குற்றேவல் புரிவதும் பல்லாண்டு பாடுவதுமே மோட்சம்!

இவைகளை நிலைநாட்டி வெற்றி பெற்றார் உடையவர்!

### 3. தக்கநெறி:

''சர்வ தர்மாந் பரித்யஜ்ய!
மாம் ஏகம்! சரணம் வ்ரஜ!''

என்ற சரம சுலோகத்தாலே, நாம் கடைப்பிடிக்கத் தக்க நெறியை, கீதையில் போதித்தவன், பஞ்ச பாண்டவர்களின் பிரதிநிதியான, அர்ச்சுனனுடைய தேர்த்தட்டிலே எழுந்தருளிய கண்ணன்.

தன்னையே சரணாகப் பற்ற வேண்டுமென்று, அர்ச்சுனன் மூலமாக உலகிற்குக் காட்டித் தந்தான்!

''கையும், உழவுகோலும்!
பிடித்த சிறுவாய்க் கயிறும்!
சேனாதூளி தூசரிதமான திருக் குழலும்!
தேருக்குக் கீழே நாற்றின திருவடிகளுமாய்!
நிற்கின்ற சாரத்திய வேஷத்தை,
'மாம்' என்று காட்டுகிறான்!''

கீதையிலே இறைவன் உபதேசித்தருளிய, நாம் அடையத்தக்க நெறியை, எளிதில் நாம் தெரிந்து கொள்ளும் வகையில், எம்பெருமானார் ''கீதா பாஷ்யம்'' அருளிச் செய்தார்.

எம்பெருமானாருடைய இந்தப் பரம கருணைக்குத் தோற்று. ''அவரைப் பணியும் நல்லோர்களையும் பணிகின்றன எனது ஆவியும் (ஆன்மாவும்) சிந்தையுமே (மனமும்),'' என்று உள்ளம் கரைகின்றார் அமுதனார்!

**4. தடையாகித் தொக்கியலும்**

தக்கநெறியை நாம் அடைவதற்கு உலக ஆசைகளே நமக்குத் தடை! இத்தடைகள் ஒன்றை ஒன்று பின்னிக் கிடக்கின்றன

ஒன்று மற்றயதற்கு வழிகாட்டி! பாதை! சருக்கு மரம்!

இத்தடைகள் விதிவசத்தாலே நம்மை வந்து அடைகின்றன. இத்தடைகளிலே வீழ்ந்து, தவிக்கின்ற நம் ஆவியைக் (ஆன்மாவைக்) கைகொடுத்துத் தூக்கிக் காப்பாற்றி அருள்பவர் இராமாநுசர். எப்படிக் காப்பாற்று கின்றார்?

லட்சுமி காந்தனாகிய திருமால் தான் நமக்கும், எல்லோருக்கும் நாயகன். அவன் நம்முடைய எல்லா பாவங் களையும் அகற்றித் தூய்மை அளிப்பவன், என்று உபதேசிக் கின்றார். ''போய பிழையும், புகு தருவான் நின்றனவும் தீயினில் தூசாகுமே!''

**5. ''வாழ்வினை!'' வைணவர் தம்பேறு!—
வாழ்வில்வைணவம்!**

பூரண வாழ்வு, புகழுடைய வாழ்வு நான்கு சேர்ந்த தாகும். இவையே 1. அறம் 2. பொருள் 3. இன்பம் 4. வீடு இவையே புருஷார்த்தங்களாம். அதாவது புருஷர்கள் (பெண்களையும் உள்ளிட்ட சொல்) அடையத் தக்கன.

'இன்பம்' என்ற சொல்லுக்குச் 'சிற்றின்பம்' என்று தவறாகப் பொருள் கொள்ளக் கூடாது. 'மூவடி மண்தா!' என வாமனன் மாவலியைக் கேட்ட போது, அவன் குறுகிய பொருள் கொண்டது போல!

'இன்பம்' என்றால் அது 'பேரின்பமே!' ''அது கண்ணனிடம் செலுத்தும் பேர் இன்பமேயாகும்'' என்பது இராமாநுசரின் திரு உள்ளம.

நமது இன்பத்தைக் (காமத்தைக்) கண்ணனிடம் செலுத்தினால் அது பேரின்பமாகப் பரிணமிக்கின்றது.

இப்படிக் கண்ணனை அடையப் பெறும் பேரின்பத்திற்கு உதவுபவை தான் அறம், பொருள், வீடு என்று விளக்கம் அருள்கின்றார் இராமாநுசர்.

கண்ணன் மீதுள்ள காமத்தினால் அல்லது அவன் மீது காமம் ஏற்படுவதற்கு (1) அறம் செய்ய வேணும்; (2) பொருள் ஈட்ட வேண்டும்; (3) வீட்டை (பரமபதத்தை) அடைய விரும்ப வேண்டும்,

இவ்விதமாக இன்பம் என்ற சொல்லுக்கு உயர்ந்த பொருளைக் காட்டும்போது, ''ஓங்கி உலகளந்த உத்தமனாகத்'' - ''திரிவிக்கிரமனாகச்'' சேவை தருகிறார் எம்பெருமானார்!

வைணவர் தம் வாழ்வு என்னவென்றால், இறைவனை அடைந்து பெறும் பேரின்பத்திற்காகவே, அறம், பொருள் வீட்டைப் பயன்படுத்த வேண்டும்!

## XVI. எம்பெருமானார் தரும் ஏற்றம்—எம் வாழ்வில் வைணவம்!

எம்பெருமானாருடைய வைபவத்தாலே ஏற்பட்ட நன்மைகள் யாவை?

தென் குருகூரில் திருவவதரித்து ஞானத்தை வாரி வழங்கிய வள்ளலான நம்மாழ்வாருடைய அர்த்த பஞ்சக அறிவை வெளியிடும் திருவாய் மொழியாம் தமிழ் மறை வாழ்வு பெற்றது!

அதனால், பிறரால் வெகு சிரமப்பட்டு நாட்ட முயன்ற நீசமதங்கள் செத்து ஒழிந்தன!

அதனால் ''ஸ்ரீமந் நாராயணனே பரம் பொருள்'' என்று காட்ட ஏற்பட்ட வேதம் உற்ற துணை கிடைத்துக் களிப்புற்றது!

''எம்பெருமானார் தரிசனம்'' நமக்கும் தரிசனம் தந்தது. தருகின்றது. இது, நம் வாழ்வில் வைணவம்—ஆம், வாழ்வே வைணவம்!

□□□